# இந்திய விடுதலைக்குப் பின் தமிழிலக்கியச் செல்நெறிகள்

பதிப்பாசிரியர்கள்

முனைவர் செ. ஜீன் லாறன்ஸ்

முனைவர் கு. பகவதி



INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னை - 600 113

# இந்திய விடுதலைக்குப் பின் தமிழிலக்கியச் செல்நெறிகள்

பதிப்பாசிரியர்கள்
முனைவர் செ. ஜீன் லாறன்ஸ்
முனைவர் கு. பகவதி




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of Tamil Studies
சி.ஐ.டி. வளாகம், தரமணி, சென்னை - 600 113

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | intiya viṭutalaikkup piṉ tamiḻilakkiyac celneṟikaḷ |
| Editors | : | Dr. S. Jean Lawrence, Professor<br>Dr. K. Bhagavathi, Associate Professor<br>International Institute of Tamil Studies<br>C.P.T. Campus, Chennai - 600 113 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>C.P.T. Campus, Chennai - 600 113 |
| Edition | : | First |
| Date of Publication | : | 2001 |
| Publication No. | : | 396 |
| Language | : | Tamil |
| Paper Used | : | 18.6 kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 10 points |
| No. of Pages | : | xii+244 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 55/- |
| Printed by | : | United Bind Graphics<br>189, (101-D), Royapettah High Road<br>Mylapore, Luz, Chennai - 600 004 |
| Subject | : | Tamilology |

**முனைவர் ச.சு. இராமர் இளங்கோ**
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை 600 113

# அணிந்துரை

நாடு சுதந்திரம் அடைந்து பொன்விழா கொண்டாட்டங்களை முடித்தாகிவிட்டது. நாம் 'எதிலும் சுதந்திரம்' என்கிற குடியரசு ஆட்சியின் மேன்மையை அனைத்துத் துறைகளிலும் சிறப்பாக நிறைவேற்றப் பாடுபட்டுக்கொண்டிருக்கிறோம்.

அறிவியலின் அதிவேக வளர்ச்சியில் உலகின் எல்லைகள் எல்லாம் சுருங்கி விட்டன; 'பூமி ஒரு கைப்பந்து அளவு' என்பதாகக் கருதும் நிலை உலகில் ஏற்பட்டுக்கொண்டிருக்கிறது. இதற்காகக் கழிந்த காலங்களிலும் நடப்புக் காலங்களிலும் நம் முன்னோர்களும் நாமும் உழைத்த உழைப்புகள், அறிவினை முறையாக முன்னேற்றப்பாதையில் செலுத்திய செயல்கள் அளவிட முடியாதன.

பல்வேறு இனத்தினர், பல்வேறு கலாச்சாரப் பிடிப்புடையோர், பல்வேறு அறிவுத் தளத்தினர் என இன்றைக்கும் நமது குடியரசின் இறையாண்மையில் நாட்டின் பல்வேறு தளங்களில் மக்கள் வாழ்ந்து கொண்டிருக்கின்றனர்.

இக்குடியரசு ஆட்சிக்கு முன்னர் நம்முடைய இன்றைய வாய்ப்பு வசதிகளுக்காகப் பாடுபட்ட சுதந்திர வீரர்களின் தியாகங்கள் போற்றத் தகுந்தன. சிறுசிறு இனக் குழுக்களாகவும், மொழி சார்ந்த பிரிவுகளாகவும் பிரிந்து கிடந்த நம்மை எல்லாம் ஒருங்கிணைக்க, ஒத்த சிந்தனையுடையவர் களாக மாற்ற, தியாக வரலாற்றிற்குத் தயார்ப்படுத்த அடிகோலியது நமது நெடுங்கால சுதந்திரப் போராட்டமே.

நாடு முழுவதும் ஆங்காங்கே தங்கள் தங்கள் வலிமைக்கேற்ப நாட்டை விட்டு அந்நியர்களை விரட்ட வேண்டும் என்கிற ஒரே முனைப்போடு நடந்த விடுதலைப் போராட்டங்கள் நம்மிடையே ஏராளமாக உள்ளன. தமிழகத்திலும் வீரபாண்டியக் கட்டபொம்மனின் போராட்டம், சிப்பாய்க் கலகம், பூலித்தேவனின் போராட்டம், மருது சகோதரர்கள் போராட்டம் என கூறத் தொடங்கின் இது தொடரும். இத்தகு போராட்டங்கள் 19ஆம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து இயக்க ரீதியாக வலுப்பெற்ற காங்கிரஸ் இயக்கம் வளர்ந்த பிறகு இந்திய தேசம் என்கிற

ஒரு பார்வையை, பரிமாணத்தைப் பெற்றன. அதிலும் குறிப்பாக அண்ணல் காந்தியடிகள் தலைமைக்குப் பிறகு அந்நியர்களை எதிர்த்துப் போராடிய மக்களின் போராட்டம் ஒரு தேசியப் போராட்டமாக வளர்ந்தது. காந்தியின் கட்டளைக்கு இமயமலையிலிருந்து குமரிமுனை வரையிலும் வாழ்ந்த அனைத்து மக்களும் ஒரு சேர செவி மடுத்தனர்; கட்டளையை ஏற்றனர்; போராட்டத்தை மேலும் மேலும் வலிமை அடையச் செய்தனர்.

நமது இலக்கியங்களும் ஜமீன்களைப் பாடும் யாசகத் தன்மையிலிருந்து தேசியத் தன்மைக்கு மாறின. இந்தியா முழுவதிலும் தேசியத்தை முதன்மைப்படுத்தி இலக்கியங்கள் தோன்ற ஆரம்பித்தன. தேசியப்பார்வைகள் வளர்ந்தன. தமிழகத்தின் முதல் தேசியக் கவியாக மலர்ந்த மகாகவி பாரதியார் இதற்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாக விளங்கினார்.

இதந்தரு மனையின் நீங்கி
இடர்மிகு சிறைப்பட் டாலும்
பதந்திரு இரண்டும் மாறிப்
பழிமிகுத்து இழிவு உற்றாலும்
விதந்தரு கோடி யின்னல்
விளைந்தெனை அழித்திட் டாலும்
சுதந்திர தேவி நின்னைத்
தொழுதிடல் மறக்கி லேனே (சுதந்திர தேவியின் துதி)

என்று நாட்டின் விடுதலைக்கான பாரதியாரின் இப்பாடல் தேசியக் கண்ணோட்டத்தோடு மக்களை ஒருங்கிணைக்கும் தன்மையில் இந்தியா முழுமையும் இணைந்த பார்வையைத் தந்தது.

நாமிருக்கும் நாடுநமது என்பது அறிந்தோம் - இது
நமக்கே உரிமையாம் என்பது அறிந்தோம் - இந்தப்
பூமியில் எவர்க்கும் இனி அடிமை செய்யோம்

என்கிற அவரின் தெளிவான சிந்தனையை உள்ளடக்கிய இவை போன்ற பாடல்கள் மக்களைத் தமிழகத்தில் தேசிய நோக்கில் ஒருங்கிணைத்தன. தேசிய விடுதலைப் போராட்ட காலங்களில் தோன்றிய வெகுவான மேடை நாடகங்களும் தேசியப் பேராட்டத்தில் மக்களைக் கலந்து கொள்ளச் செய்யும் நோக்கில் படைக்கப்பட்டன.

இந்தியா விடுதலை பெற்றது. மேலும் பல புதுப்புது மாற்றங்கள்; வளர்ச்சிகள். தமிழ் இலக்கியத் துறையிலும் இந்திய விடுதலைக்குப் பிறகு இலக்கியங்களின் வகைகள், வடிவங்கள், உள்ளடக்கங்கள், செல்முறை உத்திகள் இவைகள் எல்லாம் பரந்த தளங்களில் வளர்ந்தன. இவ்வளர்ச்சிகள் முறையாக ஆராயப்படவேண்டும்; இரண்டாயிரம் ஆண்டு கால இலக்கிய

வரலாற்றுப் பாரம்பரியம் கொண்ட நமது தமிழ் இலக்கியங்களில் நாடு குடியரசு ஆட்சிக்கு உட்பட்ட பொழுது என்னென்ன மாற்றங்கள் கொண்டுவரப்பட்டன என்பதை அறிந்திட வேண்டும் என நிறுவனம் சாகித்திய அக்காதெமியோடு இணைந்து நடத்திய "இந்திய விடுதலைக்குப் பின் தமிழிலக்கியச் செல்நெறிகள்" கருத்தரங்கக் கட்டுரைகளே நூலாக வடிவம் பெற்றிருக்கின்றன.

இத்தொகுப்பினுள், உரைநடை இலக்கியம், புதுக்கவிதை, தமிழ் மொழியியல் வளர்ச்சி, ஒப்பிலக்கிய வளர்ச்சி, நாவல்களின் வளர்ச்சி, இதழ்களின் போக்கு, சிறுகதைகளின் வளர்ச்சி, தமிழில் பதிப்பகங்கள் வளர்ந்த முறை, நாடக அமைப்புகள், நம் அடிப்படை மக்களின் வரலாறுகளைத் தொகுக்கும் கள ஆய்வுச் செய்திகள், நாட்டுப்புற கதைப் பாடல்களின் வளர்ச்சி, பெண்ணியச் சிந்தனைகளின் வளர்ச்சி, தமிழில் நோக்கு நூல்கள் வட்டார வழக்கு மொழிகளின் சிந்தனைகள், சுவடிப் பதிப்பாக்கங்களில் நாம் அடைந்த வெற்றிகள் போன்ற பல்வேறு துறைகளில் கட்டுரையாளர்கள் அளித்த கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.

நிறுவனமும் சாகித்திய அக்காதெமியும் இணைந்து நடத்திய இக் கருத்தரங்கினைப் பல்லாற்றானும் சிறப்புற நடத்தியவர்கள் முனைவர் செ. ஜீன் லாறன்ஸ் அவர்களும் முனைவர் கு. பகவதி அவர்களும் ஆவர். நிறுவனத்தில் நடை பெற்ற பல்வேறு கருத்தரங்குகளுக்குப் பொறுப்பேற்ற இவர்கள் இக்கருத்தரங்கினையும் சிறப்புற நடத்தியதோடு அமையாமல் மிக சிறப்பாகக் கட்டுரைகளை நூலாக்கமும் செய்துள்ளனர். இவர்களின் கடின உழைப்புப் பாராட்டத்தக்கது.

நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்துவரும் நிறுவனத் தலைவர், மாண்புமிகு கல்வித் துறை அமைச்சர் முனைவர் மு. தம்பிதுரை அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி – பண்பாடு மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் திரு. பி.ஏ. இராமையா, இ.ஆ.ப. அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறையின் கூடுதல் செயலர் திரு. தா. சந்திரசேகரன், இ.ஆ.ப. அவர்களுக்கும் நன்றி.

இந்நூலினைக் கவினுற அச்சிட்டுத்தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தார்க்கு நன்றி.

**இயக்குநர்**

# பதிப்புரை

*21*ஆம் நூற்றாண்டில் அடியெடுத்து வைக்கின்ற நம்மைப் போன்றே கிடைக்கின்ற நம்முடைய தமிழ் இலக்கிய வரலாறும் *20* நூற்றாண்டுகளைக் கடந்து அடியெடுத்து வைக்கிறது. கடந்த இருபது நூற்றாண்டு காலத் தமிழ் இலக்கியத்தின் வளர்ச்சியை ஆராயும்போது சில தெளிவுகள் நமக்குக் கிடைக்கின்றன. பத்தொன்பது நூற்றாண்டுகள் நடந்துவந்த, தொடர்ந்துவந்த ஒரு பெரிய நீண்ட இலக்கிய மரபுடன், ஒரு துரிதமான, வித்தியாசமான புதுமைகள் நிறைந்த இலக்கியப்போக்கு இந்த இருபதாம் நூற்றாண்டில் பொங்கிப் பெருகியுள்ளது என்பது மறக்க முடியாத, மறுக்க முடியாத உண்மை. அதிலும் இந்திய விடுதலைக்குப்பின் இந்தப் பெருக்கு மிகுதி என்பதையும் நாம் கணித்தல் இயலுகிறது. இந்த நிலையில் இக்குறிப்பிட்ட காலத்திய இலக்கியம் என்ற ஒரு பெரிய வரலாற்று மூலத்தின் செல்நெறிகளை, அதன் வகைப்பாட்டினை, அது வெளிப்படுத்தும் தனி மனித, சமுதாயச் சிந்தனைகளை, தமிழரின் சிந்தனை வளத்தினை எல்லாம் நாமும் உணர்ந்து பிறருக்கும் உணர்த்த வேண்டும் என்ற விழைவில்

*1.* வரலாறு நமக்குத் தெரிய வேண்டும்

*2.* வரலாற்று நெறி தெரிய வேண்டும்

*3.* அதனுள் அமையும் மரபு, மாற்றம், புதுமை பதிவு செய்யப்பட வேண்டும்

*4.* நாம் எங்கு நிற்கிறோம், எப்படி முன்னேற வேண்டும் என்று நாம் போகும் பாதையைத் தீர்மானிக்க வேண்டும்

*5.* நம் பாதையை மற்றவர்க்கு அடையாளம் காட்ட வேண்டும்

என்ற நோக்கில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சாகித்திய அக்காதெமி ஆகிய இரண்டு நிறுவனங்களும் இணைந்து **இந்திய விடுதலைக்குப் பின் தமிழ் இலக்கியச் செல்நெறிகள்** என்ற கருத்தரங்கினை *24-11-1999* முதல் *27-11-1999* வரை நடத்தின.

இந்திய விடுதலைக்குப் பின் தமிழ் இலக்கியச் செல்நெறிகள் என்ற இந்தக் கருத்தரங்கில் கவிதை, புதினம், சிறுகதை, நாடகம், ஆய்வு, உரைநடை, மொழியியல், ஒப்பிலக்கியம், இதழியல், நாட்டுப்புறவியல், பெண்ணியம், பதிப்பும் வெளியீடும் என்ற பாடுபொருள்களில் அறிஞர்கள் ஆய்வுக் கட்டுரைகள் வழங்கினர்.

கவிதை பற்றிய ஆய்வு, மரபுக் கவிதையைக் காட்டிலும் புதுக்கவிதைகள் புது வீச்சுடன் இன்று எழுந்து வருவதை, அனைத்து நிலைகளிலும் விடுதலையுணர்வைக் கவிதைகள் அடித்தளமாகக் கொள்வதை, அகம்-புறம், இகம்-பரம் என எதிர் எதிராக விளைந்த செல்நெறி மரபில் இந்த விடுதலை உணர்வு இன்றைய செல்நெறியாக அமையும் தன்மையை, மேலை நாட்டினரிடமிருந்து வந்த புதுக்கவிதைகள் இம்மண்ணில் நிலைபெற இந்த மண்ணின் மணத்தை, இந்த மண்ணின் மரபினை வெளிப்படுத்த வேண்டும் என்பதனை, பாரதிக்குப்பின் பாரதிதாசன் பெரும் ஒரு சகாப்தமாக விளங்கி நிற்பதை, புதுக்கவிதையின் எழுச்சி நகர்சார்ந்து இருந்த நிலை இன்று கிராமங்களுக்கும் இடம் பெயர்ந்து சென்றுகொண்டிருப்பதை, இந்தக் கவிதைகளின் உள்ளடக்கச் சிந்தனைகள் மாறிவரும் நிலைகளையெல்லாம் வெளிப்படுத்தியது

புதின ஆய்வாளர், உள்ளடக்கம், படைப்புப்பார்வை, மொழிபெயர்ப்பு என்ற பொருட்களில் நாவல்களின் பெரும் வளர்ச்சி, சிறப்பான நாவல்களின் பங்கு, நாவல்களின் வகைப்பாடு, பேசும்பொருள் போன்றவற்றை வெளிப் படுத்தினர். இன்றைய பல பாதிப்புகள் நாவலில் பதிவு செய்யப்படவேண்டிய தேவை, நாவல்கள் மனிதனைச் சிந்திக்க வைத்து வழிகாட்டக்கூடிய தன்மை, ‘மனித வாழ்வின் அர்த்தங்கள் எங்குத் தொலைந்தன’ என்பதை ஆய்வதற்குப் பெரிய களமாக நிலவும் புதினங்களின் சீரிய தன்மை, மொழிபெயர்ப்பு நிலை போன்றவற்றைத் தெளிவுபடுத்தினர். மொழிபெயர்ப்பில் நாவல்கள் சந்திக்கும் சிக்கல்கள், பிற மொழிபெயர்ப்புகள் நம் தமிழ் உலகில் ஏற்படுத்திய தாக்கங்கள், ஆங்கில மொழியில் எழுதப்பட்டால்தான் அல்லது மொழிபெயர்க்கப்பட்டால்தான் சர்வதேச அரங்கத்தினுள் நுழைய இயலும் என்ற நிலைமை போன்றவற்றையெல்லாம் சொல்லி நம் நாவல் அதன் செல்நெறிகள் அதன்மூலம் வெளிக்கொணரப்பட வேண்டிய தமிழ்ச் சமுதாயத்தின் வெளிப்பாடு என, பலவற்றையும் தெளிவுபடுத்தினர். ஏறக்குறைய நாவல் போன்ற நிலையில் சிறுகதையின் நிலை இருப்பதைச் சிறுகதை ஆய்வாளர் உணர்த்தினர். மேலும் சமுதாய உணர்வுடன் பல சிறுகதைகள் எழுதப்படவேண்டிய நிலை, இந்தக் கதைகளை வெளிக்கொணர்வதில் அச்சு ஊடகங்களின் பங்கு, இவற்றின் வளர்ச்சி நிலை, சிறுபத்திரிகைகள் அளித்த பெரும் ஆதரவு, இவற்றின் உள்ளடக்கம், பொருளடக்கத்தில் ஏற்பட்ட மாற்றங்கள் எனப்பலவற்றையும் இந்த அறிஞர்கள் எடுத்துக்காட்டினர்.

நாடகம் பற்றிய கட்டுரைகளில் கவிதை நாடகங்கள், நவீன நாடகங்கள், மொழிபெயர்ப்பு நாடகங்கள் பற்றிய கருத்துகள் அலசப்பட்டன.

கவிதை நாடகங்கள் மிகுதியாக வெளிவர வேண்டும் என்றும் தற்போது நவீன நாடகங்கள் தற்காலச் சமுதாயப் பின்புலத்தில் மாற்றம் பெற்றுவரும் தன்மை, மொழிபெயர்ப்பு நாடகங்களின் நிலை போன்றனவற்றையும் அறிஞர்கள் இயம்பினர். மேலும் நாடகங்களின் வளர்ச்சிக்குச் சரியான ஒத்துழைப்பினைச் சமுதாயம் தரவில்லை என்ற குறை இனிவரும் காலங்களில் போக்கப்படவேண்டும்; நாடகத்துறை சுதந்திரமாக இயங்க வழிவகை கிடைக்கவேண்டும்; மண்ணின் மணம்சார்ந்த நாடகங்கள் தமிழில் மிகுதியாக வரவேண்டும் என்பன நாடகச் செல்நெறி குறித்த கட்டுரைகளில் வலியுறுத்தப்பட்டன.

ஆய்வு பற்றிய கட்டுரைகள், இன்று அறிவியல் பார்வையில் ஆய்வுகள் அமையவேண்டும் என்பதை உணர்த்தின; ஆய்வுப்போக்கிலும் தரத்திலும் இன்று சிக்கல்கள் பல காணப்பட்டாலும் ஆய்வுகள் வளர்ச்சி பெற்று வருவதை எடுத்துரைத்தன. சார்பற்ற நிலையிலான ஆய்வுகளே தரம் வாய்ந்த ஆய்வுகளாக விளங்கவல்லன என்ற நிலையில் அத்தகைய ஆய்வுகள் இனிப் பெருக வேண்டும் போன்றன இக்கட்டுரையாளர்கள் வெளிப்படுத்திய சிறந்த செய்திகள்.

மொழியியல் தொடர்பான கட்டுரைகள் மொழியியல் ஆராய்ச்சியின் தோற்றம், எழுத்துச் சீர்திருத்தம், புதிய தகுமொழியைக் கொண்டுவர எடுக்கப்பட்டுவரும் முயற்சிகள், நடையியல் போன்ற கருத்துகளையும் தமிழின் சிறப்பை, தமிழின் தனிப்பெருமையை உலகுக்கு உணர்த்தியதில் தனிப்பங்கு, குறிப்பிடத்தக்கதொரு பங்கு மொழியியல் ஆய்வுக்கு இருப்பதையும் தெளிவாகத் தந்தன. நோக்கீட்டு இலக்கணம் போன்றன வகுக்கும் செயல்பாடுகளின் நிலையும், தமிழ்மொழிக்கென தனிக் கோட்பாடு வகுக்கப்பட வேண்டும்; மொழியியல் ஆராய்ச்சியின் மூலம் இலக்கியத்தினைப் பார்வையிடும் நிலை பெருக வேண்டும் என்ற நிலையிலான பல பார்வைகள் பற்றியெல்லாம் கூறிய இக்கட்டுரைகள் மொழியியல் ஆய்வு வளர்ச்சிகளை நன்கு இனம் காட்டக் கூடியவையாகவும் அவற்றின் செல்நெறிக்குத் தடம் அமைத்துக்கொடுப்பவையாகவும் இருந்தன.

ஒப்பிலக்கியம், ஒப்பிலக்கியத்தின் வளர்ச்சி குறித்தும், ஒப்பியல் ஆய்வு, ஒப்பிலக்கிய ஆய்வு விளக்கம் குறித்தும், தமிழில் வந்துள்ள இத்தகைய ஆய்வுகளின் நிலை குறித்தும், இவை எவ்வாறு அமைய வேண்டும் போன்றவற்றையெல்லாம் ஒப்பியல் கட்டுரைகள் விளக்கின. கவிதைகள் சார்ந்த இத்தகைய ஒப்பிலக்கிய ஆய்வுகளில் பாரதி முதலிடம் பெற்றநிலையும் ஒப்பியல் ஆய்வுகள் தமிழகத்தில் மிகுதியாக வளர, கல்விக் கொள்கையில் மாற்றம் வரவேண்டும் என்ற கருத்துகளும் சுட்டப்பட்டன.

நவீன நாகரிகத்தின் சின்னம் இதழ் என்று பாரதியாரால் சுட்டப்பட்ட இதழியல் குறித்த ஆய்வுச் சிந்தனைகளாக, *50* ஆண்டு கால இதழியல் வளர்ச்சி, அவற்றில் வெளிப்போந்த படைப்புகள், இதழியல் குறித்த ஆய்வுகள், இதழியல் மொழிநடை எல்லாம் இதழியல் கட்டுரைகளில் வெளிப்பட்டன.

நாட்டுப்புற இயல் ஆய்வுகள் வளர்ந்து வந்தநிலை, செந்நெறி இலக்கியங்களுக்கு இணையாக நாட்டார் இலக்கியங்கள் தமிழர்கள் பண்பாட்டை மீட்டெடுக்கக்கூடியவை என்பனவும், கள ஆய்வு இந்த ஆய்வில் பெறும் முக்கியத்துவம், திட்டங்களுக்கு ஏற்ப, சூழல்களுக்கு ஏற்ப, இடங்களுக்கு ஏற்ப இந்தக் கள ஆய்வு முறை மாறும் தன்மைகள், கதைப்பாடல்களின் வகை, கதைப் பாடல்களைப் பதிப்பித்து வெளிவரும் பதிப்புகள் போன்ற பல செய்திகள், நாட்டுப்புறவியல்துறை அறிஞர்களின் கட்டுரைகளில் இடம்பெற்றவை.

பெண்ணியக் கட்டுரைகள், பெண்ணியக் கோட்பாடுகள், பெண்ணிய ஆய்வுகள், பெண்ணியப் படைப்புகள் குறித்தச் சிந்தனைகளை முன் வைத்தன. பதிப்புகள் குறித்தும், சுவடிப் பதிப்பு நெறியின் வளர்ச்சி குறித்தும், தமிழ்ப் பதிப்பகங்கள் குறித்தும், பல கருத்துகளைப் பதிப்பும் வெளியீடும் தொடர்பான கட்டுரைகள் தந்தன.

விடுதலைக்குப் பின் இலக்கியச் செல்நெறி என்பதில் இங்குக் குறிப்பிட்ட ஒவ்வொரு செய்தியுமே மிகப்பெரிய ஆய்வுக்களமாக விளங்கக் கூடியது. தவிர விடுபட்ட களங்களும் இணைக்கப்பட வேண்டும். இன்னமும் இந்த ஒவ்வொரு துறையிலும் பார்க்கப்பட வேண்டிய, நுணுக்கமாக ஆராயப்பட வேண்டிய செய்திகள் மிகப்பலவாக உள்ளன என்பதை இந்தக் கருத்தரங்கு தெளிவுப்படுத்தியது. தவிர, இந்த இலக்கியச் செல்நெறிகள் ஆய்வுமூலம் இனி அமைத்துக் கொள்ளவேண்டிய தமிழ் இலக்கியச் செல்நெறி என்பது தமிழரின் சிறப்பினைக் காட்டுவதாகவும், உலக நிலையில் தமிழரின், தமிழின் சிறப்பை மேம்படுத்தக் கூடியதாகவும், நம் தமிழ் மண்ணின் தனித்துவத்தை உலகினர் புரிந்துகொள்ளக் கூடியதாகவும் அமையவேண்டும் என்பதை நோக்கி அமையவேண்டும் என்பது மிகத் தெளிவாக உணரக்கூடியதாக அமைந்தது.

நம்மை நாமே அலசுதலும் அதன்வழி நம்மை நாமே உணர்ந்து கொள்ளுதலும் எவ்வளவு சிறப்பானதோ, அதனைப் போன்றே இக் கருத்தரங்கக் கட்டுரைகள் நம் தமிழ் இலக்கியச் செல்நெறிகளை அலசின; ஆராய்ந்தன; நாம் செய்ய வேண்டியவற்றை உணர்த்தின என்ற நிலையில்

வெற்றி பெற்ற கருத்தரங்கமாக அமைந்த நிலையில் இந்திய விடுதலைக்குப் பின் தமிழ் இலக்கியச் செல்நெறிகள் என்ற இக்கருத்தரங்கக் கட்டுரைகளை வெளியிட்டுத் தமிழ் உலகம் பயன்பெறச் செய்யவேண்டும் என்ற நோக்கில் நூலாக்கப்பணி தொடங்கப்பட்டது. இப்பணிக்குக் கிடைத்தவை 22 கட்டுரைகள் மட்டுமே. அவை தற்போது நூல்வடிவில் வெளிவருகின்றன.

இந்திய விடுதலைக்குப்பின் தமிழ் இலக்கியச் செல்நெறிகள் என்ற கருத்தரங்கினை நடத்தவும், பெற்ற கட்டுரைகளை அச்சிட்டு நூலாக்கம் செய்யவும் வாய்ப்பளித்த எங்கள் நிறுவனத்தின் முன்னாள் இயக்குநர் முனைவர் ச.சு. இராமர் இளங்கோ அவர்களுக்கும், நூல் வருவதில் ஆர்வம் காட்டிய இயக்குநர் முனைவர் சா. கிருட்டிணமூர்த்தி அவர்களுக்கும் நன்றி கூறுவதில் மகிழ்கின்றோம்.

இக்கருத்தரங்கிற்கு அடித்தளமிட்டும், நெறிப்படுத்தியும், சிறப்புற இக்கருத்தரங்கு நடைபெற துணைபுரிந்த சாகித்திய அக்காதெமியின் செயலாளர் பேராசிரியர் கே. சச்சிதானந்தம் அவர்களுக்கும், உறுப்பினர்கள் முனைவர் ஈரோடு தமிழன்பன் அவர்களுக்கும், முனைவர் இ. சுந்தரமூர்த்தி அவர்களுக்கும், அறிவுரைக்குழு அமைப்பாளர் திரு. நீல. பத்மநாபன் அவர்களுக்கும், சாகித்திய அக்காதெமியின் தென் இந்தியக் கிளையின் தலைவர் திரு. அக்ரஹாரம் கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கும், தனி அலுவலர் திரு. கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கும் எங்கள் நன்றி.

கட்டுரைகளை நன்முறையில் ஒளி அச்சு செய்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் கணிப்பொறிப் பணியாளர் திருமதி லட்சுமிக்கும் சிறப்பாக அச்சிட்டுத் தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸுக்கும் எங்கள் நன்றி.

**செ. ஜீன் லாறன்ஸ்**

**கு. பகவதி**

**நீல. பத்மநாபன்**
அமைப்பாளர்
தமிழ் ஆலோசனைக் குழு
சாகித்திய அக்காதெமி

# முன்னுரை

பழம்பெருமை வாய்ந்த நமது நாட்டின் நீண்ட நெடும் வரலாற்றில், விடுதலை கிடைத்த *1947*-ஆம் ஆண்டு என்பது ஒரு முக்கியமான திருப்புமையம். நமது கலை, இலக்கியம், அறிவியல், ஆன்மீகத் துறைகள் அனைத்துமே விடுதலைக்கு முன்பும் பின்புமாக மதிப்பீடும் மறுமதிப்பீடும் செய்யவேண்டியது நாம் இன்று எங்கே நிற்கிறோம், நமது வருங்காலப் பயணப் பாதை யாது என்று தெளிந்து தேறப் பயன்படும். நாம் மதிப்பீடு செய்ய நினைக்கும் காலகட்டத்து நாட்டின் போக்கு, நடப்பியல் தன்மை என்னவாக இருந்தது, இருக்கிறது என்பதைத் தெரிந்து கொண்டால், அக்காலத்துக் கலை இலக்கியப் போக்கையும் ஒருவாறு தெரிந்து கொண்டதுபோல் அமையும். சுதந்திரத்திற்கு முந்தைய காலகட்டத்தில், நாட்டில் படைக்கப்பட்ட அனைத்துப் படைப்புக்களிலும் விடுதலை இயக்கத்தின் நேரடித் தாக்கம் இருந்தாக வேண்டும், இல்லாதவை இலக்கியப் படைப்பல்ல என்ற பொருளில் இப்படி நான் குறிப்பிடவில்லை.

எடுத்துக்காட்டுக்கு, அன்றும் *1940* வாக்கில் பல விதத்தில் களிப்பூட்டிக் கொண்டிருந்த எழுத்துக்களின் மத்தியில் வெளியான ஆர். ஷண்முக சுந்தரத்தின் 'நாகம்மாள்' அன்றும் இன்றும் என்றும் தனித்து நிற்கும். சொற்செட்டு, கிராம வாழ்வின் நடப்பியல், அதை மீறி ஆழ்ந்த அழகியல் பார்வை, ஓரிடத்திலும் துருத்திக் கொண்டு நிற்காத நாவலாசிரியரின் ஆளுமை, இதற்கெல்லாம் மேலே, நாட்டில் தலைகாட்டிய பிரிவினையின் ஆரம்ப அடையாளங்களை மனதில் கொண்டு குடும்பத்துப் பாகப்பிரிவினையை உருவகப்படுத்திப் படைக்கப்பட்டிருந்த பாணி. இதைப்போல், இன்னொரு எடுத்துக்காட்டு, பாரதியின் பாஞ்சாலி சபதம். பாரதியின் தேசபக்திப் பாடல்களிலோ சுதேசி கீதங்களிலோ, இல்லாத இலக்கிய ஆழம் இக்கவிதைக்கு வரக் காரணங்களாய் அமைந்ததில் முக்கியமான ஒன்று - அடிமைச் சங்கிலியில் பிணைக்கப்பட்டிருந்த பாரத அன்னையின் விமோசன கீதம் இதில் ஊடுருவி இருந்ததால் என்று சொல்லலாம்.

விடுதலைக்குப்பின், நாட்டின் போக்கு - செல்நெறி எவ்வாறு இருந்தது? அன்றுவரை அடக்குமுறையில், அடிமை வாழ்வில் சீர்கெட்டுப் போயிருந்த சமூகம் வளர்ச்சிக்கு, மறுமலர்ச்சிக்கு - அரசியல், சமூகப் பொருளாதார முன்னேற்றத்திற்குத் தினவெடுத்துத் துடித்துக் கொண்டிருந்தது. நெடுநாள் கூண்டினுள் அடைபட்டுச் சிறகடித்து விம்மிக் கொண்டிருந்த ஒரு சமூகம் கதவை மல்லாக்கத் திறந்துவிட்டபோது, எத்திசையில், எவ்வாறு பறப்பது என்று தெளிந்து தெரிய முடியாமல் மலைத்துப் பல்வேறு திசைகளில் தன்னிச்சையாய்ச் சிதறி ஓடிக் கொண்டிருந்தது. இங்கே ஆயிரம் பூக்கள் மலர்ந்தன. இவை அனைத்தும் வாசமலர்கள் என்று சொல்ல முடியாவிட்டாலும் அவைகளிலும் மகரந்தம் இருந்தது, தேன் சுரந்தது. அடிமைச் சங்கிலியை உடைத்துவிட்டு விடுதலை பெற்ற மக்களின் நெஞ்சில் சுதந்திர வேட்கையின் கனல் அவியாமல் கனன்றது. நாட்டிலும் வீட்டிலும் அதன் அலைகள் ஆர்ப்பரித்தன. ஒன்று, குடும்பத்தை,

வீட்டை மையமாகக் கொண்டு. இரண்டு, குடும்பத்தின் வெளியே- நாட்டை நடுநாயகமாக்கியது.

நாட்டில் வர்க்கபேதம், இன வேற்றுமை, சாதி வேறுபாடு, தொழிலாளி-முதலாளி, இத்யாதி, இத்யாதி. வீட்டில், கணவன்-மனைவி, அப்பா-மகன், அம்மா-மகள், மாமியார்-மருமகள், இத்யாதி - மொத்தத்தில் தெரிந்தும் தெரியாமலும் நிலவிய ஒருவிதச் சுரண்டலில் (Exploitation) - மேலாதிக்கத்தில் இருந்து விமோசனம் பெற எத்தனம்; அதனாலும், அல்லாமலும் எழுந்த மோதல்கள், முரண்பாடுகள், நமைச்சல்கள், தத்தளிப்புக்கள், தர்மசங்கடங்கள். இவைகளைப் பெண்ணியம், தளிதியம் போன்று எந்த வார்த்தைகளில் சுட்டினாலும் சரி, இந்த ஐம்பது ஆண்டு காலப் படைப்புக்களின் செல்நெறிகளை ஏகதேசம் இவற்றுள் அடக்கிவிடலாம் என்று தோன்றுகிறது. அக உணர்வுகளை - ஆன்மிக ஞானத்தைத் தேடுவது, வெளியுலக சலனங்களைத் தொடர்வது, பொதுவாய் ஆன்மிக - லௌகிக மண்டலச் சலனங்களின் எடுத்தாளல் என்று இந்த அக, புற பதங்களின் அடிப்படையில் குறிப்பிடலாம்.

பல்வேறு சாதி, உட்பிரிவு அமைப்புகளைக் கொண்டது தமிழ்ச் சமூகம். இது கிராம வாழ்க்கையை ஆதாரமாக்கி இயங்குவது. இந்தச் சாதி சமூகங்களின் உள்ளே சடங்கு சம்பிரதாயங்கள், பழக்கவழக்கங்கள் என்று எத்தனை எத்தனை விசித்திர வேறுபாடுகள்.. மொத்தத்தில் அவைகள் அனைத்தையும் பூசிமெழுகிப் பொதுமைப்படுத்த முடியுமா? இந்நிலைமையில் மனித இயல் (anthropology) பார்வையும் கலைநயமும் இணைய நடைபெறும் படைப்பாக்கங்களினால் பரஸ்பரம் அந்தரங்கங்களை அறிந்து கொள்வது மட்டுமன்று, இந்த வேற்றுமைகளிலும் பட்டிழையாய் ஊடாடும் கலாச்சார ஒற்றுமையை இனம் காணவும் முயலும் சாதனைகள்.

சிந்திக்கத் தெரிந்த மனித மனங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு வித விருப்பு வெறுப்புக்கள், அவரவருக்கென்றே வெவ்வேறு தனித்தன்மைகள், ஆதர்சங்கள் - லட்சிய நோக்குகள் அவரவர் தனித்தன்மையை முற்றிலும் இழந்து விடாமல் சமூகத்து ஏனைய மனிதர்களின் தனித்தன்மைகளுடன் ஒருங்கிணைந்து போவது என்பது எளிதன்று. சுற்றுப்புறச் சூழல் பாரம்பரியமாக ரத்தத்தில் கலந்திருக்கும் உயிரணி (Cell), நடத்தை (behaviour) போன்றவற்றால் ஏற்படும் குணவிசேஷங்கள், மனநிலைகள் - மொத்தத்தில் சதா நிலை கொள்ளாமல் தாவிக் குதிக்கும் மந்தி மனங்கள் - இத்தனைக்கு இடையிலும் சமூக ஜீவிகள் ஒருவருக்கொருவர் ஒத்துப்போகிறோம். அவனவன் மனசாட்சியை அடகு வைக்காமல் ஒருங்கிணைந்து வாழ்கிறோம் என்றால் இதை உடன்பாடு (Compromise) - சமரசம் என்பதைவிட இணைதல் (Hormonize) என்றுதான் குறிப்பிடத் தோன்றுகிறது. இதை நளினமாய் தொனிக்க வைக்கும் படைப்புக்கள். காடு நாடான கதைகள், கிராம வாழ்க்கையின் எளிமையை விழுங்கிவிட்ட இயந்திரமய நகர போலி நாகரீகப் பாங்குகள், பந்தாக்கள், சுற்றுப்புறச் சூழல் நஞ்சான கொடுமை இவைகளின் இடையிலும் உலர்ந்து போகாத மானிடவியலின் மென்மை உணர்வுகள்.

- இங்ஙனம் பல்வேறாய் விரிவுபெற்ற செல்நெறிகள்.

தாக்கங்கள் *:* முக்கியமாக மூன்று தாக்கங்களை இங்கே குறிப்பிடலாம். *1.* காந்தி, *2.* காரல்மார்க்ஸ், *3.* சிக்மண்ட் பிராயிட்.

காந்தியின் கொள்கைகளின் தாக்கங்கள் என்று சொல்லும்போது அதில் ராஜாராம் மோகன்ராய், ராமகிருஷ்ணர், விவேகானந்தர், அரவிந்தர் போன்ற மகான்களின் சீர்திருத்தத் தத்துவங்களும் அடங்கும். காந்தி, மார்க்ஸ் தாக்கங்கள் வெவ்வேறாக, இணைய இயலாமல் சமாந்தரமாகச் சென்றாலும், அந்தக் கொள்கைகளின் ஆத்மார்த்தமான ஆதர்சம், லட்சிய நோக்கு (idealism) என்பது இரண்டிலும் இயங்கும் ஒற்றுமை எனலாம். இந்த ஆதர்சத்திற்கும் நடப்பியல் யதார்த்தத்திற்கும் இடையில் நடக்கும் போராட்டம் முக்கியமானது. இதனால் ஏற்படும் முரண்பாடுகள், உள்மனப்போர்கள். பாலியலை நடைமுறை வாழ்வின் ஒரு யதார்த்தமாகக் கொள்ளும்போது அதன் தாக்கங்களின் வீச்சு அசட்டைச் செய்ய முடியாததாகிவிடுகிறது. பிராயிடின் இது சம்பந்தமான கோட்பாடுகள், விரிவான ஆய்வுக்குப் பொருளாகிவிடுகிறது.

**உருவம்**

*1.* நனவோடை உத்தி, *2.* உள்ளார்ந்த தனி மொழி, *3.* கட்டமைப்பு, *4.* தனிப்பட்ட உணர்வுகளை வேண்டுமென்றே பொதுமைப்படுத்தாதிருத்தல், மொத்தத்தில், உருவமில்லாத உருவமொன்று உயிர்பெற்று வருவதைப் பார்க்க முடியும்.

உருவத்தைப் பற்றிப் பேசும்போது ஏனைய மொழி இனத்தவரிடம் பரவலாக இல்லாத ஒரு மேல்மட்டப் பார்வை நம் திறனாய்வாளர்கள் சிலரிடம் - குறிப்பாகச் சில தமிழாசிரியர்களிடம் காணப்படுவதைக் குறிப்பிட வேண்டும். படைப்பின் உள்ளடக்கத்தில் முழுகி எடைபோட - அனுபவிக்க சோம்பல்பட்டு மேலோட்டமாக உருவத்தை மட்டும் மதிப்பீடு செய்துவிட்டு ஒய 'வட்டாரப் படைப்பு' என்ற ஒரு சொற்சேர்க்கை இவர்களுக்குப் பயன்படுகிறது. மலையாளத்தில் பஷீரையோ, காரூரையோ, கோவிந்தனையோ விலையிருந்த இப்படியொரு பதச் சேர்க்கையை யாரும் பயன்படுத்துவதாகத் தெரியவில்லை.

இந்திய விடுதலைக்கு முந்தியே எழுத்துத் துறைக்கு வந்து விடுதலை கிடைத்த பின்னரும் இத்துறையில் நீடிக்கும் படைப்பாளிகள் இருக்கிறார்கள், விடுதலைக்குப்பின் புதிதாய் எழுதத் துவங்கியவர்களும் இருக்கிறார்கள். இவ்விரு சாராரிலும் படாமல் எழுதும் இளைஞர்களும் இருக்கிறார்கள்.

**"பழையன கழிதலும் புதியன புகுதலும்**
**வழுவல கால வகையி னானே"**

என்பதால் கூட மொழியென்பது எல்லாக் காலத்திலும் ஒரே ரீதியில் வழங்குவதாய் அமைந்திருப்பதாகக் கருத இயலாது. முந்தைய வளர்ச்சியின் பயனாகவும், இனியுள்ள வளர்ச்சிக்கான துவக்கமாகவும் மொழி இன்று கணிக்கப்படுகிறது.

பல்வேறு மொழிகள் பேசும் இந்திய நாட்டில், நாம் தமிழர்கள் மட்டும் தனித்தீவாக இயங்கிவிட முடியுமென்று தோன்றவில்லை. ஏனைய மொழி இலக்கியங்களையும் அவைகளின் செல்நெறிகளைப் பற்றியும் எல்லாம் தெரிந்து கொள்ளும் அந்த வேளையில், நம் தனித்தன்மையை இழக்காமலும் இருக்க வேண்டியிருக்கிறது. காலத்துக்கு ஒரு புது நிலைக்குக் கொணர்வது அவசியம். எல்லோரும் எல்லா மொழிகளையும் தெரிந்திருக்க வேண்டும் என்று எதிர்பார்க்க முடியாது. ஆனால், பிறரை மொழிபெயர்ப்பு மூலமாகவாவது தெரிந்துகொள்ளக் குறைந்தபட்சம், ஆங்கிலத்தையோ, இந்தியையோ ஒரு தொடர்பு மொழியாகக் (Link language) கற்றிருப்பதை ஒரு பாவமாகவோ பாதகமாகவோ எண்ணத் தேவையில்லை.

நமது வேர்களைப் பற்றி நமக்குத் தன்னம்பிக்கை இருக்குமென்றால், உலகெங்கும் வீசும் புத்தலைகள் இங்கும் வீசுவதை நாம் ஏன் தடைசெய்ய நினைக்க வேண்டும். இலக்கியத்திலும் அறிவியலிலும் எந்தப் புதுமையும் அவை நிகழும் காலத்தில் உடனுக்குடன் அரசியலில் என்பதைப் போலக் கரகோஷம் – அங்கீகாரம் கிடைத்துவிடும் என்று எதிர்பார்க்க முடியுமா? புதுமைப்பித்தன் சொன்னவாறு காலத்தின் ஏலத்தில் மலியாது நிற்பவை நிலைத்து நிற்கும். புதிய சோதனைகள் வருவதைச் சந்தேகக் கண்களுடன் பார்க்கத் தேவையில்லை. நிறைந்த மனதுடன், மொழியும் இலக்கியமும் எல்லாம் தன்னில் துவங்கித் தன்னின் முடிவுறும் சைபர் வட்டமல்ல, காலம் காலமாய்த் தொடர்ந்து செல்லும் எல்லையற்ற – முடிவில்லாத் தன்மை (infinite), என்ற ஆக்கப்பூர்வமான – உடன்பாடான (Positive) ஆரோக்கியமான அளவுகளை நமக்கு நாமே வளர்த்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. இங்கே, நம்மிடையில் உள்ள சிறப்புத் திறனை இனம்கண்டு முன்னிறுத்த வேண்டியதைக் (Expertising) குறிப்பிடவேண்டும். என்னதான் தளிதியம், பெண்ணியம் என்றெல்லாம் ஆதரித்தாலும் நமது இலக்கியம் ஆலை இல்லா ஊர் இலுப்பம் பூக்களாகிவிடக் கூடாதல்லவா? இந்திய நாட்டு பிறமொழியினருக்குச் சளைக்காதது, உலகப்பொது உருவமாதிரிகளுக்கு (Norms) ஈடு நிற்பது என்ற உயர்மட்டத்தில் நமது இலக்கியம் வளர்ந்தால்தான் நம்மால் நிலைத்து நிற்க முடியும்.

இந்தியாவின் ஏனைய சகோதர மொழியினர் சமகால உலக இலக்கியம் எல்லாம் நமக்கு எதிரிகள் என்றோ, தீண்டத்தகாதவை என்றோ நினைத்து ‘நமக்குள்ளே பழங்கதைகள் பேசி’, ‘வழக்காடு மன்றங்களில்’ இலக்கியம் ‘அபினயித்துக்’ கொண்டிருந்தால் நாம் முன்னால் வர முடியுமா? காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சுதான். ஆனால் பல்வேறு மொழிப் படைப்பாளிகள், திறன் மிகுந்தவை நிலைக்கும் (Survival of the fittest) என்றறிந்து அனைத்துத் திறனையும் தம்மொழி இலக்கியத்தால் செலுத்திச் செயல்பட்டுக் கொண்டிருக்கும் போது நம்மைச் சுயமாக ஆயத்தப்படுத்திக் கொள்ள (Equip) வேண்டாமா? இலக்கியப் பிரிவுகளுக்கு இந்நாள் வரையுள்ள உருமாதிரிகளைக் கேள்விக் குரியதாக்கும் ஆப்பிரிக்கா, லத்தீன் அமெரிக்கா, மற்றும் வளர்ச்சியடைந்து கொண்டிருக்கும் (Developing Countries) நாடுகளின் இலக்கியத்தன்மை – செழுமையிலிருந்து நாம் தெரிந்து கொள்ள வேண்டியது ஏராளம். இலக்கியத்தின் பொது அழகியல் உணர்வுகளில் மென்மை – நளினத்தை மீறி ஒருவித முரட்டுத்தன்மை இப்படைப்புக்களில் இடம்பெற்றுக் கொண்டிருப்பதைப் பார்க்கிறோம். இருந்தும், பூங்காற்றாய் நம்மைப் பரவசப்படுத்தும் உணர்வுகள் அங்கும் உண்டு. நம் மொழி இலக்கியத்திலும் அத்தகைய சூழல் உருவாகிக் கொண்டிருப்பதைத் தடைசெய்ய முடியுமென்று தோன்றவில்லை.

எழுதத் துவங்கிய இடத்திலேயே நிற்பவர்களால் மொழி அதிக செழுமை அடைய முடியுமென்று தோன்றவில்லை. புதுமைக்காகத் தாகிக்கும் படைப்பாளிக்குத் தன் ஒவ்வொரு படைப்பும் ஒரு சோதனைக் களம்தான். இந்தச் சோதனையில் முழுகிச் சட்டை உரித்து மீண்டு வரும்போது எழும் ஆரம்ப எதிர்ப்பில் மிரண்டு மீண்டும் அவன் துவங்கிய பழைய இடத்திற்கே திரும்பிச் சென்று விடுவானேயானால், அது அந்த மொழிக்கு நேரும் துரதிர்ஷ்டமாகிவிடும் என்றுதான் தோன்றுகிறது.

**- நீல. பத்மநாபன்**

# பொருளடக்கம்

**ஒப்பிலக்கியம்**



**இதழியல்**



**நாட்டுப்புறவியல்**



**பெண்ணியம்**



**பதிப்பும் வெளியீடும்**

# புதுக்கவிதை

பொன். செல்வகணபதி

தமிழ்ப் புதுக்கவிதை வரலாறு இன்று பல்வேறு கட்டங்களைத் தாண்டி நடைபோட்டுக்கொண்டிருக்கிறது. இன்னும் பல கட்டங்களை உருவாக்கித் தாண்டுவதற்கான முன்முயற்சியைத் தன்னுள் கொண்டே புதுக்கவிதை வரலாறு போய்க்கொண்டிருக்கிறது. ஏனெனில் அது புதுக்கவிதையாக இருக்கிறது. எனவே பரிணாம வளர்ச்சி என்பது இயல்பாகிறது. இவ்வகையில் தமிழ்ப்புதுக்கவிதை வரலாற்றின் படிநிலை வளர்ச்சியைச் சில காலகட்டத்தில் அடக்கிக்காண முயலும் முயற்சியே இக்கட்டுரை.

**முதற்கட்டம்**

தமிழிலக்கிய வரலாற்றுப் பாதையில் ஒரு திருப்பத்தை ஏற்படுத்திக் கொடுத்தவர் பாரதி. இவ்வகையில் தமிழ்க்கவிதை வரலாற்றின் திருப்பமாகக் கருதப்படுகிற புதுக்கவிதையின் முன்னோடியாகவும் பாரதியே வழிமொழியப் படுகிறார். இதற்கு அவரது காட்சி முதலான வசன கவிதைகள் எடுத்துக் காட்டாக அமைகின்றன.

பாரதியார் தாம் எழுதிய கவிதைகளை **நவகவிதை** என்று அறிமுகப்படுத்துகிறார். சந்த ஒழுங்கிலும் யாப்பு ஒழுங்கிலும் மாறாமல் தாம் எழுதிய கவிதைகளையே அவர் **நவகவிதை** என்று அழைக்கிறார். இதில் **காட்சிகள்** முதலான வசனகவிதைகள் பெறும் இடம் மிகக்குறைவு.

அந்நாளில் இவை எந்த அளவுக்குக் கவிதை வட்டத்தின் கவனத்தை ஈர்த்திருக்கும் என்பது ஆராயத்தக்கது.

எனினும் சுவை புதிது, பொருள் புதிது, வளம் புதிது, சொற் புதிது, சோதி மிக்கது என்றெல்லாம் நவகவிதைக்கு அவர் வகுத்துத் தந்த இலக்கணம் புதுக்கவிதைக்கு ஒரு தொல்காப்பியமாக விளங்குகிறது எனலாம். ஆனால் இதில் யாப்பு அல்லது யாப்பு மீறல் பற்றி எதுவும் இல்லை.

காட்சி முதலான கவிதையில் வடிவம் பற்றிய ஒரு கருத்தைப் பாரதி முன்வைக்கிறார்.

**வடிவத்தைக் காத்தால்**
**சக்தியைக் காக்கலாம்**
**அதாவது சக்தியை அவ்வடிவத்திலேயே காக்கலாம்**
**வடிவம் மாறினும் சக்தி மாறுவதில்லை**
**வடிவத்தைக் காப்பது நன்று சக்தியின் பொருட்டாக**
**சக்தியைப் போற்றுதல் நன்று, வடிவத்தைக் காக்குமாறு**
**ஆனால் வடிவத்தை மாத்திரம் போற்றுவோர்**
**சக்தியை இழந்துவிடுவர்**

காட்டப்பட்ட கவிதை எதுபற்றிப் பேசினாலும், கவிதை யாப்பு வடிவம் பற்றிய விவாதத்துக்கும் அதைப் பொருத்திக் கொள்வதில் பிழையில்லை.

எனவே சக்தி இன்றியமையாதது; வடிவம் அதற்கு அடுத்ததுதான் எனும் முடிவை இதன்மூலம் பெறமுடிகிறது.

ஆகவே பாரதியே தமிழ்ப்புதுக்கவிதையின் ஆதிகவி. இந்த முதல் கட்டத்தில் பாரதி தனித்து நின்று ஆட்சி செலுத்துகிறார். எனினும் தொடங்கியதைத் தொடரும் வாய்ப்பு அவருக்கே வாய்க்காமல் போனது. மேலும் இத்தகைய கவிதை முயற்சிகள் பிற கவிஞர்களாலும் பெரிதும் பின்பற்றப்படவில்லை என அறிய முடிகிறது.

**இரண்டாம் கட்டம்**

பாரதிக்குப் பிறகு **வசனகவிதை** முயற்சி *1930*களின் பிற்பகுதியில் தொடங்குகிறது. இதற்கு அகர மூலமாய் அமைந்தவர் ந. பிச்சமூர்த்தி.

**பாரதியாருக்குப் பின் இத்தடத்தில் சென்றவர்கள் குறைவு. கு.ப. ராஜகோபாலன் ஓரளவும், நான் சற்று விரிவாகவும், வல்லிக்கண்ணன் சிறிதும் இத்துறையில் சோதனை செய்துள்ளோம். புதுமைப்பித்தன் தம் கவிதையில் புதிய கவிதா சோதனைகள் நடத்தினார். ஆனால் பெரும்பகுதிகள் கலிவெண்பாகவே ஒலிக்கின்றன. இச்சோதனையை இப்போது சிலர் செய்வது வரவேற்கத்தக்கது. வெற்றி தோல்வி கவிஞனுக்கு இல்லை.**

இது ந.பி. மூன்றாம் கட்டக் கவிகளை வரவேற்று எழுதிய உரைப் பகுதி.

இதனால் தெரியவரும் செய்திகள் மூன்று. இரண்டாம் கட்டத்தை எடுத்துச் சென்ற கவிஞர்களின் பட்டியல்; அவர்களுள் பிச்சமூர்த்தியின் இடம்; புதுமைப்பித்தனின் சோதனை பற்றிய திறனாய்வு ஆகியன அவை.

இப்புதுமுயற்சி வெற்றி பெறுமா? பெறாதா என்ற ஐயம் அவர்களிடையே இருந்து வந்தது என்பதையும் இப்பகுதி காட்டுகிறது.

இவர்கள் **கலாமோகினி, கிராம ஊழியன், மணிக்கொடி, சரஸ்வதி** போன்ற இதழ்களில் இடம்தேடிச் சோதனை செய்து வந்தனர். எனினும் புதுக்கவிதைக்கென்று இதழ்கள் எதுவும் அமையவில்லை.

**மூன்றாம் கட்டம்**

சி.சு. செல்லப்பாவின் **எழுத்து** *1960* வாக்கில் தோன்றி இக்காலக் கட்டத்தைத் தொடங்கி வைத்ததாகக் கொள்ளலாம். *1937*இல் எழுதத் தொடங்கிய ந.பி. *1946*க்குப் பிறகு பதினான்கு ஆண்டுகள் எதுவும் எழுதவில்லை என அறிய முடிகிறது. பின்னர் *1950*இல் எழுதத் தொடங்கி இக்காலகட்டத்திலும் தொடர்ந்துவருகிறார். அவரது கவிதைகளை **எழுத்து** வெளியிட்டு வந்தது.

**எழுத்து** இதழ் ஏராளமான கவிஞர்களை அறிமுகம் செய்தது. புதுக்கவிதை பற்றிய விவாதங்களை அரங்கேற்றியது. ந.பி.யின் கவிதைகளைத் தொகுத்து நூலாக வெளியிட்டது. **எழுத்து**வில் வெளியான இருநூறு கவிதைகளிலிருந்து தேர்ந்து எடுத்த அறுபத்துமூன்று கவிதைகள் ஒரு தொகுப்பாக வெளியிடப்பட்டது. **புதுக்குரல்கள்** என்ற பெயரில் அந்நூல் வெளிவந்தது. இவையெல்லாம் இக்காலகட்டச் சாதனைகள் எனலாம். புதுக்கவிதைக்கென்றே ஓர் இதழ் இயங்கியதும் குறிப்பிடத்தக்கது.

இக்காலக்கட்டம் வரை மரபுக்கவிஞர்கள் தனியாகவும், புதுக் கவிஞர்கள் தனியாகவும் இயங்கி வந்தனர். பாரதிதாசன், சுரதா போன்றவர்களே தன்னிகரற்றக் கவிஞர்களாக, அறியப்பட்ட கவிஞர்களாக விளங்கினர். புதுக்கவிதையாளர்கள் சிறு குழுவாகவே செயல்பட முடிந்தது. பெரிய செல்வாக்கை அவர்களால் எட்ட முடியவில்லை. ஆனால் கடுமையான போராட்டத்தை அவர்கள் நடத்திக்கொண்டே இருந்தார்கள். தமிழ் மரபின் மீது போர்தொடுக்கும் படையெடுப்பாளர்களாகவே புதுக் கவிதைக் குழுவினர் கருதப்பட்டனர். தமிழ் மரபைச் சிதைக்க வந்தவர்கள் என்றுகூட கருதப்பட்டனர். எனவே இத்தகைய திறனாய்வுகளுக்குப் பதில் தர வேண்டிய நிலையும் அவர்களுக்குத் தொடர்ந்து இருந்துவந்தது. எது கவிதை என்பதிலும் அவர்கள் தங்கள் கருத்தோட்டத்தை விளக்கிக் கொண்டிருந்தனர். மேலும் உலக அரங்கில் கவிதையின் போக்கு எவ்வாறு

புதிய உருவத்தை எடுத்து வருகிறது என்பதையும் கோடிட்டுக் காட்டி வந்தனர். வால்ட் விட்மன், எஸ்ராபவுண்ட், மல்லார்மே, பொதேலர் என்றெல்லாம் பல உலகக் கவிகளையும் துணைக்கு அழைத்துவந்தனர். எனினும் அவர்களது புதுக்குரல் வலிவற்ற குரலாகவே தமிழ்க்கவிதை உலகில் வலம்வந்துகொண்டிருந்தது.

**நான்காம் கட்டம்**

இக்காலகட்டம் *1970*இல் தொடங்குவதாகக் கொள்ளலாம். இதுவரை தனிக்குரலாக உலவிய புதுக்குரல் எழுச்சிக் குரலாக எங்கும் பரவத் தொடங்கிய காலம் இது. இதுவரை இத்துறையில் பெருவாரியாக ஈடுபட்டவர்கள் மேல்சாதியினராக இருந்தனர் என்னும் கருத்து நிலவுகிறது. அவர்களில் பலர் முறையாகத் தமிழ் பயிலாதவர்கள். யாப்பிலக்கணத் தொடர்பற்றவர்கள். அவர்களுக்கு யாப்பற்ற வடிவம் என்பது ஒரு வசதியாகக் கூட இருந்திருக்கலாம்.

இத்தகைய சூழலில் இக்குழுவினரின் பரிசோதனை முயற்சிகளின் மீது தமிழ் மரபாளர்களுக்கு ஐயப்பாடு தொடர்ந்துகொண்டே இருந்தது. இன்றும் கூட அந்த ஐயப்பாடு தீர்ந்துவிட்டதாகக் கூறிவிட முடியாது. அவர்களில் சிலர் எழுதிய கவிதைகள் பலவும் புரியாமலும், வெள்ளையாகவும் இருந்ததும் கூட புதுக்குரல்கள் எடுபடாமலே போனதற்குக் காரணம் எனலாம்.

ஆனால் இக்கால கட்டத்தைத் தொடர்ந்து தமிழை முறையாகப் பயின்ற, யாப்பு முறையிலேயே எழுதும் வல்லமை பெற்ற பலர் அலை அலையாகப் புதுக்கவிதைத் துறையில் நுழையத் தொடங்கினர். இந்தக் காலகட்டத்தை **வானம்பாடி** இதழோடு சேர்த்து- ஒரு வசதிக்காக- அடையாளப்படுத்தலாம். ஏனெனில், **வானம்பாடி**க் குழுவோடு தொடர்பில்லாத பலரும் இக்காலகட்டத்தில் வெளிப்பட்டுப் பல்வேறு சாதனைகளைச் செய்துள்ளனர்.

இவர்கள் தலையெடுத்துப் புதுக்கவிதைத் துறையைக் கையில் எடுத்த பின்னர்தான் தமிழில் புதுக்கவிதை பரவலாக அறியப்பட்டது, படிக்கப்பட்டது. இவர்கள்தான் புதுக்கவிதைகளையும் இம்மண்ணின் மணம் கமழ வெளிக்கொணர்ந்தனர். மரபின் சில அழகுகளை விட்டுவிடாமலும், புதுமைப் புரிதல்களைப் பதிவுசெய்யும் இவர்களது கவிதைகள் வெளிவந்தன. இறக்குமதிப் பொருளாகவன்றி, ஒரு பாரம்பரியத் தொடர்ச்சியாக இவர்களின் கவிதைகள் பிறவி கொண்டன.

இவர்கள் அதுவரை இருந்த புதுக்கவிதையின் பாடுபொருளில் மாற்றம் ஏற்படுத்தினர். இரண்டு, மூன்றாம்கட்டக் கவிஞர்கள் பெரும்பாலும் மேலைநாட்டுத் தாக்கத்தையே வெளிப்படுத்தினர். அவர்களது கவிதைமனம் சர்ரியலிஸம் போன்ற மேலைக் கோட்பாடுகளை அறிவதிலும், இறக்குமதி

செய்வதிலுமே பெரிதும் ஈடுபட்டது. இன்றும் இத்தகையப் போக்குள்ள குழுவினர் தொடர்ந்து இருக்கவே செய்கின்றனர்.

ஆனால் தமிழ் மரபறிந்து எழுதிய மற்றவர்களோ சமூக உணர்வுக்கு முதன்மை தந்து மக்களின் மொழியில் மக்களுக்காகப் பேசினர். மனதுக்குள் ஆழ்ந்து செல்கிற கவிதைகளைவிட மக்களுக்குள் ஆழ்ந்து செல்கிற கவிதைகளை இவர்கள் படைத்துத் தந்தனர். இக்கவிஞர்களும், கவிதைகளும் செல்வாக்குப் பெற இதுவும் ஒரு காரணம் எனலாம்.

இவ்வாறு, நீண்டகால இடைவெளிக்குப் பின்னர் ந.பி. போன்றவர்கள் விரும்பிய வெற்றியை இவர்கள் ஈட்டித் தந்தனர். சி.சு. செல்லப்பா போன்றவர்கள் விரும்பிய அளவுக்கு இவர்கள் புதுக்கவிதையைப் பரவச் செய்தனர். அதற்குக் காரணமாய் அமைந்தது இவர்களது பாடுபொருள் மாற்றமும், பாடும் முறை மாற்றமும்தான்.

**ஐந்தாம் கட்டம்**

இன்றைய காலகட்டம் பற்றி நாம் அதிகம் விரித்துரைக்க இயலாது. தற்போதைய புதுக்கவிதைகள் ஒரு புதிய வடிவம் கொள்வதற்கான பேறுகால வலியில் இருப்பதாகத் தோன்றுகிறது.

'புதுக்கவிதை தோன்றியே தீரும். ஆனால் அது எந்த உருவம் எடுக்கும் என்று இப்போது யாரும் திட்டவட்டமாகச் சொல்ல முடியாது' என்பது கா.நா. சு. வின் கடந்த காலக் கருத்துக்கணிப்பு.

கலையில் திருப்தி ஏற்படுவதில்லை என்றும், அதுவே கலையின் புதிய பிறப்புகளுக்குக் காரணம் என்றும் ஒரு கவிதையில் க.நா.சு. வே கூறியுள்ளார். அவ்வகையில் இன்று ஐந்தாம் கட்டத்தில் புதுக்கவிதை அடியெடுத்து வைத்திருப்பதாகத் தோன்றுகிறது.

இன்றைய காலகட்டத்தில் கவிதைகள் தலித்தியப் போக்கும், பெண்ணிய நோக்கும் முதன்மைப்படுத்தப்பட்டு, வட்டார மொழிச் செல்வாக்கை உள்வாங்கி வெளிப்படுத்தும் சாயலில் வெளி வந்து கொண்டிருப்பதாகக் கருதலாம்.

> இந்திய நாட்டில், பெரும்பாலும் உலகத்தின் வேறு எங்குமில்லாததும், மனிதத் தன்மைக்கும் நியாயத்திற்கும் பகுத்தறிவிற்கும் ஒவ்வாததுமான கொடுமைகள் பல இருந்து வந்தாலும், அவற்றுள் அவசரமாய்த் தீர்க்கப்பட வேண்டியதும், இந்தியர்கள் காட்டுமிராண்டிகள் அல்லர் எனவும் - மனிதத் தன்மையும் நாகரிகமுமுடையதான சமூகம் எனவும் உலகத்தாரால் மதிக்கப்படவும் மற்றும் உலகிலுள்ள பெரும்பான்மையான நாட்டார்களைப் போலவே அன்னிய நாட்டினர்களின் உதவியின்றித் தங்கள் நாட்டைத் தாங்களே பாதுகாத்துக் கொள்ளவும், ஆட்சி நிர்வாகம் செய்யவும்

> தகுதியுடையவர்கள் என்று சொல்லிக் கொள்ளவும் வேண்டுமானால் - முக்கியமாகவும் அவசரமாகவும் ஒழிக்கப் படவேண்டியதாகவுமிருக்கும் கொடுமைகள் இரண்டு உண்டு.
>
> அவைகளில் முதலாவது எதுவென்றால், இந்திய மக்களிலேயே பலகோடி ஜனசங்கியையுள்ள பல சமூகங்களைப் பிறவியிலேயே தீண்டத்தகாதவர்கள் என்று கற்பித்து, அவர்களைப் பகுத்தறிவற்ற மிருகங்களிலும் கேவல மாகவும், உணர்ச்சியற்ற பூச்சிப் புழுக்களிலும் இழிவாகவும் நடத்துவதாகும்.
>
> இரண்டாவது எதுவென்றால், பொதுவாக இந்தியப் பெண்கள் சமூகத்தையே அடியோடு பிறவியில் சுதந்திரத்திற்கு அருகதையற்றவர்கள் என்றும், ஆண்களுக்கு அடிமையாகவே இருக்க 'கடவுளாலேயே' சிருஷ்டிக்கப்பட்டவர்கள் என்றும் கற்பித்து அவர்களை நகரும் பிணங்களாக நடத்துவதாகும். ஆகவே, மேற்கண்ட இந்த இரண்டு காரியங்களும் எந்தக் காரணத்தை முன்னிட்டும் இந்தியாவில் இனி, அரைக்கணம் கூட இருக்கவிடாமல் ஒழித்தாக வேண்டியவைகளாகும்.

(பெரியார் சிந்தனைகள் - பக். *166-167*)

சுதந்திரத்திற்கு முன்பே பெரியாரின் கணிப்பு இவ்வாறு இருந்தது. இதுபற்றி அரசியல் கலை இலக்கியங்கள் என்ன செய்தன என்பது இன்றைய வினா? இத்தகைய தத்துவ உள்ளீட்டில் இன்றைய கவிதை வெளிப்பாடு புத்துருவம் கொள்வதாகவே நினைக்கத் தோன்றுகிறது.

உண்மையான மண்ணின் மைந்தமை கொண்டதாக இக்கால கட்டக் கவிதைகள் வெளிவருவதாகக் கருதப்படுகிறது. கவிதையை அதன் பிறப்பிடத்திலேயே பிடித்துவிடுவதாகப் புதுக்கவிதையை வருணிப்பார் ந.பி. இன்றைய கவிஞர்கள், தம் கவிதைக்கான பாடுபொருளை மட்டுமல்ல, அதற்கான மொழியையும் கூட அதற்குரிய தளத்திலிருந்தே பெறுவதாகக் கூறப்படுகிறது.

**நவீன கவிதை** என்ற தொடர் இப்போது காதில் விழுகிறது. அதுபற்றியும் **ஹைக்கூ** பற்றியும் தனியாக ஆராய்தல் வேண்டும்.

கவிதை எழுதுவது சிரமம்; கவிதை மாதிரி எழுதுவது சுலபம்!

கூட்டிக் கழித்துப்பார்க்கும்போது கவிதை மாதிரி எழுதுவதில் கழிந்த காலம் அதிகமாகத் தோன்றுகிறது. உத்திகளை இறக்குமதி செய்து மிரட்டுவதிலேயே பலருடைய காலம் கழிந்து போனது. இனிவரும் கவிஞர்கள் தத்துவ உயிரோட்டத்தோடு கவிதைகளைக் களமிறக்கக்கூடும் என நம்புவோம்!

# புதினம் - உள்ளடக்கம்

டி. செல்வராஜ்

---

சிறுகதை, நாவல் ஆகிய இரு இலக்கிய வடிவங்களையும் தன்னுள் அடக்கியிருக்கும் புனைகதை (Fiction) என்கிற இலக்கிய வகை ஐரோப்பாவில் நிலவிய நிலமான்ய சமுதாய மாற்றம் காரணமாகத் தோன்றிய இலக்கிய வடிவம் என்று கொள்கிறார் பேராசிரியர் டாக்டர் கார்த்திகேசு சிவத்தம்பி. நிலப்பிரபுத்துவ அமைப்பின் மாற்றத்தினால் தோன்றிய மத்தியதர வர்க்கத்தின் குரலாகப் பெரும்பாலும் புனைகதைகள் இருப்பதைக் காணலாம்.

தமிழ் நாட்டில், ஆங்கில ஆட்சியின் தாக்கத்தாலும், ஆங்கிலக் கல்வியின் செல்வாக்கினாலும் புது நிலையும், புது நோக்கும் பெற்ற மக்கள் பிரிவினரான மத்திய தர வர்க்கத்தினரின் இலக்கிய வடிவமாக நாவல் இலக்கியம் இருந்து வந்திருக்கிறது.

தமிழ் இலக்கியத்தில் நூற்றாண்டு கால வளர்ச்சியினைக் கொண்ட நாவல் இலக்கியத்தைக் கால வகைப்படுத்தி, அரசியல், சமூகப் பொருளாதார பின்னணியில் வகைப்படுத்தும் முயற்சி சில ஆண்டுகளாகத் தான் நடைபெறத் தொடங்கியுள்ளது. இப்படிப்பட்ட சூழ்நிலையில் நாடு விடுதலை அடைந்ததற்குப் பிறகு ஏற்பட்டு வரும், கடந்த ஐம்பது ஆண்டுகால நாவல் இலக்கியத்தின் பரிணாமத்தை, வரலாற்றுப் பின்னணியில் வகைப்படுத்திக் 'குறுகத்தறித்து' ஒரு கட்டுரையில் சொல்லி விடுவது என்பது முடியாத காரியமாகும். இருந்தபோதும் இந்தக் காலப்

பகுதியில் நாவல் இலக்கியத்தில் ஏற்பட்டுள்ள வளர்ச்சிப் போக்கையும், உள்ளடக்கம் சம்மந்தமாக ஏற்பட்டுள்ள சித்தாந்தப் போக்குகளையும் அவற்றுக்கு ஆதாரமாகச் சில படைப்புக்களையும், படைப்பாளிகளையும் மட்டுமே குறிப்பிட முடியும்.

நாவல் மற்றும் சிறுகதை ஆகிய இலக்கிய வடிவங்களில் உள்ளடக்கம் பற்றிய விவாதம் ஐம்பதுகளில் பெரும் சர்ச்சைக்குட் படுத்தப்பட்டிருந்தது. படைப்பிலக்கியத்தில், உருவமும்-உள்ளடக்கமும் உயிரும் உடம்பும் போன்று ஒன்றை ஒன்று பிரிக்க முடியாது என்ற முற்போக்கு எழுத்தாளர்க்குழுவைச் சேர்ந்தவர்களது இலக்கியக் கோட்பாட்டை, கலை கலைக்காகவே என்ற கோட்பாட்டைக் கொண்டிருந்த எழுத்தாளர்கள் (மணிக்கொடி எழுத்தாளர்களும் அகிலன் போன்ற கல்கி கோஷ்டி எழுத்தாளர்களும்) கடுமையாக எதிர்த்தார்கள். படைப்பிலக்கியத்தில் உருவமே முக்கியமானது. அது ரசனையின் பாற்பட்டது என்றும், உள்ளடக்கத்துக்கு முக்கியத்துவம் கொடுக்கும் படைப்புக்கள் கலை நயமற்ற பிரச்சார இலக்கியங்களாகத் தரம் குறைந்தவையாக...... இருக்கும் என்று வாதாடினர். யதார்த்தத்தையே அடிநாதமாகக் கொண்ட புனைகதை இலக்கியம், இவர்களது தடங்கலையும் மீறி வளர்ச்சியடைந்த போது, நாவல் இலக்கியத்தின் யதார்த்தத் தன்மையையும், போக்கையும் குலைப்பதற்கும் வாசகர்களைக் குழப்பத்தில் ஆழ்த்துவதற்குமாக, ஒரு கால கட்டத்தில் தமிழ்ப் புலவர்கள் மாலை மாற்று, ரத பந்தம், மடக்கு என்றெல்லாம் வித்தை காட்டி. தமிழ்க் கவிதையை முடமாக்க முயன்றதைப் போல்- எக்ஸிஸ்டன்ஸியலிஸம், சர்ரியலிஸம், பிராய்டிஸம், மார்டனிஸம், போஸ்ட் மார்டனிஸம் என்றெல்லாம் சொல்லி வாசகர்களை மிரட்டுவதோடு, யதார்த்த வாதத்தின் மீது கடுமையான தாக்குதல்களையும் தொடுத்துள்ளனர். ஆனால், இந்தச் சித்தாந்தங்களை அடிப்படையாகக் கொண்டு படைக்கப்படும் படைப்புக்கள் மனித சமூகத்தை, வாழ்க்கையைச் சிதைவுற்றே பிரதிபலிக்கின்றன. யதார்த்த வாதப் படைப்புகளில் மட்டுந்தான் சமூகத்தின் சகல அம்சங்களும் முழுமையாகப் பிரதிபலிக்கப் பட்டிருக்கின்றன.

இந்திய நாடு *1947* ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் *15* ஆம் நாள் பிரிட்டிஷ் ஆட்சியினின்றும் விடுதலை பெற்றது. தேச சுதந்திரம் என்பது வட மாநிலங்களைப் பொறுத்தமட்டில் அது ஒரு இரத்த வேள்வியாகவே இருந்தது. ஆனால், இந்தக் கொடூரமான, நூற்றுக்கணக்கான ஆயிரக் கணக்கான மனித உயிர்களைப் பலி கொண்ட சம்பவம் தமிழ் நாவல்களில் பெரிதும் இடம்பெறவில்லை. தமிழ் நாவலின் நூற்றாண்டு வளர்ச்சிப் பற்றி, **தமிழ் நாவல் நூற்றாண்டு வரலாறும் வளர்ச்சியும்** என்ற தலைப்பில் ஆய்வு செய்த சிட்டியும் (பெ.கோ. சுந்தரராஜன்) சிவபாதசுந்தரமும், கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகின்றனர். 'ஒரு கால்நூற்றாண்டு காலமாக நடைபெற்று நாடு முழுதும் பரவி, உலக சரித்திரத்திலேயே ஒரு சாம்ராஜ்யத்தின் முடிவுக்கு அடிகோலிய இந்திய தேசிய விடுதலைப்

போராட்டம், தமிழ் எழுத்தாளர்களின் சில நாவல்களில்தான் கையாளப் பட்டிருக்கிறது. பாரதம் பெற்ற விடுதலை தமிழகத்துக்கும் சேர்ந்துதான் என்று நினைக்கும் போது இந்த வரலாற்றுச் சம்பவத்தை ஏன் இன்னும் அதிகமான நாவலாசிரியர்கள் கையாளவில்லை என்பது புதிராகவே இருக்கிறது' (நாவல்-நூற்றாண்டு வரலாறும் வளர்ச்சியும் ப. *190*).

தமிழ் இலக்கியத்தின் புனைகதை இலக்கியத்துக்குக் கடைகால் நாட்டியவர்கள் என்று நாமம் சூட்டிக்கொண்ட மணிக்கொடி எழுத்தாளர்கள் தான் (சிட்டி-சுந்தரராஜன் உட்பட) இந்த மாபெரும் சரித்திரத் தவறுக்குக் காரணமானவர்கள் என்கிற உண்மையை மறந்தோ, அல்லது மறைப்பதற்கு வேண்டியோ சிட்டி தனது நூலில் மேற்கண்டவாறு குறிப்பிடுகிறார் என்றுதான் கருத இடம் உண்டு. ஏனெனில் **மணிக்கொடி** பத்திரிக்கை எந்த லட்சியத்துக்காகத் தொடங்கப்பட்டதோ, அந்த லட்சியத்திலிருந்து வேறு திசைக்கு இவர்களால் திருப்பப்பட்டது.

மணிக்கொடி பத்திரிக்கை வெளிவந்த முப்பதாம் ஆண்டுகள், நாட்டு விடுதலை இயக்கம் தீவிரமடைந்திருந்த கால கட்டமாகும். *1930*ஆம் ஆண்டின் உப்புச் சத்யாகிரகத்தைத் தொடர்ந்து இந்திய விடுதலை இயக்கம் நாடு தழுவிய வெகுஜன இயக்கமாக உருவெடுத்திருந்த காலம். உலக பாஸீஸத்தையும், நாஸீஸத்தையும் எதிர்ப்பதுடன், இந்திய விடுதலைக்காகவும் நின்ற இந்திய எழுத்தாளர்கள், பிரபல எழுத்தாளரான பிரேம் சந்த் தலைமையில் *1936*ஆம் ஆண்டு இந்திய முற்போக்கு எழுத்தாளர் சங்கம் என்கிற அகில இந்திய அமைப்பை உருவாக்கியது. இந்த அமைப்பின் முதல் மாநாடு லக்னோ நகரில், இந்திய தேசிய காங்கிரஸ் மாநாடு நடைபெற்ற இடத்திலேயே நடைபெற்றது. இவ்வாறு நாட்டு விடுதலை இயக்கம் தீவிரமடைந்திருந்த காலம், படைப்பாளிகளும் தேசவிடுதலைப் பணியில் தங்களை ஈடுபடுத்திக்கொண்டிருந்த நேரம். மட்டுமல்லாமல் நாட்டுவிடுதலை இயக்கம் அரசியல், சமூகப் பொருளாதார விடுதலை ஆகியவற்றை உட்படுத்திக்கொண்ட இயக்கமாக இருந்தது. நவீன தமிழ் இலக்கியத்தின் பிதாமகனாகக் கருதப்படும் மகாகவி பாரதியும் தேச விடுதலை என்பது இந்த மூன்று விடுதலைகளையும் உட்படுத்திக்கொண்ட ஒன்றாகவே கருதினான். எனவேதான்

**பறையருக்கும் இங்கு தீயர் புலையருக்கும் - விடுதலை**

என்றும்

**தனி ஒருவனுக் குணவில்லை யெனில்**
**ஜெகத்தினை அழித்திடுவோம்**

என்றும்

**எல்லாரும் ஓர் குலம் எல்லாரும் ஓரினம்**
**எல்லாரும் இந்திய மக்கள்**
**எல்லாரும் ஓர் நிறை எல்லாரும் ஓர்விலை**
**எல்லாரும் இந்நாட்டு மன்னர்**

என்றும் கொண்டான்.

**மணிக்கொடி** பத்திரிக்கையானது மகாகவி பாரதியின் நினைவு தினத்தை ஒட்டி *1933*ஆம் ஆண்டு செப்டம்பர் *17*ஆம் நாள் வாரப் பத்திரிகையாக ஆரம்பிக்கப்பட்டது. பாரதி அன்பர்களும், பத்திரிகை உலக மேதைகளும், தேச பக்தர்களும், தியாகிகளுமான திரு. கு. சீனிவாசன், திரு. டி.எஸ். சொக்கலிங்கம் மற்றும் வ.ரா. என்கிற வ. ராமசாமி ஆகியவர்களால் **மணிக்கொடி** பத்திரிகை தொடங்கப்பட்டது. பத்திரிகையின் லட்சியம் முதல் இதழிலேயே தலையங்கமாக வந்துள்ளது. மூவரும் **ஊழியர்கள்** என்ற அடிக்குறிப்போடு கையெழுத்திட்டிருக்கின்றனர். தலையங்கம் கீழ்க்கண்டவாறு உள்ளது.

'பாரதி பாடியது மணிக்கொடி, காந்தி ஏந்தியது மணிக்கொடி, காங்கிரஸ் உயர்த்தியது மணிக்கொடி, பாரத மக்களின் மனத்திடை ஓங்கி வளரும் அரசியல் லட்சியத்தின் நுனி முனைக்கொழுந்து' *(*புதுமைப்பித்தன் கதைகள்- தொ.மு.சி. ரகுநாதன் ப.*250).* எனவே, **மணிக்கொடி** பத்திரிக்கையானது பாரதியின் லட்சியத்தை ஏற்று, தேசவிடுதலை இயக்கத்தை உயர்த்திப் பிடிப்பதற்காக இந்த மும்மணிகளால் தொடங்கப்பட்டது. மணிக்கொடியின் ஆரம்பகால இதழ்களில், இந்த லட்சியம் பிரதிபலிப்பதையும் பார்க்கலாம். இந்த மூவருக்கும் பிறகு மணிக்கொடிப் பத்திரிக்கையில் பங்கு பெற்றவர்களான பி.எஸ். ராமையா, சி.சு. செல்லப்பா போன்றவர்களும் தேச விடுதலை இயக்கத்தில் பங்கு கொண்டவர்களே. ஆனால், மணிக்கொடி பத்திரிக்கை பி.எஸ். ராமையா ஆசிரியர் பொறுப்பை ஏற்றதற்குப் பிறகு மகாகவி பாரதியின் லட்சியத்தைக் கைவிட்டதன் காரணமாகவும் தேசவிடுதலைப் போராட்டத்தினின்றும் ஒதுங்கி நின்றதன் காரணமாகவும் கலை கலைக்காகவே என்று வெறும் உருவவாதிகளாக இலக்கியத்தைப் பார்த்ததன் காரணமாகவும், நாட்டில் நடைபெற்ற இயக்கங்களை இவர்களால், தங்களது படைப்பில் சித்திரிக்க முடியவில்லை.

இரண்டாவது காரணம், தமிழகத்தில் தேச விடுதலை இயக்கத்தில் ஏற்பட்ட பிளவு, தேசவிடுதலைப் போராட்டத்தில் தன்னை ஆத்மார்த்தமாக ஈடுபடுத்திக் கொண்டு, வைக்கம் சத்யாகிரகி என்று ஆலயப் பிரவேசத்திலும், சாதி ஒழிப்பிலும் முன் நின்ற ஈரோட்டு ஈ.வே. ராமசாமி நாயக்கர் *(*பின் நாளில் பெரியார் ராமசாமி*)* சேரன் மகாதேவி குருகுலத்தில் வ.வே.சு. அய்யர் அவர்களின் செயலால் வெறுப்புற்றுக் காங்கிரஸ் கட்சியிலிருந்து வெளியே வந்து சுயமரியாதை இயக்கத்தை ஆரம்பித்ததாகும்.

தமிழ்நாட்டில் காரல் மார்க்ஸின் **கம்யூனிஸ்ட் அறிக்கை** *(*Communist manifesto*)* போன்ற நூற்களை மொழிபெயர்த்துத் தனது **குடியரசுப்** பத்திரிகையில் வெளியிட்டதோடு, சிங்கார வேலர் போன்ற பொதுவுடைமை வாதிகளின் கட்டுரைகளைத் தனது பத்திரிகையில் வெளியிட்டு, தீவிர சமூக சீர்திருத்தவாதியாகவும், ஜாதி ஒழிப்பு, பிராமண எதிர்ப்பு என்று சகல மக்களுடைய சமத்துவத்துக்காகவும் குரல் கொடுத்தவர், தீவிர தேசிய அரசியலினின்றும் விலகி நின்றார் என்பதோடு, சாதிய

அமைப்பினுடையவும், சுரண்டலுடையவும் ஊற்றுக் கண்ணாக இருந்த நிலப்பிரபுத்துவத்தின் அரணாக இருந்த ஜஸ்டிஸ் கட்சியோடு உறவு கொண்டு, பிறகு பிராமண எதிர்ப்பை வடவர் எதிர்ப்பாகக் கொண்டதால் நாட்டு விடுதலை இந்த இயக்கத்தைச் சேர்ந்த படைப்பாளிகளைப் பாதிக்கவில்லை. மேற்கூறிய காரணங்களால் நாட்டு விடுதலையை ஒட்டி நடைபெற்ற இரத்தக்களறி பற்றி கல்கியின் அலைஓசை போன்ற ஒன்றிரண்டு நாவல்களே அல்லாமல் நாட்டு விடுதலையைப் பிரதிபலிக்கக் கூடிய நாவல்கள் அதிகமாகத் தமிழ் இலக்கியத்தில் இல்லை.

ஆனால், நாடு விடுதலை பெற்ற காலத்தில் வெளியான திராவிட இயக்க நாவல்களைப் பற்றி, ஆய்வாளர்களும், படைப்பாளிகளும் கவனத்தில் கொள்ளாதது துரதிர்ஷ்டவசமானது. முப்பதுகளில் தொடங்கப் பெற்று, இன்றைய காலகட்டம் வரையில் ஒரு மாபெரும் சக்தியாகத் தமிழ் மக்களைப் பாதித்திருக்கும் இந்த இயக்கம் சம்மந்தமான படைப்புகளைப் பற்றியும் அவற்றின் வெகுஜனத்தன்மை பற்றியும் ஆய்வு, செய்யப்பட வேண்டிய ஒன்றாகும். இந்த இயக்கத்தைச் சேர்ந்தவர்களின் நாவல்களில் ஒருவித செயற்கைத் தன்மையும், அதீதக் கற்பனையும் கலந்திருந்த போதும், மூடநம்பிக்கை எதிர்ப்பு, சுயமரியாதை, தாசி ஒழிப்பு, பொருளாதார ஏற்றத் தாழ்வு, பொருந்தாத் திருமணம் போன்ற சீர்திருத்த, பகுத்தறிவுக் கருத்துகள் கலப்புத்திருமணம் போன்ற கருத்துகள் இடம் பெற்றிருப்பதைப் பார்க்கலாம். சி.என். அண்ணாத்துரை, டி.கே. சீனிவாசன் ஆகியவர்களின் படைப்புக்கள் கவனத்தில் கொள்ளப்பட வேண்டியவை.

இந்தக் கால கட்டத்தில் சரித்திர நாவல்கள் என்ற பெயரில் பெரும் வாசகர் வட்டத்தை ஏற்படுத்திய ராஜா ராணி அரண்மனைக் காட்சிகளை உள்ளடக்கமாகக்கொண்ட புதினங்களைப் புறக்கணித்துவிட முடியாது. சரித்திர நாவல்களின் முன்னோடி கல்கி எனலாம். இவரைத் தொடர்ந்து சாண்டில்யன், நா. பார்த்தசாரதி, அகிலன் போன்றவர்கள் சரித்திரத் தொடர்களை எழுதலானார்கள். இவர்களின் எழுத்துக்களுக்கு ஆதார மானவை நீலகண்ட சாஸ்திரி மற்றும் சதாசிவப் பண்டாரத்தார் ஆகியவர்கள் எழுதிய தமிழ் மக்களின் சரித்திரம் மற்றும் அண்டை மாநிலங்களின் சரித்திரம் ஆகியவையாகும். ஆனால் இந்தச் சரித்திர நாவல்களுக்கும் உண்மையான சரித்திரத்திற்கும் தொடர்பு இருப்பதில்லை. ஒரு கட்டத்தில் கொச்சையாக மிகு பால் உணர்வு கொண்டவையாகவும் இந்த வரலாற்று நாவல்கள் நசிவுப் படைப்புகளாகச் சிதைந்து போயிருப்பதைப் பார்க்க முடியும். ஐரிஷ் மக்களது சுதந்திர இயக்கத்தை வலுப்படுத்த ஐரிஷ் எழுத்தாளர்களால், வரலாற்று நாவல்கள் எழுதப் பட்டுள்ளன. ஆனால், தமிழ்நாட்டில் அப்படி ஒரு சூழ்நிலை ஏற்படவில்லை.

நாடு விடுதலை அடைந்ததற்குப் பிறகு, படித்த மத்தியதர வர்க்க மக்களின் கற்பனைகளும், கனவுகளும், சிதைந்து, ஒருவித மன முறிவும், மனச் சோர்வும் சஞ்சலங்களும் ஏற்படலாயிற்று. சுதந்திரத்துக்குப் பின் ஏற்பட்ட அரசியல், சமூகப் பொருளாதார மாற்றம் காரணமாக, குடும்ப

உறவுகள் சிதைவதும், சமுதாயச் சிதைவும் சீரழிவும், ஊழலும், மனச்சாட்சி உள்ள படைப்பாளிகளைப் பெரிதும் பாதிக்கவே செய்தது. எனவே, சுதந்திரத்துக்குப் பின் தமிழர் சமுதாயத்தில் ஏற்பட்ட கேடுகளை இவர்கள் அம்பலப்படுத்தினார்கள். விமர்சனம் செய்தார்கள். இவர்களுடைய படைப்புகள் தர்மாவேசம் கொண்ட சமுதாய விமர்சனங்களாக இருந்தன. அகிலன், பார்த்தசாரதி, டாக்டர் மு. வரதராசனார், திருமதி ராஜம் கிருஷ்ணன் ஆகியவர்களின் படைப்புக்களை உதாரணமாகச் சொல்லலாம். இத்தகு படைப்புக்களை விமர்சன யதார்த்தவாதப்படைப்பின்பாற்பட்டவை என்று கொண்டனர் இலக்கிய விமர்சகர்கள். இத்தகு நாவல்களில் இடம்பெறும் கதாபாத்திரங்கள் சமுதாயத்தில் புரட்சிகரமான மாற்றங்கள் ஏற்படுத்த வேண்டும் என்று முனைந்த போதும், அதைச் செயலாற்ற முடியாமல், தவிப்பவர்களாக இருப்பதைப் பார்க்கலாம். இந்த விமர்சன யதார்த்தவாதப் போக்கு (Critical Realism) தமிழ் இலக்கியத்தில் சோஷலிஸ யதார்த்தப் போக்குக் கொண்ட நாவல்கள் உருவாவதற்கு வழிவகுத்தன எனலாம்.

ஐம்பதுகளின் பிற்பகுதி வரையில் சமூகத்தின் அடி நிலையில் உள்ள மாந்தர்கள், தமிழ் நாவல்களில் கதாபாத்திரங்களாக இடம்பெறவில்லை. இல்லாமையின் அடிப்படையில் உலக நோக்கில் மாற்றம் கோரியவர்கள் இலக்கிய உலகில் சஞ்சரிக்கவில்லை (இலக்கியச் சிந்தனை, டாக்டர் கைலாசபதி, ப. *75*). சமூகத்தின் அடித்தளத்தில் நின்றும் தங்கள் வாழ்வை மேம்படுத்துவதற்காகப் போராடும் மக்களைக் கதாநாயகர்களாகக் கொண்ட சோஷலிஸ யதார்த்த நாவல்கள் தொ.மு.சி. ரகுநாதனின் **பஞ்சும்-பசியும்** என்ற நாவலுடன் ஆரம்பமானது. இந்த நாவல் வெளிவந்த போது, உருவவாதிகளின் கடுமையான விமர்சனத்துக்கு உட்படுத்தப்பட்டது. இது ஒரு பிரச்சார நாவல்; இலக்கியத்தரம் குறைந்தது என்று விமர்சிக்கவும் செய்தனர். இவர்களின் விமர்சனம் காழ்ப்புணர்ச்சி கொண்டது என்பதை நிரூபிக்கும் வகையில் **பஞ்சும்-பசியும்** பல வெளிநாட்டு மொழிகளில் மொழியாக்கம் செய்யப்பட்டது. ரகுநாதனைத் தொடர்ந்து டி. செல்வராசு, சின்னப்ப பாரதி, பொந்நீலன் மற்றும் தனுஷ்கோடி ராமசாமி போன்றவர்களின் படைப்புக்களும் வேறுபலருடைய படைப்புக்களும் வெளிவந்துகொண்டிருக்கின்றன.

ஐரோப்பாவில் இரண்டாம் உலகப் போர் முடிவடைந்ததும், மக்கள் பிரமைகள் தகர்க்கப்பட்டு நடைமுறை வாழ்வில் சிக்கல் ஏற்பட்டபோது இருத்தலியக் கோட்பாடு (எக்ஸிஸ்டன்ஸியலிஸம்) தலை தூக்கியது. அது இலக்கியத்திலும் பிரதி பலித்தது. இன்மையான உணர்வும், சமூகத்தின் பால் வெறுப்பும், விரக்தி மனோபாவமும் கொண்ட சமூகத்தினின்றும் அந்நியப்பட்டுப் போன கதாபாத்திரங்களைப் பிரதானமாகக் கொண்ட இருத்தலியப் போக்கு நாவல்களும் நாட்டில் ஐம்பதுகளுக்குப் பிறகு ஏற்பட்ட நிலையைக் களனாகக் கொண்டு ஒரு சில படைப்பாளிகளால் படைக்கப்பட்டன. இவர்களின் சில படைப்புகள் ஃபிராய்டிஸ உள்மன

வெளிப்பாடுகளை அடிப்படையாகக் கொண்டவையாக இருந்தன. ஆனால், இந்த இருத்தலியக் கோட்பாடு, வெகு காலம் நிற்கவில்லை. நாவல் இலக்கியத்தின் வளர்ச்சியைத் திசை திருப்ப முடியவில்லை.

தொண்ணூறுகளில் தமிழ் நாவல் இலக்கியத்தில் பெரிதும் பேசப்படும் இலக்கியம் தலித் இலக்கியமாகும். தலித் இலக்கியமானது ஐம்பதுகளில் மராத்திய இலக்கியத்தில் பெரும் புயலாக உருவெடுத்து, கன்னட இலக்கியத்தில் தடம்பதித்து, இப்போது தமிழ் இலக்கியத்திலும், தனது பாதிப்பை ஏற்படுத்தத் தொடங்கியுள்ளது. மராத்திய இலக்கியத்தைப் பொறுத்த மட்டில், நசிவை நோக்கிப் போய்க் கொண்டிருந்த மராத்திய இலக்கியத்திற்குத் தலித் இலக்கியம் புத்துயிர் ஊட்டியது. தமிழ் இலக்கியத்தைப் பொறுத்த மட்டில் தலித் இலக்கியக் கோட்பாடு மிகவும் தாமதமாகவே வந்துள்ளது.

தலித் இலக்கியவாதிகள் தங்களுக்குப் பிறகுதான் தலித் இலக்கியம் பிறந்திருக்கிறது என்பதுபோல் வாதிடுகின்றனர். ஆனால் *1936*இல் அகில இந்திய முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தை உருவாக்கியவர்களில் ஒருவரான முல்க்ராஜ் ஆனந்த் எழுதிய முதல் நாவலே தீண்டாதான் *(*Untouchable*)* என்ற தீண்டப்படாத மனிதனின் வாழ்க்கை பற்றியதாகும்.

காலங்காலமாக அடிமைப்பட்டுக் கிடந்த இந்த மக்கள் பகுதியினர் உழைப்பையே மூலதனமாகக் கொண்டவர்கள். உழைப்பின் பலனைப் பறி கொடுத்துவிட்டு, தான் என்கிற அடையாளத்தையே இழந்துவிட்டவர்கள். இவர்களது எழுச்சி, பலவிதத்திலும் கூர்மைப்பட்டுவருகிறது. இந்த மக்கள் சுரண்டப்பட்ட வர்க்கத்தின் ஒரு பகுதியினர். இந்த மக்களுடைய மீட்சியும், விடுதலையும், சுரண்டப்பட்ட இதர பகுதி மக்களுடன் சம்மந்தப்பட்ட ஒன்று என்பதைத் தலித் இலக்கியவாதிகள் ஏற்க மறுக்கின்றனர்.

இதுவரை வெளிவந்திருக்கும் பெரும்பான்மையான தலித் நாவல்களில், தலித் மக்களின் அவல வாழ்க்கையே சித்திரிக்கப்பட்டிருக் கிறது. இம்மக்களுக்கிடையிலான பிரிவினைகள் பெரிதுபடுத்தப்படுகின்றன. தலித் மக்கள் தங்களது விடுதலைக்காக நடத்தும் போராட்டங்கள் இன்றைய தமிழ் தலித் நாவல்களில் இடம் பெறாமை துரதிஷ்டவசமான ஒன்றாகும். அவர்கள் எதை இழந்து அடையாளமற்றவர்களாக்கப்பட்டு இருக்கிறார்களோ அதை அவர்கள் பெறவேண்டும். எனவேதான் இதை உணர்ந்த மகாகவி சுப்ரமணிய பாரதி தனது **ஆறில் ஒரு பங்கு** என்ற கதையின் முன்னுரையில்,

'இந்த நூலை, பாரத நாட்டின் உழவுத் தொழில் புரிந்து நமக்கெல்லாம் உணவு கொடுத்து ரட்சிப்பவர்களாகிய பள்ளர், பறையர் முதலிய பரிசுத்த தன்மை வாய்ந்த வைசிய சகோதர்களுக்கு அர்ப்பணம் செய்கிறேன்' என்று எழுதினான். பாரதி தீர்க்கத் தரிசனமாகச் சொன்னபடி, உழவுத் தொழில் செய்யும் இம்மக்கள் கையில் இவர்கள் உழவடை செய்யும் நிலம் சொந்தமாகக் கிடைக்கும் வரையில் இவர்களுக்கு விமோச்சனமில்லை.

தலித் இலக்கியவாதிகளால் வேறு ஒரு வாதமும் முன் வைக்கப்படுகிறது. அதாவது தலித் இலக்கியமானது தலித்துகளாலேயே படைக்கப்பட வேண்டும் என்பதாகும். இது படைப்பிலக்கியத்துக்கு ஒரு எல்லை வகுப்பது போலாகும். ஆழமான சமூகப் பார்வையும், மனிதாபிமானமும் கொண்ட எந்த ஒரு இலக்கிய கர்த்தாவாலும், தலித் மக்களின் வாழ்க்கையையும், போராட்டத்தையும் இலக்கியமாக வடித்தெடுக்க முடியும். ஆலப்புழை நகரத்து நகர சுத்தித் தொழிலாளர்களின் இழிவான வாழ்க்கையையும் அவர்களின் போராட்டத்தையும், மீட்சியையும் **தோட்டியின் மகன்** என்ற நாவலாக உருவாக்கிய உலகப் பிரசித்தி பெற்ற நாவலாசிரியர் தகழி சிவசங்கரப்பிள்ளை தலித்து அல்ல. மேலும் தலித் இலக்கியம் பற்றிப் பேசவந்த கவிஞர் தணிகைச்செல்வன் **தலித்தியம்** என்ற தனது நூலில் சு. சமுத்திரம் எழுதிய **வேரில் பழுத்த பலா** என்கிற நாவலைக் குறிப்பிடுகிறார்.

தலித்தியம் என்கிற கோட்பாடு, பின் நவீனத்துவக் கோட்பாடு என்றும் பேசப்படுகிறது. இது ஒரு ஆபத்தான அபத்தமான பார்வையாகும். பின் நவீனத்துவமானது, தோற்றங்களை மட்டும் புரிந்து கொள்ள முயலுகிறதேயல்லாமல், தோற்றங்களைத் தாண்டி அவற்றின் உயிர் நிலைகளைக் கண்டறிய முற்படுவதில்லை. பின் நவீனத்துவக் கோட்பாட்டின்படி, தோற்றங்களை அல்லது உருவங்களை மட்டும் ஏற்றுக் கொள்வதானால், இந்திய சமூகத்தில் நிலவும் வருணமுறையை ஏற்றுக் கொள்வதாகும். வெளித்தோற்றங்கள் பற்றி மட்டுமே அக்கறை கொள்ளும் இந்தக் கோட்பாட்டிற்கு, இந்த அமைப்பை மாற்றியமைப்பதற்கான அக்கறையே கிடையாது. பின் நவீனத்துவத்தைப் பொறுத்தமட்டில், மனித குல விடுதலை பற்றிய இந்தச் சமுதாயத்தை மாற்றியமைப்பதற்கான கவலை இல்லை. இது ஒரு ஆபத்தான கோட்பாடாகும். பின் நவீனத்துவத்துடன் தலித்தியத்தை இணைக்க முற்படுவது, சமுதாய அசமத்துவத்திலிருந்து விடுதலை பெறும் முயற்சியினின்றும் அந்த மக்களைப் பிரித்துத் தனிமைப்படுத்தும் சூழ்ச்சி என்று கொள்ள வேண்டும். ஏனெனில் பின் நவீனத்துவமானது. யதார்த்தத்தினின்றும் விலகி நின்று வெறும் அறிவுஜீவித்தனமான வார்த்தை ஜாலங்களால் மூழ்கடிக்கும் கோட்பாடாகும்.

மேலே குறிப்பிட்ட பலவித இலக்கியக் கோட்பாடுகள் தமிழ் இலக்கியத்தில் முகிழ்த்த போதும் யதார்த்த வாத இலக்கியம் மென்மேலும் வளர்ந்து வளம் பெற்று வருகிறது. ஏனெனில் யதார்த்த வாதம் மக்களின் வாழ்க்கையையும், மக்கள் தங்கள் வாழ்க்கையை மேம்படுத்துவதற்காகவும், ஏற்பட்டுள்ள அசமத்துவ நிலைமையை மாற்றுவதற்காக வேண்டி அவர்கள் நடத்தும் போராட்டத்தையும் சாரமாகவும் அடிப்படையாகவும் கொண்டதாக இருக்கிறது.

# தமிழ்நாவல்கள் படைப்பும் பார்வையும் ஒரு சமதளப் பார்வை

ஞானி

*1. 1947*இல் இந்தியா விடுதலை பெற்றது என்பதைக் கேள்விக்குட் படுத்துவதற்கு நிறையக் காரணங்கள் உள்ளன. இது குறித்து இங்கு ஆய்வதற்கு இல்லை. *1947* என்ற ஆண்டை ஒரு எல்லையாக வைத்துக் கொண்டால் ஐம்பது ஆண்டுகளைக் கடந்து வந்திருக்கிறோம். அரசியல், பொருளியல், சமூகவியல், கல்வி, மருத்துவம் என்பனவற்றில் சாதனைகள் என்றும் வேதனைகள் என்றும் பேசுவதற்கு நிறையவே இடமுண்டு. கலை, இலக்கியம், கலாச்சாரம் ஆகிய துறைகளிலும் நமது நிலை இத்தகையதுதான்.

கடந்த ஐம்பது ஆண்டுகளில் தமிழில் வெளிவந்துள்ள நாவல்கள் குறித்து நான் பேசவேண்டும். ஆண்டுக்கு ஒரு நூறு நாவல்கள் என்று வைத்துக் கொண்டாலும் தமிழில் ஐந்தாயிரம் நாவல்களேனும் கடந்த ஐம்பது ஆண்டுகளில் வெளிவந்திருக்கக் கூடும். நூல்களின் பதிவாளர் அலுவலகத்திலிருந்து இப்படி ஒரு பட்டியலை நாம் சேகரிக்க முடியும். ஐயாயிரம் நாவல்கள் குறித்தோ இவற்றிலிருந்து ஐந்நூறு நாவல்களைத் தெரிவுசெய்வதற்கோ இப்பொழுது சாத்தியமில்லை. குறைந்த அளவிற்கு ஐம்பது நாவலாசிரியர்களைத் தெரிவு செய்து கொள்கிறேன். ஒருவர் எழுதிய ஒன்றுக்கு மேற்பட்ட நாவல்களிலிருந்து ஒரு நாவலை மட்டுமே அதன் தனித்தன்மை காரணமாகத் தெரிவு செய்து கொள்வதுதான் இப்பொழுதைக்குச் சாத்தியம்.

இவை பற்றிய மதிப்பீடு செய்வதுகூட இப்பொழுது எனக்கு நோக்கமில்லை. இது மக்களாட்சிக் காலம் என்று நம்புகிறோம். ஒவ்வொருவரும் இன்று மதிக்கத்தக்கவர். அவரவர்க்குத் தனிப்பார்வை உண்டு. இவற்றையெல்லாம் கருத்தில் கொண்டு ஒரு சமதளப்பார்வை என்ற அணுகுமுறையில் என் கருத்துக்களை முன்வைக்கிறேன். என் பார்வையிலிருந்து இன்னும் பலர் வேறு பார்வைகளோடு முன்வரும் சாத்தியத்தை நான் வரவேற்கிறேன். எனது சமதளப்பார்வை குறித்துச் சில விளக்கங்களைத் தரக் கடமைப்பட்டுள்ளேன்.

*2.* இது மக்களாட்சிக் காலம் என்று குறிப்பிட்டேன். இங்கு எல்லோருக்கும் சமவாய்ப்புத் தரப்படுகிறது. ஏற்றதாழ்வுகளை நாம் ஏற்பதற்கில்லை. ஒவ்வொருவரையும் மனிதர்தான் என்று ஏற்றுக் கொள்கிறோம். ஒவ்வொருவரும் சமூகத்தோடு ஏதோ சில வகைகளில் உறவு கொண்டிருக்கிறார்கள். ஒவ்வொருவருக்குள்ளும் குறைந்த அளவிற்கேனும் ஒரு கவிஞன்/கலைஞன் இருக்கிறான். இவன்தான் அந்த மனிதனுக்குள்ளிலிருந்து அவனது வாழ்வை அர்த்தப்படுத்துகிறான். தவிர அழகுபடுத்துகிறான். இவன் கதை கேட்பவன் மற்றும் கதை சொல்பவன். அகம், புறம் ஆகியவற்றைச் சில வடிவங்களில் இணைத்துத் தன்னையும் தன் கதைகளையும் இவன்தான் வடிவமைக்கிறான். இந்த வடிவமைப்பின் இலக்கணம் குறித்தும் இவனுக்குச் சிந்தனை உண்டு.

இவன் தன்னோடும் சமூகத்தோடும் சிலவற்றைப் பகிர்ந்து கொள்ள விரும்புகிறான். சமுதாயத்தில், உலக அளவில் செயல்படும் முரண்கள் இவனுக்குள்ளும் உண்டு. இவை பற்றி இவன் சிந்திக்காமல் இருக்க முடியாது. சமூகச் சூழலில் ஏதோ ஒரு சமூகப் பிரிவிற்குள் இவன் இருக்கிறான். சமூக நிறுவனங்களுக்குள் இவன் இருக்கிறான். குடும்பம், கல்வி நிறுவனங்கள், மத நிறுவனங்கள், அரசு மற்றும் தனியார் நிறுவனங்கள், அரசியல் கட்சிகள் அல்லது இயக்கங்கள் முதலியனவற்றிற்குள் இவன் இருக்கிறான். இவற்றிலிருந்து இவன் விலகி நிற்கமுடியாது. இவை இவனைப் பாதிக்கின்றன, உருவாக்குகின்றன, கட்டமைக்கின்றன, கட்டுப்படுத்துகின்றன.

இவனது கல்வி, கலையுணர்வு, வாழ்க்கை இலட்சியங்கள் முதலிய எல்லாவற்றையும் படைப்பதில் இவற்றின் தாக்கம் உண்டு. சில சந்தர்ப்பங்களிலேனும் இந்த நிறுவனங்களுக்கு இவன் ஊழியனாக, கூலிக் காரனாகச் செயல்பட இவன் விதிக்கப்பட்டுள்ளான். விடுதலை குறித்து இவன் சிந்திப்பவன் என்றாலும் முற்றான விடுதலை இவனுக்கு இப்பொழுதைக்கு இல்லை. இவனுக்குள் ஒரு கலைஞன் இருப்பதைப் போலவே வாசகனும் இருக்கிறான். இவன் எல்லாவற்றையும் தன் வாழ்வியல் அனுபவங்கள் வழியே வாசிக்கிறான், பொருள்படுத்துகிறான். வாழ்க்கை மற்றும் இவன் வாசிக்கும் கதைகளை இவனே புரட்டிப் பார்க்கிறான், அர்த்தப்படுத்துகிறான். இந்த வாசகனுக்குள் ஒரு திறனாய்வாளனும்

இருக்கிறான். இவன் எல்லாவற்றையும் மதிப்பிடுகிறான். மதிப்பீடுகளைக் கலைத்துப் போடுகிறான். மீட்டுருவாக்கம் செய்கிறான். இப்படி எல்லாவற்றையும் உள்ளடக்கியதாகத்தான் என் சமதளப்பார்வை இருக்கிறது. ஆதிக்கத்திற்கு இடம் தராதது இந்த சமதளப் பார்வை. ஐம்பது ஆண்டு அனுபவங்கள் இந்தப் பார்வையை எனக்குக் கற்றுக்கொடுத்ததைப் போலவே என்னைப் போன்ற வாசகன் அல்லது திறனாய்வாளனுக்குள்ளும் இந்தப் பார்வை இடம்பெற முடியும்.

*3. 125*ஆண்டு வரலாறு தமிழ்நாவலுக்கு உண்டு. இந்தக் கால அளவில் தமிழ் நாவல்களில் சில/பல உச்சங்கள் உண்டு. நாம் ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட *50* ஆண்டுகளினுள்ளும் சில உச்சங்களை நாம் காணமுடியும். உச்சங்களில் பார்வையைப் பதித்து இடையிலும் தரையிலும் உள்ள எத்தனையோ அற்புதங்களை நாம் இழந்துவிடக் கூடாது. உச்சங்கள் நம் பார்வையை மறைப்பது மக்களாட்சிக் காலத்திற்கு ஒத்ததாகவும் இருக்க முடியாது. இதைப்போலவே நாவல் என்பது ஒரு நவீனகாலக்கலை. நவீனத்துவக் கலை என்ற முறையில் கலைப்பார்வையை மட்டுமே முன்னிறுத்திக் கலைத்துவ நாவல்களில் மட்டுமே நம் கவனத்தைக் குவிக்க முடியாது. காவிய மரபிலிருந்து பெரும்பகுதி வேறுபட்டது நாவல். காவியங்களில் கடவுள், மன்னராட்சி முதலியவற்றிற்கு இடமுண்டு. தன்னிகரற்ற தலைவன் காவிய நாயகன். புராணம் என இனம் காணத்தக்க அளவிற்குக் காவியத்தில் அற்புதங்கள் நிகழும். காலம் மாறிவிட்டது. வாழ்வை நிர்ணயிக்கும் சக்திகளாகப் பொருளியலும் அரசியலும் வரலாறும் வந்துவிட்டன. மனித வாழ்வின் எதார்த்த சூழலைத்தான் நாவல்கள் தனக்கு உள்ளடக்கமாகவும் எல்லையாகவும் கொண்டுள்ளன. இந்த எல்லைக்குள்ளும் அற்புதங்கள் சிலவேனும் நிகழத்தான் செய்கின்றன. வாழ்வின் எல்லைகளும் அர்த்தங்களும் மாறி வருகின்றன. எதார்த்த வாழ்வியல் நோக்கிலிருந்து படைக்கப்படும் நாவல்கள், காவிய மரபிலிருந்து மாறுபட்டவை மட்டுமல்ல; எதிரானவை யாகவும் இருக்க முடியும்.

தமிழ் நாவல்களில் எதார்த்தவாதம் அழுத்தம் பெற்றதை நாம் ஒப்புக் கொள்ளும்பொழுதே, எதார்த்தவாத நோக்கில் மட்டுமே வாழ்வின் பல்வேறு சிக்கல்களையும் போக்குகளையும் அதிர்வுகளையும் நம்மால் புரிந்து கொள்ள இயலாது. எதார்த்தவாத நோக்கில் மையம் பெறும் கட்சி அரசியல் குறித்தும் நாம் விமர்சனம் செய்வதற்கு இடமிருக்கிறது. காவிய மரபிலிருந்து நம்மால் முற்றாக விடுபட இயலாது என்பதைப்போலவே எதார்த்தவாத மரபை ஒதுக்கிவிட இயலாது.

தமிழில் திறனாய்வாளர்கள் என்று சொல்லிக் கொள்ளும் நாம், வணிகமுறை எழுத்துக்களை ஒதுக்கியும் கேவலப்படுத்தியும் வந்திருக்கிறோம். வணிகம் என்பதைச் சோசலிச காலகட்டத்தினுள்ளும் விலக்கிவிட இயலாது. அன்றியும் வணிகமுறையில் இருந்து கலை என்றும்

உச்சங்கள் என்றும் பேசுபவர்களும் தப்ப இயலாது. ஆகவே துப்பறியும் நாவல்கள் மற்றும் வணிக இதழ்களில் இடம்பெறும் தொடர் கதைகள் மற்றும் ரொமான்ஸ் என்று அழைக்கப்படும் புனைவியல் நாவல்கள், பொழுதுபோக்கு நாவல்கள் முதலியவற்றின் மீதும் நாம் கவனம் செலுத்தத்தான் வேண்டும். இவற்றினுள்ளும் இலக்கியத்தரம், வாழ்வியல் நிலவரங்கள், மோசடிகள் முதலியவை இடம்பெறுவதை மறுக்க இயலாது. மக்களின் இரசனைகளை இவ்வகை நாவல்கள் மலினப்படுத்துகின்றன என்ற உண்மையை நாம் மறுக்கவில்லை.

வாசகன் என்பவனுக்குள் ஒரு திறனாய்வாளன் இருக்கிறான் என்று நாம் சொன்னோம். இந்தத் திறனாய்வாளன் எந்த ஒரு நாவல் அல்லது இலக்கியத்தை வாசிக்கும்பொழுதும் தன்னை முற்றாக இழந்துவிட்டு வாசிப்பது இல்லை. இந்தத் திறனாய்வாளன் தான் வாசிக்கும் நாவல்களை ஒரு மறுவாசிப்பிற்கு உட்படுத்திக் கொள்ளவும் செய்கிறான். வாசிப்பின்போதே நாவலில் குறைகள் குணங்கள் உணர்ந்து நாவலை புரட்டிப் பார்த்துத் தனக்குள் நிறைவு செய்துகொள்கிறான். திறனாய்வு இல்லாமல் எந்த இலக்கியமும் வாசகனிடம் முற்றுப்பெறுவதில்லை. இத்தகைய திறனாய்வு, வாழ்விற்குள்ளிருந்தே வாழ்வின் முரண்பாடுகளுக் குள்ளிருந்தே வாசகனுக்குள் எழத்தான் செய்கின்றன.

தற்காலத் தமிழ் இலக்கியத்திற்குள் புதுவகையான பார்வைகள் தொடர்ந்து வந்தவண்ணம் இருக்கின்றன. நவீனத்துவம், பின்நவீனத்துவம், தலித்தியம், பெண்ணியம் முதலியவை இப்பார்வைகள். வாழ்க்கைக்குள் செயல்படும் ஆதிக்கங்களைக் களைந்து கொண்டால் ஒழிய வாழ்வில் நமக்கு அர்த்தங்கள் இல்லை, அழகுகள் இல்லை, விடுதலை இல்லை. தமிழ்ச் சமூகத்தின் *2000/3000* ஆண்டுகால வாழ்க்கையை ஒரு தீவிரமான மறுஆய்விற்கு/மறுவாசிப்பிற்கு உட்படுத்திக் கொள்ள இப்பார்வைகள் நமக்கு வழிதிறந்திருக்கின்றன. உட்புக இடம்தராத முன்னைய இறுக்கமான இலக்கியங்களைத் திறந்து பார்க்கும் வாய்ப்பை இவ்வகைப் பார்வைகள் நமக்கு வழங்கியிருக்கின்றன. இதன்காரணமாக இலக்கியத்தின் எல்லைகள் நமக்குள் விரிவு பெறுகின்றன, ஆழம் பெறுகின்றன. இவ்வகைப் பார்வை நமக்குள் இடம்பெறுவதனால்தான் நாட்டார் கலை இலக்கியங்கள் இன்று நமக்குள் முன்வந்திருக்கின்றன. தரையில் கால்பதித்துக் காலார நடந்து செல்லும் வாய்ப்பை இவ்வகைப் பார்வை நமக்குத் தருகிறது. உண்டு, உறங்கி, அதிகாரம் செய்து வாழ்கின்ற வாழ்க்கையிலிருந்து விடுபட்டு நமக்குள் சிறகுகள் விரித்து வானத்தில் பறக்கும் வாய்ப்பை இவ்வகைப் பார்வைகள் நமக்குத் தருகின்றன.

நவீனத் தமிழ் இலக்கியத்திற்குள், நவீனத் தமிழ் நாவலாக்கம் மற்றும் திறனாய்வு குறித்து இவ்வாறெல்லாம் பேசுவதற்கான வாய்ப்பை நாம் தெரிவு செய்துகொண்ட *50* நாவல்கள் வழியே பெற்றிருக்கிறோம்.

வரலாறு குறித்த விரிவான பார்வையைத் தமிழ் நாவல்கள் வழியே பெறுகிறோம். யாரையும் நாம் ஒதுக்கிவிட இயலாததென்பதை உணர்ந்து கொண்டோமென்றால் நாம் சமதளப் பார்வைக்குள் இருப்பதைப் புரிந்துகொள்கிறோம் என்பது மட்டுமல்ல; இவ்வகைப் பார்வை நமக்குள் விரிவும் அழகும் தரும் என்பதையும் புரிந்துகொள்ள முடியும்.

கதையின் கட்டமைப்பிலும் புதிய முறைகளும் உத்திகளும் வளர்ச்சி பெற்றுள்ளன. ஒரு நாவலுக்கு அச்சாணியாக மையத்தில் இழுத்துக் கட்டப்படுகிற ஒரு வலுவான கதை தேவை என்பது அண்மைக்காலத்தில் கைவிடப்படுகிறது. கதை தேவையில்லை என்றும் முதலும் முடிவும் கதையில் இருக்க வேண்டியதில்லை என்றும் இப்பொழுது கருதுகிறார்கள். ஓர் ஆசிரியரின் பல சிறுகதைகள் கொண்ட ஒரு தொகுப்பினுள்ளும் ஒரு நாவல் இயங்குவதைக் காணமுடியும். நாவலில் ஒரு நாயகன் தேவையில்லை. எல்லாப் பாத்திரங்களும் சம அளவில் முக்கியத்துவம் உடையவர்களாக அமையமுடியும்.

நாவலுக்கு ஓர் அழுத்தமான மையம் தேவையென்றால் மையத்தில் அதிகாரம் குவிந்துவிடும். கதைக்குள் தலைவன் வந்துவிடுவான். பிற பாத்திரங்கள் அவனது கதைக்கு ஏவலர் ஆகிவிடுவார்கள். இது மட்டுமல்ல; கதை என்பது ஓர் ஆசிரியர் விரும்பிச் செய்யும் கட்டமைப்பு. ஏதோ ஒன்றை மையத்தில் வைத்துக் கதையைக் கட்டவேண்டும். மையத்தில் ஒரு பெரும் இலட்சியம். இலட்சியத்திற்குள் ஒரு பெரும் தத்துவம். இத்தகைய கட்டமைப்பு வாழ்க்கையைச் சாரமற்றதாய்ப் பன்முகப் பரிமாணங்கள் அற்றதாய் மாற்றிவிடும். வாழ்க்கை அதன் இயல்பில் செல்லவேண்டும்.

இப்படியெல்லாம் புதியமுறைகள், உத்திகள் வளர்ச்சி பெற்றுள்ளன. இவற்றின் விரிவை இத்துடன் நிறுத்திக் கொள்ளலாம். சமதளப் பார்வை என்ற பார்வைக்குக் கதை சொல்வதில் இத்தகைய புதியமுறைகளும் உத்திகளும் ஏற்புடையவை. உரையாடலியம் என்பது முக்கியமான இன்னொரு புதியமுறை. கல்லும் மண்ணும் கூட தமக்குள் உரையாடலாம். காலம் கடந்தும், இடம் கடந்தும் மனிதர்களும் பிற உயிர்களும் உரையாடலாம். ஒவ்வொன்றும் மனம் திறந்து பேசுவது அல்லது உறவாடுவது உரையாடலியம்.

*4.* என் சமதளப் பார்வை வழியே நான் தெரிவு செய்து கொண்ட தமிழ் நாவலாசிரியர் மற்றும் அவர்கள் ஒவ்வொருவரின் தனித்தன்மை வெளிப்படும் ஒரு நாவலையும் கொண்ட பட்டியலைக் கீழே தருகிறேன்.

| | | |
|---|---|---|
| *1.* | க.நா.சு. | - பொய்த்தேவு |
| *2.* | கல்கி | - சிவகாமியின் சபதம் |
| *3.* | சி.சு. செல்லப்பா | - சுதந்திர தாகம் |
| *4.* | அகிலன் | - பாவை விளக்கு |
| *5.* | நா. பார்த்தசாரதி | - குறிஞ்சி மலர் |

6. டாக்டர். மு.வ. - நெஞ்சில் ஒரு முள்
7. கோவி. மணிசேகரன் - குற்றாலக் குறிஞ்சி
8. தி. ஜானகிராமன் - மோகமுள்
9. எம்.வி. வெங்கட்ராம் - காதுகள்
10. கரிச்சான் குஞ்சு - பசித்த மானுடம்
11. சுந்தரராமசாமி - ஜெ.ஜெ. சில குறிப்புகள்
12. விந்தன் - பாலும் பாவையும்
13. ஜெயகாந்தன் - ஒரு மனிதன் ஒரு வீடு ஒரு உலகம்
14. பிரபஞ்சன் - வானம் வசப்படும்
15. ரகுநாதன் - பஞ்சும் பசியும்
16. டி. செல்வராஜ் - தேநீர்
17. சின்னப்பபாரதி - சங்கம்
18. பொன்னீலன் - புதிய தரிசனங்கள்
19. ராஜம் கிருஷ்ணன் - மண்ணகத்துப் பூந்தளிர்
20. சு. சமுத்திரம் வாடாமல்லி
21. அஸ்வகோஷ் - சிறகுகள் விரித்து
22. இந்திரா பார்த்தசாரதி - இயேசுவின் தோழர்கள்
23. அசோகமித்திரன் - ஒற்றன்
24. சா. கந்தசாமி - தொலைந்து போனவர்கள்
25. வண்ணநிலவன் - கடல்புறத்தில்
26. எஸ். சம்பத் - இடைவெளி
27. சுஜாதா - கனவுத் தொழிற்சாலை
28. பாலகுமாரன் - இரும்புக் குதிரைகள்
29. திலகவதி - சொப்பன பூமியில்
30. ஜெயந்தன் - ஞானக்கிறுக்கன்
31. மா. அரங்கநாதன் - பறளியாற்று மாந்தர்கள்
32. காவேரி - ஆத்துக்குப் போகணும்
33. தோப்பில் முகம்மதுமீரான் - சாய்வு நாற்காலி
34. ம.ந. இராமசாமி - நாலாவான்
35. சிவசங்கரி - பாலங்கள்
36. ஜோதிர்லதாகிரிஜா - மணிக்கொடி
37. நாஞ்சில் நாடன் - சதுரங்கக் குதிரைகள்
38. சி.ஆர். ரவீந்திரன் - மஞ்சுவெளி
39. தமிழ்நாடன் - சாரா
40. தமிழவன் - ஏற்கெனவே சொல்லப்பட்ட மனிதர்கள்
41. சுப்ரபாரதிமணியன் - மற்றும் சிலர்
42. சூர்யகாந்தன் - மானாவாரி மனிதர்கள்
43. இறையன்பு - ஆற்றங்கரையோரம்

| | |
|---|---|
| 44. தஞ்சை பிரகாஷ் | - கள்ளம் |
| 45. பாமா | - கருக்கு |
| 46. சாருநிவேதிதா | - ஜீரோ டிகிரி |
| 47. அஸ்வத் | - நல்லூார் மனிதர்கள் |
| 48. கணேசலிங்கன் | - தரையும் தாரகையும் |
| 49. கே. டானியல் | - பஞ்சமர் |
| 50. எஸ். பொன்னுத்துரை | - சடங்கு |
| 51. தேவகாந்தன் | - விதி |
| 52. செ. யோகநாதன் | - அகதியின் முகம் |
| 53. இராஜேஸ்வரி பாலசுப்பிரமணியம் | - தேம்ஸ் நதிக்கரையில் |
| 54. ஜெயமோகன் | - விஷ்ணுபுரம் |
| 55. இமையம் | - கோவேறு கழுதைகள் |
| 56. சோ. தர்மன் | - தூர்வை |
| 57. சு. வேணுகோபால் | - நுண்வெளி கிரணங்கள் |
| 58. நீல. பத்மநாபன் | - தலைமுறைகள் |
| 59. அ. மாதவன் | - கிருஷ்ண பருந்து |
| 60. ஆர். சண்முக சுந்தரம் | - நாகம்மாள் |
| 61. சண்முக சுந்தரம் (காவ்யா) | - அந்தி |
| 62. தங்கர்பச்சான் | - ஒன்பது ரூபாய் நோட்டு |
| 63. கி. ராஜநாராயணன் | - கோபல்ல புரத்து மக்கள் |
| 64. அழகியநாயகி | - கவலை |
| 65. ஜி. நாகராஜன் | - நாளை மற்றுமொரு நாளே |
| 66. மு. கருணாநிதி | - தென்பாண்டிச் சிங்கம் |
| 67. பாவை. சந்திரன் | - நல்லநிலம் |
| 68. ர.சு.நல்ல பெருமாள் | - கல்லுக்குள் ஈரம் |
| 69. ஹெப்சிபா ஜேசுதாசன் | - புத்தன்வீடு |
| 70. வாஸந்தி | - வேர்களைத் தேடி........ |
| 71. லா.ச. இராமாமிர்தம் | - அபிதா |
| 72. கிருத்திகா | - நேற்றிருந்தோம் |
| 73. வடிவேலன் | - தொட்டி கட்டு வீடு |
| 74. பா. விசாலம் | - மெல்லக் கனவாய் |
| 75. நகுலன் | - வாக்குமூலம் |
| 76. எஸ். சங்கரநாராயணன் | - மானுட சங்கமம் |
| 77. ப. சிங்காரம் | - புயலில் ஒரு தோணி |
| 78. விட்டல்ராவ் | - நதிமூலம் |
| 79. பெருமாள் முருகன் | - ஏறுவெயில் |
| 80. சிவகாமி | - ஆனந்தாயி |
| 81. வே. சபாநாயகம் | - ஒரு நதி |
| 82. ஆதவன் | - காகித மலர்கள் |

குறிப்பு: *50* நாவலாசிரியர்கள் என்று குறிப்பிட்டேன். என் பட்டியலிலேயே *50*க்கும் மேல் இடம் பெறுகிறார்கள். சில முக்கியமான விடுபடல்கள் இந்தப் பட்டியலில் இருக்கின்றன. சாண்டில்யன், விக்ரமன், வாசவன், ஜெகசிற்பியன், தாமரை மணாளன், எஸ்.ஏ.பி., வல்லிக்கண்ணன் என்ற முறையில் விடுபடல்கள். நண்பர்கள் மன்னிக்க வேண்டும். வரிசைப் படுத்தலில் கோளாறுகள். நானே காலவாரியாக வரிசைப்படுத்தலை மாற்றி அமைக்க வேண்டும். ஒருவர்க்கு ஒரு நாவல் என்று குறிப்பிட்டுள்ளேன். இரண்டு, மூன்று, நான்கு என்று கூடச் சிலரைப் பொறுத்தவரை குறிப்பிட வேண்டும்.

*5. 50* நாவல்கள் என்று தொடங்கினோம். பட்டியல் முடிவடைவதாக இல்லை, தொடர்கிறது. *100* நாவல்கள் வரை வரலாம்.

*1.* ஒவ்வொரு நாவல் குறித்தும் தனித்தனியாக இங்குப் பார்ப்பதற்கில்லை. தமிழ் நாவல்களின் வகைகளைத் தொகுத்துத் தனித்தனியாக ஆய்வதற்கும் இங்கு இடமில்லை. ஏற்கெனவே இப்படி ஆய்வுகள் வெளிவந்துள்ளன. நாவலின் வகைகள் என, கடந்த *50* ஆண்டுகளுக்குள் நிறையவே வெளிவந்துள்ளன. இவ்வகையில் தமிழ் நாவல்களின் ஆக்கத்தைக் குறை சொல்வதற்கில்லை. மலையாளம் முதலிய வேறு இந்திய மொழிகளில் வெளிவந்துள்ள நாவல் இலக்கியத்தோடு ஒப்பிட்டுப் பார்க்க நமக்கு வாய்ப்பில்லை என்றாலும் தமிழ் நாவல்களின் பாரிய பரப்பை வைத்துப் பார்க்கும்பொழுது மோசம் இல்லை என்று உறுதியாகச் சொல்லலாம். சாகித்திய அகாடமிப் பரிசுகள் குறித்து நமக்கு விமர்சனங்கள் உண்டு. ஏற்கெனவே இன்னும் பலர் பரிசு பெற்றிருக்க வேண்டும். ஞானபீடப்பரிசுக்குத் தகுதியுடையவர்கள் என்று தமிழ் நாவலாசிரியர்களில் குறைந்தது *5/6* பேர்களையாவது நாம் இனம் காண முடியும். பரிசு ஏன் கிடைக்கவில்லை என்பது பற்றி இங்கு ஆய்வதற்கில்லை.

*2.* மேலே நாம் தொகுத்துக்கொண்ட பட்டியலைப் பார்க்கும் பொழுது நாவலின் எல்லாவகைகளும் தமிழில் இடம்பெற்றுள்ளன. வரலாற்று நாவல்கள், சமூக நாவல்கள், முற்போக்கு நாவல்கள், வட்டார நாவல்கள், உளவியல் நாவல்கள், நாட்டார் வழக்காற்று நாவல்கள், பெண்ணிய நாவல்கள், தலித்திய நாவல்கள், நவீனத்துவ/பின் நவீனத்துவ நாவல்கள் என்ற முறையில் தமிழில் நாவல்கள் வந்துள்ளன. இவை குறித்து இங்குச் சுருக்கமாகத் தொகுத்துக் கொள்ளலாம்.

*3.* ஆங்கிலேயருக்கு எதிரான இந்திய விடுதலைப் போராட்டத்தின் போது எங்களுக்கும் வரலாற்றில் பெருமைப்படத்தக்க மேன்மைகள் உண்டு என்று சொல்லும் முறையில் கல்கி முதலியவர்கள் வரலாற்று நாவல்கள் எழுதினார்கள். கல்கியின் நாவல்களில் தமிழ்த்தேசியம் என்ற உணர்வை இன்று நாம் காணமுடியும். வரலாறு பற்றிய, கல்கி முதலியவர்களின் பார்வையிலிருந்து வேறுபட்ட முறையில் வரலாற்றைப் பார்க்கவேண்டிய

தேவை நமக்கு ஏற்பட்டது. வர்க்கப் போராட்டம் என்ற முறையில் சமகால வரலாற்றைத் தமிழ் நாவல்களுக்குள் மார்க்சியர் கொண்டுவந்துள்ளனர். அடித்தள மக்களின் பார்வையிலிருந்து வரலாற்றைப் பார்க்கும் தேவையும் நமக்கு இன்று முன்வந்துள்ளது. பிரபஞ்சனையும், ஜெயமோகனையும் இங்குக் குறிப்பிட வேண்டும்.

சமகால வரலாற்றின் சில முக்கிய நிகழ்வுகள் தமிழ் நாவல்களில் இடம் பெற்றுள்ளன. நெருக்கடிகால நிலவரங்கள் குறித்துப் பொன்னீலன் விரிவாக எழுதினார். புதுச்சேரியில் பிரெஞ்சுக்காரர் ஆட்சி குறித்துப் பிரபஞ்சன் எழுதியிருக்கிறார். உழவர்களின் போராட்டம், மீனவர்கள், தொழிலாளிகள், நெசவாளிகள் நடத்திய சில போராட்டங்களும் தமிழ் நாவல்களில் இடம்பெற்றுள்ளன. தமிழகத்தில் நடைபெற்ற சமூக மாற்றங்கள் குறைந்த அளவிற்கேனும் தமிழ் நாவல்களில் இடம்பெற்றுள்ளன. குறிப்பாக, தமிழகத்தில் நடைபெற்ற விடுதலைப் போராட்டங்கள், மக்கள் மத்தியில் எதிர்காலம் குறித்து ஏற்படுத்திய நம்பிக்கைகள், இந்தக் கனவுகள் பொய்யாகிய நிலவரங்கள் பற்றியெல்லாம் தமிழ் நாவல்கள் குறிப்பிடுகின்றன. விடுதலைப் போரில் காந்தியம் மேன்மைப்படுத்தப்பட்டது. கம்யூனிஸ்டுகள், தீவிரவாதிகள் என விமர்சனம் செய்யப்பட்டனர். இத்தகைய போக்கு எப்படியோ தமிழ்நாவல்களில் பதிந்துவிட்டது. முற்போக்குவாதிகளின் பார்வையில் இருந்தும் விடுதலைப் போராட்டம் தமிழ்நாவல்களில் சித்திரிக்கப்பட்டுள்ளது.

*4.* தமிழில் வெளிவந்துள்ள சமூகநாவல்கள் என்று சொல்லப்படுவன வற்றுள் சாதி, மதங்கள், சடங்குகள், வழக்காறுகள் என்று தொடங்கி ஏராளமான விவரங்களைத் தமிழ்நாவல்கள் பதிவு செய்திருக்கின்றன. நீல. பத்மநாபன், நாஞ்சில் நாடன், தோப்பில் முகம்மது மீரான் என்று தொடங்கிப் பலரைச் சொல்லவேண்டும்; கடைசியாக சு. வேணுகோபால். வட்டார நாவல்கள் என்பனவற்றைச் சமூக நாவல்களில் உள்ளடக்கிப் பேசுவது பொருந்தும். இவ்வகையில் தமிழ்நாவல்கள் அற்புதங்களைச் சாதித்துள்ளன என்று சொல்லலாம். கடைசியாக, சண்முகசுந்தரம், அழகிய நாயகி ஆகியவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள்.

தமிழ்நாட்டின் பல்வேறு வட்டாரங்கள், வாழ்வியல் முறைகள் தமிழ்நாவல்களில் இடம்பெறுகின்றன. தஞ்சை வட்டாரம், கரிசல் நிலம், கொங்குநாட்டுப்புறம் என்று பலவற்றைச் சொல்லலாம். கடைசியாக, பாவண்ணன், தங்கர்பச்சான். தமிழ்நாட்டின் பெரும்பாலான சமூகப் பிரிவுகள் தமிழ் நாவலுக்குள் இடம்பெற்றுள்ளன. உழவர்கள், தொழிலாளிகள், கைவினைஞர்கள், குறிப்பாக நெசவாளிகள், பழங்குடிகள், மீனவர்கள் என்று பலரைச் சொல்லலாம். கலைஞர்கள் தமிழ்நாவல்களில் கூடுதலாகவும் சிறப்பாகவும் இடம்பெற்றுள்ளனர். தலித் மக்கள் தமிழ் நாவலுக்குள் அண்மைக்கால வரவுகள்.

அரசியல் இயக்கங்கள் குறித்தும் தமிழ்நாவல்களில் பார்க்கமுடியும். எனினும் இவை அதிகமில்லை.

இப்படித் தொடங்கி எவ்வளவோ சொல்ல வேண்டும். மனித வாழ்க்கையை, வாழ்க்கைச் சிக்கல்களை, முரண்பாடுகளை, போராட்டங்களை, தீர்வுகளை, தீராத வேதனைகளை விரிவாகச் சொல்வதற்குரிய நாவல் இலக்கியம், வரலாறு மற்றும் சமூக, பொருளியல் சூழலை உள்வாங்கிக் கொள்ளாமல் மனிதர்களைப் பற்றிப் பேசமுடியாது என்று சொல்லி இங்கு நிறுத்திக்கொள்வோம்.

*6*. நாவல்களில் இடம்பெறும் சமூகம், வரலாறு, அரசியல், பொருளியல் முதலியவை பற்றிய அனைத்து வகையான விவரிப்புகளும் எந்த நோக்கோடு நாவல்களில் தரப்படுகின்றன. இவை இல்லாமல் வாழ்க்கை இல்லை. வாழ்க்கை என்பதற்குப் பெருமளவிற்குப் பணமோ, அதிகாரமோ உடைமைகளோ தேவையில்லை. வாழ்க்கைக்கு அர்த்தம் இருக்க வேண்டும். இந்த அர்த்தம்தான் வாழ்க்கைக்கு அழகு தருவது மற்றும் ஆற்றல் தருவது. அர்த்தங்களை இழந்துவிட்டு வாழ்வது பயனில்லை. இத்தகைய வாழ்வை விட, சாவு மேலானது. எத்தகைய வரலாறு மற்றும் சமூகச் சூழலில் வாழ்வில் அர்த்தங்கள் அழிகின்றன அல்லது அழிக்கப்படுகின்றன. யார் இந்த அழிவு சக்திகள்? இவர்கள் எங்கிருந்து தோன்றினார்கள்? எப்படித் தோன்றினார்கள்? இவர்களை அப்படியே வைத்துக்கொண்டு வாழ்வின் அர்த்தங்கள் என்றும் அழகுகள் என்றும் மேன்மைகள் என்றும் விடுதலை என்றும் பேசமுடியுமா? அடிமைப்பட்ட வாழ்வில் என்ன அர்த்தம் இருக்க முடியும்?

நம் சமூகத்தில் ஆதிக்க சக்திகள் என்று எவ்வளவோ உள்ளன. இவற்றையெல்லாம் இங்கு வரையறுத்துச் சொல்ல வேண்டியதில்லை. எண்ணிக்கையில் இவர்கள் குறைந்தவர்கள் என்றாலும் பெரும்பாலான மனிதர்களை அடிமைப்படுத்துபவர்கள், சுரண்டுபவர்கள், ஒடுக்குபவர்கள் இவர்கள். குடும்பம் முதலிய எல்லா நிறுவனங்களுக்குள்ளும் இவர்களின் ஆதிக்க கைகள் நீண்டுள்ளன. உலகளவில் இவர்கள் செயல்படுகிறார்கள். இங்குள்ளவர்கள் ஒத்துழைக்கிறார்கள். இவர்களின் ஆதிக்கம் எல்லா களங்களினுள்ளும் நீண்டுள்ளன. இவர்கள் நமக்குள்ளும் நுழைந்து நம்மை வசப்படுத்தியுள்ளனர். நம்மிடமிருந்து நம் வாழ்க்கையை, வாழ்வின் அர்த்தங்கள், அழகுகள் முதலியவற்றைப் பறித்தவர்கள் இவர்கள்தான். நம்மை வாழ்விப்பதற்காக, நம்மை வளர்ப்பதற்காகத்தான் இவர்கள் செயல்படுவதுபோல நம்மை நம்பவைத்திருக்கிறார்கள். அறிவியல் என்றும் தொழில்நுட்பங்கள் என்றும் கல்வி என்றும் மருத்துவம் என்றும் பொழுதுபோக்குகள் என்றும் வாழ்க்கைவசதிகள் என்றும் தொலைக்காட்சி, வானொலி, பத்திரிக்கைகள் என்றும் எத்தனையோ வழிகளில் இவர்கள் நமக்குள் நுழைந்து நம்மை வசப்படுத்தியிருக்கிறார்கள். இவர்கள்தான் நமக்கு வரலாறு, பண்பாடு, அரசியல், வாழ்க்கை என்று கற்பிக்கிறார்கள்.

இவர்களிடம் வசப்பட்டு நம்மைநாமே இழந்து வறியவராகிறோம்; மனச் சோர்விற்குள்ளாகிறோம்; மனநோயாளிகள் ஆகிறோம்; தற்கொலை செய்து கொள்கிறோம்; போக்கிரிகளாகிறோம்; திருடுகிறோம்; பொய் சொல்கிறோம்; உடலை விற்கிறோம்; தன்மானம் இழக்கிறோம்.

இனியும் முடியாது என்ற நிலையில் நமக்குள்ளும் புறத்திலும் விழித்துப் பார்க்கிறோம். நாம் இப்பொழுது எங்கிருக்கிறோம்? நம்மை நாமே எப்பொழுது தொலைத்தோம்? ஏன் தொலைத்தோம்? யாரிடம் தொலைத்தோம்? நம் வரலாறு என்ன? மரபுகள் என்ன? நம் வேர்கள் என்ன? நம் வாழ்வின் நோக்கம் என்ன? நமக்கு எங்கே விடுதலை? இப்படியெல்லாம் சிந்திக்கிறோம்; வழிதேடுகிறோம். நமக்கு வாழ்க்கை வேண்டும். நம்மிடமிருந்து நம் வாழ்க்கையைப் பறித்துக்கொண்டு தம்மை அழகுபடுத்திக்கொண்டவர்களிடம் இருந்து நம் வாழ்க்கையை, வரலாற்றை நாம் மீட்டுக்கொள்ள வேண்டும். உலகம் நமக்கு உரியதாக வேண்டும். இயற்கை நமக்குரியதாக வேண்டும். நமக்கு எளியவாழ்வு போதும். உழைப்பதும் பகிர்ந்துகொள்வதும்தான் உன்னதமான வாழ்க்கை. அடிமைத்தனம் நமக்கு எந்த வகையிலும் வேண்டாம். ஆதிக்கங்கள் வேண்டாம். ஆதிக்கங்களிலிருந்து விடுதலை பெற்றாலொழிய நமக்கான வாழ்க்கையை நம்மால் படைத்துக்கொள்ள இயலாது.

இதற்குத்தான் வாழ்க்கை என்றும், வரலாறு என்றும், சமூகம் என்றும், பொருளியல் என்றும் நாம் பார்வை செலுத்துகிறோம். வாழ்க்கையில் தொலைத்துவிட்ட அர்த்தங்களைத் தேடுவதற்காகவும் திரும்பக் கண்டறிவதற்காகவும்தான் இத்தகைய விரிவான விசாரணையில் ஈடுபடுகிறோம். இந்த விசாரணைக்கு வரையறைகள் இல்லை; எல்லைகள் இல்லை. இந்த விசாரணை அல்லது ஆய்வைத் தமிழ்நாவல்கள் உள்ளடக்கியுள்ளன. வாழ்க்கை பற்றிய பேரளவிலான இந்த ஆய்வைச் செய்வதற்குப் பெரிய நாவல்கள் வேண்டும். மிகச்சிறிய நாவலினுள்ளும் இந்த ஆய்வின் சில கூறுகளையேனும் நாம் காணமுடியும். வாழ்வின் அர்த்தங்களைத் தேடுவதில் எல்லா நாவலாசிரியருக்குள்ளும் வரலாறு தொடங்கி உளவியல் இறுதியாக இந்த ஆய்வுகள் நடைபெறுவதில்லை. அவரவருக்குள் சில தடைகள், முடக்கங்கள், போதைகள், தன் முனைப்புகள், இவற்றையெல்லாம் கடந்து தமிழ்நாவல்கள் பற்றிய ஆய்வை நாம் முன்னெடுத்துச் செல்லவேண்டும். சில நாவல்கள் அல்லது சிலவகை நாவல்கள் அல்லது சிலருடைய நாவல்கள் நமக்குப் போதுமென்று இருந்துவிட இயலாது. விரிவான தளங்களில் இந்த ஆய்வைச் செய்யவேண்டும்.

*7.* **தொலைந்து போனவர்கள்** என்பது சா. கந்தசாமியின் ஒரு நாவல். இளமைக்காலம் தொலைந்துபோய்விட்டது; இளமைக் காலத்து உறவுகள், நண்பர்கள் இனி இல்லை; இளமைக்காலத்து இயற்கை இல்லை; வாழ்க்கை இல்லை; உலகம் இல்லை; பற்றிக் கொள்வதற்கு எதுவுமில்லை;

இப்பொழுது வாழ்க்கையில்லை; தேடிச் சென்றாலும் கிடைப்பதில்லை; கிடைத்தாலும் தவறிப்போகிறது. இந்த வெறுமையோடுதான் உண்டு, உறங்கி, இடர் செய்து இனி வாழவேண்டும்.

**வேர்களைத் தேடி** என்பது வாஸந்தியின் ஒரு நாவல், மனிதனின் வேர்கள் எங்கிருக்கின்றன, சாதியிலா? மதத்திலா? மனித நேயத்திலா? இயற்கையிலா? என்பதை ஆராய்கிறது இந்த நாவல். தனக்குள் தொலைந்து போனவன் தன் வேர்களைத் தேடுகிறான்.

இப்படி, தனக்குள் தொலைந்து போனவர்களில் ஒருவன் சுகுமாரன். பொன்னீலனின் **புதிய தரிசனங்களில்** இவனைக் காண்கிறோம். இவன் உயர்சாதிக்காரன். தன் சாதியில் இருந்து விலகிநிற்கிறான். இவன் மனைவி உடைமைக்காரி. அவளது அதிகாரத்திலிருந்து இவன் விலகிச் செல்கிறான். உழவனாகி நிலத்தில் உழைக்கிறான். தாழ்ந்த சாதிப் பெண் என்று சொல்லப்படுபவளை நேசிக்கிறான். நிலத்தோடு, இயற்கையோடு, உழைப்போடு இவன் இணைந்திருக்கிறான். சமத்துவம் இவனுக்கு உயிர். இவன் சாதிக்காரர்கள் இவனைக் கட்டி வைக்கிறார்கள். இவனைக் கதறக் கதற அடிக்கிறார்கள். கடைசியில் இவனை விடுவிக்கிறார்கள். இவன் இப்பொழுது பைத்தியமாகி நடுச்சாலையில் நிற்கிறான். சாலையில் செல்லும் பேருந்துகளை நெறிப்படுத்தும் முறையில் கைகாட்டி ஆகிறான். இவனை இப்படிச் செய்தவர் யார்? செய்தவர்கள் இவனது சாதிக்காரர்கள், உடைமைக்காரர்கள். இவர்கள் தான் இவனது வேர்களை வெட்டியவர்கள். இவர்களுக்குச் சமத்துவம் உடன்பாடில்லை.

இத்தகைய சுகுமாரன்களை, மனோன்மணிகளைத் தமிழ் நாவல்கள் பலவற்றில் நாம் காண்கிறோம்.

**குழந்தைகள், பெண்கள், ஆண்கள்** என்பது இறுதியாக வெளி வந்த சுந்தரராமசாமியின் நாவல். பாலு சிறுவன். இவனுக்குள் மனநோய் எப்படி ஏற்பட்டது. இவனது தந்தை எஸ்.ஆர்.எஸ்., இவனைக் கண்டிப்போடு, கறாராக வளர்க்க விரும்புகிறார். தன் இயல்போடு இந்தச் சிறுவன் எங்கும் நகரமுடியாது. எஸ்.ஆர்.எஸ்.க்கு இவனிடம் அன்பு இல்லையா? தொழில் முறையில் போட்டி. மரணமடையும்போது தன் தந்தைக்குத் தந்த வாக்குறுதியின்படி தன் இரண்டு சகோதரர்களின் குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டும். தனது தொழிலில் ஒரு புள்ளி அளவிற்குக் கூட இவரால் ஊழல் செய்ய முடியாது. தன் தொழிலுக்குப் பாலுதான் வாரிசு. ஆகவே, அவனைக் கண்டிப்புடன் வளர்க்கவேண்டும். பாலு மனநோயாளி யாகிறான். எஸ்.ஆர்.எஸ். தனக்குள் கலங்குகிறார், திகைக்கிறார். தன் வாழ்க்கைப் பாதையை இனி அவரால் மாற்றிக் கொள்வது சாத்தியம் இல்லை. எஸ்.ஆர்.எஸ்.க்கு வெளியில் ஒரு உலகம். போட்டிகள் நிறைந்த உலகம். முதல் உலகப் போர் சூழல், உள்ளுக்குள் இன்னொரு உலகம். மரபு முறையில் வந்த அறத்திற்கு அழுத்தம் தரும் உலகம்.

இப்படியே பலருடைய நாவல்களைத் திரும்பப் பார்க்கமுடியும்; புரட்டிப் பார்க்க முடியும்; பொருள்படுத்த முடியும். தன்னைத் தொலைத்துவிட்டுத் தன்வேர்களைத் தேடி இயலுமானால் தன்னை மீட்டுக்கொள்ளப் பாடுபடும் மனிதனின் பெருங்கதையைத்தான் தமிழ்நாவல்கள் தமக்குக் கருவாகக் கொண்டுள்ளன.

தோப்பில் முகம்மது மீரான் எழுதிய **சாய்வு நாற்காலி** குறித்துப் பார்ப்போம். தன் சாய்வு நாற்காலியை விட்டுக் கீழ் இறங்காதவன் முஸ்தபா கண்ணு. இவனது முன்னோர்களின் பெருமை சொல்லி முடியாது. நாடாண்டவர் தன் முன்னோர். வீரத்தில் விளைந்தவர்கள் அவர்கள். பெருமைக்குரிய இந்த மரபில் வந்தவன் உழைக்க முடியுமா? இவனுக்கு மனைவி சேவகம் செய்ய வேண்டும். சற்று முறைத்துப் பார்த்தாலும் இவனது பிரம்படியில் அவள் சாகவேண்டும். இவன் தனக்குள் நசிந்து நாறிக்கொண்டிருக்கிறான். எல்லாவற்றையும் விற்கிறான். காமத்திற்கு இவன் அடிமை. இவனது அழிவைச் சொல்லுகிறது இந்த நாவல். உழைப்பில் தன்னை இவன் உறுதிப்படுத்திக் கொண்டிருக்க முடியும். வாழ்வின் அர்த்தங்களை இவன் எங்கோ தொலைத்துவிட்டவன்; காமத்திற்கு இவன் தன்னை இரையாக்கிக்கொள்கிறான். இந்தக் காமம் ஓர் அழிவு சக்தி. என் இனம், என் சாதி, என் முன்னோர், என் பெருமை என்று ஆணவத்தில் தன்னை அழித்துக்கொள்பவர்களுக்கு இவன் ஒரு குறியீடு.

*8.* தமிழ் நாவல்களுக்குள் அற்புதம் என்று சொல்லத்தக்க மனிதனை நாம் தொடர்ந்து பார்க்கிறோம். தமிழ் மரபின் ஓர் அழகிய வெளிப்பாடு என்று இந்த மனிதனைச் சொல்லலாம். இவனுக்குள் இருப்பவன் ஒரு சித்தன். பணமோ அதிகாரமோ இவனைத் தீண்ட முடியாது. இவன் அன்பில் நிறைந்திருக்கிறான். வாழ்வியல் ஏற்றத்தாழ்வுகளை இவன் எவ்வளவோ பார்த்தவன். இறுதியாக எல்லாவற்றையும் இவன் விட்டு விடுகிறான். இவன்புனிதமானவன். இவனுக்கு எளிய வாழ்க்கை போதும். இயற்கைக்கு இவன் நெருக்கமானவன். இவனுக்கு உடைமைகள் தேவையில்லை. மின்விசிறி தேவையில்லை. ஏழைகளோடு தோழமை கொள்பவன். இவன் பார்வைபட்டுப் பலர் மனிதராகின்றனர். இரண்டு சதுர அடி நிலம் இருந்தாலும் அதில் ஒரு ரோஜாச்செடி பயிரிட இவன் விரும்புவான். திரும்பவும் சொல்லலாம். இவன் ஒரு சித்தன். இவன் தன்னைக் கண்டுகொண்டவன். மரபின் வேர்களிலிருந்து இவன் விளைந்தவன்.

க.நா.சு.வின் **பொய்த்தேவு** நாவலில் இவனுக்குப் பெயர் சோமு பண்டாரம். க.நா.சு.வின் இன்னொரு நாவல், **அவதூதர்**. இவன் முழு அளவில் ஒரு சித்தன். ஜெயகாந்தனின் **ஒரு மனிதன், ஒரு வீடு, ஒரு உலகம்** நாவலில் இவனுக்குப் பெயர் ஹென்றி. இன்னொரு நாவலில் கல்யாணி. அசோகமித்திரனின் **மானசரோவர்** நாவலில் காரைச்சித்தர். சூர்யகாந்தனின் **மானாவாரி மனிதர்களில்** *90* வயது கிழவர் ஒருவர்

வருகிறார். ஆசிரியரே கூறுகிறபடி இவருக்கு வயது *90* அல்ல, *900.* தமிழிலக்கிய வரலாற்றில் கணியன் பூங்குன்றன், பக்குடுக்கை நன்கணியார் முதலியவர்களுக்குள் முதலில் தென்பட்டவர் இந்த மனிதர். வள்ளுவர், திருமூலருக்குள்ளும் இவர் தொடர்கிறார். வள்ளலார் வரை எத்தனையோ சித்தர்கள். இன்னும் நமக்குள் தொடர்கிறவர் இந்தச் சித்தர். தமிழ் நாவல்களும் இந்தச் சித்தனைத் தமக்கு இலக்காகக் கொண்டு இயங்குகின்றன. பொன்னீலனின் புதிய தரிசனங்களுக்குள் இவருக்குப் பெயர் பூரணி. பலரால் வதைக்கப்பட்டுப் பலருக்குத் தன் உடம்பைத் தின்ன கொடுத்த பிறகும் இறுதியில் உயிர்பெற்று அமுதசுரபி ஏந்திவரும் மணிமேகலை போல நம்முள் வந்து நிற்கிறாள் இந்தப் பூரணி.

இன்னும் *2* நாவல்களைப் பார்க்கலாம். ஜெயமோகனின் **ரப்பர்** நாவலில் ஆதிவாசி இடம் பெறுகிறார். இவருக்கு வயது சொல்லமுடியாது. காட்டிலிருந்து வருகிற இவருக்குள் காடு மணக்கிறது. இயல்பாகக் கருணையில் பொங்கி வழிகிறார் இவர். இந்த நாவலின் இறுதியில் வருகிறான் வேலப்பன். நாயர்கள் ஒருபுறம், நாடார்கள் இன்னொருபுறம். ஒருவரை மற்றவர் வீழ்த்த எத்தனையோ அக்கிரமங்கள் அநியாயங்கள் செய்தவர்கள். இவர்களுக்கிடையில் அகப்பட்டுப் பலர், குறிப்பாகப் பெண்கள் நாசமானார்கள். மிஞ்சியிருப்பது ஒரு சுடுகாடு. இவர்களின் மரபில் வந்தவன்தான் வேலப்பன். இவர்களின் வாழ்க்கை, ஆரவாரங்கள், பெருமைகள், சிறுமைகள் எல்லாவற்றையும் ஒரு கணம் தனக்குள் எடையிட்டுப் பார்த்துவிட்டுக் கேலிச்சிரிப்பை உதிர்க்கிறான். இதுவும் ஒரு வாழ்வா*?* இப்படி வாழ்ந்திருக்க வேண்டாம். அழிந்திருக்கவும் வேண்டாம் என்பது இவன் கேலிச்சிரிப்பிற்குப் பொருள். இவனுக்குள் இருப்பவன் ஒரு பின் நவீனத்துவவாதி. இவனுக்குள் ஒரு சித்தனையும் நாம் காணலாம்.

அரசியலில் மையம் கொண்டுள்ள மார்க்சியனுக்குள் ஒரு சித்தன் இருக்கமுடியுமா*?* இருக்கமுடியும் என்பதைப் பொன்னீலனின் புதிய தரிசனங்களில் மீண்டும் காண்கிறோம். நாவலின் இறுதியில் ராகவன் தடுமாறுகிறான். பின்னர் தன் வழியே செல்கிறான். கட்சி அதிகாரம் இவனுக்கு உடன்பாடில்லை. இவனின் சோசலிசக் கனவு பொய்யாகிவிட்டது. இன்னும் நெடுந்தொலைவு செல்லவேண்டும். நாவலுக்குள் இன்னொருவர் கோலப்பன். இவருக்கு எளிய குடிசை போதும். சைக்கிள் போதும். யார் தன்னைத் தேடி வந்தாலும் அவர்களோடு ஓடி உதவி செய்பவர் இவர்.

ஜெயமோகனின் **விஷ்ணுபுரம்** குறித்து இங்குச் சொல்லவேண்டும். அதிகாரத்தைக் கைப்பற்றி, தன் ஆளுகையைச் செறிவுபடுத்துபவர் எவராக இருந்தாலும், இப்படி தொடர்ந்து தன்னைப் பலப்படுத்திக்கொண்டு, ஏராளமான மனிதர்கள் மீது தன்னை ஏற்றிவைத்து, அவர்களை மேலும்மேலும் சுரண்டி தனக்குள் கொழுத்து, ஏராளமான மனிதர்களைத் தனக்கு எதிரியாக்கிக் கொள்ளும் பேரதிகாரம் எதுவாக இருந்தாலும், இறுதியில் தன் கனத்தால் தானே சிதைந்து அழியும். இத்தகைய வரலாற்று

உண்மையை தனக்குள் கொண்டிருக்கிறது இந்த நாவல். இத்தகைய பேரதிகாரத்தை உருவாக்கி நிலைநிறுத்திய பிராமணனும் அழிந்தான். பவுத்தனும் அழிந்தான். இப்படிப் பலரது அழிவுக்குப் பிறகும் அழிவுறாமல் நிற்பவர் ஆதிகாலமக்கள். இயற்கையோடு இயைந்தவர். கண்ணகியை வழிபடும் முன்னோர் மரபினர். இவர்களுக்குத் தான் அழிவில்லை. இவர்களால் உலகம் மீண்டும் தழைக்கும்.

*9. 50* ஆண்டுகளுக்குட்பட்ட பலவகைப்பட்ட தமிழ் நாவலினுள் குறைந்த அளவிற்கேனும் ஒவ்வொரு நாவலினுள்ளும் இப்படி ஒரு மனிதனைப் பார்க்கமுடியுமா? என்ற கேள்வியோடு நாம் தேட முடியும். உடைமைச்சமூகம் மனிதனைச் சிதைக்கிறது; திரிபுபடுத்துகிறது; வளர விடாமல் குள்ளமாக்குகிறது என்று சொன்னதை இங்கு நினைவு கொள்வோம். தன் சொந்த ஊரில் வாழ இயலாமல் இவனை வெளித் தேசங்களுக்குத் துரத்தி இறுதிவரை இவனுக்குத் திருமணம் இல்லாமல், வாழ்க்கையில் பாதுகாப்பு இல்லாமல் இந்த உடைமைச் சமூகம் அவனைத் துயருக்குள்ளாக்குவதை நாஞ்சில் நாடனின் **சதுரங்கக் குதிரை**யில் பார்க்கிறோம். கும்பகோணத்தைச் சுற்றி உள்ள ஊர்களில் வாழும் நிலப்பிரபுக்கள், தங்களின் உடல் பசியைத் தீர்த்துக் கொள்ளும் முறையில் கணேசன் என்ற அழகிய இளைஞனைப் படுக்கை அறையில் வைத்துப் பயன்படுத்திக்கொள்கிறார்கள். இறுதியில் இவன் குஷ்டரோகி ஆகிறான். இவன் கதையைப் **பசித்த மானுடத்தில்** கரிச்சான் குஞ்சு சொல்லுகிறார். மனிதர்களுக்கு மரியாதை இல்லாத இந்த உடைமைச் சமூகம், அலியாய் மாறிவிட்ட ஒருவனுக்கு என்ன மரியாதை செய்யும் என்பதை **வாடாமல்லி**யில் சமுத்திரம் சொல்லுகிறார்.

உடைமைச் சமூகத்திற்கு இன்பம் தேவை, கூலி அடிமைகள் தேவை. இன்பத்திற்காகப் பெண்களை இந்தச் சமூகம் அடிமை கொள்கிறது. கூலி அடிமைகளை உற்பத்திச் செய்யும் இந்தச் சமூகம்தான் தீண்டத் தகாதவர்கள், பஞ்சமர்கள் என்று ஒரு சமூகப் பிரிவைத் தோற்றுவிக்கிறது. உண்பதற்குக் குறைந்த உணவையும், உடுத்துவதற்குக் குறைந்த ஆடை, இருப்பதற்கு ஒரு குடிசை இவற்றை மட்டுமே அவர்களுக்குத் தந்து அவர்களின் தன்மானம் முதலியவற்றைச் சுரண்டுகிறது. அவர்கள் தம்மை மனிதர்களாக உணர இயலாதபடி தடுக்கிறது. அண்மைக் காலத்தில்தான் இவர்கள் தன்னுணர்வு பெற்றுவருகிறார்கள். இம்முறையில்தான் தலித்தியம் மற்றும் பெண்ணியம் என்ற நோக்கில் நாவல்கள் எழுதப்படுகின்றன. கணவன் தனக்குக் கட்டித் தருகிற வீடு ஒரு பெண்ணுக்குரிய வீடாகுமா? இளமையில் சுதந்திரத்தோடு வளர்ந்த அந்த இளமைக் காலத்து வீட்டிற்குத் தான் திரும்ப முடியுமா? இத்தகைய கேள்வியோடு இயங்குகிறது காவேரியின் **ஆத்துக்குப் போகணும்** என்ற நாவல்.

எந்த ஒரு நாவலையும், அதனுள் இயங்கும் மனிதர்களை அவர்கள் வாழும் வரலாறு மற்றும் பொருளியல் சூழலில் வைத்துப் பார்க்க வேண்டியதன் தேவையை மேலும் வற்புறுத்தவேண்டியதில்லை. அன்றியும் நாவல்வாசிப்பு என்பது அந்த நாவல் குறித்த திறனாய்வையும் உள்ளடக்கியதாகத்தான் இன்று நாம் கருதுகிறோம். ஒரு நாவலை, இன்னொரு நாவலோடு உரசிப் பார்க்கவும் முடியும். உரையாடலியம் என்று இன்று வளர்ச்சி பெற்றுள்ள திறனாய்வு கோட்பாட்டை இங்கு நினைவு கொள்வோம்.

*47*இல் பெற்றதாகச் சொல்லப்படும் விடுதலை மிக விரைவில் பொய்யாய், கனவாய் மாறியது. காந்தியடிகளுக்கு இந்த தேசத்தில் இடமில்லை. நேருவின் சோசலிசக் கனவுகளுக்கும் இடமில்லை. வளர்ச்சி பெற்றது ஓர் பிற்போக்கான முதலாளியம். அதிகாரிகள் மக்களை மதிக்கவில்லை. எங்கும் ஊழல் பரவியது. மக்கள் திகைத்தார்கள். நா.பா.வின் பூரணி இங்கு வாழ்வதற்கு இடமில்லை. அரவிந்தன் அலைந்தான். அகிலனின் தணிகாசலம் தடுமாறினான். இவர்களோடு இன்று நாம் உரையாட முடியும். இவர்களுக்குள் இருக்கிற முதலாளியக் கனவுகளைக் களையமுடியும்.

எந்த ஒரு இலக்கியத்தையும் நம் சமகாலத்தில் கொண்டுவந்து வாசிக்கும் வாய்ப்பு இப்பொழுது அதிகரித்துள்ளது. கோவலன், கண்ணகி முதலியவர்களையும் நம் காலத்திற்குள் வைத்து வாசிக்கும்பொழுதுதான், இராமனுக்குள்ளும் ஒரு இராவணன் உண்டு என்றும் சூர்ப்பநகைக்குள் ஒரு சீதை உண்டென்றும் வாசிக்க முடியும். வரலாற்றுக் காலத்திற்குள் வந்துவிட்ட மனிதனுக்குள்ளும் வரலாற்றிற்கு முற்பட்ட ஆதிமனிதன் இருக்கத்தான் செய்கிறான். இவனுக்கு இயற்கை முக்கியம், உழைப்பும் பகிர்வும் முக்கியம். அதிகாரமும் பணமும் இவனைத் தீண்டமுடியாது. இவனுக்குள் சமத்துவம்/சமதருமம் இயல்பாய் இயங்குகிறது. இவனை நமக்குள் எழுப்பிக்கொள்ளத்தான் இலக்கிய வாசிப்பில் ஈடுபடுகிறோம். வள்ளுவருக்குள்ளும் இளங்கோவிற்குள்ளும் இயங்குகிற இவனைத் தமிழ் நாவல்களுக்குள் வயப்படுத்திவிடுகிறோம்.

ம. ந. ராமசாமி எழுதிய **நாலாவான்** என்ற ஒரு நாவல். இடைக் காலத்தில் வாழ்ந்த ஒரு தலைவனைக் குறித்த கற்பனையான நாவல் இது. இந்த மனிதன் ஔவை கண்ட மனிதன். இவன் ஒரு சூத்திரன். நாலாம் வருணத்தவன். இவனைப் பிற வருணத்தாரோடு உரசிப்பார்த்து ஔவையார் சொல்லுகிறார். 'பார்ப்பனன் அரசனாக இருந்தால் கோல் சாயும். சத்ரியன் அரசனாக இருந்தால் கடுமையான போர்கள் எழும். வணிகன் அரசனாக இருந்தால் குடிமக்கள் அழிவர். நாலாம் வருணத்தவன்தான் நல்ல அமைச்சனாவான், நாம் செல்லும் வழிக்குத் துணையாவான். இவன் ஆளுகின்ற அரசுதான் உண்மையான அரசாக இருக்கும், தமிழில் நாவல் இலக்கியம் என்பது நெடுங்கால வரலாற்றின்

வழியே வந்த மாபெரும் தமிழிலக்கியத்தின் தொடர்ச்சிதான் என்பதில் ஐயமில்லை.

## 10. பிற்சேர்க்கை :

நாம் தமிழிலக்கிய மாணவர்கள். தமிழ் இலக்கிய வரலாறு என்பது மிக விரிவானது. இலக்கிய வகைகள் என்ற முறையில் தமிழிலக்கியம் வளம் நிறைந்தது. இலக்கியம் என்று பேசும்பொழுது தமிழிலக்கியவாதிகள் கவிதைக்கு, செய்புளுக்கு முதன்மை தருவதை வெகுவாகப் பார்க்கிறோம். சங்க இலக்கியம் மட்டுமல்லாமல் தமிழில் உள்ள காப்பியங்கள்/காவியங்கள் தமிழ்க் கல்வியாளர்களின் நெஞ்சைக் கவர்கின்றன. இவ்வகை இலக்கியங்களின் வழியே தமிழ் வாழ்வின் மேன்மையை நாம் பெரிதும் விரும்பிக் கற்கிறோம். கம்பராமாயணம், பெரியபுராணம் முதலியவற்றை நாம் கொண்டாடுகிறோம். தற்கால இலக்கியத்திற்கு வரும்போது தமிழ்க் கல்வியாளர்கள் தடுமாறுகிறார்கள். பாரதியைச் சற்று காலம் கடந்துதான் தமிழ்க் கல்வியாளர்கள் ஏற்றனர். புதுக்கவிதை முறையும் பெரும் தயக்கத்துடன்தான் ஏற்கப்படுகிறது.

நாவல் இலக்கியத்தைப் பொறுத்தவரை, தமிழ்க் கல்வியாளர்கள் தமிழ் இலக்கியத்தின் தொடர்ச்சியில் வைத்துக் காண்பதில்லை. செய்புள் வடிவில் அமைந்த காவியத்திற்கு நிகரான சிறப்புடையது என்று தமிழ் நாவலை யாரேனும் சொன்னால் தமிழ்க் கல்வியாளர்களால் இக்கூற்றைச் செரித்துக் கொள்ள இயலாது. தமிழர்களின் மேன்மையான பண்பாட்டுக் கூறுகளைப் புதியதாக வந்துள்ள நாவல் இலக்கியம், நாசமாக்குகிறது என்று இவர்கள் ஆத்திரம் கொள்வார்கள். மரபு முறையில் யாப்பு என்ற கட்டுப்பாட்டிற்குள் அடங்கி, எழுதப்பட்டது தமிழ் இலக்கியம். சிரமம் எதுவும் இல்லாமல் உரைநடையில் தாறுமாறாகக் கற்பனையை ஓடவிட்டு எழுதப்படும் நாவலை எப்படி காவியத்திற்கு நிகராக்க முடியும் என்றும் இவர்கள் கேட்கக்கூடும். சிலப்பதிகாரத்தையோ கம்பராமாயணத்தையோ நுண் உணர்வோடு கற்கும் தமிழ்க் கல்வியாளர், நாவல்களும் இப்படிக் கற்கத் தகுந்தவை என்று நம்புவதில்லை. பாடத்திட்டத்தில் இடம்பெறும் தமிழ் நாவலின் தரம், நாவல் கற்பிக்கும் முறை, தமிழ் நாவல்கள் குறித்துச் செய்யப்படும் ஆய்வுகள் முதலியவற்றையும் முன்னிறுத்திப் பார்க்கும்பொழுது தமிழ்க் கல்வியாளர்கள், தமிழ் இலக்கியத்தின் தொடர்ச்சியில் வைத்துத் தமிழ் நாவல்களைக் கற்பதில்லை, மதிப்பதில்லை என்றுதான் நாம் கருத வேண்டியிருக்கிறது.

இது குறித்து இங்கு விரிவாக ஆய்வதற்கு இடமில்லை. எனினும் சிலவற்றை இங்குச் சுருக்கமாகச் சொல்லலாம். தமிழ் இலக்கியம் குறித்த நுட்பமான ஆய்வைத் தமிழில் ஆழமாகத் தொடங்கிவைத்தவர் தொல்காப்பியர். வாழ்வை அகம் என்றும் புறம் என்றும் பகுத்ததோடு அகத்திற்கும் புறத்திற்கும் உரிய திணைக் கோட்பாட்டைத் தொல்காப்பியர் வகுத்தார். படைப்பிலக்கியத்தின் இயக்கம் பற்றி அவர் விரிவாகப் பேசினார்.

முதல், கரு, உரி என்று தொடங்கி எண்ணற்ற கலைச்சொற்களின் வழியே இலக்கியத்தின் இயக்கத்தை அவர் விரித்துரைத்தார். இத்தகைய இலக்கிய ஆய்வு தொல்காப்பியரோடு நின்றுவிட்டது. உரை ஆசிரியர்களும் பிற இலக்கணக்காரர்களும் தொல்காப்பியர் வகுத்த எல்லைகளைக் கடந்து செல்லவில்லை.

சிலப்பதிகாரம், திருக்குறள் என்று தொடங்கி, தமிழிலக்கியத்தின் சாதனைகள் என்று நாம் எவ்வளவோ சொல்லமுடியும். இப்படித் தொடர்ந்து வந்த இலக்கிய இயக்கத்தை விளக்கும் முறையில் கொள்கைகளையோ கோட்பாடுகளையோ நம்மவர் வகுக்கவில்லை. வடமொழியிலிருந்து கொஞ்சம் எடுத்துக் கொண்டோம். ஆங்கில மொழியோடு நம்மவர்க்கு உறவு ஏற்பட்டபொழுது ஆங்கிலத்திலிருந்து நகல் எடுத்தோம். சமையல் கலையில் தேர்ந்த அறிவுடைய ஒருவருக்குச் சமையல்கலையின் இலக்கணம் தெரியாததுபோலத்தான் நம் நிலை வருந்தத்தக்கதாக இருந்தது. கோட்பாட்டு ஆய்வில் நாம் ஈடுபடவில்லை.

தொல்காப்பியர் வகுத்துரைத்த திணைக்கோட்பாட்டை வளர்த்தெடுத்துக் கேரளாவில் உள்ள பேராசிரியர் ஐயப்பப் பணிக்கர், தாமஸ்ஹார்டியின் ஆங்கில நாவல்களை ஆராய்கிறார். அகம் என்பதும் புறம் என்பதும் தனித்தனி இயக்கம் கொண்டவையாக இல்லை. இரண்டும் ஒன்றினுள் மற்றது ஊடுருவக்கூடியவை. இவ்வகையில் தொல்காப்பியர் கூறும் திணை மயக்கத்திற்கு அழுத்தம் கொடுத்து நாம் பார்த்திருக்க வேண்டும். உரிப்பொருள் என்பதனுள் திருக்குறள் முதலிய நூல்களில் இடம்பெறும் அறத்தையும் பக்தி இலக்கியங்களில் இடம்பெறும் பக்தியையும் காப்பியங்களின் கருப்பொருள்களையும் கண்டறிந்திருக்க வேண்டும். நம் காலத்தில் நாட்டுப்பற்று முதலியனவும் இலக்கியத்தின் உரிப்பொருளாக ஏற்கத்தக்கவை.

முதற்பொருளாகிய நிலம் எத்தனையோ மாறுதல்களுக்கு உள்ளாகி யிருக்கிறது. தொழில் முதலியவற்றை உள்ளடக்கிய கருப்பொருள்களில் நேர்ந்துள்ள மாற்றங்கள் அளவிடற்கரியவை. கலாச்சார மோதல்கள் மற்றும் ஊடுருவல்கள் இம்முறையில் இலக்கியத்தின் உரிப்பொருள்கள். இப்படி யெல்லாம் தமிழிலக்கியம் குறித்த ஆய்வுகள் வரலாறு, பொருளியல், அரசியல் முதலியவற்றை உள்ளடக்கி வளர்ச்சி பெற்றிருக்க வேண்டும். இத்கைய நெறியில் நம் கல்வியாளர்கள் இயங்கியிருப்பார்கள் என்றால் *100* ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழுக்குள் வந்து நிலைபெற்றுவிட்ட நாவல் இலக்கியத்தையும் தமிழ் இலக்கியத்தின் தொடர்ச்சியில் வைத்துப் பார்த்திருப்போம்.

நவீன காலத்தை நமக்குள் செறித்துக்கொள்ள நாவல் இலக்கிய ஆய்வு நமக்குப் பயன்படும். இன்றைய வரலாற்றுச் சூழல் சிக்கலானது என்பது மட்டுமல்ல; தமிழ் மக்களாகிய நமக்கு நிறைய நெருக்கடிகளை

முன் வைக்கிறது. இவற்றைச் சரியான முறையில் எதிர்கொண்டால் ஒழிய நமக்கு எதிர்காலம் இல்லையென்ற நிலை தோன்றியுள்ளது. ஆகவே இன்றைய உலகளவிலான வரலாற்றுச் சூழலில் நம்மைத் தக்கவைத்துக் கொள்ள வேண்டுமானால் நம்மை நாமே துருவித் தோண்டி ஆராய வேண்டும். இத்தகைய ஆய்வுக்கு நாவல் இலக்கியக் கல்வி நமக்குப் பெரிதும் பயன்படும். தொல்காப்பியரை நமக்குள் மீண்டும் உயிர்ப்பித்துக் கொள்ள வேண்டும். இப்படியெல்லாம் ஆய்ந்து கற்போமென்றால் நாவலிலக்கியம் நமக்கு மிக நெருக்கமான இலக்கியம் ஆகும். நாவல் என்ற இலக்கியத்தினுள் கதை மட்டுமன்று, கவிதை இயங்குகிறது. நாவலுக்குள் வாழ்க்கை இயக்கம் கொள்கிறது. வாழ்க்கை என்ற இயக்கத்தினுள் வரலாறு தெரிகிறது; சமூகம் தெரிகிறது. பொருளியல் என்றும் அரசியல் என்றும் மானுடவியல் என்றும் உளவியல் என்றும் நாம் எவ்வளவோ கலைபற்றிப் பேசுகிறோம். மனித வாழ்விற்குள் இவற்றின் இயக்கம் குறித்து நாவல்கள் பேசுகின்றன. நாவல்கள் கற்பதென்பது மனிதனைக் கற்பது; நம்மை நாமே கற்றுக் கொள்வது.

# தமிழ்ச்சிறுகதை உருவாக்கம் 1948 - 1990

வீ. அரசு

*1948*இல் புதுமைப் பித்தன் மறைந்தார். தமிழ்ச் சிறுகதை உருவாக்கத்தின் குறியீடாக இருந்த புதுமைப்பித்தன் மறைவிற்குப்பின், தமிழில் உருப்பெற்ற சிறுகதை மரபைப் பின்கண்ட கூறுகளில் நாம் புரிந்து கொள்ள முயலலாம்.

புதுமைப்பித்தன் காலத்திய சிறுகதை மரபு, எவ்வகையில் பின்னர் வந்த காலச் சூழல்களில் தொடர்ந்தது என்பதைக் கண்டறிவது....

காலனிய ஆட்சியதிகார மாற்றல் ஏற்பட்ட சூழலில், புதிதாக உருவாகிய சூழல் எவ்வகையான அச்சு ஊடகச் செயல்பாட்டிற்கு வழி கண்டது, அதன் மூலம் புனைகதை உருவாக்கப் போக்குகள், குறிப்பாகச் சிறுகதை உருவாக்கம் குறித்து அறிவது.....

வெகுசன வாசிப்பு சார்ந்து செயல்பட்ட, அச்சு ஊடகத்திற்கு இணையாகச் செயல்பட்ட **தீபம், கணையாழி, கண்ணதாசன்** போன்ற இதழ்கள் வழி உருப்பெற்ற சிறுகதைகள்.....

நகர்ப்புறச் சார்பிலிருந்து செயல்பட்ட அச்சு ஊடகம், நகரம்; குறிப்பாகச் சென்னை அல்லாத பிற பகுதிகளிலிருந்தும் உருவான எழுத்தாளர்கள் வழி, கிராம மக்களை முதன்மைப்படுத்திய சிறுகதை உருவாக்கம்.

நவீனச் சிந்தனை மரபுகள், தமிழில் இணையாகச் செயல்படும் பிரிவினரிடத்தில் ஏற்படுத்திய செல்வாக்கு அடிப்படையில் புதிய மொழி சார்ந்து உருப்பெற்ற தமிழ்ச் சிறுகதைகள்.......

மேற்குறிப்பிட்ட பல்வேறு சூழல்கள், பல்வகைச் சிறுகதைகளைத் தமிழில் உருப்பெறச் செய்தது. இக்கூறுகளின் அடிப்படைகளை மட்டும் பதிவு செய்ய முயலலாம்.

1

*1948*க்கு முன் தமிழ்ச் சிறுகதை உருவாக்க மரபைக் கோடிட்டுக் காட்டுவதன் மூலம், பின்வந்த மரபை நாம் புரிந்துகொள்ள வாய்ப்புண்டு. சென்ற நூற்றாண்டின் இறுதிக் காலங்களில் தமிழில் அச்சு ஊடகம் பரவலாகத் தொடங்கியது. அச்சு ஊடகத்திற்குத் தேவையான வாசிப்புப் பழக்கம் உருவாவதற்கான வாய்ப்பு மிகவும் குறைவாக இருந்த நிலையில், அச்சு ஊடகம், பல்வேறு தளங்களிலும் செயல்படும் வாய்ப்பற்று இருந்தது. புத்தக உருவாக்க மரபு செயல்பட்ட அளவிற்கு, இதழ்கள் வெளிவரும் மரபுகள் உருப்பெறவில்லை. படிப்படியான எழுத்தறிவுப் பரவல், வாசிப்புப் பழக்கத்தை உருவாக்கத் தொடங்கிய சூழலில் இதழ்கள் உருவாகும் தேவை ஏற்பட்டது. இதழ்களில் அச்சிட பல்வேறு வடிவங்களும் தேவைப்பட்டன.

அச்சு எந்திரம் - எழுத்தறிவு - வாசிப்புப் பழக்கம் என்ற கூறுகளில் ஒன்று மற்றொன்றைச் சார்ந்து செயல்படுதல் தவிர்க்க முடியாதது. இதன் விளைவாகவே உரைநடையும் அதனை உருவாக்கிய இதழியலும் தமிழில் உருப்பெறத் தொடங்கியது; இவ்வகைச் செயல்பாட்டிற்குள், புனைகதை உருவாக்கத்தின் ஒருபகுதியாக, சிறுகதை உருப்பெறத் தொடங்கியது. இத்தன்மை குறித்து விரித்து எழுத இடமுண்டு. அதனை வேறு சந்தர்ப்பத்தில் செய்யலாம்.

புனைகதை உருவாக்கம் என்பது மரபுசார்ந்த வாய்மொழிப் பாரம்பரியக் கதைகள், அச்சு சார்ந்த இதழியல் மற்றும் புத்தகவியல் சார்ந்து மறு உருவம் பெறுதலே ஆகும். வாய்மொழிப் பாரம்பரியத்தில் ஒலி வடிவில் நிகழ்த்தப்பட்டது என்பது, அச்சு வடிவில் எழுத்து என்ற குறியீடுகளால் குறிக்கப்படுதல் என்பது நிகழ்கிறது. இவ்விரு தன்மைகளும் தமக்கேயுரிய பண்புகளைப் பெறுதல் என்பது இயல்பு. தமிழ் வாய்மொழிப் பாரம்பரியத்தில் 'கதை போடல்'; ஒரு நிகழ்வை விளக்குவதற்காக, பிறிதொன்றைச் சொல்லுதல்; வக்கணை பேசுதல் போன்ற செயல்பாடுகள் உண்டு. இவை அனைத்தும் புனைந்துரைக்கும் தன்மையினைக் கொண்டவை. அவ்வகைப் புனைவுகள் கதை வடிவில் இருப்பதைக் காணலாம். இதனையும் வேறொரு சந்தர்ப்பத்தில் விரித்துப் பேசலாம். இவ்வகையான வாய்மொழிப் பாரம்பரியக் கதைகளின், அச்சுக்குத் தேவையான ஒரு வடிவமாய்ச் சிறுகதை உருப்பெற்றது. தமிழில் பாரதியும்

வ.வே.சு. அய்யரும், அ. மழவையாவும் இம்முயற்சியில் கால் பதித்தார்கள். இவர்களுக்குப் பின்புலமாக வடமொழி காப்பிய மரபுக் கதைகள், ஐரோப்பிய புத்திலக்கிய உருவாக்க மரபுகள், இந்திய மொழிகளில் புதிதாக உருப்பெற்ற கூறுகள் அனைத்தும் செயல்பட்டன; இதற்குள், இவர்கள் கதை எழுத முயன்றனர். பாரம்பரியக் கதை மரபுகள் பலவும் இக்காலங்களில் அச்சு வடிவம் பெறத் தொடங்கியதையும் நாம் நினைவில் கொள்வது அவசியம். **பரமார்த்த குரு கதைகள், விநோத ரஸ மஞ்சரி கதைத் தொகுப்பு** என்பவை இவ்வகையில் குறிப்பிடத்தக்கவை.

மேற்குறிப்பிட்ட கதை உருவாக்கப் பின்புலம், எவ்வகையில் வேறொரு தளத்திற்கு மாறியது என்பது சுவையானது. இத்தன்மை *1930*களில் தமிழில் உருப்பெற்றது; அதுவே தமிழ்ச் சிறுகதை உருவாக்கத்தின் அடுத்த கட்டம் ஆகும். இத்தன்மை குறித்தும் சுருக்கமாக அறிவது அவசியம்.

காலனிய கல்வி முறைகளால் வட்டார மொழி வாசிப்பு உருப்பெறு வதற்கான வாய்ப்பு முப்பதுகளின் தொடக்கத்தில் பரவலானது. பல்கலைக் கழகங்களில் வட்டார மொழியும் இடம்பெறத் தொடங்கியது; முற்று முழுதான ஆங்கில மொழி செயல்பட்ட நேரத்தில், வட்டார மொழிகளிலும் மெதுவாக, புதிய ஆக்கங்கள் இடம்பெறும் சூழல் உருப்பெற்றது. ஆங்கில ஆக்கங்களை உள்வாங்கிய வட்டார மொழி ஆக்கங்கள் உருப்பெறலாயின; செய்தி இதழியலுக்குள், புனைகதைகளும் இடம்பெறலாயின. புதுமைப்பித்தன், கு.ப.ரா., மௌனி என்ற பெயர்கள் இவ்வகையில் தமிழ்ப் புனைவில் புதிய வழிகளைத் திறந்துவைத்த பெயர்கள் ஆகும். இத்தன்மை குறித்து விரிவாக விவாதிக்க இடமில்லை. இத்தன்மையின் அடிப்படைகளாகப் பின்கண்டவற்றை நாம் புரிந்துகொள்ளலாம்.

தமிழ்ப் புனைகதை உருவாக்கம், அதன் வளர்ச்சிப்போக்கில் ஒரு 'முழுமை'யை எட்டியது; அத்தன்மை தனித்த வடிவமாக அங்கீகாரம் பெற்றது; அத்தன்மையின் மேல் வளர்ச்சி ஆக்கங்கள் குறித்து விவாதிப்பதற்கான அடிப்படைகள் உருப்பெற்றன.

2

புதுமைப்பித்தன் தமிழ்ச் சிறுகதை மொழியைக் கண்டுபிடித்துத் தந்தார். அவ்வகையான செயல்பாடு இரண்டாம் உலகப் போரினால் ஏற்பட்ட தாள் நெருக்கடிக்கு முந்தைய காலங்களில் விரிவாகச் செயல்பட்டது. **சுதந்திரச் சங்கு, ஊழியன், குமரன், காந்தி, மணிக்கொடி, பாரத மனி, பாரத தேவி, சக்தி, கிராம ஊழியன், பிரசண்ட விகடன், கலைமகள், ஆனந்த விகடன், கல்கி** என்ற பல்வேறு இதழ்கள் வழி, தமிழ்ச் சிறுகதை உருவாக்க மரபு செயல்பட்டது. இம்மரபு குறித்து விரிவாக விவாதிக்கப் பட்டுள்ளது. இம்மரபின் தொடர்ச்சி *1948*க்குப் பின்னும் தமிழில் தொடர்ந்தது. இக்காலங்களில், சிறுகதைகளில் பேசப்பட்ட மனிதர்கள் தொடர்ந்து பேசப்பட்டனர்; பேசப்படுகின்றனர்.

விந்தன், கு. அழகிரிசாமி போன்ற படைப்பாளிகள் புதுமைப்பித்தன் தொடர்ச்சியை முன்னெடுத்தவர்கள் ஆவர். அகிலன், தி. ஜானகிராமன் போன்ற படைப்பாளிகள் தொடர்ந்தனர். இவர்கள் தவிர்க்க இயலாமல் விரிந்த புனைகதை வடிவமான **நாவல்** வடிவத்தில் செயல்படுவது என்பது தவிர்க்க முடியாதது. சிறுகதை படைப்பாளிகளாக மட்டுமே *1948*ஆம் ஆண்டுகளுக்குப் பின் வந்தவர்கள் செயல்பட இயலாத சூழல் உருப்பெற்றது. இவ்வகையில் குறைந்த வயதில் மறைந்த புதுமைப்பித்தன் தப்பித்துவிட்டார். எழுதிய ஒரு நாவலும் முற்றுப் பெறவில்லை.

3

மொழிவழி மாநிலங்கள் உருப்பெறத் தொடங்கிய சூழலில், ஒவ்வொரு மாநிலத்திலும், புதிதான அரசியல் இயக்கங்கள் உருப்பெறத் தொடங்கின. தமிழகத்தைப் பொறுத்த வரையில், சுயமரியாதை இயக்கம், மொழி, இசை போன்றவை தொடர்பான பண்பாட்டு இயக்கங்கள் உருவாயின. *1930*களில் தொடங்கிய சோவியத் இலக்கியங்களின் செல்வாக்கு, முற்போக்கு எழுத்தாளர் அமைப்புகளை இந்திய அளவில் உருவாக்கியது. தமிழகத்தில் அதன் செல்வாக்கு ஆழமானது. இடதுசாரி இயக்கம் சார்ந்தும், அவ்வியக்கக் கருத்துநிலை சார்ந்தும் பல்வேறு இதழ்கள் தமிழில் உருவாயின, இதுவே *1950*களின் புதிய நிலை. இஸ்மத் பாஷாவின் **சமரன்**, விந்தனின் **மனிதன்**, தொ.மு.சி. ரகுநாதனின் **சாந்தி**, விஜய பாஸ்கரனின் **சரஸ்வதி** என்பவை *1950*களின் தொடக்க காலங்களில் உருவானவை. **ஆனந்தவிகடன், கலைமகள், கல்கி** என்ற தொடர்ச்சிக்குள் மாற்றாக உருப்பெற்றவை மேற்குறித்த இதழ்கள் ஆகும். **பிரசண்டவிகடன், பொன்னி** என்ற பிறிதொரு மரபும் இருந்தது. மேற்குறிப்பிட்ட இடதுசாரிச் சார்பு இதழ்கள் வழி, தமிழ்ச் சிறுகதை புதிய முகத்தைப் பெறத் தொடங்கியது. ஜெயகாந்தன், ரகுநாதன், சுந்தர ராமசாமி, ஜி. நாகராஜன், கிருஷ்ணன் நம்பி, காவலூர் ராசதுரை, டானியல், டொமினிக் ஜீவா என்ற சிறுகதைப் படைப்பாளிகள் உருப்பெற்றனர்.

இம்மரபு புதுமைப்பித்தன் மரபிலிருந்து வேறுபட்டுப் புதிதாக உருவாகிய வேறு மரபாகும். இவர்கள் அனைவருக்கும் இடதுசாரிக் கருத்துச்சார்பு இருந்தது. இக்காலங்களில், *1940*களின் இறுதியில் இடதுசாரி விவசாயச் சங்க ஈடுபாடுகொண்டிருந்த கி. ராஜநாராயணனும் கதைகள் எழுதத் தொடங்கினார். இத்தன்மையைப் புரிந்துகொள்ள கீழ்க்காணும் தகவல்கள் உதவக் கூடும். **சமரன்** இதழில் மிக அதிகமான சிறுகதைகளை எழுதியவர் ஜெயகாந்தன். **மனிதன்** இதழிலும் அதிகமாக எழுதியவர் ஜெயகாந்தன். **சரஸ்வதி** இதழில் அதிகமான சிறுகதைகளை எழுதியவர்கள் கணேசலிங்கன், காவலூர் ராசதுரை, கிருஷ்ணன் நம்பி, சுந்தர ராமசாமி, டானியல், டொமினிக் ஜீவா, ஜி. நாகராஜன், வல்லிக் கண்ணன் மற்றும் ஜெயகாந்தன் ஆகியோர். இதில் மிக அதிகம் எழுதியவர் ஜெயகாந்தன் ஆவார். இவ்வகைச் சிறுகதை உருவாக்க மரபே *1959*களின்

இறுதியில் **தாமரை** இதழை உருவாக்க, தோழர் ஜீவானந்தம் அவர்களைத் தூண்டியது என்றும் கருத இடமுண்டு (அவ்விதழ் *1960*களின் இறுதியில் புதிய சிறுகதை உருவாக்க மரபை முன்னெடுத்த நிலையைப் பின்னர் பார்க்கலாம்).

புதுமைப்பித்தன் கால மனிதர்கள் சிறுகதைகளில் உருவாக்கப்பட்ட போது, படைப்பாளிகட்கு உருவாகாத படைப்பாளியின் படைப்பு குறித்த நோக்கம் இக்காலங்களில் உருப்பெற்றதாகவே கருதமுடியும். படைப்பு, கருத்து நிலை சார்ந்து விவாதிக்கப்படும் சூழலில் சிறுகதைகள் உருவாக்கப்பட்டன. இதற்குமுன் இல்லாத இவ்வகை உருவாக்கம் தமிழ்ச் சிறுகதை மரபின் அடுத்த கட்டப் பரிமாணமாகக் கருதலாம். இம்மரபு புதுமைப்பித்தனை உள்வாங்கிய, அடுத்த மரபாகப் புரிந்து கொள்ளலாம்.

இக்காலங்களில் சுயமரியாதை இயக்கம் சார்ந்து, பரவலான அச்சு ஊடகச் செயல்பாடு இருந்தது. **பொன்னி** போன்ற இதழ்களில் சிறுகதைகள் எழுதப்பட்டன. அக்கதை மரபு புதுமைப்பித்தன் மரபின் தொடர்ச்சியாகவே இருந்தது. தனக்கெனப் புதிய மொழியை அது கண்டுபிடித்ததாகச் சொல்ல முடியாது. அம்மரபில் டி.கே. சீனிவாசன் குறிப்பிடத்தக்கவர்.

புதுமைப்பித்தனின் மொழி, ஜெயகாந்தனிடத்தில் புதிய உருவம் பெற்றது. அது தமிழ்ச் சிறுகதை மரபின் அடுத்த கட்டமாகக் கருதுவதற்கான பல அடிப்படைகளைக் கொண்டிருந்தது. புதுமைப்பித்தனை ஒரு குறியீடாகக் கொள்வதைப் போன்று ஜெயகாந்தனை அடுத்த கட்டக் குறியீடாகக் கொள்ள இடமுண்டு. இக்குறியீட்டில் தமிழ்ச்சிறுகதை வேறொரு புதிய மொழியைக் கண்டுபிடித்தது.

### 4

*1959*இல் வெளிவரத் தொடங்கிய **எழுத்து** ந. முத்துசாமி, தருமு சிவராம் என்ற இரு புதிய எழுத்தாளர்கள் சிறுகதைகளை மட்டுமே வெளியிட்டுள்ளது.இவ்விதழ் வெளியிட்ட மற்றைய சிறுகதைகள் அனைத்தும் *1952*க்குமுன் எழுதத் தொடங்கியோர் கதைகளே ஆகும். நவீன கவிதைகள், விமர்சனங்கள் ஆகியவற்றில் காட்டிய அக்கறையைக் கதைகளில் **எழுத்து** முன்னெடுக்கவில்லை என்பதைப் புரிந்து கொள்ள முடிகிறது. இக் காலங்களில், தமிழ்ச் சிறுகதை உருவாக்கத்தில் **தாமரை, கணையாழி, தீபம், கண்ணதாசன்** ஆகியவை புதியவர்களைக் கண்டுபிடித்தன. தமிழ்ச் சிறுகதையின் அடுத்த கட்டம் உருவானது.

**தாமரை** கி. ராஜ நாராயணன் மரபைக் கண்டுபிடித்தது. இதன் தொடர்ச்சியாக, பா. செயப்பிரகாசம், லிங்கன், வீர. வேலுச்சாமி, பூமணி போன்ற சிறுகதைப் படைப்பாளிகள் உருவாயினர். சார்வாகன், தஞ்சை பிரகாஷ் போன்றவர்களையும் பிரபஞ்சன், ஜெயகாந்தன் போன்றவர் களையும் புதிதாக வெளிப்படுத்தியது **தாமரை**. இவ்வகையில் ஜெயகாந்தன் மரபின் தொடர்ச்சி, புதிய பரிமாணங்களில் உருப்பெற்றது. கரிசல்

இலக்கியம் கண்டெடுக்கப் படுவதற்கான முன்னத்தி ஏர் **தாமரை**யால் நிகழ்ந்தது.

புதுடெல்லியை அடிப்படையாகக் கொண்டு, செய்தி இதழியல் போக்கில் *1965*இல் உருவான **கணையாழி** தொடர்ச்சியாகப் பல புதிய சிறுகதைப் படைப்பாளிகளை வெளிக்கொண்டு வருவதில் முனைப்புக் காட்டியது. கணையாழியின் தொடக்க காலத்தில் இவ்வகை முனைப்பு இல்லை. எழுபதுகளில்தான் இவ்வகை முனைப்பு நிகழத் தொடங்கியது. அசோகமித்திரன், அம்பை, ஆதவன், இந்திராபார்த்தசாரதி, சா. கந்தசாமி, சூடாமணி, நாஞ்சில் நாடன், திலீப்குமார், விமலாதித்தமாமல்லன் போன்ற படைப்பாளிகளை வெளிப்படுத்தியதில் கணையாழிக்குக் குறிப்பிடத்தக்க இடமுண்டு. **தாமரை** வெளிப்படுத்திய மொழிக்கு இணையான வேறொரு மொழியை, குறிப்பாக, **அசோகமித்திரன்** போன்ற குறியீடுகளை இதன் மூலம் நாம் விளங்கிக்கொள்ள முடியும். புதுமைப்பித்தன், ஜெயகாந்தன், இராஜ நாராயணன், அசோகமித்திரன் என்ற வரிசையை, தமிழ்ச் சிறுகதை உருவாக்கக் குறியீடுகளாகக் கொள்ளலாம். *1950*களுக்குப் பின் அது **சரஸ்வதி, தாமரை, கணையாழி** என்ற தொடர்ச்சியாகக் கொள்ளமுடியும். இத்தருணத்தில் சொல்லப்பட்ட **தீபமும், கண்ணதாசனும்** இம்மரபிற்குச் செழுமை தந்துள்ளன.

*1965-1985* இடைப்பட்ட காலங்களில் **கணையாழியிலும் தீபத்திலும்** தொடர்ச்சியாக எழுதியவர்களாக, சூடாமணி, நாஞ்சில் நாடன் ஆகியவர்களைக் காணமுடிகிறது. **தீபம்**, வண்ணதாசன், விட்டல்ராவ் ஆகியோர் கதைகளை மிகுதியாக வெளியிட்டுள்ளது. **தாமரையில்** மிகுதியான கதைகளை எழுதிய சார்வாகன், **தீபத்**திலும் மிகுதியாக எழுதியுள்ளார். பாவண்ணன், சி.எம். முத்து, க. முத்தானந்தம் போன்றவர்களையும் **தீபம்** வெளிப்படுத்தியுள்ளது. இவர்கள் தங்களது அதிகமான கதைகளைத் **தாமரை**யில் எழுதியவர்கள்.

*1968-1978* காலங்களில் வெளிவந்த **கண்ணதாசன்** இதழ் என்.ஆர்.தாசன், பா. செயப்பிரகாசம், பிரபஞ்சன், வண்ணதாசன், ஜி. நாகராஜன் ஆகியோர் கதைகளை மிகுதியாக வெளியிட்டிருப்பதைக் காணமுடிகிறது. எழுபதுகளில் குறுகிய காலம் வெளிவந்த **கசடதபற** இதழில் சா. கந்தசாமி, நகுலன், ஆர். இராசேந்திர சோழன், நா. ஜெயராமன் ஆகியோர் கதைகள் மிகுதியாக வெளிவந்துள்ளன.

*1960-1985* இடைப்பட்ட காலங்களில் வெளிவந்த **தாமரை, தீபம், கணையாழி, கண்ணதாசன்** போன்ற இதழ்களில் இக்காலத்திய படைப்பாளிகள் அனைவரின் சிறுகதைகளும் இடம்பெற்றிருப்பதைக் காண முடிகிறது. இவ்விதழ்களை நடத்தியோரின் கண்ணோட்டங்கள் வேறு பட்டிருந்த நிலையில், ஓர் இதழில் சிறுகதை எழுதிய படைப்பாளி இன்னொரு இதழிலிலும் இடம் பெற்றிருப்பதைக் காணமுடிகிறது. இவ்வகையில் தமிழின் அடுத்த கட்ட சிறுகதை உருவாக்கத்தில்

இவ்விதழ்களின் பங்களிப்பைப் புரிந்துகொள்ள இயலும். இன்றைய சூழலில் வாழும் பெரும்பாலான சிறுகதை எழுத்தாளர்களை இவ்விதழ்களே வெளிப் படுத்தியுள்ளன. இவைகளில், வெளிவந்த சிறுகதைகளை *1970* முதல் மாதந்தோறும் தேர்வுசெய்து பரிசு வழங்கிய **இலக்கியச் சிந்தனை**யின் பட்டியலில் இடம்பெற்றுள்ள எழுத்தாளர்களின் பெயர்கள், தமிழ்ச் சிறுகதை உருவாக்கம் குறித்த ஒரு கணக்கீட்டிற்கு உதவும். இப்பட்டியலில் கண்டுள்ள பெயர்களின் அகரவரிசை பின்வருமாறு *(1987* வரை*):*

அசோகமித்திரன், அம்பை, இந்திராபார்த்தசாரதி, இராசேந்திர சோழன், கந்தர்வன், கார்த்திகா ராஜ்குமார், சங்கர நாராயணன், சார்வாகன், சுப்ரபாரதிமணியன், சுரேஷ்குமார் இந்திரஜித், சூடாமணி, செயப்பிரகாசம், என்.ஆர். தாசன், திலீப் குமார், நாஞ்சில்நாடன், பிரபஞ்சன், பிரிமிள் தர்மூ சிவராம், பூமணி, முத்தானந்தம். அ., மேலாண்மை பொன்னுசாமி, ராஜநாராயணன். கி., லிங்கன், வண்ணதாசன், வண்ண நிலவன், விட்டல்ராவ், ஜெயகாந்தன் ஆகியோர். இலக்கியச் சிந்தனை தேர்வில் மிக அதிகமான கதைகள் **கணையாழி, தீபம், செம்மலர், தாமரை** ஆகியவற்றிலிருந்து தேர்வு செய்யப்பட்டிருப்பதைக் காணலாம். இதே அளவிற்கு **ஆனந்தவிகடன், குமுதம், சாவி, தினமணிக் கதிர்** இதழ்களிலும் தேர்வு செய்யப்பட்டுள்ளன. அப்படைப்புகள் எவையும் நூல் வடிவம் பெறவில்லை. இதன் மூலம் அவை இதழ்த் தேவை கருதி உருவான 'எழுத்து'க்களாகக் கொள்ள முடியும்.

*1960*களில் தொடங்கி உருவான சிறுகதை மரபு *1980*களின் இடைப்பட்ட காலங்கள் வரை ஒரு தொடர்ச்சியை முன்னெடுத்து இருப்பதைக் காணமுடிகிறது. இத்தொடர்ச்சிக்குள் பல்வகையான சிறுகதை உருவாக்கங்களும் நிகழ்ந்துள்ளன. வெகுசன வாசிப்பு இதழ்களிலிருந்தும் மிகச் சில படைப்புகள் உருவாகியுள்ளன. நகரம், கிராமம் என்ற முரண்பட்ட தளங்களிலிருந்து உருவான சிறுகதை மரபு மாற்றம் பெற்றது. இரண்டின் கூறுகள் சமகால இணைவுகளாகவே படைக்கப்பட்டன. கிராமங்களிலிருந்து உருவான படைப்பாளிகளின் எண்ணிக்கை படிப்படியாக அதிகரித்து வந்திருப்பதைக் காணலாம். நடுத்தர குடும்பச் சிக்கல்களே இடம் பெற்றிருந்த புனைவில், கிராமத்து மக்களும் பெரும் பகுதியாக இடம் பெறத் தொடங்கினர். இத்தன்மை தமிழ்ச் சிறுகதையின் பரிமாணங்களை விரிவுபடுத்தியது.

## 5

இருபதாம் நூற்றாண்டின் தொடக்க காலங்கள் ஐரோப்பிய நாடுகளின் அதிகாரப் போர்கள் உலகம் தழுவிய மாற்றங்களுக்கு வழி கண்டன. சோவியத் மற்றும் சீனக் குடியரசு உருவாக்கம் புதிய நிகழ்வுகளாகின. இந்த இரு முரண்கள் சார்ந்தே உலக நிகழ்வுகள் முகம் கொண்டன. *1960*களில் இத்தன்மைகளில் வேறு மாற்றங்கள் உருப்பெறத் தொடங்கின. நவீன சிந்தனை மரபுகள் உருவாயின.

மொழி,பண்பாடு குறித்த புதிய புரிதல்கள் உருவாயின. அதைச் சார்ந்து, படைப்புகளிலும் புதிய வகையான மொழி உருப்பெறத் தொடங்கியது; அத்தன்மை தமிழிலும் இடம்பெற்றது. *1980*களில் அடுத்தகட்ட மாற்றங்கள் உலக அளவில் உருப்பெறலாயின. இதன் விளைவாக *1980*களின் இறுதியில் புதுவகையான அணுகுமுறைகள் முன்னெடுக்கப்பட்டன; படைப்பிலும் அதன் செல்வாக்கு உருப்பெறத் தொடங்கியது. சிறுகதை உருவாக்கத்தில் எதார்த்தச் சித்திரிப்பு சார்ந்த மொழிகள் குறித்து விவாதிக்கத் தொடங்கினர். புதுவகையான மொழிகளில் எழுத முனைந்தனர். இம்மரபு தமிழ்ச் சிறுகதையின் புதிய பரிமாணமாக உருப்பெறத் தொடங்கியது. எண்பதுகளின் இறுதி தொண்ணூறுகளின் தொடக்கத்தில் இம்மரபு தமிழ்ச் சிறுகதையில் இடம்பெற்றது. இம்மரபு புதுமைப்பித்தன், மௌனி, லா.ச.ரா., நகுலன் என்ற தொடர்ச்சியின் அடுத்த கட்டம் என்றே கூறலாம். இத்தொடர்ச்சியில், அண்மைக் காலங்களில் செயல்படத் தொடங்கியவர்கள் தங்கள் மொழிக்கான அரசியல் நிலைப்பாடு குறித்தும் விவாதிக்கத் தொடங்கினர்/விவாதிக்கின்றனர். எதார்த்த மரபின் தொடர்ச்சியாக, திலீப் குமார், பாதசாரி, விமலாதித்தமாமல்லன், ஜெயமோகன், தமிழ்ச் செல்வன், பெருமாள்முருகன் போன்றோர் செயல்படும் அதே சூழலில், வேறு மொழிக்கான அக்கறைகாட்டி எழுதுவோர்களும் உருவாகியுள்ளனர். கோணங்கி, சுரேஷ்குமார் இந்திரஜித், ஸில்வியா, கௌதமசித்தார்த்தன், ராமகிருஷ்ணன் என்ற படைப்பாளிகள் உருவாகியுள்ளனர். இவர்களது மொழி, விவாதிக்கப்படுகிறது. பரவலான கவனத்தை இவர்களது மொழிகள் உருவாக்கியுள்ளன. இதன் வளர்ச்சிக்கு நாம் இன்னும் காத்திருக்க வேண்டியுள்ளது. இம்மொழிகளின் நேர்கோட்டுத் தன்மை மறுப்பு, எதார்த்தச் சித்திரிப்புப் புறக்கணிப்பு, கதை கூறலின் தொடர்ச்சியின்மை போன்ற பல கூறுகள் விவாதிப்படவேண்டியவை. இக்கூறுகள் தமிழ்ச் சிறுகதையில் ஒரு புதிய அணுகுமுறையை வேண்டி நிற்கிறது. அதற்கான போராட்டம் நிகழ்ந்துகொண்டிருக்கிறது.

## 6

தமிழ்ச் சிறுகதை புதுமைப்பித்தனுக்குப் பின்பு கடந்து வந்து கொண்டிருக்கும் கூறுகளைப் பின்கண்ட வகையில் தொகுத்துக் கொள்ளலாம்.

நவீன அச்சு ஊடகப் பரவல்; சமூகத்தில் செயல்பட்ட அரசியல் கருத்தாக்கங்களை உள்வாங்குவது என்பது தவிர்க்க இயலாததாகியது. இதனால், இடதுசாரி கருத்தாக்க மரபு, தமிழ்ச் சிறுகதை உருவாக்கத்தில் புதுமைப் பித்தனுக்குப் பின்பு, தனித்தன்மையாகவே வடிவம் பெற்றது. அம்மரபே முதன்மையான செயல்பாடாக வடிவம் பெற்றது.

திராவிட இயக்கம், இடதுசாரி இயக்கம் இவற்றை மறுக்கும் கண்ணோட்டத்தோடு அச்சு ஊடகத்தில் உருப்பெற்ற சிறுகதைகள், தனி

மனித உணர்வுகளின் முரண்களைப் பதிவு செய்ய முயன்றன. இவ்விரு வகைப் படைப்புகளின் அடிப்படைகளில், பெரிதும் முரண்கள் இல்லை; மாறாக வெளிப்படுத்தும் மொழிகளில் வேறுபாடுகள் இருந்தன. சிறுகதை என்ற வடிவம் இவ்வகையில்தான் செயல்பட முடியும். இத்தன்மைக்கு வேறான வடிவம் அண்மைக் காலங்களில்தான் உருவாகத் தொடங்கியுள்ளது.

ஒவ்வொரு கால அச்சு ஊடக வளர்ச்சி, அதனைப் பயன்படுத்த எத்தனிக்கும் சமூக அமைப்புகள், அதற்குள் இடம்பெறும் எழுத்துக்கள் என்ற தொடர்ச்சியான செயல்பாட்டில் தமிழ்ச்சிறுகதையும் உருவாகி வந்து கொண்டிருக்கிறது. இருபதாம் நூற்றாண்டின் முதற்பாதியில் சிறுகதை உருவாக்க மரபுத் தொடர்ச்சியும் மறுபாதியில் புதிய புதிய உருவாக்கங்களும் இடம் பெறுதல் நிகழ்ந்தன. இவ்வரலாற்றின் கோடுகாட்டுதல் என்ற பணி இக்கட்டுரையில் செயல்படுத்த முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது. மிக விரிவான விவாதத்திற்கான அடிப்படைகளாக இவற்றை நாம் புரிந்து கொள்ளலாம்.

## பார்வை நூல்கள்


1. அசோகமித்திரன், தாசன். என்.ஆர்., **மூன்று பார்வைகள்**, பம்பாய்த் தமிழ்ச்சங்கம், *1984*.
2. இளந்திரையன், சாலை., **தமிழில் சிறுகதை**, தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, *1966*.
3. இளந்திரையன், சாலை., **சிறுகதைச் செல்வம்**, தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, *1966*.
4. சிவத்தம்பி, கா., **தமிழில் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும்**, பாரிநிலையம், சென்னை, *1967*.
5. சுந்தரராஜன் (சிட்டி), சிவபாத சுந்தரம், சோ., **தமிழில் சிறுகதை வரலாறும் வளர்ச்சியும்**, க்ரியா, சென்னை, *1989*.
6. செந்தில்நாதன், ச., **தமிழ் சிறுகதைகள் - ஒரு மதிப்பீடு**, *1968*.
7. செல்லப்பா, சி.சு., **தமிழ் சிறுகதை பிறக்கிறது** (இரண்டாம் பதிப்பு), பீக்காக் பப்ளிகேஷன்ஸ், சென்னை, *1988*.
8. பியூலா மெர்சி, **இருபதில் சிறுகதைகள்**, சென்னை, *1974*.
9. ரகுநாதன், தொ.மு.சி., **புதுமைப்பித்தன் கதைகள் - சில விமர்சனங்களும் விஷமத்தனங்களும்**, என்.சி.பி.எச்., சென்னை, *1999*.
10. வேதசகாயகுமார், எம்., **தமிழ்ச் சிறுகதை வரலாறு** (முதல் பகுதி) நாகர்கோவில், *1979*.

# நாடகம் - மொழிபெயர்ப்பு

அ. மங்கை

இக்கருத்தரங்கின் மையப்பொருளாகப் பொதிந்துள்ள கருத்து இந்திய தேசியம். இந்திய தேசியத்தின் ஓர் அங்கமாகத் தமிழை இனம் காணும் முயற்சியாகவே 'இந்திய விடுதலை' என்ற வரலாற்று நிகழ்வு இங்குச் செயல்படுகிறது. வரலாற்றை நிகழ்வுகள், ஆண்டுகள், அதிகார மாற்றங்கள் அடிப்படையில் காணாது, அவற்றின் அடிநாதமான அரசியல் சித்தாந்தத்தோடு இணைத்துப் பார்க்கும்போது, எல்லாச் செல்நெறிகளும் முனைப்பான நோக்கங்களை, பார்வைகளை முன்வைப்பது புலனாகும். அந்தவகையில் தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட நாடகங்கள் எத்தகு கருத்தியல் அடிப்படையில் தொழிற்பட்டன என்பதைக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கம்.

சூசன் பாஸ்னெட் *(1980:* முதல்பதிப்பு*)* தனது **Translation Studies** என்ற நூலின் முன்னுரையில் பிரேசில் நாட்டு மொழிபெயர்ப்பாளர்கள் பயன்படுத்தியுள்ள உவமையைக் குறிப்பிடுகிறார் (p. xiv). மனிதரை உண்ணும் மொழிபெயர்ப்பு (Cannibalistic) என்று அறியப்படும் இவ்வகை மொழிபெயர்ப்பு மூலநூலைத் தின்று, செரித்துப் புதியதொரு நூலாக வரும் மொழிபெயர்ப்பைக் குறிக்கிறது. வோலே சொயின்கா மொழிபெயர்ப்புச் செயல்பாட்டை அப்பாவித்தனமான செயலாகக் காண்பதன் ஆபத்தை விளக்குவார். கதாநாயகர்களைத் தாக்கும் காட்டுமிராண்டிகள் கதைகளைக் குழந்தைப் பருவத்தில் இருந்தே படித்து, அதன்காரணமாக

வெள்ளை ஏகாதிபத்திய சக்திகளோடு சேர்ந்து தானும், தனது மக்களை காட்டுமிராண்டிகளாகப் பார்க்கத் தொடங்கிய அவலத்தை அவர் விளக்குவார். ஒரு மூலநூல் மற்றொரு பண்பாட்டுச் சூழலுக்கு அறிமுகம் செய்யப்படும்போது, அதன் அரசியல் உள்ளடக்கம் முக்கியத்துவம் பெறுகிறது. மொழிபெயர்ப்பாளரை 'மனித விழுங்கி'யாக உருவகிப்பது ஐரோப்பிய சிந்தனை தளத்திலிருந்து இதனை அநாகரிகமெனக் கூசும் மனநிலையில் இருந்து அல்ல; அதற்கு நேர்மாறான நோக்கிலிருந்து சமூகத்தைக் காண விழையும் போக்கிலிருந்து எழுவது.

மொழிபெயர்ப்பியல் துறையைப் பொறுத்தவரை மூலநூலின் மதிப்பினைக் கொண்டே கணக்கிடப்படும் தன்மையை மாற்றி, அந்நூலை எதிர்கொள்ளும் பண்பாட்டுத் தளத்தில் இருந்து அந்நூலைக் காண இம்முறையியல் உதவுகிறது.

இந்தப் பின்புலத்தில் நாடகத் துறையில் நடைபெற்றுள்ள மொழி பெயர்ப்பு முயற்சிகளை அணுகுவது அவசியமாகிறது.

ஷேக்ஸ்பியரைச் **செகசிற்பியர்** எனப்போற்றி அவரது நாடகங்களைத் தமிழில் மொழிபெயர்த்தவர்கள் பலர். விபுலானந்த அடிகளும், பம்மல் சம்மந்த முதலியாரும் இதில் குறிப்பிட்டுச் சொல்லப்பட வேண்டியவர்கள்.

**All the world is a stage and**
**all men and women were players**

எனவரும் ஷேக்ஸ்பியரின் As you like it நாடக வசனத்தை, விபுலானந்தர்

**அங்கணு உலகனைத்தினையும் ஆடரங்கம் எனலாகும் அவனி வாழும்**
**மங்கையரை ஆடவரை நடம்புரியும் மக்களென மதித்தல் வேண்டும்**

எனத் தொடங்கி, ஏழு பருவத்தின் வாழ்வை விளக்கி இறுதியில்,

**பண்ணியையும் என்மொழிசேர் பாலரொக்கும் கிழப்பருவம் பயின்ற பின்னர்**
**கண்ணிணைகள் நோக்கொழியப், பல்லொழியச், சுவையொழியக் கருத்து நீங்க**
**உண்ணும் உணவொழித்து அனைத்தும் ஒழிந்து உயிர்வாழ்க்கை ஒருவுந்தோற்றம்**
**எண்ணும் இந்த நாடகத்தின் இறுதியென யாம் எடுத்து இயம்புவாமே**

என முடிக்கிறார். இந்த மொழிபெயர்ப்பு தமிழின் ஆழ, அகலங்களை உணர்ந்து தமிழியமான மொழியில் வெளிப்படுகிறது. இந்த மொழிபெயர்ப்பு விடுதலைக்கு முந்திய முயற்சியானாலும் அதன் செறிவிலிருந்து பின்னாளைய முயற்சிகளை ஒப்பிட்டுக் காண்பது நலம் பயக்கும்.

பிற இந்திய மொழிகளைப் போலவே தமிழிலும் வடமொழி மற்றும் ஆங்கில நாடக மொழிபெயர்ப்புகளே தொடக்ககால மொழிபெயர்ப்பு முயற்சிகளை ஆக்கிரமித்தன எனலாம்.

க. சந்தானம் அவர்கள் **சாகுந்தலம், மேகதூதம்** நாடகங்களைத் தமிழில் தருவது பற்றி *(1953)*,

> **இதர மொழிகளில் அமைந்த உயர் நூல்களை மொழிபெயர்ப்பது ஒரு முக்கியமான வழியாகும். அதிலும் பாரத தேசத்தின் கலைகளுக்கெல்லாம் என்றும் வற்றாத கங்கோத்திரியாக இருக்கும் வடமொழியின் நூல்களைத் தமிழர்தம் சொத்தாக்கிக் கொள்வது அத்தியாவசியமானது (vii)**

என்கிறார். காளிதாசர், பவபூதி, பாசன், மகேந்திரவர்மன் போன்ற வடமொழி நாடகாசிரியர்களின் நூல்கள் தமிழில் வெளிவந்துள்ளன.

ஆங்கில நாடகங்களைக் குறிப்பாக ஆங்கிலத்தில் உள்ள Canonical நாடகங்களைத் தமிழில் தரும் முயற்சி சென்ற நூற்றாண்டின் இறுதியில் இருந்தே சிரத்தையாக இயங்கி வருவதைக் காணலாம். கிட்டத்தட்ட எல்லா பிரபலமான ஷேக்ஸ்பியர் நாடகங்களும் தமிழில் வெளிவந்துள்ளன. பண்டிதை விசாலாட்சி அம்மாள் *1911* இல் **Comedy of Errors** நாடகத்தை இரட்டை சகோதரிகள் *(அ)* விநோதவிரல்மயம் என மொழிபெயர்த்திருப்பதைக் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும். பம்மல் தனது மொழிபெயர்ப்புகளை மேடையாக்க நோக்கிலேயே செய்திருப்பதையும், பெரும்பாலான பிற மொழிபெயர்ப்புகள் மேடையேற்றம் பெறாமல் புத்தகவடிவில் மட்டும் வெளிவந்ததையும் கணக்கில் கொள்ளவேண்டும்.

ஷேக்ஸ்பியர் தவிர தமிழில் கோல்ட்ஸ்மித், ஷெரிடன், இப்சன் போன்றோரின் நாடகங்கள் மொழிபெயர்க்கப்பட்டன. ஷா நாடகங்களின் தாக்கம் சி.என். அண்ணாதுரையின் நாடகங்களில் காணப்படுவது பற்றிப் பலர் குறிப்பிட்டுள்ளனர்.

இந்திய விடுதலைக்குப் பின் பிற இலக்கிய வகைகளில் இந்திய தேசிய ஒருமிப்பை வலியுறுத்திய முயற்சிகள் வந்த அளவு நாடக இலக்கிய வடிவில் வரவில்லை எனலாம். நாடகத்தைப் பொறுத்தவரை நிகழ்த்து கலை மரபுகள் (Performing Traditions) அதன் இடத்தைப் பெறத் தொடங்கின. சாகித்ய அகாதெமி கூட நாவல், சிறுகதை, கவிதை நூல்களில் உள்ள அளவு இந்திய மொழிகளுக்குள் நாடக மொழிபெயர்ப்பு குறித்து அக்கறைப்படவில்லை. சங்கீத நாடக அகாதெமி தனது முனைப்பை இந்தியாவிலுள்ள பிரதேசங்களின் மரபு வடிவங்களில் செலுத்தியது. செவ்வியல் மற்றும் நாட்டார் மரபுகளின் ஊடாகப் புதுவகை நாடகவகை தோற்றம் பெறுவதில் சங்கீத நாடக அகாதெமி கவனம் செலுத்தியது. Theatre of Roots என்று அழைக்கப்பட்ட அந்த முயற்சி எழுபதுகளில் தீவிரமாக இயங்கியது.

கிட்டத்தட்ட அதே காலக்கட்டத்தில் அறுபதுகளின் இறுதியில் தமிழில் சிறுபத்திரிகைச் சூழல் **எழுத்து** பத்திரிகை மூலம் ஐரோப்பிய, ஆங்கிலச் சூழலில் புகழ்பெற்ற நாடக ஆசிரியர்களைத் தமிழில் அறிமுகப்படுத்துவதில் ஆர்வம் காட்டியது. சி.சு. செல்லப்பா பெக்கெட், அயனாஸ்கோ பற்றி, தமிழ்ச்சூழலில் சிரத்தையோடு அறிமுகப்படுத்தினார். முத்துசாமியின் **காலங்காலமாக, அப்பாவும் பிள்ளையும்** நாடகங்கள் தமிழக அயனாஸ்கோவின் படைப்புகளாகக் காணப்பட்டன இந்தப் பின்னணியில் தான். பிரெஞ்சு நாடகாசிரியர்கள் தமிழில் அறிமுகமாகத் தொடங்கியதும் இப்படியே.

இதே காலக்கட்டத்தில் பிரெக்ட், செகாவ் போன்றோரின் நாடகங்கள் இடதுசாரிகள் மத்தியில் அதிகம் அறிமுகமாயின. பிரெக்டின் நாடகக் கோட்பாடும், நாடக எழுத்தும் தமிழில் நவீன நாடகத்தில் ஈடுபடும் அனைவருக்கும் அறிமுகமான பெயரானது இந்தப் பின்னணியில்தான்.

*1980*களின் தொடக்கத்தில் பாதல் சர்க்காரின் பயிற்சிமுறை, அவரது நாடகங்கள் ஆகியவை தமிழ்ச்சூழலில் பெரும்வீச்சை ஏற்படுத்தின. பாதலின் நாடகங்களின் மொழிபெயர்ப்பில் தமிழகம் முதலிடத்தில் நிற்கிறது என்றால் அது மிகையில்லை. பிறகொரு இந்திரஜித், மீதி சரித்திரம் போன்றவை நூல்களாக வெளிவந்துள்ளன. ஸ்பார்ட்டகஸ், போமா, மிசில் *(ஊர்வலம்)* போன்றவை நாடகங்களாக மேடையேற்றப்பட்டன.

மராத்திய நாடகாசிரியரான டெண்டுல்கரின் **கமலா, அமைதி! கோர்ட் நடைபெறுகிறது!** நாடகங்கள் பரிக்ஷா குழுவால் மேடையேற்றப் பட்டன. சுரேந்திரவர்மா, மோகன்ராஜேஷ் போன்ற இந்தி நாடகாசிரியர்கள் தமிழில் அறிமுகம் ஆனவர்கள். பேரா. இராமானுஜம் அவர்களின் நெருக்கத்தினால் ஜி. சங்கரம்பிள்ளையின் நாடகங்கள் தமிழில் பரவலாக அறியப்பட்டுள்ளன. கன்னட நாடகங்கள் சதாசிவம், பாவண்ணன் முயற்சியால் நமக்குக் கிடைக்கின்றன.

இவை நெட்டோட்டமான தகவல் பரப்பு!

இந்தத் தரவுகளின் அடிப்படையில் நாடக-மொழிபெயர்ப்புத் துறையில் எழும் சில அய்யங்களை உங்களோடு பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன்.

நாடக மொழிபெயர்ப்பு, பிற இலக்கிய வகை மொழி பெயர்ப்பினின்று வேறுபட்டதா? ‘ஆம்’ எனில் எவ்வகையில்?

இலக்கிய வகையாக மட்டும் இல்லாமல், நிகழ்த்துக்கலையாகவும் இருக்கின்ற காரணத்தால் நிகழ்த்து முறைகளின் அடிப்படையில் மொழிபெயர்ப்பு செய்யப்பட வேண்டியது தேவையாகிறது.

ஒகோ-ப்-பிடெக் என்ற உகாண்டா நாடகாசிரியனின் Song of Lawinoவின் ஆங்கில மொழிபெயர்ப்புக்கான முன்னுரையில் ஆப்பிரிக்க பாடல் முறையில் வரும் repetition எனப்படும் திருப்பிச் சொல்லும் பாடல்

உத்தி ஆங்கில மொழிபெயர்ப்பில் குறையும் விதத்தை விளக்குகிறார். இது ஆசிரியராலேயே மொழிபெயர்க்கப்பட்ட நூல். மரபு சார்ந்த பாடல்களை எதிரொலிக்கும் மூலநூலின் நயத்தை, ஆங்கில மொழி பூசி மெழுகி விடுவதை விளக்குவார். அதைப் போலவே பழமொழிகள் புதிர் போன்ற நாட்டார் வழக்காற்றுக் கூறுகளின் செறிவு ஆங்கிலத்தில் கிடைக்காமல் போவதை வெளிப்படுத்துவார். டெண்டுல்கரின் **காசிராம் கொத்தவால்** அமெரிக்காவில் ஆங்கிலத்தில் நடத்தப்பட்டபோது பாடல்களை மராத்தியிலேயே வைத்துக் கொண்டதை நான் இதனோடு இணைத்துப் பார்க்கிறேன். கிரேக்க நாடகங்களான Trojan Woman மற்றும் Antigone நாடகங்களை முறையே பேரா. இராமானுஜம் மற்றும் செண்பகம் இராமசாமியும், மு. இராமசாமியும் தழுவல்களாகச் செய்ததன் அடிப்படையும் இதிலிருந்து எழுந்ததே எனலாம். **Antigone** நாடகத்தைத் தழுவி **துர்க்கிர அவலம்** உருவான போது *'1980*இன் பிற்பகுதியில் திருப்பத்தூரில் தீவிரவாத ஒழிப்பு நடவடிக்கை என்ற பெயரில் காவலர்களால் கைது செய்யப் பெற்று, சித்திரவதைக்குப் பின் சென்னை மருத்துவமனையில் அனுமதிக்கப் பெற்று, அங்கு இறந்துவிட்ட பாலனின் சடலத்தை அவருடைய பெற்றோர்களிடம் தரமறுத்து, அவர்களின் எதிர்ப்பையும் மீறி, காவல்துறையினர் தாங்களாகவே எரித்தமை பற்றிய செய்தியின் குரூரம் அருவருக்கத்தக்க உணர்வை எனக்குள் ஏற்படுத்தியிருந்தது' என்கிறார் இராமசாமி. அதனோடு தேவராட்டம், தெருக்கூத்து ஏற்படுத்திய அதிர்வுகளின் அடிப்படையில் நிகழ்ந்த வேதியல் நிகழ்வாகவே **துர்க்கிர அவலம்** பாடல், ஆடல் சார்ந்த நவீன நாடகமாக உருவானது. Trojan Women **வெறியாட்டம்** நாடகமாக வெளிப்பட்டது நம்மண்ணின் மரபு சார்ந்த ஒப்பாரி இசையின் வீரியத்தினால் தான்! மு. ஜீவா *90*களில் **ஆண்டிகனி, மீடியா** போன்ற கிரேக்க நாடகங்களை அவ்வப்பெயரிலேயே நேரடியாக மொழிபெயர்த்தார். சார்த்தின் No Exit **மீளமுடியுமா?** வாகவும், காம்யூ, மொலியர் நாடகங்களும், அயனாஸ்கோவின் **ரைனாசரஸ்** (காண்டாமிருகம்), **நிரபராதிகளின் காலம், Gas II, மகாத்மாவின் கடைசி ஐந்து நிமிடங்கள்** போன்ற ஜெர்மன் நாடகங்கள் நேரடி மொழிபெயர்ப்புகளாக நிகழ்த்தப்பட்டன. நாடக மொழிபெயர்ப்பு முயற்சிகளில் நிகழ்த்து வடிவம் செலுத்தும் தாக்கம் பற்றிய கேள்விகளை இவற்றின் பின்னணியில் எழுப்பலாம். உடனடி பார்வையாளர்களை எதிர்கொள்ள வேண்டிய நாடகங்கள் நிகழ்த்து வடிவங்களின் தன்மைகளை உள்வாங்கி மொழிபெயர்க்கப்படும்போதுதான் அது நிகழ்த்தப்படும் களத்துக்குரிய நியாயத்தைப் பெறுகிறது. அவ்வாறு தேசியம் செய்யப்படாதபோது, அவற்றின் அந்நியத்தன்மை உறுத்தலாகவே மிஞ்சுகிறது.

பிரெக்டின் Exception & The Rule நாடகத்தை **ஒரு பயணத்தின் கதை**யாகப் பல்கலை அரங்கம் மொழிபெயர்த்தபோது மேடையாக்க முனைப்போடு ஒவ்வொரு வார்த்தையையும், பாட்டையும் செய்து பார்த்து

எடுத்த அனுபவம் எனக்குண்டு. அதில் இளைய பத்மநாதனோடு இணைந்து செயலாற்றியதன் அடிப்படையில் அவர் சொல்வதுபோல், **உலகத்தின் எந்த மூலையில் இருந்தும் நாடகத்தை எடுப்போம். ஆனால் அதை எமது அரங்காக அளிப்போம்!** என்ற கோட்பாடு எனக்கு முக்கியமானதாகப்படுகிறது.

அடுத்து, நிகழ்த்தப்படும் வாய்ப்புக்கள் தேடிக் குழுக்கள் செயல்படும்போது தமிழகத்தில் ஜெர்மன், பிரெஞ்சு நாடக மொழிபெயர்ப்புகள் எண்பதுகளுக்குப்பின் அதிகமாக வெளிவந்ததன் பின்புலத்தை நாம் கணக்கில் எடுக்கவேண்டும். இந்நாடக நிகழ்வுக்கான நிதி உதவி கிடைக்கக்கூடிய வாய்ப்புக்களும், பல சமயங்களில் அவை திட்டங்களாக (Projects) அளிக்கப்படுவதால் கிடைக்கும் உதவிகளும் இருப்பதால் இவை கூடுதலாக உள்ளன. ஜெர்மானிய, பிரெஞ்சு நாட்டுப் பண்பாட்டு அமைப்புகள் செயல்படும் தன்மை காரணமாக இந்நிலைமை இருப்பதை விமரிசனத்தோடு ஏற்க வேண்டியுள்ளது. கூத்துப்பட்டறை தொடக்ககாலந்தொட்டு நடத்திய நிகழ்வுகளிலிருந்து இன்று வரை இந்தத் தூதரகங்கள் தமிழ் நாடகக்காரர்களோடு நெருங்கி உள்ள அளவு, தமிழர் ஆய்வு நிறுவனங்களோ, அரசு நிறுவனங்களோ இல்லை என்பதை எவ்வாறு பார்க்கிறோம்? என்பதையும் இங்கு விவாதிக்க வேண்டியுள்ளது. மேலாதிக்கம், காலனியம், அதிகாரத்துவம் மூலம்தான் தொழிற்படவேண்டும் என்ற அவசியம் இல்லை. தமிழில் நாடகங்கள் அதிகம் வராததற்கும், தமிழ் நாடகங்கள் மேடையேறாமல் போவதற்கும் கூட இவை காரணங்களாக இருக்கலாமோ என எண்ணத் தோன்றுகிறது.

இந்திய மொழிகளுக்குள் நாடக மொழிபெயர்ப்பு முயற்சிகள் மிகமிகக் குறைவாகவே உள்ளன. இந்திய மொழிகளிலிருந்து ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கும் முயற்சியில் **Seagull** நிறுவனம் மிகுந்த வீச்சோடு செயல்படுகிறது. எனவே, இப்போது பிற இந்திய மொழி நாடகங்களைப் படித்தறிய ஆங்கிலத்தில் வாய்ப்பு பெருகி உள்ளது. ஆனால், இவற்றைத் தமிழில் பெற ஆங்கில இடையீட்டை விடுத்து, நேரடியாக ஒரு இந்தியமொழியில் இருந்து, இன்னொன்றுக்கு மொழிபெயர்ப்பது சிறப்பாக அமையும். பாதல் சர்க்கார், பானுமதி, இராசாராம் முயற்சியில் நேரடியாக வங்காளத்திலிருந்து தமிழுக்கு வந்ததன் பலனை நாம் கண்கூடாகக் காண்கிறோம். அந்த வகையில் **கதா** நிறுவனம் வங்காளம், கன்னடம், தமிழ் மொழிகளுக்கிடையே நாடகம், சிறுகதைகள் மொழிபெயர்ப்பை *97*இல் முயற்சி செய்தது. வங்காளத்தில் இருந்து ஷாபோலி மித்ராவின் **நாதபதி அநாதபத்** நாடகமும், கன்னடத்தில் இருந்து கம்பாரின் **புலியின் நிழல்** நாடகமும் இதன்மூலம் தமிழுக்குக் கிடைத்துள்ளன. ந. முத்துசாமியின் **சுவரொட்டிகள்** வங்காளத்திற்கும், **நாற்காலிக்காரர்** கன்னடத்திற்கும் கிடைத்துள்ளன. தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட நாடகங்கள் நிகழ்த்துக் கூறுகளை முதன்மைப்படுத்தித் தமிழ்வயப்பட்ட தன்மையில் மொழி

பெயர்க்கப்பட்டன. கூட்டு முயற்சியை முதன்மைப்படுத்திய இம்முயற்சி பலபுதிய கோணங்களை மொழிபெயர்ப்புத் துறைக்கு வழங்கியது.

நாடக மொழிபெயர்ப்பைப் பொறுத்தவரை இலக்கியப் பரிச்சயம் மட்டுமல்லாது, நிகழ்த்துக்கலைப் புரிதலும் அவசியம் என்பதை இவை நமக்குக் காட்டுகின்றன. மேடையேற்றத்துக்கான சாத்தியப்பாடுகள் நாடக மொழிபெயர்ப்பைத் தீர்மானிப்பதையும் நாம் கவனத்தில் கொள்ளவேண்டும். பிறமொழி நாடகங்களில் காட்டும் அக்கறையில் ஒரு பகுதியையாவது இந்திய மொழிகளுக்குள் நாடகங்களை மொழிபெயர்ப்பதில் காட்ட வேண்டும்.

# சிறுகதை, புதினம்

**ச. செந்தில்நாதன்**

---

இந்தியா விடுதலை அடைந்த தொடக்க- காலத்திலும், இடைக் காலத்திலும், புதிய நூற்றாண்டை எதிர்நோக்கும் இந்தக்கால கட்டத்திலும் தமிழ்ச் சிறுகதைகளிலும், புதினங்களிலும், காணப்படும் போக்குகளைக் கண்டறியவும், மதிப்பிடவும், இந்திய விடுதலைக்கு முன்னால் இருந்த போக்கையும் சற்று உள்வாங்கிக் கொள்வது அவசியம். ஏனெனில் மாற்றங்கள் மந்திரத்தால் நிகழ்வதல்ல; சமூக இயக்கத்தாலேயே நிகழ்கின்றன. இந்திய விடுதலைக்கு முன்பு இருந்த போக்குகளிலிருந்து, இந்திய விடுதலைக்குப்பின் சிறுகதை இலக்கியம், புதினம் தனியாகத் தங்களைக் கத்தரித்துக்கொண்டு கூடுவிட்டுக் கூடு பாய முடியாது.

இந்திய விடுதலைக்கு முன்பிருந்த பிரதான போக்குகள் யாவை? இந்திய விடுதலைக்கு முன்பு தமிழ்ச் சிறுகதை, புதின உலகில் செல்வாக்குப் பெற்ற தனி நபராகவும், அந்தச் செல்வாக்கால், ஒரு படைப்பிலக்கியப் போக்கிற்கு முன்னோடியாகவும் கல்கி இருந்தார். தொடர்கதை எழுதுவது, குறிப்பாக வரலாற்றுப் புதினம் எழுதுவது, படைப்பில் தேசிய நீரோட்டத்தைக் கொண்டுவருவது, தேசிய இயக்கம் அல்லது காந்தியம், தன்கோணத்தில் பார்த்த சமூகச் சீர்த்திருத்தங்களைப் படைப்பில் பிரதிபலிப்பது ஆகிய யாவும் **கல்கியின் மரபுகளாகும்**. சராசரி வாசகனின் ரசனைக்கு இணையாக இருப்பதுதான் மொத்தத்தில் அவருடைய படைப்பு.

கல்கியை அங்கீகரிக்க மறுத்த **மணிக்கொடி** வட்ட எழுத்தாளர்கள் சராசரி தமிழ் வாசகனை விட மேலே உள்ளவர்களுக்காக இலக்கியம் படைத்தார்கள். சற்று ஆழமான இலக்கிய முயற்சிகளுக்குத் தங்களை உட்படுத்திக் கொண்டார்கள். படைப்பின் உருவம், தரம் பற்றி அவர்கள் அதிகம் கவலைப்பட்டார்கள். உள்ளடக்கம் பற்றியப் போராட்டம் அல்ல அது. உருவம், உத்தி பற்றிய போராட்டமே கல்கி குழுவிற்கும் மணிக்கொடி குழுவிற்கும் நடந்த இலக்கிய விவாதம், போராட்டம். இன்று அடையாளம் காணப்படும் முற்போக்கு இலக்கியம், அவை அல்லாத இலக்கியம், இவற்றின் இடையே நடக்கும் போராட்டம் அல்ல அது. முற்போக்கு, பிற்போக்கு என்ற கண்ணோட்டம் கூர்மையடையாத காலக்கட்டத்திற்கு இதைப் பொருத்திப் பார்க்கக் கூடாது.

விடுதலைக்கு முன்பு இருந்த இந்த நிலை விடுதலைக்குப் பின்னரும் சில காலம் தொடர்ந்தது. கல்கியின் வழித் தடத்தில்தான் அகிலன் சென்றார்; **தீபம்** பார்த்தசாரதியும் சென்றார். இன்னும் சில எழுத்தாளர்களும் அந்த வழியில் சென்று கல்கியின் மரபை நீர்த்துப்போக வைத்தார்கள். மெல்ல, மெல்ல அந்தப் போக்குத் தளர்ந்து தளர்ந்து நடக்க முடியாமல் முடங்கிப்போனது.

**மணிக்கொடி மரபு** என்று ஆழமான இலக்கிய முயற்சிகள் செய்வதாகச் சொன்னவர்கள் சமூக அக்கறை அற்றவர்களாகி, தங்களுக்குள் ஒரு வட்டம் போட்டுக்கொண்டு அதற்குள் அடங்கி, தங்கள் கற்பைக் காத்துக்கொண்டார்கள். தேசிய அலையின் வெளிப்பாடாக மணிக்கொடி தோன்றியபோதிலும், அந்தப் பாதையை முற்றிலும் தொடவில்லை.

கல்கியின் இலக்கியப் போக்கும், மணிக்கொடியின் இலக்கியப் போக்கும் பலவீனமடைய, பலவீனமடைய புதிய போக்குகள் தலை எடுத்தன.

சமூகப் பிரச்சினைகளுக்கு அன்னிய ஆட்சியை ஒரு காரணமாகக் காட்ட முடியாத நிலை ஏற்பட்டவுடன், சமூகப் பிரச்சினைகளைச் சமூக அமைப்பின் பின்புலத்தில் பார்க்கும் புதிய போக்கு தலை எடுத்தது. வாழ்க்கையின் பிரச்சினைகளை உள்ளவாறு சித்திரிக்கும் எதார்த்தப் போக்கு படைப்பிலக்கியத்தில் முன்னிலைப்படுத்தப்பட்டது. மனித நேயம் வலியுறுத்தப்பட்டது. எதார்த்தப்போக்கின் சக்திகளை அடையாளங்காட்டும், அந்தப் போக்கு எங்கே செல்லும் என்பதைக் கோடிட்டுக் காட்டும் படைப்பிலக்கியங்கள் தமிழில் தடம் பதிக்கத் தொடங்கின. இவை முற்போக்கு இலக்கியப் போக்காக அங்கீகரிக்கப்பட்டன.

மனிதனைச் சமூகத்திலிருந்து தனித்துப் பிரித்து அவன் மனத்தை அளக்கும் போக்கும் கூடவே வளர்ந்தது. இது சமூக மனிதனைச் சந்திக்க மறுக்கும் போக்காக அடையாளம் காணப்பட்டது. முற்போக்கு இலக்கியப் போக்கிற்கு மாறானது இந்தப்போக்கு.

கல்கி, மணிக்கொடி காலத்திற்குப்பிறகு தமிழ்ச் சிறுகதை புதின உலகில் மேலோங்கி நிற்கும் போக்கு தனிமனிதனா? சமூகமா? என்பதுதான்.

இந்திய விடுதலைக்குப்பின் தமிழ்ச்சிறுகதையும், புதினமும் எதார்த்த கூறுகளை உள்ளடக்கத்தில் அழுத்தமாகப் பெற்றன. அன்னிய ஆட்சியில் இந்திய நாடு முற்றாகச் சுரண்டப்பட்டது. ஆனால் சுதந்திர ஆட்சியில் உடனடியாக எதையும் செய்ய முடியவில்லை. நாடு முழுவதும் பற்றாக்குறை. அதனால் பதுக்கல், அத்தியாவசியமான பொருட்களுக்குப் பங்கீட்டு முறை, இந்த நிலைக்கு அன்னிய ஆட்சியைக் குறை சொல்ல முடியாத நிலை. ஆக, சொந்த சமூகத்தைச் சாட வேண்டிய அவசியம் படைப்பாளிக்கு ஏற்பட்டது. இது எதார்த்த இலக்கியத்திற்கு வலிமை சேர்த்தது. இந்தச் சமூக நிலைகளைச் சரியாக உள்வாங்கிக் கொண்டு சிறுகதையும் புதினமும் படைத்த எழுத்தாளர் விந்தன்.

விடுதலைக்கு முந்திய காலக்கட்டத்தில் புதுமைப்பித்தன் வாழ்க்கையின் வறுமை, ஏழ்மை, சோகம், அவலம், பாதுகாப்பின்மை போன்றவற்றைச் சித்திரித்த போதிலும் அந்தச் சித்திரிப்பில் தனிமனிதப் பின்னணி தூக்கலாக இருந்தது. விந்தன் தன் படைப்பில் சமூகப் பின்னணியை முன்னுக்குக் கொண்டுவந்தார். சமூகப் பின்னணி போகப்போக அழுத்தம் பெற்றது. படைப்பிலக்கியத்தில் எதார்த்த வாதம் இன்று வளர்ந்து ஓங்கிவிட்ட போக்காகும்.

எதார்த்த வாதம் என்பது சமூகம் போலவே பலபரிமாணங்களை உடையது. இன்று சமூகத்தில் மேலோங்கி இருக்கும் சமூக முரண்பாடுகள் எதார்த்த இலக்கியங்களில் பிரதிபலிக்கத் தொடங்கின. எதார்த்த இலக்கியத்தின் பல்வேறு கூறுகளில் **பெண்ணியம்** ஒன்று. பெண்ணின் மீது அனுதாபம் கொள்வது என்பது வேறு; பெண்ணின் உரிமையை அங்கீகரிப்பது என்பது வேறு. பெண்ணின் மீது அனுதாபம் கொண்ட படைப்பாளிகள் எல்லாக் காலக்கட்டத்திலும் இருந்திருக்கிறார்கள். பெண்ணைத் தாய் என்று பார்க்கும்போது மட்டும் வணக்கத்திற்கு உரியவளாகக் காட்டி மற்ற நிலையில் சடப்பொருளாய் முன்னிலைப்படுத்தி இருக்கிறார்கள். ஆனால் பெண்ணியம் அதை எல்லாம் தாண்டி வளர்ந்த போக்காகும். சொந்த வாழ்க்கையிலும் சமூக வாழ்க்கையிலும் பெண்ணுக்குரிய இடம் அவள் உரிமை என்று காட்டுவது பெண்ணியம். அவளுக்கு உரிய இடம் இரந்து வருவதல்ல; போராடிப் பெறுவது. இந்தப் பெண்ணியப் போக்கு கடந்த *10* அல்லது *15* ஆண்டுகளில் தமிழ்ச் சிறுகதை புதினத்தில் மேலோங்கி அழுத்தம் பெற்ற போக்காகும்.

பெண்ணியம், பெண் விடுதலை என்பதில் முற்போக்குக் கண்ணோட்டம் இருப்பதுபோல் பத்தாம்பசலிப்போக்கும் இருக்கிறது. இதைவிட ஆபத்தான அராஜகப் போக்கும் இருக்கிறது. பெண் விடுதலை என்பதைப் பாலியல் விடுதலையாய்ப் பார்த்து 'யாருடன் வேண்டுமானாலும்

போ' என்று சொல்வது பெண்ணியத்தை உண்மையில் கொச்சைப்படுத்துவதாகும். ஆண் ஆதிக்கத்தை எதிர்ப்பது என்பது ஆண்களையே எதிர்ப்பது என்று வாதம் செய்வது ஆபத்தான வாதம் ஆகும். குடும்பமே வேண்டாம், அதை உடைத்தெறி என்று குரல் கொடுப்பதும், மனித நாகரிகத்தையே மறுதலிப்பதாகும். பெண்ணியத்தில் அதன் நியாயத்தை அங்கீகரிக்கும் போக்கும், நியாயத்தை நிராகரிக்கும் போக்கும், அநியாயத்திற்கு வித்திடும் போக்கும் இன்றைய இலக்கியத்தில் இருக்கின்றன.

அண்மைக்காலமாக முக்கியத்துவம் பெற்று வரும் இன்னொரு போக்கு தலித்தியம் ஆகும். தலித் மக்களின் பிரச்சினைகளைத் தலித் எழுத்தாளன்தான் சரியாகப் பிரதிபலிக்க முடியும் என்பதில் 'தான்' என்பதற்கு அழுத்தம் கொடுக்கும் போக்கும், மற்ற படைப்பாளிகள் தலித் பற்றி எழுதினால் அதை தலித் இலக்கியமாக அங்கீகரிக்க மறுக்கும் போக்கும் அல்லது தயங்கும் போக்கும் இருக்கின்றன. இதைவிட இன்னொரு கொடுமை உண்டு. இவர்கள் கோணத்தில் தலித் பிரச்சினையை அணுகாத தலித் எழுத்தாளர்களையே புறம் தள்ளும் போக்காகும். எடுத்துக்காட்டாக டி. செல்வராஜ், பூமணி முதலியோர் படைப்புக்களையே இவர்கள் தங்கள் கோணத்தில் இல்லை என்பதால் தள்ளிவிட்டார்கள்.

தலித்துக்களின் கோபம் நியாயமானது; வெளிப்பாடும் அதற்கேற்ப இருக்கலாம். ஆனால் இலக்கியப் படைப்பையும் நாங்களே செய்வோம், பிரச்சினைகளையும் நாங்களே தீர்ப்போம் என்பது முற்றிலும் தவறான அணுகுமுறையாகும். பெண்ணியம், தலித்தியம் என்று வசதிக்காகப் பேசினாலும், இவை அனைத்தும் பொதுவாக முற்போக்கு இலக்கியப் போக்கு என்பதில் அடங்கும்.

சாதியும், மதமும் பன்னெடுங்காலமாக இருந்தபோதிலும், அண்மைக்கால மோதல்கள் சமூக முரண்பாட்டின் ஆழத்தையும் அகலத்தையும் காட்டுகின்றன. இந்தப் பிரச்சினைகள் இன்று சிறுகதைகளுக்கும், புதினங்களுக்கும் கருப்பொருளாய் அமைந்துவிட்டன. உலகமயமாக்கலின் விளைவாய் நேர்ந்துள்ள பண்பாட்டுச் சீரழிவும் ஒரு புறம் இலக்கியத்தில் ஊடுருவிக் கொண்டிருக்கின்றது.

இவ்வாறு விடுதலைக்குப்பின் கடந்த *50* ஆண்டுகளில் முற்போக்கு இலக்கியப் போக்கு, தன் சுவடுகளை அழுத்தமாகப் பதித்திருக்கிறது.

திராவிட இயக்கப் படைப்பாளிகள் ஆட்சிக்கு வரும்வரை இலக்கியப் படைப்புகளில் மிக்க ஆர்வம் காட்டினார்கள். சமூக சீர்திருத்தம், பகுத்தறிவு இவை இரண்டும் அவர்கள் படைப்புகளில் உள்ளடக்கமாயின. இன்று ஆழமாகப் பேசப்படும், புரிந்து கொள்ளப்படும் உருவம், உள்ளடக்கம், எதார்த்த வாதம் போன்றவற்றை அவர்கள் மேலோட்டமாகவே பார்த்தார்கள்.

அதனால் கதையின் சூழல், பாத்திரப்படைப்பு ஆகியவற்றில் எதார்த்தம் அழுத்தம் பெறவில்லை.

படைப்புத்திறன் இருந்தும் திராவிட இயக்கப் படைப்பாளிகள் பொதுவாக இலக்கியவாதிகளால் அதிகம் பேசப்படாமல் போனதற்கு இதுவே காரணம். திராவிட இயக்கப் படைப்பிற்கு இன்று தொடர்ச்சி இல்லை. பழைய படைப்புக்களைத் திரும்பிப் பார்க்க அவர்களும் தயாராக இல்லை.

வணிகப் பத்திரிகைகளே கூட தரமான இலக்கியப் படைப்பாளிகளின் படைப்புகளை வெளியிட வேண்டிய அவசியத்தில் இருக்கின்றன. இது தரமான இலக்கியத்தைச் சராசரி வாசகன் அடையாளம் காண உதவும். சு. சமுத்திரம், பிரபஞ்சன், மேலாண்மை பொன்னுசாமி, கந்தர்வன், தனுஷ்கோடி ராமசாமி இப்படி ஒரு பட்டியலும் இந்த வகையில் வருகின்றது. சமுத்திரம் ஆரம்பகாலம் தொட்டே வணிகப் பத்திரிகைகளில் தன்னை இழக்காமல் எழுதி வந்திருக்கிறார். பல முற்போக்கு எழுத்தாளர்கள் சிற்றேடுகளில் எழுதித் தங்கள் சாதனையால் வணிகப் பத்திரிகைகளின் அங்கீகாரத்தைப் பெற்றவர்கள். தரமான எழுத்தாளர்களை வைத்தும் வியாபாரம் செய்ய முடியும் என்றால், அவர்கள் அப்படியும் வியாபாரம் செய்வார்கள்.

முற்போக்கு இலக்கியச் செல்நெறிக்கு மாறான ஒரு போக்கும் இணைகோடாக வந்து கொண்டிருக்கிறது என்பதை யாரும் மறுக்க முடியாது. இந்தப்போக்கு முற்போக்கு நெறிகளை எதிர்த்துக்கொண்டே அதேசமயம் தன்போக்கைப் பிற்போக்கு என்று சொல்லிக் கொள்ள நாணப்படும் போக்காகும். நாணத்தின் காரணமாக இது முக்காடு போடும். இப்படி முக்காடுபோடும் படைப்பாளிகள் உண்டு. சமூகப் பிரச்சினையை எழுத வேண்டியதில்லை என்பவர்கள் அதை நேரடியாகச் சொல்லாமல் எதார்த்த வாதம் செத்துவிட்டது என்று முக்காடு போடுகிறார்கள். மேலை நாட்டில் நசிந்துபோன இசங்களை இவர்கள் தமிழ்நாட்டில் இறக்குமதி செய்கிறார்கள். ரியலிசம் என்றால் சர்ரியலிசம் என்பார்கள். சமூக அமைப்பு என்றால் அமைப்பியல் வாதம் என்பார்கள். பின்னால் போகாதே என்றால் பின்நவீனத்துவம் என்பார்கள். இந்த இசங்களை வைத்து மிரட்டுவார்கள். இவர்கள் இலக்கியப் பூச்சாண்டிகள்.

இந்த இசங்களை நீங்கள் புரிந்துகொண்டு பேசினாலும் உங்களுக்குப் புரியவில்லை என்பார்கள். பூஜ்ஜியத்துக்குள்ளே ஒரு ராஜ்யத்தை ஆண்டுகொண்டு புரியாமலே இருப்பதுதான் இலக்கியம் என்பார்கள். இந்த இசங்கள் பற்றிய ஆய்வு ஒரு புறம் நடக்கட்டும். இந்த இசங்களில் சங்கமிக்கும் இந்தப் போக்கின் குறி எது? இதுதான் முக்கியக் கேள்வி.

இந்தப் போக்கு எதார்த்தம் என்பதே இறந்துபோய்விட்டது இலக்கியத்தில் என்கிறது. எதார்த்தவாதத்தை ஒப்புக் கொண்டால்தானே சமூகப் பிரச்சினைகளை எழுதவேண்டும். சமூகப் பிரச்சினைகளை எழுதாமல் இருக்க எதார்த்தவாதமே காலாவதி ஆகிவிட்டது என்கிறார்கள். இந்த இசங்களின் போக்கும் விடுதலைக்குப் பின் தோன்றிய விபரீத போக்குதான்.

சர்வதேச அளவில் உலகமயமாக்கலும் அதன் விளைவாய்த் தோன்றும் பண்பாட்டுத் தாக்குதலும், அகில இந்திய அளவில் மதவாதமும் சாதியமும் தன் கோரக்கரங்களை நீட்டி இலக்கியத்தைப் புண்ணாக்கிக் கொண்டிருந்தாலும், தமிழகம் திக்குத் தெரியாத காட்டில் தவித்தல் ஒரு புறம் இருந்தாலும் இவைகளை உள்ளபடியே அடையாளங்காணுதல், உண்மை இலக்கியம் தொடரும் அடுத்த நூற்றாண்டிலும் என்பதைக் காட்டுகிறது. உண்மையை அடையாளம் காட்டுதல் என்பது எதார்த்த இலக்கியத்தை அடையாளம் காட்டுதல் தான்.

# நோக்கு நூல்கள்

பெ. மாதையன்

இந்திய விடுதலைக்குப் பின்னர் தமிழ் வளர்ச்சி பன்முகப்பட்டதைப் போலவே நோக்கு நூல்களின் வளர்ச்சியும் பன்முகப்பட்டுள்ளது. பொது, சிறப்பு எனும் இருவேறு நிலைகளிலும் இவை வளர்ந்துள்ளன. பழைய மரபுகளின் அடிப்படையில் பல நோக்கு நூல்கள் உருவானதைப் போல் மொழி வளர்ச்சி அடிப்படையில் எழுந்த புதிய தேவைகளின் நோக்கில் புதுப்புது நோக்கு நூல்களும் படைக்கப்பட்டுள்ளன. பழைய நூல்கள் பதிப்பிக்கப்பட்டும் உள்ளன. மொழியியலின், மொழியாய்வின் வளர்ச்சி, பல புதிய செல் நெறிகளுக்கும் அகராதியியல் வளர்ச்சிக்கும் வித்திட்டுள்ளது. இந்தப் போக்குகளை *1.* நோக்கு நூல் உருவாக்கம், *2.* பதிவமைப்பு நெறிகள், *3.* பதிப்புகள், *4.* பின்னடைவுகள் எனும் அடிப்படைகளில் சுருக்கமாய் ஆராய்வதே இந்த ஆய்வின் நோக்கம்.

## 1. நோக்குநூல் உருவாக்கம்

இந்திய விடுதலைக்கு முன்னர் அகராதி உருவாக்கம் பன்முகப்பட்டதாய் இருந்த நிலை விடுதலைக்குப் பின்னரும் தொடர்ந்தது. அந்தப் பழைய மரபுகளின் அடித்தளத்தில் மொழி அகராதிகளும், சிறப்பு அகராதிகளும் படைக்கப்பட்டுள்ளன. சில நோக்குநூல் வகைகளில் பின்னடைவும், சில நோக்குநூல் வகைகளில் முன்னேற்றமும் ஏற்பட்டதைப் போல் பல புதிய நோக்குநூல்களும் படைக்கப்பட்டுள்ளன.

### 1.1. ஒரு மொழி அகராதி

தமிழின் ஒரு மொழி அகராதி வரலாற்றைப் பொறுத்தமட்டில் இந்திய விடுதலைக்கு முன்னர் வந்த அகராதிகளைக் காட்டிலும் விடுதலைக்குப் பின்னர் மிகக்குறைவாகவே வந்துள்ளன. தனிமனித முயற்சிகள் பேரளவில் இருந்த நிலைமாறிப் பதிப்பகங்களின் முயற்சிகள் ஓரளவு நடந்துள்ளன. கழகம் *(1951, 64)*, கோனார் *(1955)*, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் *(1985)*, மணிமேகலை *(1979, 1985)*, லிப்கோ *(1953)*, வாசன் *(1990)*, வெற்றி *(1993)*, ஸ்ரீமகள் *(1957, 1954)* போன்ற பதிப்பங்களும், நிறுவனங்களும் ஒரு மொழி அகராதிகளை வெளியிட்டுள்ளன. இவற்றின் பதிவமைப்பு நெறிகள் குறிப்பிட்டுச் சொல்லும்படியாக அமையவில்லை. இவற்றின் நம்பகத் தன்மையும் மிகக்குறைவே. காரணம் இவற்றின் உருவாக்கத்திற்கு முதன்மைத் தரவுகள் ஆதாரமாய்க் கொள்ளப்படவில்லை. முன்வந்த அகராதிகளே ஆதாரமாய்க் கொள்ளப்பட்டுள்ளன.

ஒருமொழி அகராதி மரபில் குறிப்பிட்டுச் சொல்லத்தக்க அகராதியாய் ஓரளவு நம்பகத் தன்மையுடன் வெளிவந்த அகராதி தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் பெருஞ்சொல்லகராதியே ஆகும். *1.* சங்ககாலம், *2.* சங்கம் மருவிய காலம், *3.* காப்பிய காலம், *4.* பக்திக்காலம், *5.* சிற்றிலக்கியக்காலம், *6.* இக்காலம் எனும் ஆறுகாலகட்ட இலக்கிய இலக்கணத் தரவுகள் அடிப்படையாய்க் கொள்ளப்பட்டு மிக விரிவான நிலையில் ஒவ்வொரு பொருளுக்குமான மேற்கோள்கள் பதிவுகளில் கால நிரலில் தரப்பட்டுள்ளன. இதுவே இந்த அகராதியின் முதன்மைச் சிறப்பு.

### 1.2. இருமொழி அகராதி

#### 1.2.1. தமிழ்-ஆங்கில அகராதி

விடுதலைக்குப்பின் வந்த தமிழ் ஆங்கில அகராதிகள் மிக சிலவே. எம்.எஸ். செல்லம் ஐயா *(சுருக்கத் தமிழ் அகராதி, 1955)*, முத்துத் தம்பிப் பிள்ளை, *(ஜப்னா) (தமிழ்-ஆங்கிலம், ஆங்கிலம்-தமிழ் அகராதி, 1953)* போன்றோர் முயற்சிகளுடன் மணிமேகலை *(1987)*, லிப்கோ *(1960, 1966)*, பாலாஜி *(1990)* போன்ற பதிப்பக முயற்சிகளாலும் சில அகராதிகள் வெளிவந்துள்ளன.

க்ரியாவின் தற்காலத்தமிழ் அகராதி *(1992)* தமிழ் ஆங்கில அகராதிகளில் குறிப்பிட்டுச் சொல்லத்தக்க அகராதி. தற்காலத் தமிழுக்கென வெளிவந்த ஒரே அகராதியான இது முழுமையான தரவு அடிப்படையில் உருவானதாகவும், செம்மையான பதிவமைப்போடு வெளிவந்ததாகவும் உள்ளது. திட்டமிட்டு உருவாக்கப்பட்ட இந்த அகராதி பல்வேறு தமிழறிஞர்களின் ஆலோசனைகளோடு உருவாக்கப்பட்டுள்ள நிலையில் நல்ல அகராதி உருவாக்கத்திற்கான சிறந்த முன்னோடியாகவும் உள்ளது.

## 1.2.2. ஆங்கிலம்-தமிழ்

இந்திய விடுதலைக்குப் பின் இவ்வகை அகராதிகள் பெருகியுள்ளன. ஏறத்தாழ நாற்பதுக்கும் மேற்பட்ட ஆங்கிலம்-தமிழ் அகராதிகள் இன்று வரை வெளிவந்துள்ளன.

English English and Tamil Dictionary (1947), T.N. Subramanian, Sakthi Kariyalayam, Madras.

Srivilli's English Tamil Dictionary (1947), S. Muthu Iyengar, Srivilli, Madras.

Ramulu's New Method Dictionary, English-Tamil, (1949), M.S. Ramulu and company, Madras.

Money's New Model Students Standard Dictionary, (1949), C.D. Thangavel, A.S. Money, Madras.

English English and Tamil Dictionary, (1980), V. Nagalakshmi, Maknal, Colombo.

Lifco English - Tamil Dictionary, (1950), The little flower Company, Madras.

கழக ஆங்கிலத் தமிழ்க் கையகராதி, *(1952)*, கா. அப்பாதுரைப் பிள்ளை, கழகம், சென்னை.

The Great Lifco Dictionary (E.E.T.), (1952), The Little Flower Company, Madras.

The Shankar Dictionary (E.E.T.), (1952), A.M.S. Raghavan, Sundaram Publishers, Madras.

The Elite Dictionary (E.E.T), (1955), T.S. Umapathy and P. Selvarajan, Duraisamy Mudaliar and Co, Madras.

Srimagal Junior Dictionary (E.E.T.), (1955), R. Gopala Krishna and A. Ramanujan, Srimagal and Co, Madras.

Srimagal Modern Pocket Dictionary (E.E.T), (1955), The Srimagal Company, Madras.

Srimagal New Method Pocket Dictionary (E.E.T.), (1955), The Srimagal Company, Madras.

Cokkalingam Dictionary (E.E.T.), (1961), Vacantham Pathippakam, Madras.

Money's Standard Dictionary (E.E.T.), (1961), Ramachandra Rao and Ekambaranathan, A.S. Money, Madras.

கழகச் சிற்றகராதி *(ஆங்கிலம்-தமிழ்)*, *(1962)*, கழகம், சென்னை.

பல்பொருள் ஆங்கிலத் தமிழ் அகர வரிசை *(1962),* மு. சதாசிவம், சி. சிவராமலிங்கம், கழகம், சென்னை.

English-Tamil Dictionary, 3 Volumes (1963-65), A Chidambaranathan Chettiyar, University of Madras, Madras.

Palmaer's Common Tamil words, a Pocket Dictionary English to Tamil, (1964), E.P. Palmer and N.H. Palmer, Ravi and Brothers, Madras.

Ravi Pupils Dictionary (E.E.T), (1964), Rev. Arul Thangiah and K.S. Swaminathan, Ravi and brothers, Madras.

Srimagal Senior Dictionary (E.E.T), (1964), R. Arulrajan, The Srimagal Company, Madras.

மாணவர் அகராதி *(ஆ.ஆ.த.), (1965),* எஸ்.எம். இராமசாமி, செல்லப்பன் பதிப்பகம், சேலம்.

The Lifco Tiny Dictionary (E.E.T.), (1967), The Little Flower Company, Madras.

Varathar Students Dictionary (E.E.T), (1970), Varathar Veliyeedu, Jaffna.

Ambika English-Tamil Dictionary (1971), Ambika Brother, Madras.

Vocabulary and Dialogue (E.T.), (1974), N. Sanjeevi and V. Jayadevan, Annals of Tamil Research-3, University of Madras, Madras.

Oxford Picture Dictionary (E.T.), (1975), E.C. Parnwell, D.H. Home and K. Venkata Subramaniam, Oxford University press, Madras.

மணிமேகலை ஆங்கிலம்-ஆங்கிலம்-தமிழ் அகராதி, *(1982),* மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு, மணிமேகலைப் பிரசுரம், சென்னை.

மாணவ மாணவியர் ஆங்கிலம் தமிழ் அகராதி பொது அறிவுக் களஞ்சியம், *(1982),* முல்லை, பி.எல். முத்தையா, நியூ செஞ்சுரி, சென்னை.

Sura's English-English-Tamil Dictionary, (1985), Radha Chellappan, Sura College of Competition, Madras.

Junior Deluxe Dictionary (E.E.T), (1987), Deluxe Publication, Madras.

English-English-Tamil Dictionary, (1988), Anuragam, Madras.

Simple Dictionary for boys and girls, (1988), Mullai P.L. Muthiya, NCBH, Madras.

TTK Ananda Picture Dictionary, (1989), A.J. Patel and Kannan, T.T. Maps and Publications, Madras.

Sura's Concise English-English-Tamil Dictionary, (1989), A.K. Jose, Sura College of Competition, Madras.

Varthamanan English-English-Tamil Dictionary, (1992), V.N. Sadasiva Rao, Varthamanan Pathippakam, Madras.

Advanced Deluxe Dictionary, (1994), Deluxe Publishers, Coimbatore.

எனும் பல அகராதிகள் சிறிய பெரிய அளவில் இக்காலத்தில் வந்திருக்கின்றன. பதிவமைப்பு அடிப்படையில் மிகச்சில அகராதிகளே சிறந்தனவாய் உள்ளன. சிதம்பரநாதச் செட்டியாரின் அகராதியும் Advanced Deluxe Dictionary-யும் குறிப்பிட்டுச் சொல்லத்தக்கனவாய் உள்ளன.

### 1.2.3. தமிழ் பிற மொழி அகராதிகள்

கைலாசம் தமிழ்-பிரெஞ்சு *(1983)*, தமிழ்-மராத்தி அகராதி *(1961)*, தமிழ்-மலாய் அகராதி *(1962)*, தமிழ்-ருஸ்ய அகராதி *(1960)*, நான்கு பாஸை ஒக்காபிலரி *(தமிழ்-சிங்களம்-ஆங்கிலம்-இந்துஸ்தானி) (1954)*, Nakab's nalu pasai okkapileri (Tamil-Telugu-English-Hindustani) (1947) எனச் சில அகராதிகளும் இக்காலத்தில் படைக்கப்பட்டுள்ளன.

### 1.2.4. பிறமொழி-தமிழ் அகராதிகள்

பிரெஞ்சு-தமிழ் *(1983,1986)*, இந்தி-தமிழ் *(1957, 1962, 1969, 1973, 1987)*, மராத்தி-தமிழ் *(1961)*, மலாய்-தமிழ் *(1962, 1965)*, ருஷ்யன்-தமிழ் *(1965)*, வடமொழி-தமிழ் *(1957, 1954-55)*, இந்தி-தமிழ்-ஆங்கிலம் *(1986)*, மலாய் தமிழ்-ஆங்கிலம் *(1962, 1964)*, ஆங்கிலம்-மலையாளம்-இந்தி-தமிழ் *(1975)*, இந்தி-மராத்தி-தெலுங்கு-தமிழ் *(1964)*, ஆங்கிலம்-மலையாளம்-தமிழ்-இந்தி-அரபு *(1988)*, கன்னடம்-தெலுங்கு-தமிழ்-ஆங்கிலம்-இந்துஸ்தானி *(1961)*, தமிழ்-தெலுங்கு-கன்னடம்-ஆங்கிலம்-மலையாளம்-இந்துஸ்தானி *(1961)*, Guide to fourteen Asiatic Languages (1947), Bharatiya Vyahara Kosa (A Practical Dictionary of Indian Language in Devanagari script) (1961), Indian Language highway for all; A broad 17 languages highway through the mother tongue and her neighbours Sindh, Burma and Ceylon (1967) எனப் பல்வேறு நிலைகளில் தமிழையும் உள்ளடக்கிய நிலையில் பல சொற்றொகுதிகள் வெளி வந்துள்ளன.

### 1.3. புதுவகை அகராதிகள்

பழைய மரபுகளின் வழித்தடத்தில் அவற்றை முன்மாதிரியாய்க் கொண்டு உருவான பல அகராதிகளுடன் புதுவகை அகராதிகளும் விடுதலைக்குப் பின் படைக்கப்பட்டுள்ளன. இவற்றை இருவகையாய்ப் பாகுபடுத்தலாம். *1.* முன் மரபு அடிப்படையில் எழுந்தவை, *2.* புதிய வகையாய்த் தோற்றம் பெற்றவை.

### 1.3.1. முன் மரபு அடிப்படையில் எழுந்தவை

விடுதலைக்கு முன் வந்த சில அகராதிகளை அடிப்படையாய்க் கொண்டு அவ்வகைகளுக்குள் அடங்குவனவாய்ப் புதிய, திட்டமிட்ட, வரையறுத்த பதிவமைப்போடு வெளிவந்தவை இப்பிரிவில் அடங்குகின்றன.

### 1.3.11. கலைக் களஞ்சியம்

பகுதி நிலையில் அகராதியாகவும், பகுதி நிலையில் களஞ்சியமாகவும் உருவான **அபிதானகோசம்** *(1902)*, **அபிதான சிந்தாமணி** *(1910)* தனி மனித முயற்சியால் உருவானவை. இவை கலைக்களஞ்சிய உருவாக்க அடிப்படையில் உருவானவை அல்ல. இந்திய விடுதலைக்குப் பின் இந்திய-வரலாற்றில் முதன் முதலாக வெளி வந்த தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் **கலைக்களஞ்சியம்** *(1954-68)*, **குழந்தைகள் கலைக்களஞ்சியம்** *(1968-76)* இரண்டும் அறிஞர்களிடம் இருந்து பெறப்பட்ட கட்டுரைகளின் தொகுப்பாக முழுமையான கலைக்களஞ்சியப் பண்போடு வெளிவந்துள்ளன. இவை நல்ல களஞ்சிய உருவாக்கத்திற்கான முன் மாதிரிகளாக அமைந்துள்ளன.

இவற்றைத் தொடர்ந்து **நீதிக்களஞ்சியம்** *(1962)*, **நாடகக் களஞ்சியம்** *(1964)*, **சோவியத் யூனியன் தகவல் களஞ்சியம்** *(1969)*, **தமிழ்ப் புலவர் வரலாற்றுக் களஞ்சியம்** *(1974, 1984, 1989)*, **மாக்மில்லன் சிறுவர் சிறுமியர் கலைக்களஞ்சியம்** *(1976)*, **இஸ்லாமியக் கலைக்களஞ்சியம்** *(1976-77)*, **வேளாண்மைக் களஞ்சியம்** *(1982)*, **பெரியார் களஞ்சியம்** *(1977-1991)*, **பொது அறிவுக் களஞ்சியம்** *(1981)*, **நகரத்தார் கலைக்களஞ்சியம்** *(1988)*, **இந்திய சரித்திரக் களஞ்சியம்** *(1989)*, **தமிழக முஸ்லிம் திறமையாளர்கள்** *(1988)*, **இந்துக் கலைக்களஞ்சியம்** *(1990)*, **இளைஞர் இஸ்லாமியக் கலைக் களஞ்சியம்** *(1991)*, **தமிழிசைக் களஞ்சியம்** *(1992)*, **சங்க இலக்கிய விளையாட்டுக் களஞ்சியம்** *(1995)*, **இயல்பியல் களஞ்சியம்** *(1997)* எனப் பல களஞ்சியங்கள் வெளிவந்துள்ளன. தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் களஞ்சிய மையம் **அறிவியல் களஞ்சியம்** *(1986-1993, 8 தொகுதிகள்)*, **வாழ்வியல் களஞ்சியம்** *(1986-1992, 1-12 தொகுதிகள்)* எனும் இரண்டை மிக விரிவான நிலையில் உருவாக்கி வெளியிட்டுள்ளது.

### 1.3.12. சொல்லடைவுகள்

*1814*இல் பவர் ஹென்றி தொகுத்த வேத அகராதியைத் தொடர்ந்து வேதச் சொல்லடைவுகள் பல வெளிவந்துள்ளன. தமிழ் இலக்கியங்களைப் பொறுத்தமட்டில் *1924*இல் மார்க்கசகாயஞ் செட்டியார் **திருக்குறள் சொற்குறிப்பு அகராதி** ஒன்றை உருவாக்கியுள்ளார். விடுதலைக்குப் பின் *1988* இல் மர்ரே எஸ். இராஜம் வெளியிட்ட **பாட்டும் தொகையும்** சங்க இலக்கியச் சொற்களுக்கான சொற்பொருள் அடைவாய் உருவானது. பின்னர் *1963* இல் **திவ்ய பிரபந்த அகராதி** வெளிவந்தது.

இந்தச் சொற்பொருள் அடைவுகளிலிருந்து முற்றிலும் வேறுபட்ட நிலையில் ஓர் இலக்கியத்தின் எல்லாச் சொற்களையும் உரிய இலக்கணக் குறிப்பு, பொருள், வருகை இடம் ஆகியவற்றுடன் தரும் சொற்பொருள் அடைவுகள், இலக்கிய மொழியாய்வின் ஒரு பகுதியாகவும் தனித்தும் உருவாக்கப்பட்டுள்ளன. *1962* இல் வ.அய். சுப்பிரமணியன் வெளியிட்ட **புறநானூற்றுச் சொல்லடைவைத்** தொடர்ந்து கேரளப் பல்கலைக்கழகத்தில்

**நற்றிணை** (ஏ. காமாட்சிநாதன், *1964*), **பத்துப்பாட்டு** (இராம. சுந்தரம், *1964*), **பதிற்றுப் பத்து** (ச. அகத்தியலிங்கம் பிள்ளை, வெளியிட்ட ஆண்டு *1979*), **பெரியபுராணம்** (தா.வே. வீராசாமி, *1966*), **அகநானூறு** (ச.வே. சுப்பிரமணியன், *1972* வெளியிட்ட ஆண்டு), **கலித்தொகை** (பி. ஆண்டியப்ப பிள்ளை, *1970*), **பெருங்கதை** (இரா. இளவரசு, *1974*), **குறுந்தொகை** (எஸ்.ஆர். கிருஷ்ணம்மாள், வெளியிட்ட ஆண்டு *1974*), **ஐங்குறுநூறு** (எம். இளையபெருமாள், வெளியிட்ட ஆண்டு *1975*), *1966*இல் சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்ட **Pre Pallavan Tamil Index**-ம், *1967-70* களில் பிரெஞ்சு இந்தியக்கலைக்கழகம் வெளியிட்ட **பழந்தமிழ் நூல் சொல்லடைவும்** குறிப்பிட்டுச் சொல்லத்தகுந்தவை. இவற்றைப் போலவே **சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணை**, (ந. சஞ்சீவி, *1973*), **சங்க இலக்கியச் சொற்களஞ்சியம்** (உயிரெழுத்துக்கள்) (ச. தண்டபாணி தேசிகர், *1965*), **சங்க இலக்கியப் பொருட் களஞ்சியம்** *3* தொகுதிகள் (தமிழ் பல்கலைக்கழகம், *1986-88*) என்பனவும் குறிப்பிட்டுச் சொல்லத்தகுந்தவை. **கம்ப இராமாயணம், தேவாரம், திருவாசகம், திருக்குறள், சிலப்பதிகாரம்** போன்றவற்றிற்கும் சொல்லடைவுகள் வெளி வந்துள்ளன (காண்க. தமிழாய்வு, பெ. மாதையன், *1994*).

சொல்லடைவு உருவாக்கத்தில் குறிப்பிட்டுச் சொல்லத் தகுந்த பணி தமிழ்ப் பல்கலைக்கழகப் பணி ஆகும். *1987* இல் தொடங்கப்பட்ட சங்க இலக்கிய அகராதித் திட்டத்தின் ஒரு பகுதியாகக் கணிப்பொறி வழி சொல், சொல் வந்த மொத்த வருகை இட எண்ணிக்கை, வருகை இடங்கள், சொல் வந்த தொடர்கள் எனும் அடிப்படையில் **சங்க இலக்கியச் சொல்லடைவு** ஒன்று உருவாக்கப்பட்டது. தற்போது இது திருத்தப்பட்ட செம்மையான வடிவில் கணிப்பொறியில் உள்ளது. தாமஸ் மால்டன் உருவாக்கிய A World Index of Old Tamil Cankam Literature ஆசியவியல் நிறுவனத்தால் இந்தியப் பதிப்பாக *1993*இல் வெளியிடப்பட்டுள்ளது. இவ்வாறு இந்திய விடுதலைக்குப் பின் சொல்லடைவு உருவாக்கம் பல்வேறு நிலைகளில் வளர்ந்துள்ளது.

### 1.3.1.3. கலைச்சொல்லகராதிகள்

இந்திய விடுதலைக்குப் பின் கலைச்சொல்லகராதிகளும் பெருகியுள்ளன. *1960-65* ஆம் ஆண்டுகளில் தமிழ் நாடு அரசு பல்வேறு அரசுத் துறைகளுக்கெனத் தனித்தனியே சிறப்புச் சொற்கள் துணை யகராதிகளை வெளியிட்டு உள்ளது. *1960-65* இல் கலைக்கதிர் நிறுவன முயற்சியால் **அறிவியல் தொழில் நுட்பக் கலைச்சொல்லகராதிகள்** வெளி வந்துள்ளன. ஆட்சித்துறை, சட்டம், சமயம், இலக்கிய இலக்கணம், பொறியியல் மருத்துவம், மானிடவியல், மொழியியல், வங்கி, சோதிடம், விவசாயம், வியாபாரம் எனும் பல்வேறு துறைகள் தொடர்பான பல கலைச் சொல்லகராதிகள் வெளிவந்துள்ளன. இன்றைய சூழலில் வெளிவந்துள்ள **அறிவியல் அகராதி** (அ.கி. மூர்த்தி, *1994*), **அறிவியல் கலைச்சொல்**

**களஞ்சியம்** (மணவை முஸ்தபா, *1991*), **மருத்துவ அறிவியல் தொழில் நுட்பக் கலைச் சொல் களஞ்சிய அகராதி** (மணவை முஸ்தபா, *1994*), **மக்கள் தகவல் தொடர்பியல் கலைச்சொல் அகராதி** (அ. ஆலிஸ், *1995*) **மருத்துவக் கலைச் சொல் களஞ்சியம்** (மணவை முஸ்தபா, *1996*) எனும் கலைச்சொல் அகராதிகள் விளக்கச் சொற்பொருள் தருவனவாய் உள்ளன.

### 1.3.2. புதுவகை நோக்கு நூல்கள்

மேற்குறிப்பிட்ட வகைகளே அன்றிச் சில புதுவகை நோக்குநூல்களும் விடுதலைக்குப் பின் உருவாகியுள்ளன.

#### 1.3.2.1. ஆய்வடங்கல்

குறிப்பிட்ட ஆசிரியர், இலக்கியம் தொடர்பான ஆய்வுகள், குறிப்பிட்ட ஆசிரியரின் இலக்கியப் படைப்புகள், அவை பற்றிய ஆய்வுகள் குறித்த தகவல்களை எல்லாம் திரட்டி விளக்கமாய்த் தருவனவாய் இவை அமைகின்றன. *1973* இல் வெளிவந்த இரா.காசிராசனின் **சிலப்பதிகார ஆய்வடங்கலைத்** தொடர்ந்து **அகிலன் ஆய்வடங்கல்** (சு. வேங்கடராமன், *1974*), **மு.வ. ஆய்வடங்கல்** (சு. வேங்கடராமன், *1976*), **ஜெயகாந்தன் ஆய்வடங்கல்** (ந. அறிவழகன், *1978*), **கம்பன் ஆய்வடங்கல்** (ச. சிவகாமி, *1978*), **பாரதிதாசன் ஆய்வடங்கல்** (தே.வே. சந்தானம், *1983*) என்பன வெளிவந்துள்ளன.

#### 1.3.2.2. ஆய்வடைவுகள்

பல்வேறு நிலைகளிலும் ஆய்வுகள் பெருகி வருகின்ற இன்றைய சூழலில் வெளி வந்த ஆய்வுகளைத் தொகுத்துத் தரும் அடைவுகளும் இக்காலத்தில் வெளிவந்துள்ளன. **Materials for a bibliography of Dravidian Linguistics**, Tamil culture-11 pp.1-50 (M. Andronov, 1964), **A reference guide to Tamil Studies : Books** (Xavier S. Thaninayagam, 1966), **Bibliography of dissertations : Tamilology**, Journal of Tamil studies 1:2 (T. Murugaratnam, 1969), **Dravidian Languages and literature** (Busnagi Rajannan, 1973). **A bibliography of Dravidian Linguistics** (S. Agesthialingom, S. Sakthievel, 1973), **Tamil research through Journals** (A.A. Manavalan, 1975), **Dissertation on Tamilology** (Annie Thomas, 1977), **ஆய்வுக்கோவை நூல் தொகுதி** (சு. சக்திவேல், *1978*), **தமிழ்க்கலை நூற்றொகை** (பெ. அர்த்தநாரீசுவரன், *1980*), **செந்தமிழ்த் தொகுதிகள் அட்டவணைக் குறிப்பு** (மதுரைத் தமிழ்ச் சங்கம், *1981*), **தமிழியல் ஆய்வு** (இராம. பெரிய கருப்பன் முதலியோர், *1983*), **நாட்டுப்புறவியல் நூலடைவு** (சு. சக்திவேல், *1988*), **Doctorate degrees awarded by the Bharathidasan University during its first Ten Years** (1982-1992) (Bharathidasan University, 1992) எனப் பல அடைவுகளும் வெளிவந்துள்ளன.

### 1.3.2.3. பொது நூலடைவு

நூலக நூற்பட்டியல் போல் குறிப்பிட்ட ஆசிரியர் பற்றியோ, குறிப்பிட்ட இலக்கிய வகைபற்றியோ, குறிப்பிட்ட காலத்தில் வெளி வந்த நூல்கள் பற்றியோ பல அடைவுகள் வெளிவந்துள்ளன. **நூல் விவர அட்டவணைகள்** *1867-1900, (1961-62,* தொகுதி-*2,* பகுதி-*2 1966, 1964-65, 1972-77)* பல தொகுதிகளாக வெளிவந்துள்ளன. இவ்வாறே **இந்திய தேசிய நூல் விவரப் பட்டியல்** (ஸி. எஸ். புஷ்ப வேணி, *1960),* **தமிழ் நாட்டுக் குழந்தை நூற்றொகை** *(1965-74),* **தமிழ்நாட்டு நூற்றொகை** *(1969, 73),* **தமிழ் நாவல்கள்** (வே. சீதாலட்சுமி, *1985),* **திருக்குறள் நூலடைவு** (க.த. திருநாவுக்கரசு, *1974),* **பாரதி நூல் விவரக் கோவை** (சீனி, விசுவநாதன், *1987),* **சிற்றிலக்கிய அகராதி** (ந.வீ. செயராமன், *1983),* **சித்த மருத்துவ நூலோதி** (சே.பிரேமா, *1988),* **இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்கள்** (அப்துல்ரகுமான், முஹமதலி ஜின்னா, *1990),* **இருபதில் சிறுகதைகள்** *(1900-1973)* (தா.எ. பியூலாமெர்சி, *1974),* **அறிவியல் தமிழ் வெளியீடுகள்** (இராம. சுந்தரம், *1989)* என்பன வெளிவந்துள்ளன. (மேலும் காண்க. பெ. மாதையன், *1994,* பக் *140-148).*

### 1.3.2.4. பொருட்களஞ்சியம்

இதுவரை, தமிழில் இவ்வ்கையில் ஒரே ஒரு நோக்குநூல் மட்டுமே வந்துள்ளது. தமிழ்ப் பல்கலைக்கழக இலக்கியத் துறையில் உருவாக்கப்பட்ட **சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம்** *-3* தொகுதிகள் *(1986, 1988)* இவ்வகையில் அடங்குகின்றன. சங்க இலக்கியத்தில் இடம் பெற்ற பெயர்ச் சொற்கள், பொருள் வாரியாகச் சொல் வந்த வருகை இடங்களுக்குரிய உரை விளக்கங்களோடு உரிய பாடலின் வரி எண்களுடன் திரட்டித் தரப்பட்டுள்ளன.

### 1.3.2.5. பயிற்றகராதி

ஒரு மொழியின் சிக்கல் வாய்ந்த இலக்கணக் கூறுகளைத் தரவாய்க் கொண்டமையும் இந்த அகராதி ஒரு மொழியை அயல் மொழியாய்க் கற்போருக்காக உருவாக்கப்படும். குறிப்பிட்ட இலக்கணக்கூறு பற்றிய வகைப்பாடு, இலக்கண வரையறை பற்றிய விரிவான முன்னுரையுடைதாய் இவ்வகராதி அமையும். தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் சு. இராசாராம் *1986* இல் உருவாக்கிய **English - Tamil Pedagogical Dictionary** இந்த வகையைச் சார்ந்தது. இந்த அகராதி சொல்விரிவு நிலையில் சிக்கல் வாய்ந்த தமிழ் வினைகள் பற்றிய அகராதியாய் அமைந்துள்ளது.

## 2. பதிவமைப்பு நெறிகள்

தமிழ் அகராதியியலின் பொற்காலப் படைப்பாகக் கருதப்படத்தக்க சென்னைப் பல்கலைக்கழக அகராதிப் பதிவமைப்பு ஐரோப்பிய மரபு

அகராதிகளிலிருந்து வடித்தெடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது. இந்த மரபு விடுதலைக்குப் பின் வந்த **செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி**யிலும் பின்பற்றப்பட்டுள்ளது. இந்த அகராதிகள் எல்லாம் அகராதியியல் நெறிமுறைகளை வடித்தெடுப்பதற்கான அடிப்படை ஆதாரங்களாய் உள்ளன. இந்த வகையில் விடுதலைக்குப் பின் வந்த அகராதிகளில் குறிப்பிட்டுச் சொல்லத்தகுந்த சில மட்டுமே புதிய பதிவமைப்பு நெறிகளைக் கைக்கொண்டனவாய் உள்ளன. அவை தமிழ் அகராதியியலின் எதிர்கால வளர்ச்சிக்குப் பெரிதும் துணைபுரிவனவாய் உள்ளன.

க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதியில்

*1.* பெயர்ச்சொல் ஏற்கும் ஆக, ஆன எனும் விகுதி பற்றிய தகவல்

*2.* பரந்த பொருண்மைக்குள் அடங்கும் பல்பொருட்களுக்கான பொருள்வகைப் பிரிவு

*3.* பெரும்பாலான சொற்களுக்கு விளக்கச் சொற்பொருள்

*4.* ஒலிப்பில் வேறுபட்ட பலம், பலம் போன்ற ஒப்புருச்சொற்களுக்குப் பலம் *(*b-*)* எனும் ஒலிக்குறிப்பு

*5.* நேர்பொருள் அடியாய்த் தோன்றும் உருவக வழக்குக் குறிப்பு

*6.* அகராதிப் பயன்பாட்டாளர் குறிப்பு, பதிவு அமைப்பு பற்றிய தகவல்கள்

எனும் பதிவமைப்பு நெறிகள் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன. தற்காலத் தமிழ் மரபுத் தொடர் அகராதியில் *(1997)* மரபுத் தொடர்ப் பதிவு பல்வேறு கூறுகளைக் கொண்டதாய்ச் செறிவுடன் அமைவதற்கான நெறிகள் மிகச் செம்மையாய்ப் பின்பற்றப்பட்டுள்ளன.

தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடான **மர இனப் பெயர்த்தொகுதி** *(1986, 1987)* ஒரு பொருட்பலசொல் அகராதிக்கான பதிவமைப்பு முறையைச் செம்மையாய் வடித்தெடுத்துத் தந்துள்ளது. **A Dravidian Etymological Dictionary** எனும் ஒப்பியல் அகராதி இனமொழிச் சொற்களுக்கான பட்டியல் எவ்வாறு பின்னிணைப்பில் தரப்பட வேண்டும் என்பதற்குரிய சான்றாய் உள்ளது.

ஒரு கலைக்களஞ்சியம் எவ்வாறு உருவாக்கப்பட வேண்டும் என்பதற்கு முன்னோடியாகத் தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் **கலைக் களஞ்சியம்** அமைந்துள்ளது.

ஒரு மொழி அகராதி வரலாற்றில் எல்லா ஒரு மொழி அகராதிகளும் வினைகளுக்கான தலைச்சொல் தெரிவிலும் பொருள் தருதலிலும் ஒன்றுபட்டு நிற்க அவற்றிலிருந்து வேறுபட்டுப் **பெருஞ்சொல்லகராதி,**

1. வினையடிகளைத் -தல், -த்தல் விகுதிகளோடு தலைச் சொல்லாய்த் தருதல்
2. வினை வகைப்பாட்டு எண் தருதல்
3. செயப்படுப்பொருள் குன்றியவினை, குன்றாவினைக் குறிப்புகளைத் தருதல் (இரண்டாம் தொகுதியில் மட்டும்)
4. வரலாற்று அடிப்படையில் மேற்கோள்களைத் தருதல்
5. தரவுகளின் அடிப்படையில் உருவாதல்

எனும் நெறிகளைக் கைக்கொண்டுள்ளது. இது ஒரு மொழி அகராதியியலில் ஏற்பட்ட மிகப் பெரிய நெறிமாற்றம்.

ஆங்கிலம் தமிழ் அகராதிகளுக்கான பதிவமைப்பு நெறிகளை முன் வைக்கும் அகராதியாய்ச் **சிதம்பரநாதச் செட்டியாரின் அகராதி** உள்ளது. இதற்குப்பின் வந்த பல அகராதிகளில் அந்நெறிகள் பின்பற்றப்படவில்லை. தற்போது வெளிவந்துள்ளன **Advanced deluxe dictionary**-இல் *1.* ஒலிப்புமுறை, *2.* மேற்கோள்கள், *3.* வழக்காற்றுநிலை (Usage), *4.* ஒத்த சொல்லோடு கொண்ட பொருள் உறவு வேறுபாடு காட்டும் ஒப்புமைப்பகுதி, *5.* ஒரு சொல் பற்றிய கூடுதல் விளக்கம், *6.* குறிப்புகள், *7.* பதிவுச்சொல் தருகின்ற பொருளோடு தொடர்புடைய வேறுபிற சொற்கள் பற்றிய தகவல்கள் (எ-டு Husband எனும் பதிவின் கீழ் Word Power, Husband எனத் தந்து bigamous-இரு கணவர்கள் (அ) மனைவிகளை ஒரே சமயத்தில் கொண்டிருக்கின்ற Cuckold நடத்தை கெட்ட பெண்ணின் கணவன் எனத் தரும் தகவல்கள்) தரப்பட்டுள்ளன. இவை ஆங்கிலம் தமிழ் அகராதியில் சில கூடுதல் பரிமாணங்களை முன் வைப்பனவாய் உள்ளன.

### 3. பதிப்புகள்

விடுதலைக்கு முன் வந்த அகராதிகளையும் நிகண்டுகளையும் மறுபதிப்பாய், திருந்திய பதிப்பாய்க் கொண்டுவரும் முயற்சிகளும் நடைபெற்றுள்ளன.

ஆசியன் எடுகேஷனல் சர்வீஸ் நிறுவனம் மறுபதிப்பில் குறிப்பிட்டுச் சொல்லத்தக்க பணியை ஆற்றியுள்ளது. **வின்சுலோ தமிழ்-ஆங்கில அகராதி** *(1989, 90, 91, 93, 95)*, **வின்சுலோ ஆங்கிலம் - தமிழ் அகராதி** *(1983)*, **பெப்ரீசியல் தமிழ் ஆங்கில அகராதி** *(1989, 1992, 1995)*, **தமிழ் பிரெஞ்சு அகராதி** (L. Dupuis, L. Mousset, 1981, 1984, 1989, 1990, 1994), **Vocabluaire Tamil-Francais** (M.L. Lap) (1984), **An English Tamil Dictionary** (G.U. Pope, 1989), **Ingeva or the sinna Durai's Pocket Tamil guide** (A.M. Ferguson, 1989), **Dictionnaire Francais Tamoul** (M.M. Mousset

L. Dupis, 1982, 1984, 1992, 1993, 1994*)* போன்ற பல்வேறு அகராதிகளும் வெளியிடப்பட்டுள்ளன.

சேவியர் தனிநாயக அடிகளின் பணியும் சிறப்பாய்க் குறிப்பிடத் தக்கது. *1679*-இல் வெளிவந்த புரோயன்சாவின் **தமிழ் போர்த்துக்கீசிய அகராதி** இவரால் *1966*இல் மறுபதிப்பாய் வெளியிடப்பட்டுள்ளது.

ஒரு மொழி அகராதி வரலாற்றில் சிறப்பாய்க் குறிப்பிடத்தக்க அகராதியான சி. டபிள்யு. கதிரைவேற்பிள்ளையின் தமிழ்ச் சொல்லகராதி *(*மூன்று தொகுதிகள்*)* உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் இராமர் இளங்கோவால் மறுபதிப்பாய் *1998*இல் கொண்டு வரப்பட்டுள்ளது. இவரின் முயற்சியால் ஞானப்பிரகாசரின் **சொற்பிறப்பியல் அகராதி**யின் *(1938-46)* மறுபதிப்பும் வெளியிடப்பட்டுள்ளது. மிகச் சிறந்த தமிழ்-ஆங்கில அகராதியான **இராட்லர் அகராதி**யைப் பதிப்பிக்கும் முயற்சியையும் இவர் மேற்கொண்டுள்ளார். இவ்வகையில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமும் பதிப்புப் பணியில் பெரும்பங்கு ஆற்றிவருகிறது.

Knight, Spaulding, Hutchings மூவராலும் தொகுக்கப்பட்ட **ஆங்கிலத்தமிழ் அகராதி**யைச் சுர்ஜீத் வெளியீட்டு நிறுவனம் **Webster's English Tamil Dictionary** எனும் பெயரில் *1997*இல் முதல் மறுபதிப்பாய் வெளியிட்டுள்ளது.

நிகண்டுகளைப் பொறுத்தமட்டில் குறிப்பிட்டுச் சொல்லத்தக்க பணியை மு. சண்முகம்பிள்ளை, இ. சுந்தரமூர்த்தி இருவரும் ஆற்றியுள்ளனர். *1990, 1993*ஆம் ஆண்டுகளில் **திவாகரம்** இரண்டு தொகுதிகளாய் வெளியிடப்பட்டுள்ளது. சென்னைப் பல்கலைக் கழகத்தால் வெளியிடப்பட்ட இந்நிகண்டுப் பதிப்பு, சிறந்த செம்பதிப்பாய் உள்ளது. இவ்விருவரும் பதிப்பித்த **சூடாமணி நிகண்டு** *11*ஆம் தொகுதி *(1999)* உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தால் வெளியிடப்பட்டுள்ளது.

சென்னைப் பல்கலைக்கழகத் **தமிழ்ப்பேரகராதி**யின் திருந்திய பதிப்பு *1980*இல் வெளிவந்தது. அ முதல் அகூரம் வரையிலான பதிவுகளைக் கொண்ட சிறு தொகுதியாய் இது வெளிவந்துள்ளது. இதற்குமேல் இப்பணி தொடரவில்லை.

### 4. பின்னடைவுகள்

திட்டமிடல் என்பது அகராதியியலில் மிக முக்கியமான செயற்பாடு. சென்னைப் பல்கலைக்கழக அகராதி, தமிழ் வளர்ச்சித் துறையின் கலைக் களஞ்சியம், க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, தற்காலத்தமிழ் மரபுத் தொடர் அகராதி ஆகியவற்றின் வெற்றிக்குத் திட்டமிடலே அடிப்படை. சரிவரத் திட்டமிடாமை, திட்டமிட்டதையும் முறையாய்ச் செயற்படுத்தாமை

போன்ற காரணங்களால் நோக்கு நூல்களின் நம்பகத்தன்மை குறைவதுடன் வெளியீடுகளும் காலதாமதப்படும். அந்த வகையில் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் பெருஞ்சொல்லகராதித் திட்டமும், கலைக்களஞ்சியத் திட்டமும், நாடகக்களஞ்சியத் திட்டமும் நலிவடைந்திருப்பதற்கு இதுவே காரணம். பெருஞ்சொல்லகராதியின் மூன்று தொகுதிகளிலும் தனிப்பட்ட பதிப்பாசிரியர்களின் பதிவமைப்பு நெறிகளே முன் நிற்கின்றன. பொதுநெறி பின்பற்றப்படவில்லை. இதனால்தான் ஒவ்வொரு தொகுதியும் ஒவ்வொரு நிலையில் வந்துள்ளது. கலைக்களஞ்சியத்திற்கும், உரிய துறை அறிஞர்களிடமிருந்து முறையாய்க் கட்டுரை பெறப்படவில்லை. நாடகக் களஞ்சியமும் சரிவர நடைபெறவில்லை. வந்த தொகுதியும் குறைபாடு மிக்கதாய் உள்ளது.

*1904*இல் **தமிழ்ச் சொல்லகராதி** நல்ல பதிவமைப்போடு (விளக்கப் பொருள் தரல், சொல் மூலம் காட்டுதல், மேற்கோள் தருதல் போன்றவை) வெளிவந்திருந்தாலும் முன் மரபு போற்றல் என்ற நெறி பின்வந்த பெரும் பாலான ஒருமொழி அகராதிகளில் பின்பற்றப்படவில்லை. மு. சண்முகம் பிள்ளையின் தமிழ்-தமிழ் அகரமுதலி *(1985)* இதற்கு நல்ல சான்று.

**கலைச்சொல்லகராதி** உருவாக்கத்தைப் பொறுத்தமட்டில் விளக்கச் சொற்பொருள் தருநெறி செம்மையாய் அமையவில்லை. விளக்கப் பொருளுடன் வந்த அகராதிகளில் தரப்பட்ட பொருள்கள் பாடநூல் தகவல் களாகவே உள்ளன. பொருள் வரையறைகளாய் அவை அமையவில்லை. இதற்கு அடிப்படைக் காரணம் அகராதியியலாளரின் பங்களிப்பு அதற்கு இல்லாததே ஆகும்.

நல்ல முன்னுரை என்பது ஓர் அகராதிக்குப் பெருமை சேர்ப்பது. இந்த வகையில் நல்ல முன்னுரையோடு வெளிவந்த அகராதிகள் விரல் விட்டு எண்ணத்தக்கனவாகவே உள்ளன. நல்ல பதிவமைப்போடு வெளிவந்த **Advanced Deluxe Dictionary** முன்னுரையே இல்லாமல் வெளியிடப்பட்டுள்ளது. தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் **களஞ்சியங்கள்** இவ்வகையினவே. **பெருஞ்சொல்லகராதி** முன்னுரைகள் குறைபாடு உடையனவாகவே உள்ளன. தன்வினை, பிறவினைகளுக்குப் பொதுப் பதிவு அமைத்த **லிப்கோ தமிழ் அகராதியின்** பதிவமைப்புப் பற்றிய தகவல் அகராதியில் எங்குமே தரப்படவில்லை.

திருத்தமான பதிப்புகளைக் கொண்டுவரும் முயற்சி, நோக்குநூல் வரலாற்றில் பின்பற்றப்படவே இல்லை. சென்னைப் பல்கலைக்கழக அகராதிக்கு இம்முயற்சி நடந்தாலும் அது அகரச் சொற்றொகுதியோடு நிறுத்தப்பட்டுவிட்டது. சில நல்ல நோக்கு நூல்களுக்கு மறுபதிப்புகள் கூட கொண்டுவரப்படவில்லை. இதற்கு, பெரியசாமித்தூரனின் கலைக்களஞ்சியம் நல்ல சான்று.

**சென்னைப் பல்கலைக் கழக அகராதி** உருவாக்கத்தைத் தொடர்ந்து நிலைத்த அகராதியியல் துறை நிறுவப்படாமல் போனதைப் போல் **கலைக் களஞ்சியத்**தைத் தொடர்ந்தும் நிலைத்த துறை உருவாக்கப்படவில்லை.

## 5. முடிவுகள்

1. நோக்குநூல் உருவாக்கம் சென்னைப் பல்கலைக்கழக அகராதியைத் தொடர்ந்து இந்திய விடுதலைக்குப் பின்னும் நிறுவனமயப்பட்டு வெற்றிபெற்ற சூழல் (கலைக்களஞ்சியம் உருவாக்கம்) இருபதாம் நூற்றாண்டின் இந்த இறுதிக் காலப் பகுதியில் மாறியுள்ளது. நிறுவனமயமாகும் சூழல் பின்னடைவையே ஏற்படுத்தியுள்ளது. தமிழ்ப் பல்கலைக்கழகத் திட்டமும், சென்னைப் பல்கலைக்கழகப் பன்மொழி அகராதித் திட்டமும் இதற்குச் சான்று.

2. கலைச்சொல்லகராதி உருவாக்கம் *1960*களில் அரசுச் சார்புடனும் நிறுவனச் சார்புடனும் வெளிவந்த நிலைகள் மாறி அவை தனிமனித முயற்சிகளாய் மாறியுள்ளன.

3. பொது அகராதிகளைப் பொறுத்தமட்டில் ஆங்கிலம்-தமிழ் அகராதிகளின் பெருக்கம் ஆங்கிலம் முதன்மைப்பட்ட இன்றைய மொழிச் சூழலையே காட்டுகிறது.

4. பல்கலைக்கழகப் பேராசிரியர்களைத் துணையாய்க் கொண்ட நிறுவனங்களுக்குப் புறத்தே நடைபெறுகின்ற கூட்டு முயற்சிகள், கூட்டுழைப்புகள் வெற்றி பெற்றிருக்கின்றன. க்ரியா அகராதி இதற்கு நல்லதொரு சான்று. உரியவரிடம் பொறுப்பை ஒப்படைத்தல் என்பதும் இவ்வெற்றிக்கு ஒரு காரணம்.

5. தமிழகத்தைப் பொறுத்தமட்டில் அகராதியியல் மனப்பாங்கு மிகமிகக் குறைவே. குறிப்பிட்ட சில பல்கலைக்கழகங்களும் நிறுவனங்களும் அவ்வப்போது நடத்திய அகராதியியல் பணிப்பட்டறைகளும், பயிலரங்குகளும் போதிய வெற்றியைத் தரவில்லை. அகராதியியல் தமிழ் முதுகலைக் கல்வியில் ஒரு பாடமாக வைக்கப்பட்டால் ஓரளவுக்கு நல்ல வெற்றி காணலாம்.

### பார்வை நூல்கள்

1. சுந்தரசண்முகனார், **தமிழ் அகராதிக்கலை**, பைந்தமிழ்ப் பதிப்பகம், புதுவை, *1965*.
2. மாதையன், பெ., **தமிழாய்வு**, மணிவாசகர் நூலகம், சென்னை, *1995*.
3. ஜெயதேவன், வ., **தமிழ் அகராதியியல் வளர்ச்சி வரலாறு**, ஐந்திணைப் பதிப்பகம், சென்னை.
4. Dhamotharan, **Tamil Dictionaries A Bibliography**, Franz Steiner Verlag-Wiesbaden, 1978.

# வட்டார வழக்கியல்

அ. அறிவுநம்பி

இலக்கியம் என்பது அவ்விலக்கியம் தோன்றிய சமுதாயத்தைப் பிரதிபலிக்கும். இது இயல்பானது. அவ்வகையில் சமுதாயக் கூறுகளில் ஒன்றான மொழியும் அவ்விலக்கியங்களில் இறக்குமதி ஆகும். மொழியினைக் கையாளுகின்ற படைப்பாளன் மொழியின் தன்மையினைத் தன் படைப்பில் கொண்டு வருவது இலக்கிய நெறியாகும். பொதுவாக உலக மொழிகள் எல்லாவற்றிலும் எழுத்து மொழி, பேச்சு மொழி என்ற இரண்டு நிலைகள் காணப்பெறுகின்றன. 'இருமொழி வழக்கு என்பது பலமொழிகள் வழங்கும் சமுதாயத்திலும் பலமொழிகள் வழங்கும் நாடுகளிலும் காணப்பெறுகின்றது. மேலும் ஒரே மொழி வழங்கும் சமுதாயத்திலும் கூட வெவ்வேறு கிளைமொழிகள் சமூகப் பேச்சு வழக்குகள் செயல்படும் முறையில் இருநிலை வழக்கு இருந்து வருகின்றது' என்பர். தமிழைப் பொறுத்தவரை, செந்தமிழ் வழக்கு, பேச்சுத் தமிழ் வழக்கு என இரண்டினைப் பெறமுடிகின்றது.

காலந்தோறும் இத்தகைய போக்குகள் காணப்பெறுகின்றன. பேச்சு மொழியாக அமையும்போது தமிழ் ஒவ்வொரு பகுதியில் ஒவ்வொரு விதமாக மொழியப்பெறுகின்றது. 'வட்டார வழக்குகள் ஒரு மொழியின் ஒவ்வொரு வரலாற்று நிலையிலும் காணப்பட்டாலும் தமிழிலக்கண ஆசிரியர்கள் இவற்றை மனதிற் கொண்டிருந்தார்களா என்பதைப் பற்றி நேரடிச்

சான்றுகள் கிடைக்கவில்லை. அவர்களது இலக்கண நூல்களுக்கு அடிப்படையாக அமைந்தது அவர்களது தனிமொழியா (idolect), வட்டார வழக்கா அன்றி இலக்கிய வழக்கு என்ற செம்மைப்பட்ட வடிவா என்பதும் தெளிவாகக் கூறப்படவில்லை. தொல்காப்பியத்துள்ளும் இதே நிலையே காணப்படுகிறது. எனினும் ஒரே கருத்தை விளக்குவதற்கு மூன்றுக்கு மேற்பட்ட நூற்பாக்கள் பயன்படுத்தப்படுவதனைக் காணும்பொழுது ஒன்றுக்கு மேற்பட்ட வட்டார வழக்குகள் விளக்கப்படுகின்றனவோ என்ற ஐயம் எழாமலில்லை..... செம்மைப்படுத்தப்பெற்ற ஒரு இலக்கிய மொழியே அடிப்படையாக இருந்திருக்குமானால் சிலவற்றைச் செய்யுள் வழக்கென்றும் மரூஉ வழக்கென்றும் பிரித்துப் பேச வேண்டிய தேவை இல்லை.'[2] எனவரும் நீதிவாணன் கருத்து இவண் சிந்திக்கத்தக்கது. ஒரு + ஆயிரம் என்பது ஒராயிரம் என்றும் ஓராயிரம் என்றும் இருவேறு வழக்கில் தென்படுகிறது. இதனை இரண்டு வட்டார வழக்குக் கூறுகளாகக் கருதலாமென்பர். அவ் வகையில் ஒருமொழி வட்டாரத்துக்கு வட்டாரம் சிற்சில வேறுபாடுகள், மாற்றங்கள் கொண்டிலங்கும் என்பது புலனாகிறது. அத்தகைய பகுதிகளை **வட்டாரம்** என்ற சொல்லால் குறிப்பர். இதற்கு அரணாகக் கீழ்க்காணும் பகுதி அமைகிறது. 'கிளைமொழி என்பதற்குரிய அடிப்படைக் கொள்கை மொழிக்கூறு பகுகோடாகும். ஒரு குறிப்பிட்ட மொழியியற் கூற்றின் பயன்பாட்டை வரையறுக்கும் ஒரெல்லையே மொழிக்கூறு பகுகோடாகும்' (The elementary concept of dialectology is the isogloss. Any boundary which constitutes the limit of use of particular linguistic feature is called an Isogloss (Ferguson 1970:6) என்ற மேற்கோளை எடுத்துக்காட்டும் ஆய்வாளர், மேலும் விவரிக்கும்போது 'இம்மொழிக்கூறு பகுகோடானது தொடர்பியலில் குறைபாடுகள், தடைகள் போன்றவற்றையும் ஒரு சேரத் தரலாம். இயற்கை தரும் மலைகள் அல்லது ஆறுகள் போன்ற இயல்பான எல்லைகள் அல்லது அரசாங்க எல்லைகள் ஆகியபவற்றுடன் இம்மாற்றங்கள் தொடர்புடையன. அத்தகைய எல்லைகளை உள்ளடக்கிய பகுதியே வட்டாரம் எனப்பெறும்'[3] எனவும் வரையக் காணலாம் (The Isogloss will tend to coincide with breaks or lines of weakness in communication. Such breaks and lines of weekness correlate with natural physical boundaries. such as mountains or rivers or with political boundaries. Each area bounded by such boundary can be called by dialect area if they are correlated with natural physical boundaries or political boundaries). இத்தகைய வட்டாரங்களில் பயன்படுத்தப்பெறும் மொழி நடைகள் இலக்கியங்களில் இடம்பெறுகின்றன.

மறுபுறத்தே மீனவர் வட்டாரம், குறவர் வட்டாரம் என்பன போன்ற சொற்கள் கவனிக்கப்பெற வேண்டியவையாகின்றன. தகுதியென்பது மூன்று வகைப்படும். 'மங்கல மரபினாற் கூறுதலும் இடக்கரடக்கிக் கூறுதலும்

குழுவின் வந்த குறி நிலை வழக்கும் என'. வழக்காறு இருவகைப்படும். 'இலக்கண வழக்கும் இலக்கணத்தோடு பொருந்தின மரூஉ வழக்கும் என'. இவ்விளக்கங்களை ஏற்றுக்கொண்டோமானால் 'குழுவின் வந்த குறிநிலை வழக்கு' என்பது சில சமுதாய வட்டார வழக்குகளைக் (Social Dialect) குறிப்பதாகும்.... வேற்றுமை மயங்கியல் முழுமையுமே பல வட்டார வழக்குகளில் வழங்கிய வேறுபாடுகளைச் சுட்டிக் காட்டுவதாகும். இக்காலத் தமிழிலும் இத்தகு நிலையைக் காணலாம். எடுத்துக்காட்டாக உடைமைப் பொருளைக் கூறலாம்.

என் வீடு (மதுரை வழக்கு)
எனக்க வீடு (குமரி வழக்கு)
எம்புட்டு வீடு (செட்டிநாட்டு வழக்கு)[4]

மேற்குறித்த செய்திகளால் புலனாகும் செய்திகள் வருமாறு:

1. ஒரே மொழியில் பல கிளைமொழிகள் அமையும்.
2. ஒரு குறிப்பிட்ட எல்லைக்கோட்டினுள் இடம்பெறும் மொழி வட்டார மொழி எனப்படும்.
3. ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தினர் அல்லது ஒரு குறிப்பிட்ட தொழில் முனைவோர் தம்முள் பயன்படுத்திக்கொள்ளும் மொழியும் வட்டார வழக்காக (சமூகத்தை அடிப்படையாகக் கொண்டு) அமையும்.
4. இவை இலக்கியங்களில் பயின்று வரும்.

விடுதலைக்கு முன்னும், பின்னும் எழுந்த இலக்கியங்களில் சமூகம் அல்லது தொழில் அடிப்படையில் அமைந்த குழுக்களின் பேச்சு நடை இடம் பெற்றுள்ளது. இலக்கியம் படைப்பாரின் எழுத்துகளாக அல்லாமல் இலக்கிய மாந்தர்களின் பேச்சுகளாக வருமிடத்தில் இத்தகைய மொழிநடை வேண்டற்பாலது. மாந்தர்களின் குலம், வழக்காறு, தொழில் போன்றவற்றை இந்த மொழிநடையும் எடுத்துக்காட்டும். சான்றாக, பிராமணர்கள் இடம் பெறும் படைப்புகளில் அவாள், கார்த்தாலே, ஜலம், போறச்சே போன்றனவும், கள்ளர்கள் இடம்பெறும்போது, 'கருக்காய், தோப்புக்கத்தி, வளரி, பத்தக்கட்டை, பட்டுக்கிடப்பான், பையப்பையா'[5] போன்றனவும், நகரத்தார்களாயின், வெள்ளென, அப்பச்சி, முகப்பு, வளவு போன்றனவும் உரையாடற் பகுதியில் இடம்பெறுவதைக் குறிக்கலாம். கிறித்துவ, முகமதிய மதங்களைச் சார்ந்தோர் இடம் பெறுங்கால் மதம் சார்ந்த சொற்களும், வழக்காற்றுச் சொற்களும் இடம்பெறுவது இயல்பானது. குறிப்பிட்ட தொழிலை மேற்கொண்டோர் இடம்பெறும் படைப்புகளிலும் இத்தகு போக்கே இடம்பெறும்.

இவ்வாறு மதத்தை அடிப்படையாகக் கொண்டோரும், சாதி சமயங்களை அடிப்படையாகக் கொண்டோரும், தொழிலை அடிப்படையாகக் கொண்டோரும் இடம்பெறும் இலக்கியங்களில் அவரவர்களுக்கென அமையும் பேச்சுத் தமிழை வட்டார வழக்கு என்றே தொடக்கத்தில் கருதினர். பின்னர் அவற்றைக் கிளைமொழியியல் அடிப்படையில் பிரித்துக்காட்டிச் சமூகக் கிளைமொழி (Social dialect) எனக் கொண்டனர். மேற்குறித் தவையல்லாது வேறுவகையில், எல்லைக்கோடுகளை உருவாக்கிய நிலையில், தமிழில் கீழ்க்கண்டவாறு கிளைமொழிகளைப் பட்டியலிடுவர்.

1. வடபகுதிக் கிளைமொழி (Northern dialect)
2. கிழக்குப்பகுதிக் கிளைமொழி (Eastern dialect)
3. மேற்குப்பகுதிக் கிளைமொழி (Western dialect)
4. தென்பகுதிக் கிளைமொழி (Southern dialect)
5. நாஞ்சில் நாட்டுக் கிளைமொழி (Nanjilnad dialect)[6]

இவற்றுடன் இலங்கைத் தமிழ் என்பதையும் சேர்த்து ஆறாக்குவாரும் உளர். விடுதலைக்குப் பின்னர் தமிழ் உரைநடையில் இடம்பெற்றுள்ள வட்டார வழக்குகளைப் பற்றிச் சிந்திக்க வேண்டியுள்ளது.

தமிழிலக்கியங்களைப் பொறுத்தமட்டில் நாட்டுப்புற இலக்கியங்கள் அதிலும் குறிப்பாக நாட்டுப்புறப் பாடல் வடிவ இலக்கியங்கள், வட்டார வழக்குகளை அழியாமல் பாதுகாத்து வந்துள்ளன. இலக்கணம் பற்றிய தேவை இன்றியமையாததாக அமையாததால் பேச்சு வழக்காறுகள் நாட்டுப்புறப் பாடல் வடிவங்களில் சேதாரமில்லாமல் பொதிந்து வைக்கப் பெற்றன. ஆனாலும் நாட்டுப்புறக் கதைகள் போன்றவற்றில் உரையாடற் பகுதிகளைத் தவிர்த்த ஏனைய பகுதிகள் செவ்வியற்புனைவுடன் இலக்கியத் தமிழாக (Written Tamil) அமைந்தன. விடுதலைக்குப்பின் எழுந்த செல்நெறிகளில் வட்டார வழக்கியலின் பங்கு குறிக்கத்தக்கது. மொழியியற் படிப்பும் இவ்விலக்கியங்களிலே காணலாகும் மொழிநடை, மொழியியற் செய்தி போன்றவற்றை அலசிக் காட்ட முனைந்தது. 'எழுத்துத் தமிழில் - ஆல், கொண்டு என்பன மூன்றாம் வேற்றுமையுருபுகள் ஆகும்.

1. அவன் கத்தியால் வெட்டினான்
2. அவன் கத்தி கொண்டு வெட்டினான்

நாஞ்சில் நாட்டுக் கிளைமொழியில் -ஆலே, -ஏ+வச்சு, இட்டு என்பன மூன்றாம் வேற்றுமையுருபுகள் ஆகும்.

1. அவன் கத்தியாலே வெட்டினான்
2. அவன் கத்தியே வச்சு வெட்டினான்
3. அவன் கத்தியிட்டு வெட்டினான்

தென்னாற்காட்டுக் கிளைமொழிகளில் -ஆலெ, கொண்டு என்பன மூன்றாம் வேற்றுமையுருபுகளாகும்.

1. அவன் கத்தியாலே வெட்டினான்
2. அவன் கத்தி கொண்டு வெட்டினான்

தஞ்சாவூர், சேலம், கோயமுத்தூர் கிளைமொழிகளில் -ஆலே மட்டும் மூன்றாம் வேற்றுமைப் பொருளைத் தருகிறது'[7] என்ற விளக்கம் ஒரு பதச் சோறாகும். குறிப்பிட்ட நில எல்லைக்குள் வாழும் பல சாதியினரும் பல தொழில் முனைவோரும் அந்நில எல்லைக்குள்ளான மொழிநடையினையே மேற்கொள்ளுவர். இரண்டாவதாக ஒரு குறிப்பிட்ட தொழில்முனைவோர் இடையேயும் இடத்துக்கு இடம் மொழிநடை மாறுபடும். சென்னை மீனவரின் பேச்சு நடைக்கும் தூத்துக்குடி மீனவரின் பேச்சு நடைக்கும் வேறுபாடு தென்படும். சொல்லாட்சிகள், உறவுப் பெயர்கள், மரபுத்தொடர்கள் போன்றவற்றில் மாறுபாடுகள் அமைகின்றன. எனவே சமூக வட்டார வழக்குகளைவிடவும் நில வட்டார வழக்குகளே மிகுதியும் இலக்கியங்களில் பயின்றுவரும்.

**சான்றுகள் சில வருமாறு:**

அ. தமிழகத்தின் வடபகுதியாகக் கருதப்பெறும் சென்னை, செங்கற்பட்டு, புதுவை போன்ற பகுதிகளில் காணப்பெறும் வட்டாரச் சொற்களை இடையிட்டுப் பலர் சிறுகதைகளையும் புதினங்களையும் எழுதியுள்ளனர். ஜெயகாந்தனின் பல படைப்புகளில் (சிறுகதை, புதினம்) 'சோ' ராமசாமியின் நாடகங்களில், சென்னைத் தமிழ் இலங்கும். இஸ்த்துகினு, பணம் கறக்கறது, ஒத்திக்கோ, கேப்மாறி, சோமாறி, கய்தே போன்றவை புகழ்பெற்ற சொல்லாடல்கள். புதுவைப் பகுதியின் பிரஞ்சுக் கலப்பு, பாவண்ணனின் படைப்புகளிலும், பிரபஞ்சன் படைப்புகளிலும் வெளிப்படும். சான்றாகப் பிரபஞ்சனின் **ஆண்களும் பெண்களும்** புதினத்தில் டாக்டர் என்பது தொக்தர் எனவும் வழக்கறிஞர் என்பது அவுக்கா எனவும் பிரஞ்சுப்பாதிப்பால் இடம்பெறும். அதைப்போலப் பாவண்ணனின் நோப்பாளம் (கஷ்டம்), குடிப்பாட்டி (குடிக்க வைத்து), பல்லாக்கள் (கலயங்கள்), பேமானி (மானமற்றவன்) போன்ற சொல்லாட்சிகளும் சென்னை, புதுவை வட்டாரத்தைப் படம் பிடிக்கும்.

ஆ. கிழக்கு மாவட்டங்களாகக் கருதப்பெறும் இராமநாதபுரம், புதுக்கோட்டை மாவட்டங்களில் காணப்பெறும் தமிழை - வட்டார வழக்குகளைத் தம் படைப்புகளில் செதுக்கி வைத்திருப்பவர்களில் தென்னரசு, வாசவன், செகதா போன்றோர் குறிக்கத்தக்கவர்கள். தென்னரசுவின் சிறுகதைகள் முகவை வட்டாரத் தமிழை சித்திரிப்பவை. அவருடைய **சந்தனத் தேவன், தங்கச்சி மடம்** போன்ற

புதினங்களிலும் இப்போக்கை நுகரலாம். பாட்டியை அப்பத்தா எனவும், பரவாயில்லை என்பதைத் தேவலை எனவும், திருமணத்தைத் திருப்பூட்டு எனவும் மொழியும் செட்டிநாட்டுத் தமிழும், ரெண்டுவாட்டி, கிண்டி கெழுங்கு எடுக்கறாளே, குசும்பு போகாதுடா, ஏண்டா போன்ற முகவை வட்டாரத் தமிழும் மேற்குறித்த எழுத்தாளர்களின் கதைகளை இன்ன வட்டாரத்தன என இனங்காட்டி நிற்கின்றன.

வட்டாரப் படைப்புகள் என்று கூறத் தொடங்கியவுடனேயே நினைவிலெழுபவர் ஆர். சண்முகசுந்தரம். மேற்குத் தமிழகமான கொங்கு வட்டாரம் இவரின் படைப்புகளுக்குரிய களம். சொல்லுக்குச் சொல் 'ங்க' என்ற பின்னிணைப்பைச் சேர்த்துக்கொள்வதும், 'என்ர' என உடைமைச் சொல்லைத் தனித்துக் கையாளுவதும் இவ்வட்டாரச் சிறப்புக் கூறுகள். விடுதலைக்கு முன்பேயே **நாகம்மாள்** என்ற *(42)* புதினத்தை எழுதிய சண்முகசுந்தரம் **அறுவடை, வரவேற்பு, பூவும் பிஞ்சும்** போன்ற புதினங்களிலும் கொங்கு வட்டாரத்தைக் கொண்டுவருவார். 'பீத்தப்பயல், கெட்டச்சாதி, தாயி, கழுதமுண்ட, பதரே' போன்ற சொற்கள் அறுவடையில் கிடைப்பவை. க. ரத்னம், கு. சின்னப்ப பாரதி, இரா. வடிவேலு, விட்டல்ராவ், சி.ஆர். இரவீந்திரன், சூர்யகாந்தன் போன்றோர் கொங்குவட்டார மொழி நடையை உயிர்ப்புடன் காட்டியவர்கள். **தொட்டிக்கட்டு வீடு** என்ற புதினத்தின் முன்னுரையில் 'இப் புதினம் கொங்கு நாட்டுச்சூழலில் பிறந்தது. கொங்குத் தமிழையே பாத்திரங்கள் பேசுகின்றன'[10] என நூலாசிரியரான வடிவேலு பேசுவதும், சூர்யகாந்தனின் **மானாவாரி மனிதர்கள்** புதினம் பற்றி **அன்னம் விடு தூது** ஏடு 'இது கிராமியச் சூழலில் வட்டாரத் தமிழில் வடித்தெடுக்கப்பட்ட நல்ல நாவல்'[11] எனக் குறிப்பதும் படைப்புகளில் இருந்து 'ரவுசு *(*அதிகாரம்*)*, பண்டம்பாடி *(*ஆடுமாடுகள்*)*, நங்கே *(*அக்கா*)*, கொரங்காடு *(*மேய்ச்சல் நிலம்*)*'[12] போன்ற கொங்கு வட்டார வழக்குச் சொற்களைப் பட்டியலிடுவதும் கருதத்தக்கவை. கொங்கு வட்டாரத்தை அடிப்படையாகக் கொண்டு - குறிப்பாக நீலகிரி கொல்லி மலைகளை அடிப்படையாகக் கொண்டு இராசம் கிருட்டிணன் உருவாக்கிய **குறிஞ்சித் தேன்**, சு. சமுத்திரத்தின் **உயரத்தின் தாழ்வுகள்** போன்ற படைப்புகளிலும் கலைஞரின் **பொன்னர்-சங்கர்** படைப்பிலும் கொங்கு வட்டார வழக்கினை ஏராளமாகக் கண்டு மகிழமுடிகிறது.

நெல்லைப் பகுதியும் சுற்றியுள்ள பிறவும் தமிழகத்தின் தென் பகுதிகளாகும். இரகுநாதன் வரைந்த **பஞ்சும் பசியும்** தொடங்கி, கி. இராசநாராயணன் சுட்டும் **கோபல்ல கிராமம்** வரை அனைத்துப் படைப்பாளர்களும் நெல்லைத் தமிழை, கரிசல் வட்டார வழக்குகளை நிறையவே வழங்கியுள்ளனர். தி. செல்வராசு, வண்ணநிலவன், சு. சமுத்திரம், வல்லிக்கண்ணன் போன்றோரின் படைப்புகளில் தாமிரபரணிக் கரையில் உலவும் தமிழை மாந்தமுடியும். பூமணியின் **கரிசல்**

**கதை**களும் வண்ண நிலவனின் **கடல்புரத்தில்** படைப்பும், இராசம் கிருட்டிணனின் **அலைவாய்க் கரையில்** படைப்பும் முழுக்க முழுக்க நெல்லை வட்டார வழக்குகளைக் கொண்டு உருவானவை. சில சான்றுகள் வருமாறு:

விசாளன் *(வியாழன்)*, ஆவலாதி *(குறைகள்)*, சீண்டரம் *(கொல்லை)*, மதினி *(அண்ணி)*, ஏழா *(ஏடி)* போன்ற சொற்கள்.

எந்து வாளிப்பய, ஒன்வீட்ல எள்ளுவைக்க, போக்கத்த பயமக்க என்பன போன்ற வசைச் சொற்கள்.

'என்ன அண்ணாச்சி எப்ப வந்திய?'

'மதுரை தாயழி எப்படிப்பட்ட ஊரு? அது காலுல கட்டி அடிக்க முடியுமா மத்த ஊருகள' என்பன போன்ற உரையாடல்கள்

கம்மாக்காரர் *(எளிய மீனவர்)*, நுமல் *(பனைஓலைக் கூடை)*, கோட்மால் *(பெரிய வலைப்பை)* போன்ற பரதவ சமூக வட்டாரச் சொற்கள்.[13]

நாஞ்சில் நாடு மற்ற வட்டாரங்களைவிடவும் வேறுபாடானது. திருநெல்வேலித் தமிழும் கேரள மலையாளமும் விரவிய புதிய வட்டார வழக்குகளை இது கொண்டுள்ளது. ஹெப்சிபா சேசுதாசன், கிருத்திகா, சுந்தரராமசாமி, நீல. பத்மநாபன், பொன்னீலன், தமிழவன், ஐசக் அருமைராஜன், செயமோகன் ஆகியோரின் சிறுகதைகள், புதினங்களில் இந்த வட்டார மொழியமைப்பின் தாக்கத்தை உணரலாம்.

'இது வட்டார வழக்கு நாவல்களில் மிகவும் சுவாரசியமாக அமைந்தது. ஆர். சண்முகசுந்தரம் அளவிற்கு நாவல் கலை அம்சங்கள் நிரம்பத் தன் முதல் நாவலை அழகாகச் செய்துள்ளார்'[14] எனக் க.நா.சு. குறிப்பிடும் ஹெப்சிபா சேசுதாசனின் **புத்தம் வீடு** புதினமும், 'புதுமைப் பித்தன், ஜானகிராமன் அடியொற்றி வட்டார வழக்கிற்குத் தனித்துவம் நிறுவிய ஆ. மாதவனின் இந்த நாவலில் நெல்லைத் தமிழோடு நாஞ்சில் தமிழும் குழப்பமில்லாத தெளிவுடன் கைகோர்த்துச் செல்வது மாறுபட்ட நடைவீச்சு'[15] என நெல்லை சு. முத்து குறிப்பிடும் மாதவனின் **தூவானம்** புதினமும் எடுத்துக்காட்டுகளில் சிலவாக அமைகின்றன.

'மோனே! பொன்னுமோனே! வந்தியாடாராசா! ங்கொப்பா சாவக் கெடந்தாரே மோனே' *(டாக்டர் செல்லப்பா)*, 'நீ என்னத்துட்டி கிறிச்சாம் மறிச்சாம் களிக்கப்பட்ட பேச்சு பேசுய! காதெறெ பூதெறகளும் வாக்கிரிசியத்ததுகளும், வரலாறு கெட்டதுகளும் எங்கயும் காணும்' என்று ஆச்சி கூறுவாள் *(தலைமுறைகள்)*. - இவை போன்ற உரையாடல்களும்,

கசவு *(ஜரிகை)*, கண்ணப்பச்சி *(தாத்தா)*, அண்டி *(முந்திரிக் கொட்டை)*, எழுத்து குத்து *(கடிதம்)*, இஞ்ச *(இங்கே)* - இவை போன்ற சொல்லாட்சிகளும்,

பச்சக்காரி (சினேகிதி), ஆண்குட்டி (ஆண் மகன்), வட்டு (பைத்தியம்), விளிச்சா (கூப்பிட்டான்) - இவை போன்ற மலையாளச் சொற்களும்.

இவர்களின் படைப்புகளில் கலந்து இவை எவ்வட்டாரத்தின என அடையாளங்காட்டும்.

கார்த்திகேயன்மீது ஆத்திரமாக வந்தது என்ற தொடர் கார்த்திகேயனில் ஆத்திரமாக வந்தது எனவும், எங்கட (எங்கள்), பொலிசு (போலிஸ்), விடயம் (விஷயம்) எனவும் வரும் சொல்லாட்சிகள் இலங்கைத் தமிழை அவதானிக்க ஏதுவாகும். (இராசேசுவரி பாலசுப்பிரமணியத்தின் **உலகமெல்லாம் வியாபாரிகள்** நூலிலிருந்து).

**வட்டார இலக்கியம் - ஒரு விவாதம்**

படைப்புகளில் இடம்பெறும் ஊர், மாந்தர்கள் போன்றவற்றிற்கேற்ப உரையாடல்களும் மொழிநடையும் அமையும். எனவே அவற்றைப் பொதுவான இலக்கியம் எனக் கொள்ள வேண்டுமே தவிர மொழிநடையைக் கொண்டு வட்டார இலக்கியம் எனத் தனித்துப் பார்க்க வேண்டுமா என்கின்ற வினா படைப்பாளிகள், வாசகர்கள், திறனாளிகள் ஆகியோரிடையே எழுந்துள்ளது. 'மொழிவாரி மாநிலம் பிரிக்கப்பட்டுள்ளது போலவே மொழிபேசும் எல்லைக்குள்ளே ஒரு குறிப்பிட்ட பொருளியல் கருத்தியல் பொதுவாகக் காணப்படும் பகுதிகளை வட்டாரமெனலாம். அங்குள்ள படைப்பாளிகளாலோ அதைப் புரிந்த படைப்பாளிகளாலோ படைக்கப்படும் நாவல்களே வட்டார நாவல்கள்'[16] என்ற கூற்று ஒருபுறம்.

'வட்டார இலக்கியம் என்பதே போலியானது. அதை நான் ஏற்கவில்லை. இலக்கியம் சர்வதேசிய தன்மை கொண்டது. அது ஒரு வட்டாரச் சூழலுக்குள் குறுகிப் போகாது'[17] எனக் **கணையாழியில்** பிரபஞ்சன் கூறுவது மறுபுறம். இவ்விரண்டு கூற்றுகளுக்கு ஆதரவாகவும் எதிர்ப்பாகவும் பல குரல்கள் ஒலிக்கத் தொடங்கின். 'சமூகப் பிரச்சனையைப் பரந்துபட்ட அளவில் நோக்கிய... இலக்கியம்... புறக்கணிக்கப்பட்டவர்கள் பக்கமாகத் திரும்பியது. அதன் வெளிப்பாடுதான் வட்டார இலக்கியம்'[18] எனவும் 'படைப்பாளியை ஒரு கூண்டுக்குள் அடைப்பது போன்றது வட்டார இலக்கியம் என்ற படைப்பு'[19] எனவும் வரும் சொல்வீச்சுகள் இதற்கான சான்றுகள். வல்லிக்கண்ணன், 'கிராமமக்களின் வாழ்க்கையை, இயல்புகளை, மக்களின் பேச்சு வழக்குகளை அப்படி அப்படியே எடுத்தாளும் தன்மை கொண்ட நாவலில் ஆர்வம் எழுந்துள்ளது. இந்த விதமான நாவல்கள் புதிய வேகத்தையும் புதிய பரிணாமங்களையும் அடைகின்றன'[20] என ஓர் அணிந்துரையில் கூறியிருக்க, வண்ணநிலவன் 'வட்டாரம் என்ற பேய் ஒன்று தற்காலத் தமிழிலக்கியத்தைப் பிடித்து ஆட்டுகின்றது. அதன்

எதிரொலி தற்காலத் தமிழிலக்கிய ஆய்வாளர்களிடமும் காணப்படுகின்றது. வட்டார வழக்கு, வட்டாரத் தமிழ், வட்டார நம்பிக்கைகள் என்று பலர் வட்டாரக் கொட்டு அடித்துக்கொண்டு திரிகிறார்கள்.... இலக்கியம் என்பது காலம், தேசம், மொழி, இனம், ஜாதி, வட்டாரம் முதலான குறுகலான எல்லைகளைக் கடந்தது. இராமாயணம், மகாபாரதம், திருக்குறள் போன்றவற்றை எந்த வட்டாரத்துக்குள் அடக்க முடியும்? தி.ஜா., புதுமைப்பித்தன், ஆர். ஷண்முகசுந்தரம், கி.ரா., சுந்தரராமசாமி போன்றவர்களை வட்டாரத்தின் கீழ் வகைப்படுத்துவதா? இது என்ன மடமை, அபத்தம்'[21] என **உதயம்** இதழில் வாதாடக் காணலாம். படைப்பாளர்கள், படிப்பாளர்கள், திறனாய்வாளர்கள் ஆகியோரிடையே ஒருமித்த கருத்து ஏற்படும்வரை இதுபோன்ற பட்டிமன்றங்கள் தொடரத்தான் செய்யும். எனினும் படிக்கின்ற வாசகனின் மனத்தில் ஒரு குறிப்பிட்ட நில எல்லைக்குள்ளான மண் வாசனையை இப்படைப்புகள் எழுப்புகின்றன என்பதில் கருத்து வேறுபாடில்லை. படித்துக் கொண்டிருக்கும் வாசகன், வட்டார வழக்குச் சொல் அல்லது தொடரால் சிக்கல் பெறுவது எப்போதாவது நேரிடுகிறது. வட்டாரச் சொல் அகராதியை நாட வேண்டிய இக்கட்டும் ஏற்படலாம்.

**வட்டார வழக்கு - ஒரு சிக்கல்**

ஒரு படைப்பில் ஆசிரியர் பேசுமிடங்களில் இலக்கிய வழக்கும், உரையாடற் பகுதிகளில் பேச்சு வழக்கும் அமைந்திருத்தல் பொதுவானது. **கதை சொல்லி** எப்படிச் சொன்னானோ அதைப் போலவே எழுத வேண்டுமே தவிர, அதனை இலக்கணச் சுத்தத்துடன் மாற்றி எழுதக்கூடாது என்பது கி.ரா. போன்றோரின் வாதம். 'ஒரு ஊரில் மன்னனுக்கு வயதாகிவிட்டதால் தன் மகனை அழைத்தார்' என்ற தொடர் 'ஒரு வூர்ல ராசாவுக்கு வயசாச்சில்ல; அதனாலே தம் பயலைக் கூப்டார்' என்று பேச்சு வழக்கிலேயே அமைய வேண்டுமென்பது கருத்து. இதைப்போன்று சில கதைத் தொகுப்புகளும் வந்துள்ளன. இதனைத் தொடர்ந்து வரும் நிலைதான் சிக்கலுக்குரியது. பிறர் சொல்ல மற்றவர் எழுதும் கதைகளுக்கு இது சரியாகலாம். ஆனால் ஓர் எழுத்தாளர் தாமே எழுதும் கதை, நாடகம், புதினம் இவற்றில் இடவண்ணனை, நிகழ்ச்சி விவரிப்பு போன்ற இடங்களிலும் பேச்சு வழக்கினையே பயன்படுத்தத் தொடங்கியுள்ளனர். இது சரியானதன்று என்பது திறனாளிகள் பலரின் முறையீடு. பாத்திரங்கள் வட்டார வழக்கினைப் பயன்படுத்துதல் தேவையே. ஆனால் எழுத்தாளன் பொதுவானவன். எனவே பொதுத் தமிழ் அல்லது இலக்கியத் தமிழில் எழுத வேண்டுமே தவிர அவனும் வட்டார வழக்குகளை நூலெங்கும் பேசக் கூடாது என்பது இன்றைக்குச் சிந்தனைக்காகக் காத்துள்ள சிக்கல்..

இவ்வாறு, தொல்காப்பியர் காலந்தொடங்கித் தமிழில் இருநிலை வழக்குகள் இடம்பெற்றுள்ளமையையும், விடுதலைக்கு முன்பே சமூகப் பிரிப்பு வட்டாரம், நிலப்பிரிப்பு வட்டாரம் இரண்டையும் பயன்படுத்தி இலக்கியங்கள் எழுந்துள்ளமையையும், பின்னர் ஐந்து வட்டாரங்களாகத் தமிழ் நிலம் பிரிக்கப்பட்டு அவ்வவ்வட்டார இலக்கியங்கள் இடம் பெற்றிருப்பது கண்டறியப் பெற்றுள்ளமையையும், வட்டார இலக்கியம் என்று ஒன்றில்லை என்ற வாதம் எழுந்துள்ளமையையும், மாந்தர்களின் பேச்சுகளுக்கப்பால் கதை விவரிப்பிடங்களில் படைப்பாளி வட்டார வழக்கில் பேசலாமா என்ற சிக்கல் உருவாகியுள்ளமையையும் விடுதலைக்குப் பின்பான தமிழிலக்கியச் செல்நெறிகளில் வட்டார வழக்கியல் பகுதியில் முன்வைக்க முடிகின்றது.

### குறிப்புகள்

1. கோ. சீனிவாச வர்மா, 'இருநிலை வழக்கு', இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்ற *13*ஆவது **ஆய்வுக்கோவை,** தொகுதி-*2, 1981,* பக்.*344-345.*
2. ஜெ. நீதிவாணன், 'தொல்காப்பியத்துள் வட்டார வழக்குக் கூறுகள்' **வையை மலர் - 4,** மதுரைப் பல்கலைக் கழகம், *1977,* பக். *4-5.*
3. ம. கணேசன், 'Varieties of Speech in Tamil' மேற்குறித்த இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்ற **ஆய்வுக் கோவை,** ப. *61.*
4. ஜெ. நீதிவாணன், முற்சுட்டிய கட்டுரை, ப. *15.*
5. உ. கஸ்தூரி காந்தி, **நாட்டார் வாழ்வியலும் பண்பாடும்,** பக். *67-69.*
6. புஷ்பவல்லி, 'பேச்சுத் தமிழில் வேற்றுமை அமைப்பு', இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்ற பதினொராவது கருத்தரங்க **ஆய்வுக் கோவை,** தொகுதி-*2, 1979,* ப. *279.*
7. மேலது, ப. *281.*
8. சு. சண்முகசுந்தரம், **தமிழில் வட்டார நாவல்கள்,** ப. *128.*
9. மேலது, ப. *119.*
10. மேலது, ப. *106.*
11. மேலது, ப. *108.*
12. மேலது, ப. *120.*
13. மேலது, பக். *63-64.*
14. மேலது, ப. *14.*

15. மேலது, ப. 22.

16. மேலது, ப. 1.

17. மேலது, ப. 2.

18. மேலது, ப. 3.

19. மேலது.

20. மேலது.

21. மேலது, ப. 4.

# உரைநடை - நடையியல்

அ. ஆலிஸ்

பேச்சு மொழி, எழுத்து மொழி ஆகிய இரண்டன் மூலமும் நிகழ்த்தப்படுகின்ற கருத்துப் பரிமாற்றங்களின் தலையாய நோக்கம் செய்தி தெரிவித்தல் என்பதுவே ஆகும். எனினும் எழுத்து மொழியில் மொழி கையாளப்படும் பான்மை மாறுபடுகிறது. எழுத்து மொழியில் குறிப்பாகப் படைப்பிலக்கிய மொழியில் பேச்சு மொழியினின்று மாறுபட்டு மெருகூட்டியோ அல்லது பொதுவாகச் சில திட்டப்பாங்குகளைக் கைக்கொண்டோ கேட்போனைப் பாதிக்கும் வகையில் செய்தி தெரிவித்தல் என்ற போக்கே மிகுதியாகக் கையாளப்படுகிறது. இலக்கிய மொழியில் கூறுவோன் தான் கூறவரும் கருத்தை வெளிப்படுத்தத் தெரிந்து கொண்ட இலக்கிய வடிவத்துக்கேற்ற வகையில் கேட்போனை ஈர்த்து இறுதிவரை அச்செய்தியுடன் ஒன்ற வைக்கும் ஒரு நோக்கம் முதன்மையாகின்றது.

இந்த நோக்கத்திற்கேற்பக் கேட்போனை ஈர்க்கும் வண்ணம் தன் கருத்தை வெளிப்படுத்தக் கூறுவோன் கையாளும் கூறுகள் ஒருவரது கருத்து வெளிப்பாட்டு முறையிலிருந்து மற்றொருவரது கருத்து வெளிப்பாட்டு முறையை வேறுபடுத்துகின்றன. இவ்வகையில் தான் எடுத்துக் கொண்ட கருத்தைக் கேட்போனை ஈர்க்கும் வண்ணம் வெளிப் படுத்த ஒருவர் கையாளும் கூறுகள் அவரது நடைக்கூறுகளோடு பெரிதும் தொடர்புடையன ஆவன. படைப்பிலக்கியங்களுள் நாவல், சிறுகதை, கட்டுரை ஆகிய இலக்கியங்களை விடவும் கவிதை மொழியின் அமைப்பு மாறுபட்ட, திட்டமிட்டு ஆக்கப்படும் கூறுகளைக் கொண்டு விளங்குகிறது.

விடுதலைக்குப் பின்னர் வெளிவந்த தமிழ் இலக்கியங்களின் செல்நெறிகளை நடையியல் நோக்கில் கணிக்க முயன்றோமாயின் வாசகனைக் கவரும் வகையில் சொல்லத் தெரிந்த - செய்தியைச் சென்று சேர்க்கும் வகையில் சொல்லத் தெரிந்த குறிப்பிட்ட எழுத்தாளர்களை மையமாகக் கொண்டே இப்போக்கினைக் கணிக்க இயலுகிறது. 'நடை என்றால் என்ன என்ற கேள்விக்கான விடை எல்லோரும் ஒத்துக் கொள்ளக் கூடியதாக இதுவரை எதுவும் கிட்டவில்லை.... எனினும் 'கரு-உரு' ஆகியவற்றுக்கிடையே காணப்படும் உறவு எத்தகைய உத்திகளால் பின்னப்படுகிறதோ அவ்வுத்திகளின் ஒட்டு மொத்தத்தை நடைக்கூறுகளாக ஏற்றுக் கொள்ளலாம்.. தெரிவுகள், அனுபவங்களின் பாதிப்புகள், மொழியின் கட்டமைப்பு ஆகியவை படைப்பாளிகளுக்கிடையே இக்கூறுகளின் வேறுபாட்டிற்குக் காரணமாகின்றன. அவ்வேறுபாடே ஒரு படைப்பாளியின் தனிநடையாகிறது'[1] என்ற ஜெ. நீதிவாணனின் கருத்து நடைக்கூறுகள் எவை என்பது பற்றியும் அக்கூறுகளுக்கான காரணிகள் பற்றியும் விளக்குகிறது. தமிழில் வெளிவந்த நாவல் இலக்கியத்தின் மொழிநடை பற்றிப் பேசும் இரபிசிங் 'நாவல் என்பதற்குப் பல்வேறு வகையாக விளக்கங்களும் வரன்முறைகளும் கூறப்பட்டாலும் ஆங்கிலத்தில் Readable என்று சொல்லப்படுகிறது. சுவை குன்றாது தொடர்ந்து படிக்கத் தூண்டும் ஆற்றொழுக்கான நடையையும் சிறப்பாக எடுத்து விளக்கும் முறையையும் (Narration), யதார்த்தத் தன்மையையும் (Realism) கொண்ட நாவல்களே நல்ல நாவல்களாகக் கருதப்படுகின்றன'[2] என்று கூறுகிறார். இத்தகைய நடைக்கோட்பாட்டு அடிப்படைகளில் விடுதலைக்குப் பின்னர் வெளிவந்த புனைகதை இலக்கியமாம் நாவல் இலக்கியத்தினை மதிப்பிடுவது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

தமிழில் சமூக நாவல்களின் போக்கினை மதிப்பிடும் தா.வே. வீராசாமி, 'சமூக நாவல்களின் போக்கிலே தொடக்க காலத்தில் எழுந்த சீர்திருத்தப் போக்கு, இடைக்காலப் பகுதியில் எழுந்த அரசியல் போக்கிற்கு இடமளிப்பதைப் பார்க்கிறோம். விடுதலை பெற்ற பின் சமூகத்தை ஒரு குறிப்பிட்ட நெறியுடைமைக்குள் செலுத்துகின்ற போக்கின் ஒரு கிளையையும் தனிமனித விருப்பப்படி எண்ணிய எண்ணங்களைக் 'கனவு மாலை'யாக்கி எதற்கும் கட்டுப்படாத காற்றுப் போலத் திரியும் நெறியின்மைக்குள் படர்கின்ற போக்கின் மற்றொரு கிளையையும் காண்கின்றோம்'[3] என்பார். இவர்தம் கூற்று விடுதலைக்குப் பிந்திய காலகட்டத்தில் நாவல்கள் நெறியுடைமை, நெறியின்மை என்ற இரு போக்கில் சென்றதைக் குறிப்பிட்டுக் காட்டுகின்றது. பாரதி, பாரதிதாசன் கவிதைகளை ஆராயும் சி. கனகசபாபதி, விடுதலைக்குப் பிந்திய காலகட்டத்தினை இந்திய விடுதலையின் முதல் காலகட்டம் *(1947-57)* என்றும், இரண்டாம் காலகட்டம் *(1957-64)* என்றும்[4] பிரிப்பார். விடுதலைக்கு முன்னர் அய்ரோப்பியர் வரவால் ஏற்பட்ட ஆங்கிலக் கல்வியும் சிந்தனைப் புரட்சியும் ஏற்படுத்திய மாற்றங்களும் பாரதியாரின் எளிய தமிழ்ப் பண்பாடும் திரு. வி.க. உரைநடையில் கொண்டு வந்த எளிமையும் அனைத்துப்

படைப்பிலக்கியங்களிலும் எளிமையைக் கொண்டுவந்தன. இந்தியா சுதந்திரம் பெற்ற பின்னர் நம் நாட்டில் நிலவிவரும் அரசியல், சமூகப் பின்னணிகள் பற்றிப் பேசும் ஆ. வேலுப்பிள்ளையின் கருத்துக்களுள் பின்வருவன குறிப்பிடத்தக்கன. 'விடுதலையை இலக்காக வைத்து வளர்ந்து வந்த காங்கிரஸுக்கு விடுதலைக்குப் பின்னர் இலட்சியம் இல்லாது போயிற்று..... செல்வர் சிலர் பெருஞ் செல்வராகின்றனர். சமூகத்திலுள்ள ஏற்றத் தாழ்வுகள் முன்னிலும் பார்க்க அதிகமாக வளர்கின்றன. பொதுவுடைமைக் கட்சியானது சமூகப் பொருளாதாரப் பிரச்சினைகளுக்கு வர்க்க பேதங்களைக் காரணம் காட்டிப் புரட்சியைப் போதிக்கிறது. திராவிட கழகத்திலிருந்து பிரிந்த திராவிட முன்னேற்றக் கழகம் தமிழ்நாட்டின் சமூக பொருளாதாரப் பிரச்சினைகளுக்கு வடவரின் சுரண்டலே காரணம் எனப் போதித்தது. பார்ப்பனியத்தை எதிர்ப்பதையும் திராவிட நாடு நிறுவுவதையும் இலட்சியங்களாகக் கொண்டு பணியாற்றியது; அண்ணாத் துரை, கருணாநிதி முதலியோரின் பேச்சும் எழுத்தும் தமிழ்நாட்டில் ஒருவித பாதிப்பை ஏற்படுத்தின. தமிழ்நாட்டு வாசகர் தொகை பெருகுகிறது. மத்திய தர வகுப்பினைச் சித்திரித்துக் கொண்டு வந்த தமிழ் இலக்கியம் தொழிலாள வகுப்பினரதும், பாட்டாளிகளதும் வாழ்க்கையைச் சித்திரிக்கத் தொடங்கியது........ இருபதாண்டுகளாகத் தொடர்ந்த காங்கிரஸ் ஆட்சியில் பெருகிவந்த ஊழல்கள், மத்திய தர வகுப்பினரையும் தொழிலாளரையும் விவசாயிகளையும் கலக்கிய வேலை இல்லாத் திண்டாட்டம், விலைவாசி ஏற்றம், வாழ்க்கைச் செலவேற்றம், உணவுத் தட்டுப்பாடு முதலிய பொருளாதாரப் பிரச்சினைகள், உணர்ச்சியைத் தூண்டும் மொழிப் பிரச்சினை இவையாவும் மக்கள் மனதில் ஆட்சிமாற்றத்தின் தேவையை உணர்த்தின. *1967* ஆம் ஆண்டு நடந்த தேர்தலில் தி.மு.க. பெரும் வெற்றிப் பெற்றுப் பதவியேற்றிருக்கிறது. அது சோஷலிஸ்ட் சமூக அமைப்பை வலியுறுத்திவருகிறது. பகுத்தறிவைப் போற்றி வருகிறது. உலகில் இப்போது நடப்பது அறிவியல் யுகம்'[5] என்று விளக்குகிறார். இத்தகைய அரசியல், சமூகப் பிரச்சினைகள் தமிழ்ப் புனைகதை இலக்கியங்களில் அதிக அளவில் வெளிப்படுத்தப்பட்டுள்ளன. இப்பின்னணியிலேயே தமிழ் நாவல் இலக்கியத்தின் நடையினை நாம் கணிக்க வேண்டியிருக்கிறது.

உரைநடை இலக்கியம் தோன்றி வளர்வதற்கு முன் செய்யுளுக்கு இருந்த செல்வாக்குக் குறைத்து மதிப்பிடுவதற்கு உரிய ஒன்றன்று. கவிதை, சிறுகதை, நாவல், கட்டுரை ஆகிய இலக்கியங்களின் நடை வரலாற்றைக் காலந்தோறும் பார்க்கிறபோது தமிழில் இலக்கிய நடை காலந்தோறும் மாறுபட்டிருக்கும் உண்மை புலனாகிறது. இந்த மாற்றங்களை நிர்ணயிக்கும் காரணிகள் பல. அவை:

1. புதுமை வேட்கை உள்ள இலக்கியப் படைப்பாளிகளின் எழுச்சி
2. குறிப்பிடத்தக்க சமூக இயக்கங்களின் செல்வாக்கும் பரவலும்
3. மக்களின் வாழ்க்கையில் உள்ள ஏற்றத்தாழ்வுகளையும் சமுதாய அமைப்பு சார்ந்த குற்றங்களையும் ஊழல்களையும் அவலங்களையும் போக்கவேண்டும் என்ற சிந்தனைப் புரட்சி

4. அச்சு இயந்திரங்களின் பெருக்கத்தால் ஏற்பட்டுள்ள வாசகர் பெருக்கம்

5. வாசகர்களின் இலக்கியச் சுவைப்புத்தரம்

6. மக்கள் தகவல் தொடர்பு சாதனங்களுள் ஒன்றாகிய தொலைக் காட்சி ஏற்படுத்தியுள்ள பாதிப்பு

7. சமுதாயத்தில் ஏற்படும் மதிப்பு மாற்றங்கள்

8. ஒடுக்கப்பட்டோரிடையே ஏற்படும் விழிப்புணர்வும் எழுச்சியும்

மேற்குறிப்பிட்ட சூழல்கள் சமுதாயத்தில் நிகழும்போது அவற்றின் தாக்கம் இலக்கியங்களில் பிரதிபலிக்கப்பட்டோ அல்லது மக்களைப் பாதித்ததன் விளைவாகவோ இலக்கிய மொழிநடையும் மாற்றம் பெற்றே வந்திருக்கிறது. இந்நிலை நாவல் இலக்கிய நடையில் தெளிவாகப் புலனாகிறது.

இந்த நூற்றாண்டின் கவிதைப் போக்கை மாற்றிய இரு பெருங்கவிஞர்களாகிய பாரதி, பாரதிதாசன் ஆகியவர்களுள் பாரதி, **சுவை புதிது; பொருள் புதிது; வளம் புதிது; சோதி மிக்க நவகவிதை** என்று தன் கவிதைக்குத் தந்த விளக்கம் கவிதைக்குப் பொருளாகிய உள்ளடக்கமும் கவிதையின் வடிவத்திற்கு உறுதுணை புரியும் சொல்லும் புதிதாய் அமைய வேண்டும் என்ற கருத்தை முன் வைக்கிறது. 'ஒரு படைப்பின் சிறப்புக்கு அதனுள் பயன்படுத்தப்படும் சொற்களும் இன்றியமையாத காரணங்களாகின்றன. சொற்களின் தேர்வு, பயன்படுத்தும் முறை, புதியவற்றை ஆக்கும் திறமை, புதிய பொருளை ஏற்கும் திறமை முதலியவை இன்றியமையாத நடையியல் உத்திகளாகும்'[6] என்ற விளக்கத்திற்கிணங்கப் பாரதியாரின் கவிதைகள் தகுந்த சொற் பயன்பாட்டையும் தேவைப்படுமிடத்துச் சொற்கள் புதிய பொருளையும் கொண்டிலங்கின.

இதே நிலை பின்னர் வளர்ந்து உரைநடைக் காலமாகிய தற்காலச் சூழலில் கவிதைத் துறையிலும் உரைநடையின் செல்வாக்கு பரவி, ஜனநாயகத்தில் விளைந்த தனிமனிதச் சுதந்திரத்தால் புதுக்கவிதைகளில் உள்ளடக்கம், உருவம் இரண்டும் ஒருசேர மாற்றம் பெற்றன. விளைவாகப் புதிய நடையியல் உத்திகள் கிடைத்தன.

நாவல் இலக்கியத்தில் ஆரம்ப கால நாவல்களில் முதல் நாவலாகிய மாயூரம் வேதநாயகம் பிள்ளையின் *(1824-89)* **பிரதாப முதலியார் சரித்திரத்**தில் இருந்த கட்டுரைத் தன்மையும் வடமொழிச் சொற்கள் கலந்த மணிப்பிரவாள நடையும், பி.எஸ். இராஜமய்யர், அ. மாதவையா போன்றோரின் நாவல்களிலும் தொடர்கின்றன. வேதநாயகம் பிள்ளையின் **பிரதாப முதலியார் சரித்திரம்** ஒரு தனிநடையைத் தனக்கெனத் தோற்றுவித்துக்கொண்டது என்று சொல்லும் வகையில் அமையவில்லை. அப்போதிருந்த உரைநடையை வேதநாயகம் பிள்ளை அப்படியே

பயன்படுத்தியிருக்கிறார். இவர் நடையில் கட்டுரைத் தன்மையும் வடமொழிச் சொற்கலப்பும் இருப்பதைக் காணலாம்.

சான்று :

> **ஊர் முழுவதும் மகா தோரணங்கள் கட்டி, வாழை கமுகுகள் நாட்டி, பந்தல் அலங்கரித்து, மணமகனையும், மணமகளையும் சுகந்த பனிநீரால் திருமஞ்சனம் சூட்டி, திவ்யமான வஸ்திராபரணங்கள் பூட்டி, ஸ்வர்ணமயமாயும் நவரத்தின கஜிதமாயும் அலங்கரிக்கப்பட்ட கலியாண மண்டபத்தில், கோடி சூரியர்கள் போல தீப கோடிகள் பிரகாசிக்க, சமுத்திர கோஷம் போல நானா பேத மங்கள வாத்யங்கள் முழங்க, மயிற் கூட்டங்கள் போல் நாட்டியப் பெண்கள் நடனம் செய்ய, குயிற்கூட்டங்கள் போல் பாடினிகள் சுப சோபனம் பாட, கோதானம், பூதானம் முதலிய மாதானங்களுடன் கனகசபையின் கலியாணம் நடந்தேறியது**

(பிரதாப முதலியார் சரித்திரம், பக். *139-140*).

இக்காலகட்டத்தில் அந்தண எழுத்தாளர்கள் தம் அந்தணப் பேச்சு வழக்கினை அப்படியே தம் எழுத்துக்களில் கையாண்டதனால் கட்டுரைத் தன்மையினூடே பேச்சு வழக்கும் விரவி வருவதாய் நடை அமைந்தது.

*1935* வரை ஏறக்குறைய *43* நாவல்கள் எழுதியிருந்த ஆரணி குப்புசாமி முதலியாரின் நடை வடமொழிக்கலப்பு, அவர்காலப் பேச்சுவழக்கு முதலியன கலந்து எளிய தன்மையை உடையதாய் அமைந்திருந்தது. வடுவூர் துரைசாமி அய்யங்காரின் *(1910-35)* நடையும் தெளிவுடன் கூடிய வசன நடையாக இருந்தது. 'தமிழ் வசனத்துக்காக யார் யாரையோ யார் யாரோ எது எதற்காகவோ புகழ்கிறார்கள்; ஆனால் தமிழ் வசன வளர்ச்சியிலே வடுவூர் துரைசாமி அய்யங்காருக்கு நிரந்தரமான இடம் உண்டு என்பது என் அபிப்பிராயம். கல்கிக்கு முன் இவ்வளவு தெளிவுடனும் அழகுடனும் வசனம் எழுதியவர்கள் வடுவூராரைத் தவிர வேறு யாருமில்லை என்றே சொல்லலாம்'[7] என்ற க.நா. சுப்பிரமணியத்தின் கருத்து இங்கு எண்ணிப்பார்க்கத்தக்கது.

மறைமலையடிகளார் *(1876-1950)* ஏற்படுத்திய **தனித்தமிழ் இயக்கம்** தமிழ் உரைநடையில் குறிப்பிடத்தக்க மாற்றத்தை ஏற்படுத்தியது. இவர் வடசொற்களைத் தவிர்த்து எழுதுமாறு வலியுறுத்திய தனித்தமிழ் நடை எளிமையுடையதாய் அமைந்தது. தனித்தமிழில் எழுத முயன்றதால் புதுச் சொல்லாக்கங்கள் இவரது படைப்புக்களில் கிடைத்தன. இவரது 'தனித்தமிழ் இயக்கத்தில் ஈடுபாடு கொண்ட திராவிட இயக்க எழுத்தாளர்கள் இயன்ற அளவுக்கு வடமொழிச் சொற்களை நீக்கித் தனித் தமிழ்ச் சொற்களை உரைநடையில் பயன்படுத்தினர். நமஸ்கரித்தவர்கள் வணங்கத் தொடங்கி, அபேட்சகர் வேட்பாளராகி, கனம் மாண்பாகமாறி,

காரியதரிசி செயலர் என்றாகி, பிரசங்கம் செய்தவர் சொற்பொழிவாற்றத் தொடங்கிய புதிய சூழல் இவ்வியக்கத்தாரின் மீட்சி வாதப்போக்காலும் மொழிப்பற்றாலும் ஏற்பட்டது'[8] என்ற கூற்று, திராவிட இயக்கத்தவரின் மொழிநடையில் ஏற்பட்ட மாற்றத்தில் தனித்தமிழ் இயக்கத்தின் பங்களிப்பைப் புலப்படுத்துகிறது. திராவிட இயக்கத்தைச் சேர்ந்த அறிஞர் அண்ணாதுரை, கலைஞர் மு. கருணாநிதி, தில்லை வில்லாளன், ஏ.வி.பி. ஆசைத்தம்பி போன்றோரின் நடை மிகவும் குறிப்பிடத்தக்கனவாய் அமைந்தன. 'தனித் தமிழ் இயக்கத்தினர் கையாண்ட தனித்தமிழ் நடை கற்ற புலவர்களிடையே மட்டும் நிலவியது. திராவிட இயக்கங்களினால்தான் நல்ல தமிழ்நடை பொதுமக்களிடையே பரவியது'[9] என்பர். இவ்வகையில் தமிழ் உரைநடை வரலாற்றில் திராவிட இயக்கங்களின் உரைநடை குறிப்பிடத்தக்க தொன்றாகிறது.

அண்ணாதுரை, கருணாநிதி போன்றோர் தம் படைப்புக்களில் கையாண்ட மொழிநடையில் ஏற்படுத்திக் கொண்ட உத்திகள் குறிப்பிட்டுச் சொல்லத்தக்கனவாய் அமைந்தன. சீர்திருத்தக் கருத்துக்களைப் பரப்பும் நோக்கில் இவர்கள் நாவல்கள் படைத்தனர். திராவிட இயக்க எழுத்தாளர்களுள் அண்ணாதுரை கையாண்ட அடுக்கு மொழியும் மரபுத் தொடர்களும் வருணனைகளும் மக்களைக் கவர்ந்தன. அடைமொழி, உவமைகள், ஒட்டுக்கள், வினைச்சொல் முதலிலும் எழுவாய் ஈற்றிலுமான தொடர் அமைப்புக்கள், பழைய சொற்களுக்குப் புதிய பொருள் தருதல், புதுச்சொற்களை உருவாக்குதல் முதலிய கூறுகளைத் தம் நடையில் பயன்படுத்தியதன் விளைவு இவர்கள் படைப்புக்கள் பாமரர்களைச் சென்று சேர்ந்தன. சமுதாயச் சீர்திருத்தத்தை முன்வைத்து எழுதிய அண்ணாவின் நடை அடுக்குத்தொடர், வினாத்தொடரின் தொடர்ச்சி, எழுவாய் பயனிலையின் வரிசைமுறை மாற்றம், முரண்தொடர், புரட்டன், எத்தன், ஏமாளி போன்ற குறிப்பிடத்தக்க சொல்லாட்சி முதலியன அமைந்து மக்களை ஈர்க்கும் கவர்ச்சி நடையாக வெளிப்பட்டது.

கலைஞர் கருணாநிதியின் படைப்பிலக்கியங்களில் எத்திப் பிழைப்போர், கட்டாணி முத்தாள், குள்ளநரிச்செயல், கூனல் உள்ளம், சிறு நரி முதலியன கவிதைப் படைப்புக்களிலும் 'குலத்தைக் கெடுக்க வந்த கோடரிக் காம்பு', 'தலையில் சம்மட்டி கொண்டு அடித்தது போல்', 'மலைக்கும் மடுவுக்குமென', 'புளகாங்கிதம் அடைந்தார்', 'சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி பொழிந்தது போல' போன்ற சொற்றொடர்கள் உரைநடை இலக்கியங்களிலும் அவர் விரும்பிப் பயன்படுத்தும் கூறுகளாக அமைவதைக் காணலாம். கலைஞரின் **சாரப்பள்ளம் சாமுண்டி** என்ற கதையிலிருந்து ஒரு பகுதி பின்வருமாறு:

> **கிழவி அழகி அவனருகே வந்தாள். அவளைப் பார்த்த இனியனின் கண்கள் அவளுக்குப் பின்னால் நின்ற அழகிய பெண்மீது பாய்ந்தன. தங்கமேனி, தாமரை முகம், நீலக்குறு நயனம், கோலச் செவ்வாய், வில்போல்**

புருவம், விம்மிய மார்பகம், ஆலிலை வயிறு, நூலிழை இடை இத்தனை அழகையும் இனியன் ஒரே பார்வையில் மொண்டுவிட்டான், அது சிற்பியின் கலைக் கண்ணோட்டமே தவிர சித்தம் பேதலித்தவனின் காமவெறியாட்டமல்ல

(கலைஞர் கருணாநிதி, அரும்பு, பக். *38-39*)

என்ற பகுதியில் கவிதை நடை கலந்த வர்ணனை பெயர்த் தொடராக அமைந்து சுவை பயக்கிறது. கலைக் கண்ணோட்டம், காம வெறியாட்டம் போன்ற முரண் சொற்கள் குறிப்பிடத்தக்கன.

தமிழ் நாவல் நடை வரலாற்றில், இளஞாயிற்றின் உதயமென வந்து மறுமலர்ச்சி தந்தவர் என்று போற்றப்படுபவர் கல்கி. கல்கியின் வரலாற்று நாவல்கள், சமூக நாவல்கள், **ஏட்டிக்குப் போட்டி** போன்ற உரைநடைத் தொடர்கள் எதுவாயினும் அவர்தம் நடைமுறையில் இருந்த ஒருவித கவர்ச்சி முக்கியமானதாக அமைந்தது. பொதுவாக நாவல் நடையில் குறிப்பிடத்தக்க இருநடைகள் அமையும். அவை *1.* விளக்க நடை, *2.* விவரிப்பு நடை. ‘விளக்க நடை விரித்தல் உத்திகளைப் பெரிதும் கையாண்டு எடுத்துக் கொண்ட பொருளை விளக்கமாகச் சொல்லப் பயன்படுகிறது.......... ஒரு தோற்றம் அல்லது பின்னணியை அப்படியே படம் பிடித்துக் காட்டவும் பாத்திரப் படைப்பைச் சிறப்பாக ஆக்குவதற்கும் இந்நடை பயன்படுகிறது........ வாசகர்களுக்குச் சலிப்பேற்றக் கூடிய அளவுக்கு விளக்க நடை பயன்படுத்தலாகாது. அவ்வேளைகளில் ஒரு வாசகர் சில பகுதிகளை அப்படியே படிக்காமல் ஒதுக்கிவிட்டுச் சென்றாலும், எதனையும் இழப்பதில்லை’[10] என்பர். இதற்கு நேர்மாறாக விவரிப்பு நடை நாவலின் நிகழ்ச்சிகள் சங்கிலித் தொடர் போன்று கூறப்படவும் கதையோட்டத்தை நடத்திச் செல்லவும் பயன்படும். விவரிப்பு நடையின் ஏதேனும் ஒரு பகுதியை நாவலில் நீக்கினாலும் கருத்தோட்டம் தடைபடும். இத்தகைய விவரிப்பு நடை நாவலின் உயிரோட்டமான பகுதி ஆகும்.

கல்கி, சாண்டில்யன் போன்றோரின் வரலாற்று நாவல்களில் இவ்விருநடைகளும் விரவி வரினும் விவரிப்பு நடை மிகுதியாக அமைகிறது. கல்கியின் மொழிநடையில் *1.* ஆசிரியர் கூற்றில் அமையும் வருணனை, கற்பனை, ஒப்பீடு கலந்த விளக்க நடை, *2.* விவரிப்பு நடை, *3.* இயல்பான உரையாடல் மொழி, *4.* ஒலிக்குறிப்புச் சொற்கள், வியப்புச் சொற்கள், வடசொற்கள், பேச்சு வழக்கு முதலியன கலந்த குறிப்பிட்ட சொல்லாட்சி முறை, *5.* அடுக்கி வரும் வினாத் தொடரைப் பயன்படுத்துதல் மூலம் உணர்வுப் புலப்பாடு, *6.* முரண்பாட்டைத் தெரிவிக்கும் ஒப்பீட்டு நடை, *7.* வரலாற்று நாவலாக மாற்றுவதற்கென்றே பயன்படுத்தப்படும் திட்டப் பாங்குகள், *8.* ஒட்டு மொத்தமாக அமைக்கப்படும் ஒருவித எளிமையானதும் பெரும்பாலான வாசகர்களை ஈர்ப்பதுமான ஜனரஞ்சகமான ஈர்ப்பு நடை முதலிய கூறுகள் பின்னிப் பிணைந்து பெரும்பாலான வாசகர்களை அவரது காலகட்டத்தில் ஈர்க்கும் விதத்தில் அமைந்தன.

> **காவேரி தீரம் அமைதி கொண்டு விளங்கிற்று, உதய சூரியன் செம்பொற் கிரணங்களால் நதியின் செந்நீர்ப் பிரவாகம் பொன்னிறம் பெற்றுத் திகழ்ந்தது. அந்தப் புண்ணிய நதிக்குப் 'பொன்னி' என்னும் பெயர் அந்த வேளையில் மிகப் பொருத்தமாய்த் தோன்றியது. சுழிகள் சுழல்களுடனே விரைந்து சென்று கொண்டிருந்த அந்தப் பிரவாகத்தின் மீது காலை இளங்காற்று தவழ்ந்து விளையாடி இந்திரஜால வித்தைகள் காட்டிக் கொண்டிருந்தது**
>
> (கல்கி, பார்த்திபன் கனவு, ப. *1*)

போன்ற வர்ணனைகள் கல்கியின் நடையில் இன்றியமையாதனவாயின. கல்கியின் வருணனைச் சிறப்பு, பாத்திர உருவாக்கம், உரையாடல் அமைக்கும் பாங்கு முதலியன பொதுமக்களான தம் வாசகர் வட்டத்தைச் சற்றும் மறக்காமல் மக்கள் செல்வாக்குப் பெற்ற, எளிய மற்றும் கவர்ச்சியான மொழிநடையாலேயே அமைக்கப்பட்டமை கல்கியின் வெற்றிக்குக் காரணமாக அமைந்தது.

கல்கிக்குப் பின்னர் மு.வ.வின் படைப்புகள் பழந்தமிழ் இலக்கியம், தனித்தமிழ் இயக்கம், திராவிட இயக்கம் முதலியவற்றில் அவர் கொண்டிருந்த ஈடுபாட்டினை வெளிப்படுத்தி ஓர் எளிய மொழி நடை கொண்டனவாய் அமைந்தன. இவருக்கென ஓர் இளம் வாசகர் வட்டம் அமைந்தது. மு.வ.வின் நடையில் தூய தமிழ்ச் சொற் பயன்பாடு இருந்தது. எனினும் நடையில் எளிமையும் இருந்தது குறிப்பிடத்தக்கது. **அகல் விளக்கில்** மாணவப்பருவக் கல்லூரி வாழ்க்கைக்கும் வெளி வாழ்க்கைக்கும் உள்ள முரண்பாடு பின்வருமாறு விளக்கப்படுவது இவர் நடைக்குச் சான்றாகும்.

> **கல்லூரியில் படித்த காலத்தில் அது ஓர் அறை என்றும் படித்து முடித்த பிறகு புகும் உலகம் திறந்த வெளி என்றும் கற்பனை செய்து கொண்டிருந்தேன். தங்கையின் திருமணப் பேச்சும் அவற்றை ஒட்டிய சிக்கல்களும் எனக்கு உண்மையை உணர்த்தின. நான் இதுவரையில் இருந்ததுதான் திறந்தவெளி என்றும் இப்போது புகும் வாழ்க்கைதான் புழுக்கம் மிகுந்த அறை என்றும் உணர்ந்தேன்**
>
> (மு.வ. அகல் விளக்கு, ப. *277*)

இப்பகுதியில் எளிமையும் மொழிக்கலப்பற்ற தன்மையும் புலனாகின்றன.

காந்தியத் தாக்கம் பெற்று எழுதிய எழுத்தாளர்களின் மொழி நடையில் பேச்சு மொழியும் இலக்கிய மொழியும் விரவி வந்த பான்மையினைப் பார்க்க முடிகிறது. கல்கி, அகிலன், நா. பார்த்தசாரதி போன்றோர் இவ்வகையில் அடங்குவர். முந்தைய நடைகளிலிருந்து மாறுபட்ட ஆனால் பொதுவான ஒரு தமிழ் என்று சொல்லுமளவிற்குப் பொதுத் தமிழை இவர்கள் கையாண்டனர். இவர்களுள் கல்கி தனது நடையைக்

கவர்ச்சிகரமானதாக மாற்றிக்கொண்டார். நா.பா.வின் எழுத்துக்களில் இலக்கியச் சாயலைக் காணலாம். சென்னையை வருணிக்கும்போது,

> ....... இப்படி மழைக்குப் பயப்படுகிற பட்டிணத்திற்கு எதற்காக மழை வேண்டும்? ஆனால் முத்துக் குமரனுக்கோ மழையில் நனைந்த பட்டினம் மிகமிக அழகாகத் தெரிந்தது. நீராடி நனைந்த புடவையோடு நாணிக்கோணித் தயங்கி நிற்கும் ஒரு சுந்தரியைப் போல் அன்று சென்னை அழகாயிருப்பதாக அவனுக்குத் தோன்றியது. புகை போன்ற மேக மூட்டத்தில் கட்டிடங் களும் சாலைகளும் மரங்களும் மங்கலாகத் தெரிந்தன
>
> (நா. பார்த்தசாரதி, சமுதாய வீதி, ப. 7)

என்று வருணிக்கும் பகுதி சான்றாகும். நாகரிக வாழ்வின் போலித் தனத்தையும் அவசர யுகத்தையும் நகர வாழ்வின் குற்றங்குறைகளையும் மொத்தத்தில் சமூகத்தின் போலித்தனத்தை எடுத்துக்காட்டும் முறை இவருடைய பாணியாக அமைகின்றது. அகிலனின் எழுத்தில் பேச்சு நடை, வட்டாரப் பேச்சு வழக்கு, சாதிப் பேச்சு வழக்கு, தொழில் வழக்கு முதலியன கலந்தும் இவற்றோடு எளிய செந்தமிழ் நடை விரவியும் வரும் பாங்கினைக் காணலாம்.

நடுத்தர வர்க்க மக்களின் வாழ்க்கையை மட்டும் அடிப்படையாகக் கொள்ளாமல் சேரியில் வாழும் மக்களையும் மையமாக வைத்து எழுதியவர் ஜெயகாந்தன். ஆங்கில மொழிச் சொற்கலப்பைப் பற்றிக் கவலைப்படாமல் அச்சொற்களைத் தம் எழுத்துக்களில் சேர்த்து எழுதினார் இவர். நீண்ட சொற்றொடர்களைப் பயன்படுத்தினாலும் கூட பாத்திர உரையாடல்களை இவர் எழுதிய முறை வாசகனது ஆர்வத்தைத் தக்க வைக்கும் விதத்தில் அமைந்தது. இதற்குக் காரணம் பேச்சு மொழிப் பயன்பாடு இயல்பாகவே இவர் நடையில் அமைந்ததுவே எனலாம். பாத்திர உரையாடல் வாயிலாக இவர் எடுத்துரைத்த முறை வித்தியாசமானதாக அமைந்து பெரும் வெற்றியைத் தேடித்தந்தது.

> ஒன் ஷூட் ஹாவ் ஸம் பர்ப்பஸ் இன் லைஃப். மனுசனுக்கு ஏதாவது ஒரு லட்சியம் இருக்கணும், எனிதிங், அது இல்லாட்டிப் போனா மாட்டுக்கும் மனுஷனுக்கும் என்ன வித்தியாசம்? கிடைக்குதா இல்லையான்றது வேறு விஷயம்; தெர் வில் பி நோ பர்ப்பஸ் இன் அச்சீவிங் எனி பர்ப்பஸ் கடைசி கடைசியாப் பார்த்தா என்னாதுலே தான் என்னா பலன்? ஒரு லட்சியம்னு எதையாவது நினைச்சுக்கறோம். அது கெடைச்சிருச்சுன்னா அதோட தீர்ந்து போயிடுச்சா? ஸோ, தட் இஸ் நாட் தி பாயிண்ட்..... வெதர் யு அச்சிவ் இட் ஆர் நாட், லட்சியத்தை நாம்ப போய் அடைஞ்சிட்டமா, இல்லியான்றது முக்கியமில்ல. பட் யு ஷூட் ஹாவ் ஒன்–ஆனால் ஒரு லட்சியம் வேணும்.

**கழுதைக்கு முன்னாடி காரட் கட்டி விட்ட மாதிரி அந்தக் கதை தெரியுமா?ன்னு சிரிக்கிறார்**

(ஜெயகாந்தன், சில நேரங்களில் சில மனிதர்கள், ப. *328*)

இவ்வாறு விளக்கம் அமையும் உரையாடல் பகுதிகள் ஜெயகாந்தனின் நாவல்களின் உயிர் நாடியாக அமைகின்றன.

நவீனத் தமிழ் வாசகர்களை உருவாக்கியவர்களில் முதன்மையான வராகக் கருதப்படும் க.நா. சுப்பிரமணியம் *(1912-1988)* தனது **பொய்த்தேவு** நாவலின் முன்னுரையில் 'பொருள் சம்பாதிக்கவே தவம் இருந்து அதைச் சாதிக்கிற சக்தியும் இருக்கிற இடத்தில் எல்லாவற்றையும் பொசுக்கென்று நகர்ந்து விடக் கூடிய மனோபாவமும் இருக்கும் என்பது நான் கண்டறிந்த உண்மை. பொருள் என்று மட்டுமல்ல, மனிதன் ஏற்றுக் கொள்கிற லக்ஷியங்களையுமே இப்படிப் புறக்கணிக்க முடியும்' என்று குறிப்பிட்டு இந்த ஒட்டு மொத்த மனித மனத்தத்துவத்தைச் சுதந்திரம் கிடைப்பதற்குமுன் வாழ்ந்த தஞ்சை மாவட்ட மக்களின் வாழ்க்கைப் பின்னணியில் இந்நாவலில் காட்டுகிறார். வாசகர்களைத் தொடர்ந்து கதையை வாசிக்கத் தூண்டும் ஈர்ப்புத் தன்மையை இவரது கதை முழுவதும் காண இயலும். கதையின் பின்னணியைச் சித்திரிக்கும் போதாயினும் கதையின் இன்றியமையாப் பகுதிகளை விவரிக்கும் போதாயினும் வேகமான கதையோட்டத்தினை இவர் மொழியில் பார்க்கலாம்.

**வயல் பக்கம் போய்விட்டாலோ கேட்க வேண்டியது இல்லை. அங்கே வருஷத்தில் முன்நூற்று அறுவத்தைந்தே கால் நாட்களிலும் ஏதாவது வேலை நடந்து கொண்டே தான் இருக்கும். அது எந்த மாசம் என்பதற்கு ஏற்றபடி குடியானவர்களும் பண்ணையார்களும் ஏதாவது செய்து கொண்டேதான் இருப்பார்கள். உழவர்கள் விதை விதைப்பார்கள். நாற்று நடுவார்கள். களை பிடுங்குவார்கள். நீர் பாய்ச்சுவார்கள். அறுவடை செய்வார்கள். தாள் அடிப்பார்கள். போர் போடுவார்கள். எது நடந்தாலும் சோமுவுக்குச் சுவாரசியமாகவே இருக்கும். எல்லாவற்றையும் அவன் முழுச்சிரத்தையுடன் கவனித்துக் கொள்வான்**

(க.நா.சு., பொய்த்தேவு, ப. *47*)

என்று மக்களின் வாழ்க்கை முறையை உள்ளபடியே விளக்கும்போது மொழிநடையில் எவ்விதக் குழப்பமும் விளைவிக்காத - சிறு சிறு தொடர்களில் தெளிவாகப் பொருளைப் புலப்படுத்தும் முறை காணப் படுகிறது. பாத்திரங்களின் உரையாடல்களையும்-அவர்தம் இயல்பான பேச்சு வழக்கிலேயே காட்டியவர் க.நா.சு. ஆவார்.

மார்க்சிய இயக்கக் கொள்கைகளால் ஈர்க்கப்பட்டுப் பல்வேறு தொழிலாளர்களின் பிரச்சினைகளைத் தத்தம் படைப்புகளில் படைத்துக் காட்டியோர் பலர். இத்தகைய வர்க்கப் போராட்ட நாவல்கள் செல்வாக்குப்

பெற்ற காலகட்டத்தில் யதார்த்தத் தன்மை வாய்ந்தவையாக மட்டுமன்றித் தொழிலாளர்களின் அந்தந்த வட்டாரம் சார்ந்த பேச்சு வழக்கை வெளிப்படுத்தி வட்டார நாவல்களாகவும் வெளிவந்தன. தொ.மு.சி. இரகுநாதனின் **பஞ்சும் பசியும்**, எம்.வி. வெங்கட்ராமின் **வேள்வித் தீ**, கு. சின்னப்ப பாரதியின் **தாகம், சங்கம், சர்க்கரை**, பொன்னீலனின் **கரிசல்**, இராஜம் கிருஷ்ணனின் **சேற்றில் மனிதர்கள், அலைவாய்க் கரையில், கரிப்பு மணிகள், கூட்டுக் குஞ்சுகள்**, பாவண்ணனின் **சிதறல்கள்**, டி. செல்வராஜின் **மலரும் சருகும்**, ஜெயகாந்தனின் **பாவம் இவள் ஒரு பாப்பாத்தி, மூங்கில் காட்டு நிலா**, சு. சமுத்திரத்தின் **ஊருக்குள் ஒரு புரட்சி**, தனுஷ்கோடி இராமசாமியின் **தோழர்**, சா. கந்தசாமியின் **சாயாவனம்**, பாலகுமாரனின் **மெர்க்குரிப் பூக்கள்**, இமையத்தின் **கோவேறு கழுதைகள்** போன்ற நாவல்கள் பல்வேறு தொழிலாளர்களின் பிரச்சினைகளைப் பேசுவன. தொழிலாளரின் பிரச்சினைகளைச் சித்திரிக்கும் பான்மை, பொதுவுடைமைக் கருத்துக்களை நாவலில் தரும் முறை, இலக்கியத் தன்மை பற்றிய கவனம் ஆகிய இம் மூன்று முறைகளில் இந்நாவல்கள் வேறுபடுகின்றன.

ஹெப்சிபா ஜேசுதாசன், அய்சக் அருமைராசன், இராஜம் கிருஷ்ணன், கி. இராஜநாராயணன் போன்றோரது எழுத்துக்களில் அப்படைப்புக்களின் அவ்வப் பின்னணி சார்ந்த வட்டாரச் சொற்கள் மலிந்து வந்து இலக்கியச் சுவை பயப்பது குறிப்பிடத்தக்கது.

**நீங்க எந்த அளம்?**

**கருவேலங்காட்டு அளம். திருச்செந்தூர் ரோடில, பக்கந்தா, பாலெந்திரும்பினா வந்திடும். அங்கதா அஞ்சு வருஷமா வேல. இவியளும் செய்நத்துக்கு வந்தா. இப்பவும் லேசா, தொழிவார கொள்ள ரெண்டில ஒண்ணில கொடுப்பா. வாரு பலவை போட்டிட்டுத் தானிருந்தாவ. கங்காணி ஒருத்தர்னு இல்லாம மாறிட்டே இருப்பம். கால் கொப்புளம் வந்து ஒரு நா, ரெண்டு நான்னா போகாம இருந்தா ஒண்ணில்ல. போன வருசம் இந்த புள்ளக்கி பேதி காய்ச்சல் வந்து பத்து நா சோலிக்கிப் போகல. கங்காணி வேற ஆள் எடுத்திட்டா. பெறவு வேற கங்காணி ஒருரூவாக் கூலி குறச்சிட்டுக் குடுத்தா. ஒரு நாளக்கி என்ன சொல்றியே?............**

**என்னத்த சொல்றது. முதலாளியளுக்கு தொழிலாளிய ஒத்துமையில்லாம இருக்கிறதேதா லாபம். யூனியன் தலைவர்னு யாராலும் செல்வாக்கா இருந்திட்டா அவனை ஒடனே வாய்க்கரிசி போட்டு அவம்பக்கம் இழுத்திடறா. சொல்லி பிரயோசனமில்ல**

(இராஜம் கிருஷ்ணன், கரிப்பு மணிகள், ப. 93)

என்ற பகுதி சான்று. கி. இராஜநாராயணனின் எழுத்துக்களில் டி.கே.சியிடமிருந்து அவர் பெற்ற சுவைப்புறத்திறனும் கரிசல் வட்டார மக்கள் மீது அவருக்குள்ள ஈடுபாடும் புலனாகின்றன.

> **கிளம்பிய ஆடுகளை எல்லாம் திரும்பவும் கொண்டு வந்து அதே இடத்தில் நிப்பாட்டினார்கள்.**
>
> **பிறகு ரவைக்குக் கிடைபோடும் இடத்தில் இவர்களுக்குள் விவகாரம் வைத்துக் கொள்வார்கள்.**
>
> **அன்று அவள் குத்திப் போடுவதற்காகச் சீக்கிரமே வீடு திரும்பி விட்டாள்.**
>
> **ஏலே வசங்கெட்ட பயபுள்ள, பாங்கு தெரிஞ்சிதான் நடக்கியா.**
>
> **ஏமுலே எங்கேயாவது தேனையும் தவிட்டையும் கொண்டுகிட்டுப் போங்களேமுலே**

(கி.இரா., கிடை, ப. *163)*

என்பது இராஜநாராயணனின் கரிசல் வட்டாரத் தமிழுக்குச் சான்று.

காலந்தோறும் மாறுபட்ட நடையை விரும்பும் வாசகர்கள் இருந்து கொண்டே உள்ளனராதலால் அத்தகையோருக்காக எழுதும் வகையில் சுஜாதா, பாலகுமாரன் போன்றோர், தம் நடையில் ஒருவித மாறுபாட்டைக் கொண்டு வந்தனர். **விதி**, என்ற தனது நாவலில் சுஜாதா ஒரு பெண்ணை வருணிக்கும் பகுதி பின்வருமாறு:

> **அப்போது திரைகள் சலனிக்க அந்தப் பெண் உள்ளே வந்தாள். 'டார்லிங்' என ஆரம்பித்து 'ஸாரி' என்று நிறுத்திக் கொண்டாள். பதுமை போல இருந்தாள். இரானிய வகை சிவப்பு. கொஞ்சம் கன்னத்துக் கீழ் சதையைத் தவிர மற்றபடி அப்பழுக்கில்லாத நடன தேகம். உதட்டில் ஒரு செ.மீ. கர்வம். மூக்கில் லேசான தூக்கல். அவள் உடுத்திருந்த ஸல்வார் கமிஸில் நவீனத்துக்கு இடம் கொடுத்து சிற்சில சலுகைகள் அளிக்கப்பட்டு, அது அவள் உடலுடன் ஒட்டி மார்புத் துணியின் மென்மையால் கழுத்தின் இறக்கம் தெரிந்தது**

(சுஜாதா, விதி, பக். *33-34)*

என்ற இப்பகுதியில் சிறுசிறு சொற்றொடர்களும், ஒரு செ.மீ. கர்வம் என மாறுபட்ட வர்ணனையும் விஞ்ஞான முறைப்படி அளப்பது போலத் துல்லியமாகப் பாத்திரத்தை அளப்பதான ஒரு போக்கும் நடையை வேறுபடுத்தி விறுவிறுப்பைத் தோற்றுவிக்கிறது. இத்தகைய வித்தியாசமான நடை இளைஞர்களுக்குப் பிடித்தமானதாய் அமைந்தது. இளம் வாசகர்களை நோக்கிப் பாலுணர்வு நோக்கில் அவர் படைக்கும் சம்பவங்களும் இத்தகைய நடையாலேயே விளக்கம் பெற்றன. பாலகுமாரன் எடுத்துரைக்கும் போக்கில்

உணர்ச்சிப்பூர்வமான நடையைக் கையாளுகிறார். சுந்தரராமசாமியும் கதையின் ஓட்டத்தில் வாசகனின் ஆர்வத்தைத் தக்க வைத்துக் கொள்ளும் வகையில் - வாசகன் நிறுத்தி விடாது இறுதிவரை படைப்பை வாசிக்கும் வகையில் ஒருவித கருத்தோட்டத்தினைத் தன் நாவல்களில் கொண்டு வருமாறு மொழியைப் பயன்படுத்துகிறார்.

ஆரணி குப்புசாமி முதலியாரும் வடுவூர் துரைசாமி அய்யங்காரும் தொடங்கி வைத்ததில் ஆரம்பமாகிப் பின்னர் துப்பறியும் நாவல்களாகத் தழைத்து இந்நூற்றாண்டின் பிற்பகுதியில் வளர்ந்து வந்த வார, மாத நாவல்களின் அதிகமான வரவு கவனத்திற்குரியது. சந்தையில் உற்பத்திப் பொருள்களென வந்து குவியும் இந்த நாவல்கள் ஏற்கெனவே மேற்குறிப்பிடப்பட்ட நாவலாசிரியர்கள் சிலராலும் படைக்கப்பட்டிருக்கின்றன. சாலையோரக் கடைகளில் தொங்கவிடப்பட்டு விற்பனையாகும் இந்நாவல்கள் வாங்கப்பட்ட உடனே படித்து மறந்து விடுகின்ற அளவே உள்ளடக்க நிலைப்பாடுடையன, இருப்பினும் இவற்றிற்கென ஒரு வாசகர் வட்டம் பெருகியதற்குக் காரணம் பெரிய நாவல்களைப் படிக்க விரும்பாத- நேரமில்லாத வாசகர்கள் மட்டுமன்று, இந்நாவலாசிரியர்கள் மொழியை வேறுபடுத்திக் கையாண்டமையால் உருவான ஒருவித மாற்று மொழி நடையும் காரணமெனில் தவறில்லை.

சான்று :

**ஸ்கூட்டரின் கீழே பூமியை நழுவ விட்டான்**
(இராஜேந்திர குமார், இடி, மின்னல், இந்துமதி, ப. *10)*

**இராஜாவின் தோளைக் கொத்தினாள்**
(இராஜேந்திர குமார், தப்பிக்க நேரமில்லை, ப. *28)*

**அந்த லாரி அவனை நீளமாய் சிவப்புப் பெயிண்டில்**
**கோடிழுத்த மாதிரி தேய்த்தது**
(இராஜேஷ் குமார், நீலநிற நிமிடங்கள், ப. *10)*

இன்று வளர்ந்து வருகின்ற தமிழ் தலித் இலக்கியங்களில் பேசப்படும் கலக உள்ளடக்கத்தை வெளிப்படுத்தும் கலக மொழி நடை கவனிக்கத் தக்கது. இந்நூற்றாண்டின் பிற்பகுதியில் தலித் இலக்கிய எழுத்தாளர் களிடம் ஏற்பட்ட விழிப்புணர்ச்சியையே இவ்வுள்ளடக்கமும் இம்மொழி நடையும் நமக்குப் புலப்படுத்துகின்றன. பூமணியின் **பிறகு**, சின்னப்ப பாரதியின் **தாகம்** ஆகிய நாவல்களில் தோன்றி வளர்ந்த தலித் இலக்கியம் 'சேருவதும் மீறுவதும் தலித் இலக்கியம்' என்று தன்னை அடையாளப்படுத்தி இன்று விரிந்து நிற்கிறது. சிவகாமியின் **ஆனந்தாயி, பழையன கழிதலும்,** பாமாவின் **கருக்கு, சங்கதி, கிசும்புக்காரன்**, உஞ்சைராசனின் **எகிறு, கிளுக்கி**, அபிமானியின் **நோக்கோடு, விழி**, பா. இதயவேந்தனின் **நந்தனார் தெரு** போன்றவை குறிப்பிடத்தக்க தலித் இலக்கியப் படைப்புகள். இப் படைப்பாளர்களுள் சிலர் தம் படைப்புகளில் பயன்படுத்தும் வசைச்சொற்கள், பழமொழிப் பயன்பாடு, எதிர்ப்புப் பேச்சு, அவையில்

பேசத்தகாத சொற்கள் என்று கடியப்பட்ட சொற்கள் கலந்த பேச்சு வழக்கு முதலியவற்றின் கலப்பினால் விளையும் ஒருவித எதிர்ப்பு மொழி நடை ஒதுக்கித் தள்ள முடியாததாய் நாவல் இலக்கிய மொழி வரலாற்றில் சேர்கிறது. **சங்கதி**யில் பாமா தலித் அல்லாத சாதிப் பெண்களின் மதிப்பிற் குரியன என்று கருதப்பட்டு வந்த பழக்க வழக்கங்களில் உள்ள குறை பாடுகளை எள்ளி நகையாடும் அங்கத மொழியும் குறிப்பிடத்தக்கதாகிறது.

இவ்வாறு இலக்கியப் படைப்பாளர்களின் மொழி நடைகள் ஏற்கெனவே குறிப்பிட்ட பல்வேறு காரணங்களால் அமையப் பெற்றுத் தமிழ்நாவல் இலக்கிய மொழி நடை வரலாற்றினை உருவாக்கி வந்துள்ளன. ஆரம்ப காலத்தில் கட்டுரைத்தனம் மிக்க நடை, வடசொற் கலந்த மணிப்பிரவாளநடை என்று ஆரம்பமாகிப் பின்னர் தனித்தமிழ் மொழி நடை, மெருகூட்டப்பட்ட கவர்ச்சி நடை, பாத்திர உணர்வு வெளிப்பாட்டு நடை, வட்டார வழக்கு மொழி நடை என்றும் பேச்சு மொழி, உரையாடல் நடை, ஆங்கிலச் சொற்கலப்பு நடை, பாப்புலர் நாவல் எனப்படும் வார மாத நாவல்களின் மாற்று மொழி நடை, தலித் இயக்கக் கலக மொழிநடை என்னும் பல நிலைகளில் வளர்ந்து வந்துள்ள நிலையினைக் காண இயலுகிறது. இன்றையக் காலச் சூழலில் ஏற்பட்டிருக்கும் சமுதாய மதிப்பு மாற்றங்களுள் குறிப்பிடத்தக்கனவாகிய மனிதத்தன்மைக்கு மதிப்புக் குறைந்து பணத்திற்கு மதிப்புக் கூடியுள்ளமை மற்றும் தொலைக்காட்சியின் வரவு முதலியன ஏற்படுத்தி இருக்கும் **வாசிப்புக் குறைவு** காரணமாக இலக்கிய உள்ளடக்கமும் மொழியும் தரம் தாழ்ந்து விடாத நிலையை உருவாக்குவதில் இலக்கியப் படைப்பாளர், வாசகர், தமிழ் ஆர்வலர், பத்திரிகையாளர் அனைவருக்கும் மிகுதியான பங்கு உண்டு.

## குறிப்புகள்

1. ஜெ. நீதிவாணன், **நடையியல்,** ப. 148.
2. ம.செ. இரபிசிங், 'படைப்பிலக்கியத்தில் மொழி நடை (நாவல் இலக்கியம்)', **தமிழ் நடையியல் கருத்தரங்கு,** 8-9 செப்டம்பர், 1990, மொழியியல் துறை, பாரதியார் பல்கலைக்கழகம், கோவை.
3. தா.வே. வீராசாமி, **தமிழ் சமூக நாவல்கள்,** ப. 188.
4. சி. கனகசபாபதி, **பாரதி - பாரதிதாசன் கவிதை மதிப்பீடு,** ப. 27.
5. ஆ. வேலுப்பிள்ளை, **தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும்,** பக். 210-212.
6. ஜெ. நீதிவாணன், மு.நூ., ப. 46.
7. க.நா. சுப்பிரமணியம், **படித்திருக்கிறீர்களா?,** சு. சக்திவேல், **இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் உரைநடை,** ப. 220.
8. ம.செ. இரபிசிங்., முற்குறிப்பிட்ட கட்டுரை, ப. 2.
9. சு. சக்திவேல், **இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் உரைநடை,** ப. 131.
10. ஜெ. நீதிவாணன், மு.நூ., ப. 142.

# உரைநடை - மொழி ஆய்வு

செ.வை. சண்முகம்

இலக்கியம் என்பது பொதுவானதாக, காலம் கடந்ததாக இருந்தாலும் அது காலத்தால் உருவத்தாலும் உள்ளடக்கத்தாலும் பாதிக்கப் படுகிறது. அதாவது காலத்தைப் பிரதிபலித்தும் காலத்தால் உருவாக்கப் பட்டும் இலக்கியம் உருப்பெறுகிறது. எனவே இலக்கிய வளர்ச்சியைப் பல கட்டங்களாக-கால கட்டங்களாகப் பிரிக்கமுடியும். ஒவ்வொரு காலகட்ட இலக்கிய வளர்ச்சியிலும் காலத்தின் பாதிப்பால் ஏற்பட்ட சில பொதுமைகள் புதைந்திருக்கும்.

இந்திய வரலாற்றில் கடந்த ஐம்பது ஆண்டு, இந்திய விடுதலைக்குப் பின்னுள்ள கால கட்டம் என்ற முறையிலும், இருபதாம் நூற்றாண்டு முடியும் காலகட்டம் என்ற முறையிலும் தனித்த கவனத்துக்கு உரியதாக அமைந்துள்ளது. இதற்கும் மேலாக ஒவ்வொரு மொழிச்சமூகத்திலும் முன் எப்போதும் இல்லாத சமூகப் பண்பாட்டு உணர்வு, அரசியல் உணர்வு, அறிவுணர்வு, மொழி உணர்வு ஆகியவை மிகுந்து காணப்படுகின்றன. இந்த நிலையில் ஒரு மொழி இலக்கியத்தின் இந்தக் கால கட்டத்தை அளவீடு செய்து (Survey) செல்நெறியைப் புரிந்துகொள்ள முயலுவது கால உணர்வுள்ள ஆய்வாளர்களின் தலையாய கடமை.

இலக்கியம், உள்ளடக்கம், உருவம் என்ற மரபு சார்ந்த இரண்டு பரிமாணங்களோடு மொழி என்ற மூன்றாவது பரிமாணத்தையும்

கொண்டது. இலக்கிய உள்ளடக்கத் தேர்வு, கதை மாந்தர் சித்திரிப்பு ஆகியவைகளில் இலக்கியத்துக்கும் மொழிக்கும் தொடர்பு இருக்கிறது. மொழியின் பல பரிமாணங்களை (வட்டாரக் கிளைமொழி, சமூகக் கிளை மொழி போன்றவை) உணர்ந்தவர்களே மெய்ம்மையில் இலக்கியங்களையும், வட்டார இலக்கியங்களையும் படைத்து வெற்றிபெற்றிருக்கிறார்கள். அந்தப் படைப்பாளிகளே கதைமாந்தர்களின் மொழியை உற்று நோக்கி உணர்ந்ததன்மூலம் அவர்களின் உள்ளத்து உணர்வுகளையும் சரியாகப் புரிந்துகொண்டு கதைமாந்தர்களின் சரியான மொழியையும் பண்பு நலன்களையும் சிறப்பாகச் சித்திரித்திருக்கிறார்கள்.

இந்த முறையில் பார்க்கும் போது இந்த **உரைநடை: மொழி ஆய்வு** என்பது இரண்டு விதமான விளக்கங்களுக்கு இடம் தருகிறது. *1.* உரைநடை மொழியின் செல்நெறி; *2.* உரைநடை மொழி ஆய்வின் செல்நெறி. இங்கு மொழி முக்கியப்படுத்தப்பட்டுள்ளதால் மொழி பற்றிய சில பொது உண்மைகள் சுட்டிக்காட்டத் தகுந்தவை.

மொழி அடிப்படையாகப் பேச்சையே குறிக்கும். அது கட்டமைப்பும் ஒழுங்கும் உடையது என்றாலும் வட்டாரம், சமூகம், தொழில் முறை, சூழல் ஆகியவைகளால் மாறுபடக் கூடியது. மொழி பரந்துபட்ட நிலப்பரப்பில் பேசப்படும் போது பல வட்டாரங்கள், பல சமூகங்கள், பல தொழில்கள் என்று மாறுபட்டு, அரசியல், வணிகம், பொருளாதாரச் செயல்பாடு ஆகியவைகளால் சிறந்து விளங்கும் ஒரு வட்டாரம், அந்த வட்டாரத்தில் உள்ள உயர்குடி மக்களின் மொழி, பிற வட்டார மக்களாலும் பிற சமூகங்களாலும் பின்பற்றப்படும் நிலை ஏற்படும். அப்படி உருவாகுவதே தகுமொழி *(Standard dialect)* எனப்படுவது.

எழுத்துமொழியும் பெரும்பான்மையும் அந்தப் பேச்சுத் தகுமொழியை ஒட்டியே அமையும். ஆனாலும், சில கூறுகளில் பிற கிளைமொழிக் கூறுகளையும், தகுமொழி சுவீகரித்துக் கொள்ளும். இலக்கிய ஆசிரியர்களும் கிளைமொழிக் கூறுகளை ஆங்காங்கே சில காரணங்களுக்காகக் கதை மாந்தர்களின் வட்டாரம், சமூகம் ஆகியவைகளைச் சுட்டிக்காட்டுவதற்குக் கையாளுவார்கள்.

எழுத்து மொழியும் பயன்படுத்தும் துறைக்கு ஏற்ப மாறுபடும். பழங்காலத்தில் எல்லாம் செய்யுளில் எழுதப்பட்டாலும், பொருளுக்கு (இலக்கணம், மருத்துவம் போன்றவை) ஏற்பச் சொற்களஞ்சியத்திலும், நடையிலும் சில சமயங்களில் இலக்கணக் கூறுகளிலும் மாறுபாடு காணப்பட்டது. இவைகளைத் தொல்காப்பியரே சூசகமாகக் குறிப்பிட்டுள்ளார். உதாரணமாக, **முதலா ஏன தம்பெயர் முதலும்** (தொல். எழுத்து. *66*), அதாவது சொல்லுக்கு முதலில் வராது என்று கூறிய எழுத்துகள் தம் பெயரைக் கூறும்போது முதலில் வரும் என்ற சூத்திரம் டகரம், ணகரம் முதலிய சொற்கள் இலக்கண மொழியில் வருவதை

மனத்தில் கொண்டது. அதாவது இலக்கண மொழியின் மொழி ஒழுங்கு-இலக்கிய மொழியின் இலக்கணத்திலிருந்து மாறுபட்டது என்பது. அவர் கூறிய உலகவழக்கு, செய்யுள் வழக்கு மாறுபாடுகள் செய்யுள் இலக்கிய மொழிக்கும் உரைநடை மொழிக்கும் உள்ள வேறுபாடுகளாகக் கொள்ளலாம். அந்த வேறுபாடு துறை வழக்கு (Register) என்று இன்று விரிவாக ஆராயப்படுகிறது. தொல்காப்பியத்தில் எழுத்து-சொல் ஒரு அலகாகவும் பொருள் ஒரு அலகாகவும் செயல்பட்டு ஒரு நூலுக்குள்ளேயே விளக்கப்படும் பொருளுக்கு ஏற்பச் சொற்களின் பொருள் மாறுபடுகின்றன. அதாவது இலக்கண ஆய்வு ஒரு துறை; இலக்கிய ஆய்வு வேறு துறை என்பதை உணர்த்துவது போல உள்ளது.

| | எழுத்து சொல் | பொருள் |
|---|---|---|
| திணை | வகுப்பு (உயர்திணை, அஃறிணை) | ஒழுக்கம் (அகம், புறம்) |
| முதல் | முதலில் வருவது | அடிப்படையானது (நிலம், காலம்) |
| உரி | சொல்வகை | ஒழுக்க வகை (குறிஞ்சி, முல்லை....) |

இவை எல்லாம் எழுத்து மொழியும் பயன்படும் துறைக்கு ஏற்ப மாறுபடும் என்பதைத் தெளிவுபடுத்துகின்றன.

காலஞ் செல்லப் பேச்சு மொழியின் கட்டமைப்பில் பரிணாம வளர்ச்சியாலும், பிற மொழி பேசும் சமூகத்தோடு அரசியல்-பொருளாதார-பண்பாட்டு காரணங்களால் தொடர்பு உண்டாகி அந்த மொழியிலுள்ள சொற்களும், கருத்துகளுக்குரிய புதிய சொல்லாக்கங்களும் விரவுகையாலும் (diffusion) அதாவது பரவுவதாலும் மாற்றம் ஏற்படும். மேலும் அரசியல் பண்பாட்டு மாற்றங்களால் தகுமொழியின் வட்டார அல்லது சமூக அடிப்படையும் மாறுபடும். சங்க காலத்தில் பாண்டிநாட்டுக் கிளைமொழி இலக்கியத் தகுமொழியாக இருக்க, இடைக்காலத்தில் (பல்லவர்-பாண்டியர் காலம், பிற்காலச் சோழர் காலம்) சோழ நாட்டுக் கிளைமொழி தகு மொழியாக அமைந்திருக்கவேண்டும் என்று கருதுவதற்கு இலக்கிய இலக்கணச் சான்றுகள் பல கிடைத்துள்ளன (சண்முகம், *1989;* Manimekalai, *1994*). தற்கால எழுத்துத்தமிழின் தகுமொழி மீக்கிளைமொழி (Supra dialectal form) உடையதாகக் கருதப்பட்டாலும் சில சொல்லெழுத்துக் கூறுகளில் (பன்மை விகுதியை மிகாமல் பயன்படுத்துவது- எழுத்துகள், தோப்புகள்; சொல்லுக்கு இடையில் ஒற்றை வல்லினம் பயன் படுத்துவது-பத்திரிகை, அண்ணாதுரை) தொண்டைநாட்டுப் படித்தவர்கள் பேச்சுமொழியை ஒட்டியது என்பது புலனாகி உள்ளது. ஏனென்றால் சோழ நாட்டுப் பேச்சு மொழியை ஒட்டி அமைந்தால் அங்கெல்லாம் இரட்டை வல்லினமே இருக்கவேண்டும் (எழுத்துக்கள், தோப்புக்கள், பத்திரிக்கை, அண்ணாத்துரை).

பொதுவாகப் பேச்சுமொழியில் ஏற்படும் மாற்றங்களை எல்லாம் எழுத்து மொழி பிரதிபலிப்பதில்லை. எழுத்துமொழி எப்போதும் ஓரளவு பழமைக் கூறுகளைத் தக்கவைத்துக்கொண்டிருக்கும். அதனால் பேச்சுமொழிக்கும் எழுத்துமொழிக்கும் வேறுபாடு மிகுந்திருக்கும். அந்த நிலையில் பிற மொழி தாக்கத்தின் அளவு பற்றியும் பழைய மொழியைத் தக்கவைத்துக்கொள்வது பற்றியும் படைப்பாளிகளிடையேயும் மொழி அறிஞர்களிடையேயும் கருத்து மாறுபாடு தோன்றக்கூடும். பொருளாதார ஏற்றத் தாழ்வு, சமய வேறுபாடு ஆகியவைகளால் அந்த மாறுபாடு வலியுறும் அல்லது அழுத்தம் பெறும். இப்படித் தோன்றுவதே மொழி இயக்கங்கள். மொழி இயக்கங்கள் திட்டமிட்டும் திட்டமிடாமலும் அரசாலும் தனிக் குழுவாலும் தோற்றுவிக்கப்படலாம் *(Annamalai, 1979a)*.

மொழி இயக்கங்களால் ஒரு மொழியில் உள்ள எழுத்து முறையும் *(Writing system)*, உரைநடை மொழிநடையும் மாறுபடுவதை உலக மொழிகளின் வரலாறு புலப்படுத்துகிறது. உதாரணமாக வியட்நாமிஸ் மொழியில் நடந்த எழுத்து மாற்றமும் *(சீன எழுத்துகளிலிருந்து ரோம வடிவத்தைப் பின்பற்றுவது)*, நார்வீஜிய மொழியில் சொல்லெழுத்து *(Spelling)* நடை மாற்றமும் *(Language style)* அதாவது டேனீஷ் மொழியிலிருந்து நார்வீஜிய மொழியை வேறுபடுத்த ரிக்ஸ்மால் *(Ricksmal)* நடையிலிருந்து லாண்ட்ஸ்மால் *(Landsmal)* நடைக்கு மாறுவது நல்ல உதாரணங்கள் *(சண்முகம், 1985)*.

இந்தியாவில் *19, 20*ஆம் நூற்றாண்டுகளில் அரசியலிலும் சமூகத்திலும் பெரிய மாற்றங்கள் ஏற்பட்டன. அன்னியர் ஆட்சி - அதுவும் வெளியில் இருந்துகொண்டு அன்னியனாகவே அன்னிய மொழி கொண்டு ஆட்சி செய்தது என்றாலும், கல்வி ஜனநாயகப்படுத்தப்பட்டது. அதனால் இந்தியர்களுக்கு உலகளாவிய நிலையில் தொடர்பு ஏற்பட்டு அந்தத் தொடர்பால் தங்களுடைய நாடு, சமூகம் பற்றிய உணர்வு உண்டாகி, சமூகச் சீர்த்திருத்தமும் இதனை ஒட்டி மொழிச் சீர்திருத்தமும் செய்யும் பணியில் பலர் ஈடுபட்டார்கள். அது சமூகத்தின் பல மரபுகளைக் கேள்விக்குறி ஆக்கி, புதிய சமூக மரபும், மொழி மரபும் தோன்ற வழி வகுத்தது. பொதுவாக இந்திய மொழிகளில் உரைநடை செல்வாக்கு பெற்றது இந்தக் காலகட்டத்திலேதான்.

இலக்கிய மொழியில் மொழிப்பழமை, அதிகமான வடமொழிச் செல்வாக்கு ஆகியவை கவிதையில் சாதாரணமாகக் காணப்பட்டன. உரைநடையிலும் இந்தப் போக்கைப் பலர் கடைபிடித்தார்கள். சமூகத்தில் ஜனநாயகப் போக்கு வளர்ச்சி அடைய, மொழியிலும் அந்தப் போக்கு-செல்நெறி ஏற்படச் சிலர் உழைத்தார்கள். அதற்கு இரண்டு நல்ல உதாரணங்கள்: வங்காள மொழியில் மொழிப்பழமையும் வடமொழிச் செல்வாக்கும் நிறைந்த மொழிக்குச் சாதுபாஷா *(Sadhu bhasa)* **பண்டிதர் மொழி** என்று பெயர். சில அறிஞர்கள் பேச்சு மொழியை ஒட்டி **இலக்கிய**

முயற்சியில் இறங்கினார்கள். இதற்குச் சொலித் பாஷா (Colit bhasa) **தற்கால மொழி** என்று பெயர். ப்ரமதா சவுத்தரி (Pramatha Chaudhuri 1868-1946) இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில் சொலித் பாஷாவிலேயே தன்னுடைய இலக்கிய முயற்சிகளை மேற்கொண்டார். ரவீந்திரநாத் தாகூர் *(1861-1941)* இந்த முயற்சியை ஆதரித்துப் பின்பற்றியதால் பிற்காலத்தில் சொலித் பாஷா இலக்கியமொழியாக ஏற்றுக்கொள்ளப்பட்டு இன்றும் கையாளப்பட்டு வருகிறது (Suhas Chatterji and Sipra Chatterji, 1979). தெலுங்கு மொழியில் கிட்டத்தட்ட இதே நிலை காணப்படுகிறது. அங்குப் பழைய மொழிநடைக்குக் கிராந்திகா (Grānthika) என்றும் பேச்சு மொழியை ஒட்டிய மொழிக்கு வியாவஹாரிகா (Vyāvahārika) என்றும் பெயர். ஆந்திரப் பல்கலைக்கழகம் மொழி அறிஞர்கள் குழுவை ஏற்படுத்திப் பல்கலைக்கழகப் பாட நூல்களின் மொழி பற்றிய ஆலோசனை கேட்டபோது அவர்கள் வியாவஹாரிகா நடையைப் பரிந்துரைத்து அதற்குச் சிஷ்ட வியாவஹாரிகா (Sistavyāvahārika) என்று பெயரிட்டார்கள். இன்று இதுவே தகுமொழியாக ஏற்றுக்கொள்ளப்பட்டு, படைப்பிலக்கியங்களிலும் உரைநடை நூல்களிலும் பின்பற்றப்பட்டு வருகிறது (Krishnamurthi, 1979).

இந்த நிலையில் தமிழில் உரைநடை மொழியின் செல்நெறி, உரைநடை மொழி ஆய்வு பற்றி ஓரளவு விரிவாகப் பார்ப்போம்.

எல்லா இந்திய மொழிகளைப் போலவே தமிழிலும் உரைநடை கடந்த *150* ஆண்டுகளாகத் தனிச்சிறப்புப் பெற்று, பல துறைகளில் பயன்படுத்தப்பட்டு வருகிறது. உரைநடை நூல்களை மூன்று வகையாகப் பிரிக்கலாம். அவையாவன: படைப்பிலக்கியம், அறிஞர் இலக்கியம் (இலக்கிய இலக்கண ஆய்வுகள் போன்றவை), மக்கள் இலக்கியம் (செய்தித்தாள், பொதுமக்களுக்கான வார, மாத இதழ்கள் போன்றவை). அவைகளின் மொழி மாறுபாடே இந்தப் பாகுபாட்டுக்குக் காரணம். அதே சமயத்தில் இவைகளிடையே பொதுவாக மொழி தொடர்பான பிரச்சனைகளும் காணப்படுகின்றன.

சிறந்த படைப்பிலக்கியவாதிகள் தங்கள் கால மொழியை ஒட்டியே இலக்கியம் செய்துள்ளார்கள். அதனால்தான் கபிலர் மொழியிலிருந்து வள்ளுவர் மொழி மாறுபட்டுள்ளது. வள்ளுவர் மொழியிலிருந்து கம்பர் மொழியும், அவர் மொழியிலிருந்து பாரதியார் மொழியும் மாறுபட்டு இருக்கின்றன. அவை எல்லாம் கவிதையில் எழுதப்பட்டவை.

உரைநடை இலக்கியம் *19* ஆம் நூற்றாண்டிலிருந்தே ஆரம்பிக்கிறது. அதனால் புதினம், சிறுகதை என்று புதிய இலக்கிய வடிவங்கள் தோன்றின. பாரதியார் உரைநடையின் மொழி பற்றிய பிரகடனம் பரவலாக அறியப் பட்டவை என்றாலும் இங்கு எடுத்துக்காட்டத்தகுந்தது.

> **தமிழ் வசனநடை இப்போதுதான் பிறந்து பல வருஷமாக வில்லை. தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும். ஆதலால்**

> **இப்போதே நமது வசனம் உலகத்தில் எந்த பாஷையைக் காட்டிலும் தெளிவாக இருக்கும்படி முயற்சிகள் செய்ய வேண்டும். கூடிய வரை பேசுவதுபோல எழுதுவதுதான் உத்தமம் என்பது என் கட்சி. எந்த விஷயத்தை எழுதி னாலும் சரி, ஒருகதை அல்லது தர்க்கம், ஒரு சாஸ்திரம், ஒரு பத்திரிகை விஷயம், எது எழுதினாலும் வார்த்தை சொல்லுகிற மாதிரியாகவே அமைந்துவிட்டால் நல்லது.**

என்பது அந்த வாசகம். அதன் அடிப்படை இன்றைய எழுத்து மொழி, பேச்சு மொழியிலிருந்து அதிகம் மாறுபட்டுள்ளது என்பதுதான். அதைத்தான் மொழியியலார் இரட்டை வழக்கு (Diglossia) என்பார்கள். உரைநடைத் தமிழைப் பேச்சுமொழிக்கும் எழுத்துமொழிக்கும் அதிக வேறுபாடு இல்லாமல் செய்வது என்பது பேசுவது போல எழுதுவதல்ல என்பது குறிப்பிடத்தகுந்தது. அதாவது இருபதாம் நூற்றாண்டில் இன்றைய பேச்சுமொழியின் அடிப்படையில் ஒரு தகுமொழி உருவாக்கிப் படைப்பிலக்கிய வருணனைப் பகுதியிலும் பிற உரைநடையிலும் கையாள வழிவகுக்க வேண்டும்.

படைப்பிலக்கியமான புதினம், சிறுகதை ஆகியவற்றில் வருணனை, கதை மாந்தர் உரையாடல் என்று இரண்டு பகுதிகள் உண்டு. ஆரம்ப நிலையில் இரண்டுக்கும் மொழிநடையில் அதிகம் வேறுபாடு செய்யப்படவில்லை. இரண்டும் ஒரு வித தகு மொழியிலேயே எழுதப்பட்டு உரையாடலில் சில சொல்லெழுத்துகள் மாற்றம் செய்யப்பட்டன (வரதராசனின் நவீனங்களில் இதைக் காணலாம்). பின்னரே உரையாடலில் கூடிய வரையில் கதைமாந்தரின் வட்டாரம், சமூகம் ஆகியவற்றைப் பிரதிபலிக்கும் வகையில் கிளைமொழிகள் கையாளப்பட்டன. அங்கும் முழு நிலையில் கிளை மொழி கையாளப்படாததால் மொழியியல் அறிஞர்கள் இதைப் பார்வைக் கிளைமொழி (Eye dialect) என்று குறிப்பிடுகிறார்கள். அதனுடைய தீவிர வாதம், படித்த கதை மாந்தர்களின் உரையாடலை இலக்கியத்தில் எழுதுவது பற்றியது. பொதுவாகப் படித்தவர்கள் பேச்சில் வடமொழிச் சொற்களோடு ஆங்கிலச் சொற்களின் கலப்பு மிகுதியும் ஆங்கில வாக்கியக் கலப்பு மிகுதியும் காணப்படுகின்றன. இவைகளை எழுத்தில் எப்படி பிரதிநிதிப்படுத்துவது என்ற பிரச்சனை தோன்றியது. ஒரு சிலர் ஆங்கிலச் சொற்களைத் தமிழ் எழுத்துகளில் எழுதினார்கள். வேறு சிலர் ஆங்கில வாக்கியங்களை ஆங்கில எழுத்திலேயே எழுத ஆரம்பித்தார்கள். இதற்கு எதிர்ப்புக் குரல் தோன்றியது. வருணனை நடையில் பயன்படுத்தப்படுவது தகுமொழி என்றாலும் மொழியமைப்பு நோக்கில் ஒரு சீர்மை காணப்படவில்லை என்பதைப் பலர் எடுத்துக் காட்டியுள்ளார்கள். இது இருபதாம் நூற்றாண்டில் எழுத்துத் தகுமொழி உருவாக்கம் பற்றிய பிரச்சனையைச் சார்ந்தது.

உரைநடையில் இருபதாம் நூற்றாண்டில் முக்கியமானவை செய்தித்தாள், வார மாத இதழ்கள். இந்த நூற்றாண்டு துவக்கத்தில் பத்திரிகைகளில் ஆங்கில வாடை அதிகம் வீசியது. அதைப் பாரதியாரும் குறிப்பிட்டுள்ளார். அந்தக் குறையைப் போக்குவதற்காகப் பாரதியாரும் பாடுபட்டார். திரு.வி.க.வும் *(1883-1953)* தன்னுடைய **தேசபக்தன்** பத்திரிகையில் அதற்கு முழு வடிவம் கொடுத்தார். 'அந்நாளில் நாட்டுமொழி பத்திரிகைகளில் அயல் மொழி நாற்றம் வீசும்.... தேசபக்தன் அன்னிய மோகத்தினின்றும் விடுவித்தான் என்று சொல்வது மிகையாகாது' என்று அவரே குறிப்பிட்டுள்ளார். முக்கியமாகப் பெரியார் *(1879-1973)* போன்ற அரசியல் சமூக சீர்திருத்தவாதிகள் பொதுமக்கள் சுலபமாகப் புரிந்து கொள்வதற்காகவே எழுதினார்கள். அவைகளை மக்கள் இலக்கியம் எனலாம். இன்றைய வார இதழ்கள் மறுபடியும் ஆங்கிலத் தலைப்புகளைக் கையாண்டு வருகின்றன. அதற்கு ஒரு காரணம் இன்று தமிழகத்தில் தமிழை ஒரு பாடமாகப் படிக்காமலேயே மழலையர் பள்ளியிலிருந்து பட்டப்படிப்பு வரை படிக்க முடியும் என்ற அவல நிலையே.

இந்த உரைநடை மொழியை மொழி அறிஞர்கள் இலக்கண நோக்கில் குறை கூறினாலும் ஆய்வாளர்கள் பலரும் இன்று பத்திரிகைத் தமிழ் என்று தனியே ஆராய்ந்து வருகிறார்கள் (மணியன், *1978)*.

உரைநடையில் இலக்கண இலக்கிய ஆய்வு நூல்களும் எழுந்தன. இவைகளை அறிஞர் இலக்கியம் என்று பொதுமைப்படுத்தலாம். இலக்கிய மொழியிலும் ஆய்வுக் கட்டுரைகளிலும் வடமொழிச் செல்வாக்கு மிகுந்து காணப்பட்டது. மொழி அறிஞர் பலரிடம் வடமொழி பற்று இருந்து வந்தது. ஒரு சிலரே தமிழைத் தனித்தன்மை உடையது என்று கருதினார்கள். இந்த நிலையில் *1916*இல் தமிழில் தனித்தமிழ் இயக்கம் என்ற மொழி இயக்கம் ஒன்று தோன்றியது (Annamalai. 1979a).

தனித்தமிழ் இயக்கத்துக்கு இணையாக அந்தக் காலகட்டத்தில் தமிழகத்தில் பிராமணர் அல்லாதார் அல்லது திராவிட இயக்கம் என்ற சமூக இயக்கம் ஆரம்பிக்கப்பட்டது. பின்னர் அரசியல் இயக்கமாக மாறி அதிக செல்வாக்கு பெற்றது. இந்தக் கால கட்டத்திலேயே தமிழர்களுக்கு, புதிய, தனித்துவம் கொண்ட இலக்கிய மரபு உடைய சங்க இலக்கியங்கள் இருப்பது வெளிப்படுத்தப்பட்டது. ஆய்வு நிலையிலும் திராவிடமொழி ஒப்பிலக்கண ஆய்வு மூலம் தமிழின் தொன்மை, வடமொழியிலிருந்து மாறுபட்ட தன்மை, இன உறவு இல்லாதது புலனாகியது. இப்படிப்பட்ட அரசியல் சமூகப் பண்பாட்டுச் சூழல்கள் மறைமலையடிகளின் *(1876-1950)* **தனித்தமிழ் இயக்கம்** ஒரு இயங்கு சக்தியாகச் செயல்பட உதவின.

> **வடமொழிச் சொற்களை இப்போதே நாம் தடை செய்யாவிட்டால் தமிழ் தன்னிலை கெட்டு வேறு மொழி போலாகிவிடக்கூடும். தமிழில் பிறமொழிச் சொற்களைச்**

> **சேர்ப்பதால் தமிழ் தன் இனிமை இழந்து போவதோடு பல தமிழ்ச் சொற்களும் வழக்கிலில்லாது இறந்து போகின்றன.**

என்பது அவரது வாசகம். அந்த உணர்வு எழுத்து மொழியில் உள்ள வட மொழிச் சொற்களை நீக்கும் முயற்சியில் ஈடுபட்டது. அதை ஒட்டித் தமிழில் *400* ஆண்டு காலமாக வழங்கி வந்த ஏழெட்டுக் கிரந்த எழுத்துகளை நீக்கும் முயற்சியும் சில வடமொழி புணர்ச்சி விதிகளை நீக்கும் முயற்சியும் மேற்கொள்ளப்பட்டன. இன்று ஒரு சிலரே அதைக் கடைபிடித்து வருகிறார்கள். ஆனாலும் அதன் ஆற்றல் கோட்பாட்டு அளவில் மங்க வில்லை என்றே நினைக்கவேண்டியிருக்கிறது,

**தனித்தமிழ் இயக்கம்** முழு வெற்றி பெறாவிட்டாலும் படைப்பிலக்கியம், மக்கள் இலக்கியம், அறிஞர்கள் இலக்கியம் ஆகியவைகளில் தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளதை யாரும் மறுக்க முடியாது. படைப்பிலக்கிய மொழி, மக்கள் இலக்கிய மொழி, ஆய்வு அறிஞர்கள் மொழி ஆகியவைகளில் இருபதாம் நூற்றாண்டு துவக்க கால மொழிக்கும் இன்றைய மொழிக்கும் வேறுபாடுகள் நிறைய உள்ளன. அதாவது வடமொழிச் சொற்களின் எண்ணிக்கைக் குறைவு என்பது ஒரு பெரிய வேறுபாடு. அந்த மாற்றங்களுக்குத் தனித்தமிழ் இயக்கத்தின் பங்கு கணிசமானது. அதே சமயத்தில் அந்த உணர்வே இருபதாம் நூற்றாண்டின் தகுமொழி இலக்கணம் உருவாகத் தடையாகவும் இருந்துவருகிறது.

இருபதாம் நூற்றாண்டின் எழுத்துத் தகுமொழி உருவாக, செம்மொழி உணர்வும் தனித்தமிழ் உணர்வும் தடையாக இருக்கின்றன என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். இன்று தமிழ் பல துறை மொழியாகவும் (ஆட்சித் துறை, நீதித்துறை, உயர்கல்வி, அறிவியல் தமிழ் போன்றவை) பல நாட்டு மொழியாகவும் (இலங்கை, மலேசியா, சிங்கப்பூர்) செயல்பட்டு வரும்போது கிரந்த எழுத்துகளின் தேவையை, இன்றியமை யாமையை உணர முடிகிறது. இருபதாம் நூற்றாண்டு தமிழில், இலக்கணத்தில் குறிக்கப் படும் *31* எழுத்துகளோடு கிரந்த எழுத்துகள் என்று கருதப்படுகிற நாலு எழுத்துகளை (ஹ, ஸ, ஷ, ஜ) தமிழ் மொழிக்குரிய எழுத்துகளாக அலுவலக ரீதியில் (Official) அங்கீகரிக்கத் தடையாய் உள்ளது தனித்தமிழ் உணர்வே. அப்படியே தமிழில் இரண்டறக் கலந்த வடமொழிச் சொற்களையும் (சுலபம், அர்த்தம், வெகு) பயன்படுத்தக் கூடாது என்ற மனப்பான்மை இருந்து வருகிறது. அதனால் பேச்சு மொழியை ஒட்டிய எழுத்து வடிவங்கள் (அருகாமையில், பதட்டம், ரொம்ப), இலக்கணக் கூறுகள் (அஃறிணை எதிர்மறையில் ஒருமை பன்மை வேறுபாடு இல்லாதது, அழுத்த வாக்கியத்தில் எழுவாய்க்கும் பயனிலைக்கும் திணை-பால் இயைபு இல்லாதது- செய்திகள் வாசிப்பது சுந்தரராமன்) தவறு என்பது, பிற மொழிச் சொற்களைத் தமிழாக்கும்போது இடைக்காலத் தமிழ்- குறிப்பாக நன்னூல் விதிகளையே பின்பற்ற வேண்டும் என்று

வற்புறுத்தவது (ராக்பெல்லர் என்பதை இராக்பெல்லர் என்றும் சிங் என்பதை சிங்கு என்றும் எழுதவேண்டும் என்பது) ஆகியவைகளால் இருபதாம் நூற்றாண்டு தகுமொழியும் தகுமொழி இலக்கணமும் உருவாகவில்லை. இன்றைய தமிழில் பல புதிய புணர்ச்சி விதிகள் உருவாகியுள்ளன. உதாரணமாக, பிற நாட்டு ஊர்ப் பெயர்களை எழுதும்போது புதிய புணர்ச்சி மாற்றங்கள் (ஈராக் - ஈராக்கில்-அதாவது இறுதி வேற்றுமை உருபுக்கு முன் வல்லினம் இரட்டித்து எழுதுவது; ஆனால் பஞ்சாப் - பஞ்சாபை. காரணம் முன்னது குரல் இலா வல்லொலி (voiceless stop); பின்னது குரலுடைய வல்லொலி (voiced stop). எனவே சொல்லுக்கு இறுதியில் குரலிலா வல்லொலி வந்தால் வேற்றுமை உருபுக்கு முன் இரட்டித்து எழுதவேண்டும் என்ற புதிய விதி உருவாக்கவேண்டும் *(சண்முகம், 1993).*

உரைநடை மொழி ஆய்வு, மொழியியல் துறை, அறுபதுகளில் பல்கலைக் கழகங்களில் தொடங்கிய பிறகு வளர ஆரம்பித்தது. உரைநடை மொழியே பெரியாரை எழுத்துச் சீர்திருத்தம் பற்றிச் சிந்திக்கத் தூண்டியது. தனக்குச் சரி என்று மனதில் பட்டதைச் செயலில் கடைபிடிப்பது என்ற அவரின் சிறப்புப் பண்பு அவரைத் தன்னுடைய வெளியீடுகளில் அதைக் கடைப்பிடித்துப் பரவலாக்க வைத்தது. தமிழகத்தின் முதல் மொழியியல் பேராசிரியரான தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் *(1901-1980)* அறிவியல் தமிழ் உருவாகவும் எழுத்துச் சீர்திருத்தம் மேற்கொள்ளவும் பாடுபட்டார். அவருடைய பாரதி மொழி ஆய்வும், திரு.வி.க. உரைநடை மொழி ஆய்வும் குறிப்பிடத்தகுந்தவை.

பெரியாரின் சீர்திருத்தத்தை அவருடைய இருபதாம் நூற்றாண்டு விழாவின்போது அரசு ஏற்றுக்கொண்டு அரசாணையை (அரசாணை எண் *1875* அக்டோபர், *19, 1978)* பிறப்பித்தது. அந்தச் சமயத்தில் எழுத்துச் சீர்திருத்தம் பற்றிய வாதப் பிரதி வாதங்கள் தமிழகத்தில் எழுந்தன. சிலர் அதைக் கடுமையாக எதிர்த்தார்கள்.

அதை ஒட்டி எழுத்துச் சீர்திருத்தம் என்ற நூல் (சண்முகம், *1978)* வெளியிடப்பட்டது. அதில் தமிழ் உரைநடை மொழியில் காணப்படும் எழுத்தின் தொகை, சொல்லெழுத்துமுறை ஆகியவை விரிவாக விவாதிக்கப்பட்டு, தற்காலத்தமிழை ஒட்டிய புதிய எழுத்துத் தகுமொழி ஒன்று உருவாக வேண்டும் என்று விவாதிக்கப்பட்டுள்ளது. பரமசிவம் *(1983)* **இக்காலத் தமிழ் மரபு** என்ற நூலையும் வெளியிட்டுள்ளார். அதில் இலக்கிய உரைநடையில் காணப்படும் இலக்கணப் பண்புகளும் விளக்கப்பட்டுள்ளன. இந்த நிலையில் தமிழகத்தில் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம், புதுவை மொழியியல் பண்பாட்டு நிறுவனம் ஆகியவையும் தற்காலத் தகுமொழி பற்றிய பல கருத்தரங்குகள் நடத்தியுள்ளன. தமிழ்ப் பல்கலைக் கழகம் தற்காலத் தமிழுக்கு ஒரு நோக்கீட்டு (Reference) இலக்கணம் வெளியிடும் முயற்சியில் ஈடுபட்டுள்ளது. இலங்கை அரசு தொடர்பாடல், மொழி நவீனத்துவம் பற்றி ஒரு கருத்தரங்கு நடத்தி அதில்

படிக்கப்பட்ட கட்டுரைகளைத் தொகுத்து ஒரு நூல் (நுஃமான், *1993)* வெளியிட்டு உரைநடைத் தமிழ் ஆய்வுக்கு வழிகாட்டியுள்ளது. அவை எல்லாம் உரைநடை மொழியைப் பிரதி அல்லது பனுவல் (Text) என்று ஆய்ந்தவை. படைப்பிலக்கிய உரைநடை மொழியை ஒரு கருத்தாடல் அல்லது உரைப்பாங்கு (Discourse) ஆக ஆய்வது இலக்கியப் பாங்கு பற்றியது. அந்தத் துறையில் நடையியல் (Stylistics) என்ற முறை தோன்றிச் சிலரால் பயன்படுத்தப்பட்டு வருகிறது. இந்தத் துறையிலும் மொழியியல் சில வழிமுறைகளைச் சுட்டிக்காட்டியுள்ளது.

கதைகளில் கதை மாந்தர்களின் உரையாடலாக வரும் பேச்சு மொழியின் பயன், செயல்பாடு பற்றி ஆராய்வது அந்த மாந்தர்களைப் பற்றி மட்டும் அல்லாமல் படைப்பாளியைப் பற்றியும் பல உண்மைகளைப் புலப்படுத்தும் பாங்கு உடையது (சிற்பியின் கவிதைகளில் காணப்படும் கிளைமொழி, சமூக மொழி பற்றி இந்த நோக்கில் ஆராயப்பட்டுள்ளது சண்முகம், *1996).*

சமூக மொழியியலார் கூறும் குறிக்கலப்பு (Code Mixing), குறித்தாவல் (Code Switching) என்ற கருத்துகளைப் பயன்படுத்தி நாவல், சிறுகதை ஆகியவைகளில் கதை மாந்தர்களின் பேச்சில் வரும் பிறமொழிச் சொற்கள் அவர்களின் மனப்பாங்கைப் பிரதிபலிப்பதாக விளக்க முடியும். புதுமைப்பித்தன் கதையில் வரும் **சேஞ்சு** (Change) என்ற ஆங்கிலச் சொல் அந்தக் கதைமாந்தரின் தன்மான உணர்வை வலுப்படுத்துவதாகக் கொள்ள முடியும் என்று அகிலன் ஒரு கட்டுரையில் (கதைக் கலை) குறிப்பிட்டுள்ளார். அலுவலகங்களில் மேலதிகாரி தன்கீழ் வேலை செய்பவரிடம் கோபப்படும்போது முதலில் ஆங்கிலத்திலும் கோபம் தணிந்த பிறகு தாய்மொழியிலும் குறித்தாவல் செய்வதைக் காணலாம். அதுபோல முதலில் செம்மொழியையும் பின்னர் பேச்சு மொழியையும் கையாளுவோர் உண்டு. பேச்சு மொழியில் இயல்பாக நடக்கும் இந்தக் குறித்தாவல்கள் உரைநடை இலக்கியத்தில் எப்படி பயன்படுத்தப்பட்டிருக்கிறது என்று பார்க்கும்போது படைப்பாளி எவ்வளவு தூரம் வாழ்க்கையை நுணுகி நோக்கியிருக்கிறார் என்பதும் கதைமாந்தர்களின் பண்பு நலன்களை எவ்வளவு உண்மையாகச் சித்திரித்திருக்கிறார் என்பதும் புலனாகும். அந்த முறையில் பாரதியார் உரைநடையில் காணப்படும் பேச்சுமொழி, எழுத்துமொழி பற்றியும் அவைகளின் பயன்பாடு பற்றியும் ஞானசுந்தரம் *(1986)* விரிவாக ஆராய்ந்துள்ளது குறிப்பிடத்தகுந்தது.

மக்கள் இலக்கியமான செய்தித்தாள், வார-மாத இதழ்களின் மொழிப் பற்றி பல நூல்கள் வந்துள்ளன.

இறுதியாக உரைநடை மொழி பற்றிய ஒரு பொதுக் கருத்துச் சுட்டிக்காட்டத் தகுந்தது. மொழி அறிஞர்கள் சிலர், **நல்ல தமிழில் எழுத வேண்டுமா?** என்றும் **வழுக்குத் தமிழைப் போக்குங்கள்** என்றும் **உங்கள்**

**தமிழைத் தெரிந்து கொள்ளுங்கள்** என்றும் கட்டுரைகளும் நூல்களும் எழுதி வருகிறார்கள். அவை பற்றி இரண்டு செய்திகள் குறிப்பிடத் தகுந்தவை: *1.* அவர்கள் பெரும்பான்மை, சங்கத் தமிழையும் தொல்காப்பிய இலக்கணத்தையும் சிறுபான்மை கம்பராமாயணம், பெரியபுராணம் ஆகிய இடைக்கால இலக்கியங்களையும் நன்னூலையும் மேற்கோள் காட்டித் தற்காலத்தில் பெருவாரியாக வழங்கும் வழக்குகளைத் தவறு என்று வாதிட்டுள்ளார்கள் *2.* அவர்களில் ஒருவர் கையாண்ட தமிழை மற்றொருவர் தவறு என்று குறிப்பிட்டுள்ளார்கள் *(சண்முகம், 1993).* ஆனால் கடந்த ஐநூறு ஆண்டுகளாக மாற்றம் பெற்றுத்தான் தற்காலத்தமிழ் உருப் பெற்றுள்ளது. இலக்கிய வழக்கில் ஏறிய மாற்றங்களையாவது கவனித்து இலக்கணம் எழுதாதது இலக்கண அறிஞர்களின் குறை. அதற்காகக் கடந்த ஐநூறு ஆண்டுகளாக மொழியில் மாற்றமே நடக்கவில்லை என்று கூறுவது பொருந்தாது. அது பற்றிப் படைப்பாளியாகவும் மொழி அறிஞராகவும் மொழியியல் அறிஞராகவும் இருந்த வரதராசன் *(1954)* கூறியது இங்கு நினைவுபடுத்த தகுந்தது.

> **பழைய இலக்கியங்களைக் கற்றுத் திகழும் சிலரும், அழகிய செறிவான நடையைப் போற்றித் திகழும் சிலரும் எவ்வளவுதான் தடுத்துநின்ற போதிலும் பெரும்பாலோ ராகிய இவர்களின் போக்கிலேயே மொழி செல்லும்; தடைகள் ஒரு சில காலம் ஈர்த்துப் பிடித்து நிறுத்தலாம். இறுதியில் வெற்றி பெறுவது பெரும்பாலோரின் போக்கே ஆகும்.**

என்று கூறி இருபதாம் நூற்றாண்டின் பல வழக்குகளுக்கு அமைதி கூறியுள்ளார். அவைகளில் பல முன் சொன்னோரால் தவறு என வாதாடப்பட்டுள்ளன.

இலக்கியத் தமிழுக்கும் மக்கள் தமிழுக்கும் அறிஞர்கள் தமிழுக்கும் பொதுவான தகுமொழி ஒன்றை உருவாக்கும் சூழலை ஏற்படுத்தி உரைநடை மொழி ஆய்வு வளர வழி வகுப்போம்.

### பார்வை நூல்கள் & கட்டுரைகள்

*1.* சக்திவேல், சு., **நூறாண்டுத் தமிழ் உரைநடை**, சென்னை, *1987*.

*2.* சண்முகம், செ.வை., **எழுத்துச் சீர்திருத்தம்**, அண்ணாமலைநகர், *1978*.

*3.* சண்முகம், செ.வை., **மொழியும் எழுத்தும்**, அண்ணாமலைநகர், *1985*.

*4.* சண்முகம், செ.வை., **மொழி வளர்ச்சியும் மொழி உணர்வும் (சங்க காலம்)**, சென்னை, *1989*.

5. சண்முகம், செ.வை., **தற்காலத் தமிழின் இலக்கண இயல்பு**, 1992, நுஃமான், 1993, பக். 44-61.

6. சண்முகம், செ.வை., 'சிற்பியின் கவிதை மொழி', **சிற்பி: மரபும் புதுமையும்** (தொகுப்பு: ஞானசேகரன், தெ. & ஆனந்தகுமார், பா.) பெங்களூர், 1996.

7. சண்முகம், செ.வை., 'புதிய தமிழில் புணரியல் நெறிகள்', **புலமை.** 19.2. பக். 23-39, 1993.

8. சண்முகம், செ.வை., 'தற்காலத் தமிழுக்கு நோக்கீட்டு இலக்கணம்', **புலமை.** 23.2, பக். 45-57, 1997.

7. ஞானசுந்தரம், வ., 'பாரதியாரின் உரைநடையில் இருநிலை', **பாரதி ஆய்வு**, (பதிப்பர்: கருணாகரன், கி., சந்திரசேகரன், இரா.) பக். 58-84, கோவை, 1986.

8. நுஃமான், எம்.ஏ, (பதிப்பு) **தொடர் பாடல், மொழி நவீனத்துவம்**, கொழும்பு, 1993.

9. பரமசிவம், கு., **இக்காலத் தமிழ் மரபு**, சிவகங்கை, 1983.

10. மணியன், தங்க., **பத்திரிகைத் தமிழ்**, பரணம், 1978.

11. வரதராசன், மு., **மொழியியற் கட்டுரைகள்**, சென்னை, 1954.

12. Annamalai. E, (Ed.), **Language Movements in India,** Mysore, 1979.

13. " 'Movements of Language Purism: The Case of Tamil', in Annamalai, pp.35-59, 1979.

14. Krishnamurthi, Bh. 'Classical or Modern - A Controversy of Styles in Education in Telugu' in Annamalai, pp.1-24, 1979.

15. Manimekalai, A., **Language Developments and Language Attitudes in Early Middle Tamil,** unpublished Ph.D. thesis submitted to the Annamalai University, 1994.

16. Meenakshisundran, T.P., **A History of Tamil Language,** Poona, 1965.

17. Subhas Chatterji & Sipra Chatterji, 'Standardization of Bengali in the Social Perspective', in Annamalai, pp.25-34, 1979.

# தமிழ் மொழியியலின் வளர்ச்சி

வ. ஞானசுந்தரம் & க. இராமசாமி

மொழியும் இலக்கியமும் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்தவை. ஒன்றில்லாமல் இன்னொன்றில்லை. ஓர் இலக்கியத்தின் தனித்தன்மையைத் தீர்மானிப்பதில், தெரிவுசெய்யப்படும் கருத்தின் தன்மை ஒரு புறமிருக்க அக்கருத்தை வெளிப்படுத்தப் பயன்படுத்தப்படும் சொற்களும் தொடர்களும் இன்றியமையாதவை. ஒலிநயமும் பொருட்செறிவும் பொதிந்த சொற்களையும் தொடர்களையும் தெரிவு செய்து பயன்படுத்திக் கொண்ட படைப்புகள் அரிய இலக்கியங்களாக விளங்கிவருவதை நாம் நன்கறிவோம். மொழியின் நெளிவு சுழிவுகளை உணர்ந்து ஒரு கருத்திற்கு வடிவம் கொடுப்பவனே சிறந்த இலக்கியப் படைப்பாளியாக விளங்குகிறான்.

மொழியின் தோற்றம், அமைப்பு, பயன்பாடு பற்றிய சிந்தனைகள் காலங்காலமாய் வளர்ந்துவந்துள்ளன. வளமான மரபிலக்கணங்களும் இலக்கண உரைகளும் நிகண்டுகளும் இதற்குச் சான்றுகளாய் நிற்கின்றன. இலக்கியத்திற்கேற்ப இலக்கணம் வகுத்தல் இலக்கணத்திற் கேற்ப இலக்கியம் படைத்தல் ஆகிய இருவகை முயற்சிகளும் தொடர்ந்து நடந்துவந்துள்ளன. மொழிகளுக்கிடையிலான உறவை ஆராயும்போக்கு பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஆக்கம் பெற்றது. ஒலியமைப்பு, சொல்லமைப்பு, பொருளமைப்புத் தொடர்பான விதிகளை அடிப்படையாகக் கொண்டு ஒப்பிலக்கண ஆய்வின் மூலம் உலகமொழிகள் பல்வேறு குடும்பங்களாகப் பாகுபாடு செய்யப்பட்டன. கால்டுவெல் அவர்கள்

படைத்தளித்த **திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்** என்ற நூலின் மூலம் திராவிட மொழிகளின் தனித்தன்மையும் தமிழின் தொன்மையும் உலகிற்கு உணர்த்தப்பட்டன. வரலாற்று அடிப்படையிலான இலக்கணங்கள் மனிதப் பண்பாட்டின் வரலாற்றை ஆராய வழிவகுத்தன. பழைய இலக்கியங்களில் கையாளப்பட்டுள்ள மொழியை அடிப்படையாகக் கொண்டே இவ்வாய்வுகள் அனைத்தும் நிகழ்த்தப்பட்டன. காலப் போக்கில் மொழியில் நிகழ்கிற மாற்றங்கள், பல்வேறு மொழிகளுக்கிடையிலான உறவுகள் இவற்றைக்கொண்ட வரலாற்று ஆய்வு மட்டும் போதாது, சமகாலத்துப் பழக்கத்திலுள்ள மொழியையும் ஆராய வேண்டும் என்கிற சிந்தனை இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தோன்றியது. ஒரு குறிப்பிட்ட கால கட்டத்தில் வழக்கிலுள்ள மொழியை உள்ளபடி விளக்கம் செய்ய வேண்டும், வரலாற்றுப் பார்வையை அதில் புகுத்தக் கூடாது என்கிற சிந்தனைக்கு வித்திட்டவர் சுவிட்சர்லாந்து நாட்டைச் சார்ந்த சசூர் என்னும் பேரறிஞர் ஆவார். இவருக்குப் பின்னரே பொது மொழியியல், விளக்க மொழியியல், அமைப்பு மொழியியல் என்னும் பெயர்களில் மொழி பற்றிய ஆய்வில் ஒரு புரட்சி உருவாகியது. பேச்சு மொழியும் ஆய்விற்கு எடுத்துக்கொள்ளப்பட்டது. எழுத்தோ இலக்கணமோ காணாத பழங்குடி மொழிகளெல்லாம் ஆய்வு செய்யப்பட்டன. மொழி பற்றிய பன்முக ஆய்வுகள் தோன்றின; பல்வேறு மொழியியல் கோட்பாடுகள் தோன்றின; ஆய்வு நெறிமுறைகள் தோன்றின. மொழியைப் பற்றிய ஆய்வு ஓர் அறிவியலாக வளர்ந்தது. அமெரிக்கா, பிரிட்டன், ஜெர்மன், ரஷியா, செகஸ்லோவேகியா போன்ற நாடுகளில் பல்வேறு படிநிலைகளைக் கண்டது. அமெரிக்க நாட்டில் ஏற்பட்ட வளர்ச்சி மிகவும் விரிவானது. இந்திய மண்ணில் இதன் வளர்ச்சி இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஏறத்தாழ நாற்பதாண்டுகள் வரலாற்றை உட்கொண்டதாகும். இந்திய நாட்டில் குறிப்பாகத் தமிழ் நாட்டில் தமிழ் தொடர்பாக நிகழ்ந்துள்ள மொழியியல் ஆய்வுகள் மிகவும் குறிப்பிடத்தக்கவை ஆகும்.

தமிழ் மொழி பற்றிய மொழியியல் ஆய்வு பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்தே தொடங்கி வளர்ந்து வந்திருப்பினும் கூட அதன் குறிப்பிடத்தக்க விரிவான வளர்ச்சி என்பது இந்திய நாட்டின் விடுதலைக்குப்பின் ஐம்பதுகளில் தொடங்கி இன்று வரை நிகழ்ந்திருப்பதேயாகும். தமிழ் மொழியியல் தமிழிலும் பிறமொழிகளிலும் தமிழராலும் பிறராலும் தமிழ் நாட்டிலும் பிற இடங்களிலும் வளர்த்தெடுக்கப் பட்டு வந்துள்ளது. திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் விரிவையும் தெளிவையும் கண்டது. தமிழ்மொழி வளர்ச்சி குறித்த வரலாற்று இலக்கணங்கள் பல படைக்கப்பட்டன (மொழிநூல், மொழிவரலாறு போன்றவை). பேச்சுத் தமிழ் பற்றிய ஆய்வு ஐம்பதுகளின் இறுதியில் தொடங்கியது. வட்டார மற்றும் சாதிப் பேச்சு வழக்குகள் குறித்த விளக்க இலக்கணங்கள் உருவாயின. தமிழோடு நெருங்கிய தொடர்புடைய பழங்குடி மொழிகள் (நீலகிரி) ஆராயப்பட்டன. சங்க இலக்கியங்களிலும் பக்தி

இலக்கியங்களிலும் கையாளப்பட்டுள்ள மொழிபற்றிய இலக்கணங்களும் சொல்லடைவுகளும் உருவாயின. அமைப்பு மொழியியல் நெறியைப் பயன்படுத்தி ஒலியமைப்பு, சொல்லமைப்புக் குறித்த பல்வேறு ஆய்வுகள் ஒருபுறம் வளர்ந்து கொண்டிருக்க, இன்னொருபுறம் *1957* இல் சாம்ஸ்கி என்னும் அறிஞரால் தோற்றிவிக்கப்பட்ட மாற்றிலக்கணக் கோட்பாட்டைப் பயன்படுத்திக்கொண்டு தமிழ்த் தொடரிலக்கணம் வெகுவாக வளர்ந்தது. இந்நெறியைப் பயன்படுத்தித் தமிழின் தொடரமைப்புகளைப் பிறமொழி களோடு உறழ்ந்து பார்க்கும் ஆராய்ச்சிகளும் (Contrastive Analysis) வளர்ந்தன. பிறமொழியினர் தம் மொழியமைப்பைத் தமிழ் மொழியமைப்போடு ஒப்பு நோக்கி வேறுபாடுகளை உணர்ந்து தமிழை விரைந்து கற்க இவ்வகை ஆய்வுகள் பெரிதும் உதவின. பிறமொழியினருக்குத் தமிழ் கற்பிக்கும் பணி விரிவாக மேற்கொள்ளப்பட்டது. இதற்கான பாடநூல்களும், பயிற்சி நூல்களும், ஒலிஒளி நாடாப் பேழைகளும் உருவாக்கப்பட்டன. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் அறுபதுகளின் தொடக்கத்தில் வேரூன்றிய மொழியியல் கல்வி பல்வேறு வளர்ச்சிகளைக்கண்டு பிற பல்கலைக் கழகங்களிலும் காலூன்றுகிற நிலை வந்தபோது மொழியியல் கோட்பாடுகள், ஆய்வு நெறிமுறைகள், மொழியியல் கலைச்சொற்கள், ஆய்வுக்களங்கள் பலவற்றையும் விளக்கும் நூல்களும் கட்டுரைகளும் நூற்றுக்கணக்கில் தமிழில் எழுதப்பட்டுப் படைத்தளிக்கப்பட்டன. மரபு இலக்கண நூல்களை மொழியியல் நோக்கில் மதிப்பீடு செய்யும் முயற்சிகளும் பெருமளவில் மேற்கொள்ளப்பட்டுள்ளன. தமிழ் மொழியின் ஒலியமைப்பு, சொல்லமைப்பு, தொடரமைப்பு, பொருண்மையமைப்பு ஆகிய ஒவ்வொரு கூறையும் விளக்கம் செய்து வெளியாகியிருக்கும் மொழியியல் ஆய்வுகள் மிகப் பல. மன உணர்வுகள், அறிவுக்கூறுகள் இவற்றின் வளர்ச்சியில் மொழியின் பங்கு என்ன என்பது குறித்த உள மொழியியல் ஆய்வுகளும் சாதி, தொழில், கல்வி, பொருளாதார ரீதிகளில் மொழியின் பயன்பாடு குறித்த சமுதாய மொழியியல் ஆய்வுகளும் கூடப் பல்வேறு நிலைகளில் வளர்ந்துவந்துள்ளன.

மொழியியல் அறிவின் பயன்பாடு இன்று பல்வேறு துறைகளிலும் ஊடுருவியுள்ளது. இலக்கியங்கள் மொழியியல் நோக்கில் மதிப்பீடு செய்யப்பட்டு வருகின்றன. நடையியல் ஆய்வுகள் வளர்ந்துள்ளன. பாட நூல்களை உருவாக்குதல், மதிப்பீடு செய்தல், ஆசிரியப் பயிற்சி ஆகிய முயற்சிகளில் மொழியியலின் பயன்பாடு உணரப்பட்டுப் பயன்படுத்தப்பட்டும் வருகிறது. மொழியைக் கற்கும்போது ஏற்படும் பிழைகள், அவற்றை நீக்குவதற்கான வழிமுறைகள் குறித்த ஆய்வுகள் பல நிகழ்த்தப்பட்டுள்ளன. ஆட்சித்தமிழ், சட்டத்தமிழ், பத்திரிகைத்தமிழ், வானொலித் தமிழ், தொலைக் காட்சித் தமிழ், அறிவியல் தமிழ் எனப் பல்வேறு நிலைகளில் நிகழ்த்தப் பட்டுள்ள மொழியியல் ஆய்வுகளும், தமிழின் இரட்டை வழக்கு பற்றிய ஆய்வுகளும், எழுத்துச் சீர்திருத்தம் பற்றிய மொழியைத் திட்டமிடுதல் என்கிற பணிக்கு அடிப்படையை வகுத்துத் தந்துள்ளன. மொழியியலைப்

பயன்படுத்திக் கொண்டு அகராதியியலும் மொழிபெயர்ப்பியலும் பல வளர்ச்சிகளைக் கண்டுள்ளன. அறிவியல் தொழில்நுட்பக் கலைச் சொற்களைத் தமிழில் உருவாக்கும் பணியில் மொழியியல் ஆற்றிவரும் பங்கு மிகவும் குறிப்பிடத்தக்கது ஆகும்.

பன்முக நோக்கில் தமிழ் மொழியியல் வளர்ந்து வர அண்ணாமலைப் பல்கலைக்கழகம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், பாரதியார் பல்கலைக்கழகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தமிழ்ப் பல்கலைக்கழகம், இந்திய மொழிகளின் நடுவண் நிறுவனம், புதுவை மொழியியல் மற்றும் பண்பாட்டுக் கழகம் ஆகிய நிறுவனங்கள் ஆற்றிவந்துள்ள தொண்டுகள் அளப்பரியன. தெ.பொ.மீ., தேவநேயன், மு.வ., வ.ஐ. சுப்பிரமணியம், அகஸ்தியலிங்கம், செ.வை. சண்முகம், பொன். கோதண்டராமன், கருணாகரன், திருமலை, அண்ணாமலை ஆகிய தமிழ்ப் பேரறிஞர்களும் அவர்களால் வளர்த்தெடுக்கப்பட்ட இளந்தலைமுறை மொழியியல் பேராசிரியர்கள் பலரும் தமிழ் மொழியியல் வளரப் பெரிதும் பாடுபட்டுள்ளனர். தமிழ் மொழியியலின் வளர்ச்சியில் புலமை, மொழியியல், தமிழியல், செந்தமிழ்ச் செல்வி, யாணர் போன்ற ஆய்விதழ்கள் ஆற்றிவரும் பணிகளும் இங்குக் குறிப்பிடத்தக்கன.

தமிழ் மொழியியல் வளர்ச்சியைப் பயன்படுத்திக் கொண்டு தமிழ் மேம்பாட்டிற்கு நாம் செய்ய வேண்டிய பணிகள் பல இன்னும் எஞ்சியுள்ளன. தமிழுக்கு **நோக்கீட்டு இலக்கணம்** ஒன்று தேவை. இப்பணியை இந்திய மொழிகளின் நடுவண் நிறுவனமும் தமிழ்ப் பல்கலைக்கழகமும் இணைந்து மேற்கொண்டுள்ளன. அதுபோலவே, தமிழின் பயன்பாட்டை நெறிப்படுத்த உதவும் **தமிழ் நடைக் கையேடு** ஒன்றை உருவாக்கும் பணியை மேற் கூறிய இரு நிறுவனங்களும் **மொழி** அறக்கட்டளையுடன் இணைந்து மேற்கொண்டுள்ளன. இவ்விரு நூல்களும் விரைவில் வெளியாகும் என்று எதிர்பார்க்கலாம். கிளைமொழிகள் பற்றிய ஆய்வுகளைத் தொகுத்து மேலும் விரிவுபடுத்திக் கிளைமொழிகள் அகராதி ஒன்றைவெளியிட்டால் அது கலைச்சொல்லாக்க முயற்சிக்குப் பெரிதும் உதவும். இன்று பெரிதாக வளர்ந்து வந்துள்ள கணினி, இணையம் போன்ற தொழில் நுட்பங்களைப் பயன்படுத்திப் பாடநூல்களும், பயிற்சி நூல்களும், அகராதிகளும், சொல்லடைவுகளும், களஞ்சியங்களும் உருவாக்கப்பட வேண்டும். **இயந்திர மொழிபெயர்ப்பு** வளரவேண்டும். தமிழ் மொழியியலாரின் சொந்தக் கோட்பாடு என்று சொல்லிக் கொள்ளும் வகையில் ஒரு மொழியியல் கோட்பாடு உருவாக வேண்டும். தமிழின் பெருமையை இலக்கண, இலக்கிய ரீதியில் உலகறியச் செய்யும் முயற்சியில் நாம் மேலும் வளர வேண்டும். மரபிலக்கண அணுகு முறையை இன்றைய மொழியியலோடு இணைத்துக் காட்ட வேண்டும். இலக்கிய முயற்சிகளுக்கும் மொழியியல் முயற்சிகளுக்கும் இடையிலான உறவு வலுப்பட வேண்டும். தமிழை உலக அரங்குகளில் கொண்டு வந்து நிறுத்த இலக்கியத்துறையினரும் மொழியியல் துறையினரும் இணைந்து செயலாற்றுவது காலத்தின் தேவை ஆகும்.

# ஒப்பிலக்கிய வளர்ச்சி

ம.செ. இரபிசிங்

ஐரோப்பாவில் *16* ஆம், *17* ஆம் நூற்றாண்டுகளில் பழமை விரும்பிகளுக்கும், முற்போக்குச் சிந்தனையாளர்களுக்கும் இடையே ஏற்பட்ட மோதல்களின் எதிரோலி, *18* ஆம் நூற்றாண்டில் பிரஞ்சு இலக்கியப் படைப்பாளர்களுக்கு ஐரோப்பாவிலுள்ள உயர்நிலை மக்களிடம் கிடைத்த செல்வாக்கு, இலத்தீன் பெற்றிருந்த இடத்தைப் பிரஞ்சு பெற்றமை, புனைவியல் இலக்கிய வளர்ச்சியின் தாக்கம், *1949* இல் ஏற்பட்ட பிரஞ்சு புரட்சி, பிறமொழி இலக்கிய வடிவங்களுக்கு ஏற்பட்ட வரவேற்பு, பலமொழி இலக்கியக் கருத்துப் பரிமாற்றங்கள், சமத்துவ உணர்வு, பிறநாட்டுத் தொடர்பு, மொழிபெயர்ப்புகள் ஆகியவை ஒப்பியல் இலக்கியம் தோன்றுவதற்குப் பின்புலமாக அமைந்தன என்பார் உல்ரிச் ஒயிஸ்டெயின்.

ஒப்பியல் என்பதே ஓர் ஆய்வு முறை. அது அறிவியல் சார்ந்தது. அறிவியல் அந்தஸ்து பெற்றது. இலக்கிய ஆய்வை ஓர் அறிவியல் பரிசோதனைபோல் நடத்தவும், அதனைச் சரிபார்க்கவும், மேலும் திருத்தமுறச் செய்யவும் ஒப்பியல் இலக்கிய ஆய்வால் இயலும் என்பது ஒப்பியலறிஞர் தெயினின் கருத்து.

செர்மனியில் நாட்டுப்புற இலக்கியத்தின் ஒரு கிளையாகத் தோன்றி, பிரஞ்சு இலக்கியத்தின் தனி ஒரு புலமாகப் பர்ணமித்து, அமெரிக்கர்களால் உலகளாவிய நிலையில் பரவியது - செல்வாக்குப் பெற்றது ஒப்பியல் இலக்கியம்.

புளூம்பீல்டு எனும் மொழியியல் அறிஞர், மானுடர்களிடையே அடிப்படைத்தன்மையில் ஒற்றுமை இருப்பதைப் போல, மானுடனால் படைக்கப்பட்ட மொழிகளும் அடிப்படைத் தன்மையில் ஒற்றுமை உடையன என்பார். அதுபோல் மனிதனால் படைக்கப்பட்ட இலக்கியங்களிடையேயும் அடிப்படையில் ஒற்றுமை உளது. எனவே இருமொழி இலக்கிய உறவுகளை ஆய்வது (Binary relation) ஒப்பியல் இலக்கியம் என்று கருதினர் ரெனவெல்லக் போன்ற அறிஞர்கள். ஹென்றி, எச்.எச்., ரிமாக் போன்றவர்கள் இலக்கியத்திற்கும் அப்பால் ஒப்பியல் ஆய்வை மேற்கொள்ள வேண்டிய அவசியத்தை வற்புறுத்தினார்கள். இந்தக் கருத்திற்கு வலுவூட்டிய அமெரிக்கர்கள், இலக்கியத்தைச் சமூக இயலோடும், நுண்கலைகளோடும், உளவியலோடும், இன்னும் இது போன்ற பிற துறைகளுடனும் தொடர்பு படுத்தி, ஒப்பியல் இலக்கிய ஆய்வின் பரப்பை விரிவுபடுத்தினர். அது இன்றைக்கு, எழுதப்பட்டது, எழுதப்படாதது, கண்ணுக்குப் புலப்படுவது, புலப்படாதது, (verbal, non-verbal, visual, non-visual) என்ற நிலை ஒப்புமைக்கும் அப்பால், எந்த ஒரு பொருளும், நிகழ்வும், (மனிதன் உட்பட) முழுமை பெற்ற ஒன்றல்ல; இன்னொன்றோடோ, பலவற்றோடோ இணைந்தோ, தொடர்புகொண்டோதான் முழுமை பெறும் என்ற தத்துவ நிலைக்குச் சென்றுள்ளது. எனவே *1848*இல் மாத்யூ அர்னால்டு Comparative Literature என்ற சொல்லை அறிமுகப்படுத்திய நிலையிலிருந்து *1886*இல் போஸ்னெட் **Comparative Literature** என்ற நூலில் எழுதிய கருத்துக்களின் காலச் சூழலிலிருந்து முன்னேறி உலகளாவிய சிந்தனையை, கோட்பாட்டை வெளிப்படுத்தும் ஓர் அறிவியல் ஒப்பியல் இலக்கியம் வளர்ந்துள்ளது. மொழியியல் கூறான அமைப்பியலின் (Structuralism) வெளிப்பாடான ஒப்பியல் இலக்கியம் ஒரு பன்முக ஆய்வு நெறிமுறையாக (Interdiscipline) இன்று அங்கீகரிக்கப்பட்டுச் செயல்பட்டு வருகிறது. அதாவது இலக்கியத்தை மேலும் தெளிவாக விளங்கிக் கொள்வதற்குப் பிற இலக்கியங்களோடு பொருத்திப் பார்ப்பதோடு அமையாமல், பிறமானுட அறிவுத் துறைகளோடும் பொருத்தி ஒப்பிட்டுப் பார்ப்பது இலக்கிய ஒப்பியல் என்பர் பேரா. அ.அ. மணவாளன். அறிவியல் சாதனைகளால், உலகம் இன்று ஒரு கிராமமாகச் (Global Village) சுருங்கியுள்ளது. இதை உணர்ந்த ஒப்பியல் அறிஞர்களின் சிந்தனையின் வளர்ச்சியே இன்றைய ஒப்பியல் இலக்கியத்தின் வளர்ச்சி.

மேற்குறிப்பிட்ட வகையில் வளர்ச்சி அடைந்துள்ள ஒப்பியல் இலக்கிய ஆய்வு தமிழுக்குக் கிட்டாத ஒரு கனியாகவே காட்சியளிக்கிறது.

ஒப்பியல் இலக்கியத்தின் தொடக்கக்காலத்தில், ஐரோப்பிய இலக்கியங்களையும், பின்னர் உலக இலக்கியங்களையும் ஒப்பிட்ட போக்கே *1940*வரையிலும் இருந்துவந்தது. அத்தகைய ஆய்வுகள், இரு மொழி இலக்கியங்களுக்கு இடையிலான ஒப்புமைகளையும் வேறுபாடுகளையும் தர்க்க ரீதியாக (based on logic) எடுத்துரைப்பதையே அடிப்படையாகக் கொண்டிருந்தன. தொடக்கக்காலத்தில் ஒப்பியல் இலக்கிய ஆய்வில்

இருந்த இத்தகைய போக்கே இன்றைய தமிழ் ஒப்பியல் இலக்கிய ஆய்விலும் காணப்படுகிறது.

அமெரிக்காவில் ஒப்பிலக்கிய வளர்ச்சியையும், அதன் செல்வாக்கையும் அறிந்த, கல்கத்தா பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் சர். அஸீதோஷ் முகர்ஜி என்பவர், ஒப்பியல் இலக்கியத்தை வளர்க்கும் முயற்சியாக, *1919*இல் கல்கத்தா பல்கலைக்கழகத்தில், தற்கால இந்திய மொழிகளின் துறையைத் *(*Department of Modern Indian Languages*)* தொடங்கினார். ஒரே துறையில் பல மொழி இலக்கியங்களைக் கற்பதற்கும், அவற்றை ஒப்பிட்டு ஒப்பிலக்கியம் பற்றி ஆய்வதற்கும் அது வாய்ப்பளிக்கும் என்று நம்பினார். இன்றைக்கும் வடநாட்டின் பல பல்கலைக்கழகங்களில் இத்துறை இருக்கிறது. ஆனால் அஸீதோஷ் முகர்ஜியின் நோக்கம் நிறைவேறாத வகையில் செயல்பட்டு வருகின்றது. ஆனால் முகர்ஜியின் முயற்சியில் ஒரு வெற்றி, *1956*இல் கல்கத்தாவிற்கு அருகாமையிலுள்ள சாதவப்பூர் பல்கலைக்கழகத்தில் ஒப்பிலக்கியத் துறை (Department of Comparative Literature) தொடங்கப்பட்டு இன்றளவும் அது சிறப்புடன் செயல்பட்டுவருகிறது. அண்மையில் இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர் சூரத்திலும் ஒப்பிலக்கியத்திற்கென தனித்துறை தொடங்கப்பட்டுள்ளது.

தமிழ்நாட்டில் பல்கலைக்கழகங்களில் ஒப்பிலக்கியத்திற்கென தனித்துறை இதுவரையிலும் தொடங்கப்படவில்லை. ஆனால், மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் *1982*இல் பல்கலைக்கழக மானியக்குழு ஒப்பியல் இலக்கியத்துறை தொடங்குவதற்காக நிதி ஒதுக்கீடு செய்து, முதல் கட்டமாக ஒப்பியல் பேராசிரியர் பதவிக்கான விண்ணப்பம் கோரப் பட்டது. ஒப்பியல் இலக்கிய ஆய்வு செய்து, அதில் பயிற்சி உடையவர்கள் சென்றும், ஒப்பிலக்கியத்திற்கு எந்த வகையிலும் தொடர்பில்லாத ஒருவர் அதில் நியமிக்கப்பட்டு, அத்துறை, நுண்கலைத்துறையாக மாற்றப்பட்டது. பின்னர், ஆங்கிலத்துறையும், தெலுங்குத்துறையும், ஒப்பிலக்கியம் என்ற தொடரைத் தம் துறைப் பெயரோடுச் சேர்த்துக் கொண்டன. ஒப்பிலக்கியம் தொடர்பான எத்தகைய செயல்பாடுகளுமின்றிச் செயல்பட்டு வருகின்றன.

*1960*இலிருந்து தமிழகப் பல்கலைக்கழகங்களில் முதுகலை மாணவர்களுக்கு ஒப்பிலக்கியம் ஒரு பாடமாக அறிமுகப்படுத்தப்பட்டது. இப்பொழுது சில பல்கலைக்கழகங்களில் விருப்பப் பாடமாகவும், சில பல்கலைக்கழகங்களில் அப்பாடம் நீக்கப்பட்ட நிலையிலுமுள்ளது. ஆனால் அறுபதில் உருவாக்கப்பட்ட ஒப்பிலக்கியப் பாடத்திட்டம், இன்னமும் எத்தகைய ஒரு மாற்றமும் பெற முடியாமல் கன்னித் தன்மையாகவே உள்ளது.

தமிழில் ஒப்பிலக்கியச் சாத்தியக் கூறுகளைச் சுட்டிக்காட்டியவர்கள் பலர். *1885*இலேயே கிரேக்க காப்பியங்களுக்கும் தமிழ் காப்பியங்களுக்கும் இடையிலான ஒப்புமையை அடையாளம் காட்டியவர் டாக்டர் ஜி.யூ. போப்.

அதன்பிறகு *1923*இல் எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார், ஹோமரின் காப்பியத்திற்கு அடிப்படையான கதைப்பாடல்கள், புறப்பாடல்களுடன் ஒப்புமை உடையன என்று கூறினார். *1927*இல் என்.கே. சித்தாந்தா **Heroic Age of India** என்ற தனது நூலின் வாயிலாக, தமிழ் புறப் பாடல்கள் வீரயுகப் பாடல்களைச் சார்ந்தவை என ஒப்பிட்டுக் காட்டினார். *1952*இல் எழுதப்பட்ட **காவிய காலம்** என்ற நூலில், பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை, சித்தாந்தாவின் கருத்தை வழிமொழிந்தார்.

உரோமப் பேரரசுக்கும் தமிழ் நாட்டிற்கும் நடந்த வாணிபத்தின் பின்னணியில் இரு நாடுகளிடையே தோன்றிய உயர்ந்த இலட்சியங்களுக்கு இடையே காணப்பட்ட ஒற்றுமைகளைப் பற்றி, சேவியர் தனிநாயகம் அடிகளார் **இந்திய சிந்தனையும் உரோம ஸ்டோய்க்குவாதவும்** என்ற பேருரை வழங்கினார். மேலும் அவர் **பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை** என்ற தனது ஆங்கில நூலில், கிரேக்க, இலத்தீன் கவிதைகளுடன் தமிழ் இயற்கைப்பாடல்களை ஒப்பிட்டுக் கூறினார். ஆல்பர்ட் ஸ்விட்சர் குறளையும், மனுநீதிச் சட்டங்களையும் ஒப்பிட்டார். இதைப்போல் ஜே.ஆர்.மார் போன்ற இன்னும் பலர், தமிழில் ஒப்பிலக்கிய ஆய்வு மேற்கொள்வதற்குரிய களங்களை அடையாளங்காட்டினர்.

பல்கலைக்கழக நிலையில் ஒப்பிலக்கியம் பற்றி, முழுமையான முனைவர் பட்ட ஆய்வை மேற்கொண்டவர்களில் முதன்மையானவர் பேராசிரியர் கைலாசபதி. அவர் *1966*இல், கிரேக்க காப்பியங்களையும், தமிழ் புறப்பாடல்களையும் ஒப்பிட்டு, **Tamil Heroic Poetry** என்ற அரிய ஓர் ஆய்வேட்டை வழங்கினார். அவரை அடுத்துக் கிரேக்க நாடகங்களையும், தமிழ் நாடகங்களையும் ஒப்பிட்டு ஆய்வு செய்தவர் பேராசிரியர் கா. சிவத்தம்பி. இவர்களைப் பின்தொடர்ந்து கம்பனையும் மில்டனையும் பற்றி எஸ்.இராமகிருஷ்ணன் அவர்களும், இளங்கோ, சேக்ஸ்பியர் ஆகியோரின் துன்பியல் தன்மையைப் பற்றிப் பேராசிரியர் கா. செல்லப்பன் அவர்களும், பாரதியையும் விட்மனையும் பற்றிப் பேராசிரியர் சச்சிதானந்தம் அவர்களும் ஒப்பியல் ஆய்வுகளைச் செய்து பட்டம் பெற்றனர்.

இவர்களைப் பின்தொடர்ந்து பலர் முனைவர் பட்ட ஆய்வுகளை ஒப்பிலக்கியத்தில் செய்துள்ளனர்.

தொடக்கத்தில், கிரேக்க இலக்கியத்துடனும் அடுத்து, ஆங்கிலேயர் ஆட்சியால் அறிமுகமான, ஆங்கில இலக்கியத்துடனும், அதன்பின்னர், அண்டை மொழி இலக்கியங்களுடனும் ஒப்பிலக்கிய ஆய்வுகள் நிகழ்ந்தன. இன்று, அதிலிருந்து சுருங்கி, ஒப்பிலக்கிய ஆய்வு என்ற பெயரால், பாரதி-பாரதிதாசன் பாடல்கள் ஓர் ஒப்பிலக்கிய ஆய்வு, பாரதி தேசியப் பாடல்கள்-பக்திப்பாடல்கள்-ஓர் ஒப்பியல் ஆய்வு என்ற தலைப்புகளில் ஆய்வுகள் நிகழ்த்தப்படுகின்றன. பேராசிரியர் கைலாசபதி குறிப்பிடுவது போல் இவற்றில் *80*விழுக்காடு போலிகள். பேராசிரியர் அ.அ. மணவாளன் கூற்றின்படி இவை ஒப்பிலக்கியக் கொச்சைகள்.

இவற்றிற்குக் காரணம், பிற மாநிலங்களிலுள்ள பல்கலைக் கழகங்களிலிருக்கும் தமிழ்த் துறையிலுள்ளோர், தாம் சார்ந்த மாநில மொழி இலக்கியங்களில் எளிமையான தலைப்புக்களை, நாவல் சிறுகதை போன்றவற்றை எடுத்துக் கொண்டு எந்தவித காரணகாரியங்களையும் விளக்காமல் எந்தக் கோட்பாடும் இல்லாமல் கதை மாந்தர் ஒற்றுமை, கதைக்கரு ஒற்றுமை, நிகழ்ச்சி ஒற்றுமை என்று ஒப்புமைகளை மட்டும் அடையாளங் காட்டி, தம் ஆய்வேடுகளை அமைக்கின்றனர். தமிழகத்திலுள்ள பல்கலைக்கழகங்களிலும் ஒப்பீட்டு ஆய்விற்கும் (Comparative Study) ஒப்பிலக்கிய ஆய்விற்கும் (Comparative Literature) வேறுபாடு தெரியாத நிலையில், வளர்ந்து வரும் ஒப்பிலக்கியக் கோட்பாடுகளைப் பற்றிக் கவலைப்படாத நிலையில் ஆய்வுகளை மேற்கொள்வதால், இத்தகைய தொடர்பற்ற போலி ஆய்வுகள் புற்றீசல்களாக வந்துகொண்டிருக்கின்றன. அவற்றில் *90* விழுக்காடு ஓரிரு மொழி பெயர்ப்பு நூல்களையே ஆதாரமாகக் கொண்டு ஆய்வு செய்யப்படுகின்றன. எண்ணிக்கை அளவில், தமிழில் தான் மிகுதியான ஒப்பியல் ஆய்வுப்பட்டங்களும் ஆய்வு நூல்களும் வெளிவந்துள்ளன. இதுவரையிலும் *73* முனைவர் பட்ட ஆய்வுகள் நிகழ்த்தப்பட்டுள்ளன. *64* எம்.பில். ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

ஒப்பிலக்கியக் கோட்பாடுகள் பற்றியும், ஒப்பிலக்கியம் பற்றியும், ஒப்பிலக்கிய ஆய்விற்கு அடிப்படையான கோட்பாடுகள் பற்றியும் பல தரமான நூல்கள் தமிழில் வெளிவந்துள்ளன.

*1969*இல் வெளியான பேராசிரியர் கைலாசபதியின் **ஒப்பியல் இலக்கியம்** என்ற நூல் தலையாயது. இதைத்தவிர கைலாசபதியின் **இரு மகாகவிகள்** எனும் நூலும், **அடியும் முடியும்** என்ற நூலின் இரு கட்டுரைகளும் ஒப்பிலக்கியம் பற்றியச் சிறந்த படைப்புகள். ஒப்பிலக்கிய வளர்ச்சியில் கைலாசபதியின் பங்களிப்பு கணிசமானது.

*1973*இல் வெளியான பேராசிரியர் தமிழண்ணலின் **ஒப்பியல் - ஓர் அறிமுகம்** பேராசிரியர் சச்சிதானந்தத்தின் *(1985)* **ஒப்பிலக்கியம் ஓர் அறிமுகம்** பேராசிரியர் க. செல்லப்பனின் **ஒப்பியல் தமிழ், எங்கெங்கு காணினும் சக்தி, ஒப்பிலக்கியம் கொள்கைகளும் செயல் முறைகளும்** கதிர் மகாதேவனின் **ஒப்பிலக்கிய நோக்கில் சங்ககாலம்**, ஜான் சாமுவேலின் **இலக்கிய ஒப்பாய்வுக்களங்கள்** ஆகிய நூல்களும் ஒப்பிலக்கியம் பற்றியப் பொதுவான செய்திகளையும், மேலை இலக்கிய கர்த்தாக்களுடனும், அவர்களது படைப்புகளுடனும் காணப்படும் ஒப்புமை களையும் பற்றிக் கூறுகின்றன. இவற்றில் பேராசிரியர் க. செல்லப்பனின் நூல்கள் மேலை இலக்கியக் கோட்பாடுகளை ஒப்பிலக்கியத்தில் பயன்படுத்திய ஆய்வுகளாகத் திகழ்கின்றன.

ஒப்பிலக்கிய ஆய்வை மேற்கொள்வோருக்கும், ஒப்பிலக்கியம் தொடர்பான இன்றைய அளவிலான கோட்பாடுகளை அறிந்து கொள்ள விழைவோருக்கும் சிறந்த வழிகாட்டியாகத் திகழ்வது, பேராசிரியர்

அ.அ. மணவாளன் அண்மையில் எழுதிய **இருபதாம் நூற்றாண்டின் இலக்கியக் கோட்பாடுகள்** எனும் நூல்.

மேலும் *1995*இல் வெளியான, **ஆய்வுச் சிக்கல்களும் தீர்வுகளும்** எனும் நூலில் **ஒப்பிலக்கியம்** என்ற தலைப்பில் பேராசிரியர் அ.அ. மணவாளன் எழுதிய கட்டுரை, ஒப்பிலக்கியம் என்றால் என்ன என்பதையும் அது இன்று எந்த அளவுக்கு ஒரு பன்முக ஆய்வாக வளர்ந்து அறிவியலாக மாறியுள்ளது என்பதைப்பற்றியும், எவ்வாறு இருபதாம் நூற்றாண்டின் புகழ்வாய்ந்த துறைகளுள் ஒன்றாக அது விளங்குகிறது என்பதையும், மேலை நாடுகளில் குறிப்பாக அமெரிக்காவில் ஒப்பிலக்கியக் கல்வியும், ஒப்பிலக்கிய ஆய்வும் எவ்வாறு நிகழ்கின்றன என்பதையும் மிகத் தெளிவாக வெளிப்படுத்துகிறது.

ஒப்பிலக்கியம் பற்றி இதுவரை *24* நூல்கள் வெளிவந்துள்ளன *(ஆய்வுகளைத் தவிர)*. பல்கலைக்கழகம் சாராத அறிஞர்களான, சிதம்பர ரகுநாதன் எழுதிய **பாரதியும் ஷெல்லியும்** என்ற நூலும், **கங்கையும் காவிரியும்** என்ற நூலும், வ.வே.சு.ஐயர் எழுதிய **Kamparamayana - A Study** என்ற நூலும் தரம் வாய்ந்த ஒப்பிலக்கிய ஆய்வு நூல்கள். இதைப்போல புத்ததேவ போஷ் என்ற ஒப்பியலறிஞரும் மகாபாரதத்தின் கதைக்கருவை, Homar Vergil Dante, Tolstoy போன்றோரின் படைப்புகளுடன் ஒப்பிட்டு ஆய்வு செய்தார்.

இந்தியத் துணைக்கண்டத்திற்கு அப்பால், தமிழ் தொடர்பான ஒப்பியல் ஆய்வுகள் பல நிகழ்ந்துள்ளன. அவற்றில் குறிப்பிடத்தக்க ஆய்வு, சப்பான் அறிஞர், சுசுமு ஓனோவின் **Worldview and Rituals Among Japanese and Tamils** எனும் நூலும், **A Comparative Study of Ramayana's Version's of South East Asia and Kampan's Ramacharidham** எனும் ஆய்வும் குறிப்பிடத்தக்கவை.

இலங்கையில் பேராசிரியர் கைலாசபதி, பேராசிரியர் கா. சிவத்தம்பி ஆகியோருக்குப் பின்னர், ந. சுப்பிரமணியம் சிங்களம் - தமிழ் இலக்கியம் பற்றியும் இரா. கனகரத்னம் சிங்களம்-தமிழ் இலக்கிய உறவுகள் பற்றியும் எம்.எச்.எம். சமஸ் Faizdewn-தமிழ்-சிங்களச் சிறுகதைகள் பற்றியும் ஒப்பியல் ஆய்வுகளை மேற்கொண்டுள்ளனர்.

பொதுவாக நோக்கும்பொழுது தமிழில் மேற்கொண்ட ஆய்வுகளில் பெரும்பாலானவை முன்னர்க் குறிப்பிட்டது போல இருமொழி இலக்கியங்கள் பற்றிய தர்க்கமுறையிலான ஒப்பிலக்கிய ஆய்வாக இருந்தாலும், தொடக்க நிலை ஆய்வுகளெல்லாம் உலக இலக்கியங்களோடு ஒப்பிடப்பட்டுள்ளன. பிற இந்திய இலக்கியங்களில் ஆரம்ப காலத்தில், சமஸ்கிருதமும், வங்காளமும்தான் உலக இலக்கிய ஒப்பாய்வை மேற்கொண்டுள்ளன. தமிழில் முதலில் கிரேக்க இலக்கியங்களுடனும், பின்னர் ஆங்கில இலக்கியங்களுடனும் ஒப்பாய்வு செய்துள்ளனர். குறிப்பாகப் பாரதியார்,

ஷெல்லி, கீட்ஸ், விட்மன் போன்றோரோடு ஒப்பிடப்பட்டுள்ளார். ஏனைய இந்தியப் படைப்பாளர்களுடன் பாரதிதான் அதிக அளவில் ஒப்பிடப் பட்டுள்ளார். மேலும் இவர் தாகூர், வள்ளதோள், குமரனாசான் முதலிய பல தேசியக் கவிஞர்களுடனும் ஒப்பிடப்பட்டுள்ளார். இதற்குக் காரணம் பாரதியின் பல்துறைப் பாடல்கள் பலரோடு ஒப்பிடக்கூடிய வாய்ப்பை உருவாக்கியிருக்கலாம்.

தேசியக் கருத்தரங்குகளிலும், உலகத்தமிழ் மாநாடுகளிலும், ஒப்பியல் பற்றிய ஓர் அமர்வும், ஒப்பிலக்கியக் கட்டுரைகளும் கட்டாயமாக இடம்பெறுகின்றன. அதனால் ஒப்பிலக்கியக் கட்டுரைகளின் எண்ணிக்கை மிகுந்துள்ளதே தவிர அவற்றைக்கொண்டு ஒப்பிலக்கிய வளர்ச்சியை மதிப்பிட இயலவில்லை.

பேராசிரியர் அ.அ. மணவாளன் ஒப்பிலக்கியம் பற்றிய தன் கட்டுரையில் குறிப்பிடுவது போல், அமெரிக்கா போன்ற நாடுகளிலுள்ள பல்கலைக்கழகங்களில் கற்கின்ற நிலையிலும், ஆய்வு மேற்கொள்ளும் முறையிலும் கடைப்பிடிக்கும் வரன்முறைகள், முக்கியத்துவம், ஈடுபாடு முதலியன தமிழிலும் பின்பற்றப்பட்டால், உண்மையான ஒப்பிலக்கிய வளர்ச்சி ஏற்படும்.

# கவிதை ஒப்பாய்வு

இராம. குருநாதன்

இலக்கிய உலகம் தன்னைப் புதுப்பித்துக்கொண்டு வளர்ந்து வருவது போல, திறனாய்வுப் பார்வையும் தன்னைப் புதிய புதிய பரிமாணங்களால் புதுப்பித்து வருகிறது. கால மாற்றத்திற்கேற்பவும், சமுதாயப் பின்புலத்திற்கு ஏற்பவும் படைப்புலகம் இயங்கி வருவதைத் திறனாய்வு உலகம் பதிவுசெய்துகொண்டுவருகிறது.

இந்தப் பதிவுப் பார்வைகள் மேலை நாட்டுக் கண்ணாடியை அணிந்து கொண்டு கீழை நாட்டு இலக்கியத்தைக் காணும் போக்கிற்கு உதவுவனவாய் உள்ளன. இத்திறனாய்வுப் போக்குகளில் ஒப்பிலக்கியத் துறையும் கணிசமான பங்கினை அளித்துள்ளது. தமிழில் இத்தகைய முயற்சிகள் அண்மைக் காலத்தில்தான் எழுந்தன.

தமிழ் இலக்கண ஆய்வுகளில் மட்டுமே ஒப்புமைகள் முதன் முதலில் முகிழ்த்தன. அதன் பின்னரே, தமிழ் இலக்கிய ஒப்பாய்வு அரும்பத் தொடங்கியது. இலக்கிய ஒப்புமை என்பதற்கு முன்னரே, மொழி பற்றிய ஒப்புநோக்கு ஆய்வுலகில் வேர் விட்டிருந்ததை அறியலாம்.

தமிழில் இலக்கியங்களிடையே ஒற்றுமை காணும் போக்கு இருந்துள்ளதே தவிர, மேலை நாட்டாரின் ஒப்பியல் கொள்கைக்குப் பொருந்தக்கூடிய வகையில் இலக்கியங்களை ஒப்பியல் ஆய்வுக்கு உளப்படுத்திய நிலை விடுதலைக்குப் பின்னரே உருவாயிற்று.

இலக்கிய ஒப்புமை என்ற தொடர், மிகப்பழமையான ஒன்று. ஒப்பு என்ற சொல் இலக்கிய இலக்கணங்களுள் பயிலப்பட்டுள்ளது. அறிவியல் சிந்தனையோடும், பிற துறைகளோடும் இலக்கியத்தை அணுகும் முறையாகிய ஒப்பிலக்கிய ஆய்வு தமிழுக்கு அண்மைக்காலத்திய வரவாகும்; புதிய உறவாகும்.

வேறுபட்ட மொழி, இலக்கியம், பண்பாடு சார்ந்த இரு படைப்புகளை ஒப்பிட்டு, இரண்டுக்கும் இடையே ஒற்றுமை வேற்றுமை உணர்வுகளைத் தோற்றுவித்து, ஒரு பொதுமை காண்பதை அடிப்படையாகக் கொண்டுள்ள ஒப்பியல் பார்வை, விடுதலை பெற்ற இருபது ஆண்டுகளுக்குப் பிறகே தமிழில் பரவலான கண்ணோட்டத்திற்கு உட்பட்டுள்ளது.

ஒப்பிலக்கிய உணர்வைத் தோற்றுவித்த முன்னோடிகளாகிய ஜி.யு. போப், வ.வே.சு. ஐயர், என்.கே. சித்தாந்தா, வையாபுரி பிள்ளை, எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார் முதலியோரின் எண்ணங்கள் பின்னர்த் தோன்றிய தமிழறிஞர்கள் வளர்ச்சி அடையக் காரணமாக இருந்துள்ளன. ஒப்பிலக்கியத் துறையில் ஈடுபாடுகொண்டிருந்த தனிநாயக அடிகள், தெ.பொ.மீ., மு.வ., வ.சுப., ஜான் மார் முதலியோர் பல்வேறு நிலைகளில் ஒப்பிலக்கியச் சிந்தனையை உரமிட்டு வளர்த்தவர்கள் ஆவர். கைலாசபதி, வி. சச்சிதானந்தம், அ. சீநிவாசராகவன், எஸ். இராமகிருஷ்ணன், க.த. திருநாவுக்கரசு முதலியோர் ஒப்பிலக்கியத் துறையின் தளத்தை விரிவுபடுத்தினர். அறுபதுகளிலும் எழுபதுகளின் தொடக்கத்திலும் தமிழில் ஒப்பிலக்கியம் வளர, மேலே சுட்டப்பட்டவர்கள் ஒவ்வொரு வகையிலும் காரணமாக இருந்துள்ளனர்.

எழுபதுகளின் இறுதியிலும், எண்பதின் தொடக்கத்திலும் பல்கலைக்கழகங்கள், நிறுவனங்கள் வழியாக ஒப்பிலக்கியத் துறை நன்கு அறிமுகமானது. மதுரைக் காமராசர் பல்கலைக்கழகத்தில் தொடங்கப்பெற்ற ஒப்பியல் துறை சச்சிதானந்தம் முயற்சியால், அத்துறையில் ஆர்வ முடையவர்களை உருவாக்கி வளர்த்தது. *1979*இல் சென்னையில் ஜான் சாமுவேல், சண்முகம் ஆகிய இருவரும் சேர்ந்து தொடங்கிய ஒப்பாய்வுக் கழகம் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிகளை நடத்தியது. எண்பதுகளின் தொடக்கத்தில் கே. செல்லப்பன் திருச்சியில் நிகழ்த்திய ஒப்பியல் கருத்தரங்கு பலரை ஈர்ப்புக்கொள்ளச் செய்தது. மதுரைக் காமராசர் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறைச் சார்பாக ஒப்பிலக்கியத்துறை தொடங்கியபோது அத்துறைக்குப் பெரிதுமான பங்கை அளித்தவர் தமிழண்ணல் ஆவார். இவருக்குப் பின் கதிர் மகாதேவன் அத்துறையில் மிகுந்த ஆர்வங்காட்டினார். ஒப்பாய்வுக் கண்ணோட்டம், பல்கலைக்கழக அளவில் இன்று ஓரளவு வளர்ந்துள்ளது எனலாம்.

ஒப்பிலக்கிய நூல்கள் தமிழில் பல வெளிவந்திருப்பினும் சிலவே, அத்துறையில் செவ்வித் தலைப்பட்டதாகத் தோன்றுகிறது. தொடக்க காலத்தில் எழுந்த ஒப்பிலக்கிய நூல்கள் ஒப்பிலக்கியக் கோட்பாட்டையோ/

கொள்கைகளையோ கொண்டு அமைக்கப்படவில்லை. ஒப்புமை (Mere Analogy or means of Comparison) என்ற அளவில் அவற்றை எண்ணிப் பார்க்கத் தோன்றுகிறது.

ஒப்பிலக்கியத்துறை என்பது அறிவியல் சார்ந்த துறைகளோடும் ஏனைய நுண்கலைகளோடும் இணைத்துப் பார்க்கத்தக்கது என்ற எண்ணம் வேரூன்றிய பின், ஒப்பிலக்கிய ஆய்வுகள் இந்த நோக்கில் வளர்தற்குரிய சூழ்நிலை உருவாகியது.

எண்பதுகளின் இறுதியிலும் தொண்ணூறுகளிலும் இந்திய இலக்கியம், மேலைக்கீழைநாட்டு இலக்கியங்கள் பற்றிய சிந்தனை பரவலாகக் கற்கப்பட்டு வருவது இத்துறையில் கவனம் திரும்பியுள்ளதைக் காட்டுகிறது.

விடுதலை கால கட்டத்திற்கு முன் தமிழ்-வடமொழி என்ற அளவில் ஒப்புமை உணர்வு சிந்திக்கப்பட்டது. இவ்விரு மொழி ஒப்புநோக்கு அற இலக்கியம், காவியம் ஆகிய இலக்கிய வடிவங்களில் நிகழ்த்தப்பெற்றது. இந்திய இலக்கியங்களை மற்ற இந்திய மொழி இலக்கியங்களோடு அணுகும்முறை விடுதலைக்குச் சற்று முன்பும், பின்புமான கால கட்டங்களில் தொடங்கியது எனலாம்.

இந்திய மொழிகளில் மலையாளம், தெலுங்கு, கன்னடம் ஆகிய திராவிட மொழி இலக்கியங்களுக்கு இடையேயான ஒப்புமையைத் தமிழ் கண்டது. வங்க மொழி இலக்கியத்தை ஒப்புநோக்கி ஆயும்போக்கு விடுதலை இயக்கத்திற்குப் பின்னர் ஓரளவு அரும்பியது.

தமிழறிஞர் சிலர், அண்டை மாநில மொழி இலக்கிய ஒப்பியல் நோக்கிற்குத் தமது பங்களிப்பைச் செய்துள்ளனர். டி.பி.சித்தலிங்கையா, சிற்பி, டி.எஸ். சதாசிவம், ஜகந்நாதராஜா, சாமுவேல்தாசன் முதலியோரை இது தொடர்பாகக் குறிப்பிடலாம்.

இந்திய இலக்கியங்களைத் தவிர்த்து ஏனைய நாடுகளில் நிலவும் கவிதைகளை மட்டுமே ஒப்பாய்வுக்கு இக்கட்டுரை எடுத்துக் கொள்கிறது.

பிறநாட்டு இலக்கியங்களில் கிரேக்கம் நெருங்கிய ஒப்பியல் நோக்குடையது. கிரேக்க இலக்கியங்களோடு தமிழ் இலக்கியத்தைத் தொடக்க கால ஒப்பியல் முன்னோடிகள் சிலர் தொடர்புபடுத்தி எழுதியுள்ளனர். சங்க இலக்கியம் கிரேக்க இலக்கியத்தோடு பொருத்திப் பார்க்கப்பட்டுள்ளது. ஒப்பியலில் முதல் சிந்தனையாக இது தோன்றியது. ஜி.யு.போப், சித்தாந்தா போன்றோர் இது தொடர்பான கருத்தை முன் வைக்க, சங்க இலக்கியம் பற்றிய ஒப்பியல் பார்வை, ஏனைய தமிழறிஞர்களைச் சிந்திக்கத் தூண்டியது. கைலாசபதி, வீரயூகக் கோட்பாட்டின் அடிப்படையில் சங்க இலக்கியத்தை அணுகுதற்கு அத்தகையோரின் அறிமுகப் பார்வைகள் தூண்டுகோலாயிருந்தன.

தமிழ்க்கவிதை ஒப்பாய்வு, கீழ்க்காணும் செல்நெறிகளில் வளர்ந்துள்ளதை அறியலாம்.

1. ஒப்புமைப் போக்கு
2. பொருண்மை அடிப்படையில் ஆய்வுகள்
3. இணைவரைக் கோட்பாடு
4. பொதுவான ஒப்பிலக்கிய அணுகுமுறை
5. இயக்க வழி ஆய்வுகள்
6. தாக்கம்/செல்வாக்கு/மீட்டுருவாக்கப் பார்வை
7. காலகட்ட ஆய்வு
8. மொழி பெயர்ப்புத் திறனாய்வு
9. பிற துறை ஒப்பாய்வு

முதலான போக்குகளைத் தமிழ்க்கவிதை ஒப்பாய்வு வரலாற்றில் காண முடிகிறது.

ஒப்புமை என்றளவில் கவிதைகளை ஒப்பிட்டு ஆராய்தல் சுவையுணர்வையும், முருகியல் இன்பத்தையும் தரவல்லது. ஒப்பியலைத் துறையாகக் கருதாமல், தொடக்க காலக் கவிதை ஒப்பாய்வுகளில் வெறும் ஒப்புமையாக மட்டும் கருத்துகளை எடுத்தாண்டு இருமொழி ஒப்பீட்டுக்கு வளம் சேர்த்தனர். ஒப்பியல் ஓர் அறிவியல் பார்வை உடையது என்ற நிலையை இத்தகைய ஆய்வுகளில் காண முடியாது. ஒப்பியலை ஒரு துறையாகக் கருதுவதற்கு முன் இப்போக்கு நிலவியதைத் தவிர்க்க இயலாது. தமிழில் தொடக்க கால ஒப்பியல் முயற்சிகள் இத்தகையனவாய் இருந்துள்ளன.

பொருண்மை அடிப்படையிலான ஒப்பாய்வு சங்க இலக்கிய ஒப்பீட்டாய்வில் நிகழ்ந்துள்ளது. தனிநாயக அடிகள், **Landscape and Poetry** என்ற நூலில் தமிழரின் திணைக் கோட்பாடுகளை விளக்கிச் சில பொருண்மைகளில் ஆராய்ந்துள்ளார். சங்க கால இயற்கைப் புனைவுப் பாடல்கள் மனித மன உணர்ச்சிக்குப் பின்னணியாக இருப்பதையும், சமய உணர்ச்சிக்குத் தகவுடையதாய் இருப்பதையும் அவரது நூல் விளக்குகிறது. சங்கப்பாடல்களை வடமொழி, கிரேக்கம், இலத்தீன், ஆங்கிலம் ஆகிய மொழிகளில் உள்ள இயற்கைப் புனைவுப்பாடல்களோடு ஒப்புமை என்றளவில் ஆராய்ந்துள்ளது. முதல், கரு, உரிப் பொருள்களையும், திணைப்பகுப்பினையும் விரித்துரைக்கும் இந்நூல் வரலாறு, புராணம் ஆகியவற்றை இயற்கைப் புனைவில் அறநிலை சமயநிலைகளுக்கு உட்படுத்தியிருப்பதைக் காணலாம்.

சங்க அகப்பாடல்களைக் கிரேக்க காதற் பாடல்களோடு ஒருபுடை ஒப்பதாகச் சுட்டிக் காட்டிய வ.சுப மாணிக்கம் (தமிழ்க் காதல்), ஆங்கில முல்லைத் திணைப் பாடல்களைத் தமிழ் மரபிற்குச் சுட்டிக்காட்டிய மு.வ. (முல்லைத் திணை ஆராய்ச்சி) முதலியோரின் கருத்தாக்கங்களின்

வளர்ச்சியினைப் பின்னர்த் தோன்றிய ஆய்வுகளில் காணமுடிகிறது. இவ்வகையில் **சங்க இலக்கிய ஒப்பீடு** *(தமிழண்ணல்)*, **ஒப்பிலக்கிய நோக்கில் சங்க இலக்கியம் பழந்தமிழர் வீரப் பண்பாடு; தொன்மம்** *(கதிர் மகாதேவன்)*, **சங்கக் கையறு நிலைப்பாடல்களும் கிரேக்க அவலப் பாடல்களும்** *(மா. செண்பகம்)*, **ஒப்பியல் நோக்கு : தொல்காப்பியமும் இலக்கிய வகைமை வளர்ச்சியும்** *(கி. ராஜா)*, **சங்கச் செவ்வியல்** *(செ.. சாரதாம்பாள்)* முதலிய நூல்கள் கிரேக்க இலக்கியத்தைச் சங்க இலக்கியத்தோடு பொருத்திக் காணும் முயற்சியில் முனைப்புக் காட்டின.

தொன்மை வாய்ந்த கிரேக்க இலக்கியங்களையும் சங்க இலக்கியத்தையும் அகம், புறம் ஆகிய பொருண்மைக் கூறுகளில் மேற்கண்ட நூல்கள் ஆராய்ந்துள்ளன. தவிரவும் வகைமைக் கோட்பாடு, யாப்பு வடிவம், இணைவரை ஆகிய அடிப்படைகளிலும் ஒப்பிட்டுள்ளதை இந்நூல்களால் அறியலாம்.

கிரேக்க வீரயுக மரபைப் புறத்திணைகளோடும், அகப்பாடலோடும் ஒப்பிட்டுக் காணும் கைலாசபதியின் ஆய்வு மிகுந்த வரவேற்பைப் பெற்றதாகும். இவருடைய ஒப்பியல் இலக்கிய நூல் பன்முகப் பார்வை கொண்ட ஆழமான ஆய்வாகும்.

கிரேக்க இலக்கிய ஒப்பீடன்றியும், வேறு சில சங்க இலக்கிய ஒப்பீடும் தமிழில் நிகழ்ந்துள்ளன. குறிப்பாகச் சங்க இலக்கியத்தை, சப்பானிய மன்யோசு தொகை நூல்களோடு ஒப்பிட்டுக் காணும் முயற்சியில் இராம. குருநாதன் எழுதிய **சங்கப்பாட்டும் சப்பானியக் கவிதையும்** என்ற நூலில் அவ்விரண்டு மொழிகளுக்கு இடையிலான ஒப்புமைகள் சுட்டப்பட்டுள்ளன. செய்யுள் வடிவம், இயற்கை, காதற் பாடல்கள், கையறு நிலைப்பாடல்கள், பண்பாட்டுச் செய்திகள் முதலிய பொருண்மைகளில் பொருத்திப் பார்க்கப்பட்டிருப்பதை அறியலாம். சங்கப்பாடல் சப்பானிய மன்யோசு கவிதைகளோடு ஒப்பிடப்படும் போது சப்பானிய மொழியறிவு இன்றியமையாதது. இந்நூல் தமிழ் சப்பானிய ஒப்புமையில் ஆங்கில வழியிலான சப்பானிய மொழி பெயர்ப்பைக் கொண்டு செய்யப்பட்டதாகும். இதன் பின்னர், சப்பானிய அகப்பாடல்களைச் சங்கப் பாடலோடு ஒப்புமை காணும் முயற்சியில் மனோன்மணி சண்முகதாஸ் எழுதிய **மன்யோசி காதல் பாடல்கள்** குறிப்பிடத்தகுந்த நூலாகும். நேரடியான மொழி பெயர்ப்பு நூலான இதில் சப்பானிய அகப்பாடல் உணர்வுகளை ஆங்காங்கே சங்கப் பாடலோடு ஆசிரியர் உணர்த்தியுள்ளார்.

சங்க இலக்கிய ஒப்பாய்வுகளில் இயக்க வழியிலான ஆய்வுகள், அணுகுமுறை ஆய்வுகள், பிற துறை ஆய்வுகள், உத்தி அடிப்படை ஆகிய போக்குகளில் வெளிப்பட்டன. சங்க இலக்கியத்தின் பன்முகப் பார்வை, பரந்த தளத்தில் ஒப்பாய்வாக எண்பது தொண்ணூறுகளில் மலர்ந்தது.

இயக்க வழியிலான ஒப்பாய்வுக்குச் சாரதாம்பாள் எழுதிய **சங்கச் செவ்வியல்** சான்றாகும். மேலை நாட்டார் கூறுகின்ற செவ்வியல்

(Classicism) பண்புகளைச் சங்க இலக்கியத்தில் காணும் முயற்சியே இந்நூல். செவ்வியல் கிரேக்க, ரோமானிய இலக்கியங்களிலும், ஏனைய ஐரோப்பிய இலக்கியங்களிலும் வளர்ச்சிப்பெற்றதனைச் சுட்டிய இந்நூலில், சங்க இலக்கியச் செவ்வியல் பண்புகள் விரிவாக நோக்கப்பட்டுள்ளன. செவ்வியலின் திருந்திய வடிவமே சங்கப்பாட்டு என்பதை இந்நூல் நிறுவுகிறது.

சங்க இலக்கிய ஒப்பியல் அணுகுமுறை ஆய்வுகளில் ஆலிஸ் எழுதிய, **கட்டமைப்பு ஆய்வில் அகநானூறும் புறநானூறும்** என்ற நூல் குறிப்பிடத்தக்கது. அகம், புறம் ஆகிய பாடல்களின் கருத்து, வடிவம், இவற்றின் தொடர்பு, மற்றும் முழுமையான கவிதையின் ஒட்டுமொத்த திரட்சி முதலிய பார்வைகள் அமைப்பியலின் கூறுகளாகும். இவ்வகையில் சங்கப் பாடலை ஒப்பியல் கோட்பாட்டோடு அணுகியுள்ளது இந்நூல்.

சங்க இலக்கியத்தைப் பிற துறைகளோடு பொருத்திப் பார்க்கும் முயற்சியைக் கவிதை ஒப்பாய்வின் செல் நெறிகளில் காணலாம். கவிதா ரூபலட் சாருலதா, கபிலர் பாடல்களில் காணப்பெறும் கையறு நிலைக் கூறுகளை உளநுட்பச் செயல் (Mental Mechanism) அடிப்படையில் ஆய்ந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. உளவியலின் ஒரு பகுதியான உளநுட்பச் செயல் சார்ந்த பார்வை இதன் பின்னர் வளர்ந்தது. சிவராஜ் எழுதிய **சங்க இலக்கியத்தில் உளவியல்** என்ற ஆய்வுநூல் செம்மையாக அமைந்ததாகும்.

உளவியல் பார்வை இன்னும் சற்று விரிந்த தளத்தில் செல்வதற்கும், பிராய்டு, யுங், ஆட்லர் ஆகியோர் வகுத்துச் சென்ற வரையறைகளையும், லெக்கானின் அணுகுமுறைகளையும் சங்கப்பாடல்களோடு பொருத்திப் பார்க்கும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டதனை ஒப்பியலின் செல்நெறிகளில் காணலாம்.

உத்திமுறையிலான ஒப்பாய்வுகளும் சங்க இலக்கிய ஒப்பாய்வில் நிகழ்ந்துவருகின்றன. கதிர்மகாதேவன் எழுதிய **தொன்மம்** என்ற நூல் குறிப்பிடத்தக்கது. சங்க இலக்கியப் பதிவுகளில் அமைந்துள்ள புராண நிகழ்ச்சிப் போக்கினை இந்த நூல் ஆராய்கிறது.

உத்தி அடிப்படையிலான பார்வையில் முரண் உத்தி இருபாடல்களில் அமைந்துள்ளதை, **கீரர், கீட்சு கவிதைகளில் ஒப்பீடு** என்ற நூல் விளக்குகிறது. முரண் என்ற அழகிய உத்தி (Poems of Contrast) கீரரின் **நெடுநல்வாடையிலும்**, கீட்சின் **புனித ஏக்னசின் பொன்மாலைப்பொழுது** (The Eve of St. Agnes) என்ற பாவியத்திலும் அமைந்துள்ளதைச் சுட்டிச் செல்கிறது. முரண், இணைவு, படிமம் ஆகிய உத்திகளில் இக்கவிஞர்கள் ஒன்றுபட்டிருப்பதையும், வேறுபட்டு நிற்பதையும் விளக்கும் இந்நூல், இருபாவியங்களிலும் கதைமாந்தரின் உணர்ச்சிகள் ஒன்றுபட்டிருப்பதை உற்று நோக்கியுள்ளது.

சங்க இலக்கியப் பார்வை மேலும் பல்வேறான ஒப்பாய்வுக்கு இடந்தருவதாய் விளங்குகிறது. தமிழண்ணலின் **சங்க இலக்கிய ஒப்பீடு** (இரு தொகுதிகள்) என்ற நூல் விரிவான ஒப்பாய்வுக்கு வழிவகுப்பதாக உள்ளது. சங்க இலக்கியத்தை ஒப்பிலக்கியக் கோட்பாடுகளின் அடிப்படையில் மேலும் மேலும் ஆராய்தற்கு இடமுண்டு. இவ்வாறு காணும் போக்கு வளர வேண்டும். மேலே காட்டிய சங்க இலக்கிய ஒப்புமை செல்நெறிகள் வழியே பழந்தமிழ் இலக்கியத்திற்கு விரிந்த தளம் கிடைத்திருப்பதை மறுத்தற்கில்லை.

அறநூல்களைப் பற்றிய ஒப்பாய்வுகள் தமிழில் குறைவு. திருக்குறள் பற்றிய ஆய்வுகள் மட்டுமே எண்ணிப் பார்க்கத் தக்கனவாய் உள்ளன. திருக்குறளையும் மேலை நாட்டு அறக்கருத்துகளையும் ஒப்புமை என்ற அளவில் சுட்டிக் காட்டும்படியான நூல்கள் வெளிவந்துள்ளன. க.த. திருநாவுக்கரசு எழுதிய **திருக்குறள் நீதி இலக்கியம்** என்னும் நூல் பரந்துபட்டதோர் ஒப்பாய்வு நூலாகும். இந்நூல் உலக அறவியல் சிந்தனைகளைத் திருக்குறளோடு விரிவாக ஒப்பிட்டாய்கிறது. கு. மோகனராசு திருக்குறள் சிந்தனைகளைக் கன்பூசியஸ் கருத்துகளோடு ஒப்பிட்டு ஆராய்ந்துள்ளமையும் சுட்டிக்காட்டத் தக்கது.

திருக்குறள் பற்றிய ஒப்பிலக்கியக் கோட்பாட்டின் அடிப்படையில் நூல்களும், ஆய்வுகளும் மிக அருகியே காணப்படுகின்றன. ஆய்வேடுகள் சில ஒப்பிலக்கியக் கோட்பாட்டில் அமைந்துள்ளன. தி. சிவசங்கரன் எழுதிய ஆய்வேடு குறிப்பிடத்தக்கது. திருவள்ளுவரையும், ஆங்கிலக் கவிஞர் பிரான்சிஸ் பேகனையும் பற்றிய இவ் ஆய்வேடு இணைவரை முறையில் அமைந்துள்ளது. இருவரது நூல்களில் அமைந்துள்ள வாழ்வியல் செய்திகள், பண்பாட்டுக் கருத்துகள், அரசியல் சிந்தனைகள் முதலான பார்வைகளில் நோக்கப்பட்டுள்ள ஆய்வேடாகும் இது. அறச்சிந்தனையில் இருவருக்கும் உள்ள அக்கறை, சமுதாயத்திற்கு ஒழுக்கத்தை வலியுறுத்தியமை ஆகியவை விரிவாக ஆராயப்பட்டுள்ள இவ் ஆய்வேடு, பேகனைப் பயன்பாட்டு வாதியாகவும் (Pragmatist) திருவள்ளுவரை அறச்சிந்தனையாளராகவும் (Moralist) காட்டுகிறது.

திருக்குறளும் விவிலியமும் ஒப்புமை என்றளவில் நோக்கப் பட்டுள்ளன. விவிலியத்தோடு ஒருங்கு வைத்து எண்ணத்தக்க திருக்குறள் கருத்துகள், நூல்களாகவும், ஆய்வுகளாகவும் வெளிவந்துள்ளன. இரு நூல்களுக்குமிடையேயுள்ள ஒருமித்த சிந்தனைகள் இணைவரை என்ற வகையில் எடுத்துக்காட்டப் பெற்றிருப்பதை இத்தகைய நூல்களில் காணலாம். திருவள்ளுவரை மார்க்க அரேலியருடன் ஒப்பிடும் நூல் இணைவரை முறையிலானது. இதே போன்று அண்டனி அழகய்யா எழுதியுள்ள **திருக்குறளும் விவிலியமும்** என்ற நூலும் அமைந்துள்ளது. அழகய்யாவின் ஒப்பீட்டுக் கருத்துகள் பொருண்மை அடிப்படையில் அமைந்துள்ளன. Song of Songs, Proverbs முதலிய விவிலியப் பகுதிகள்

ஒப்பிடப்பட்டுள்ளன. அறவியல், இன்பவியல் ஆகிய பொருண்மைகளை இந்நூல் ஒப்பிட்டு விளக்குகிறது.

விவிலியத்தில் உள்ள சாலமோனன் நீதிகளை ஒப்புமைப்படுத்தும் சிறுநூல், **சாலமோன் ஞானியும் திருவள்ளுவரும்** என்னும் நூலாகும். வெறும் கருத்தொற்றுமையை மட்டுமே சுட்டிக்காட்டுவதாக உள்ளது; வேறு எந்த ஆய்வுப் பார்வையும் இதில் இல்லை.

சங்க இலக்கிய ஒப்பாய்வு பல்கியது போல, அறநூல்களில் ஒப்பாய்வு மிகுதியாக நிகழ்த்தப்பெறவில்லை. அதே போன்று பக்தி இலக்கியங்களிலான ஒப்பாய்வுகள் மிகுதியாக மேற்கொள்ளப்படவில்லை. சமயச் சான்றோர்களை ஒப்பிட்டு வெகு சில நூல்கள் வெளிவந்துள்ளன. மாணிக்கவாசகரை ரூமியோடு ஒப்பிடும் முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது. சித்தர் பாடல்களும் சூபி தத்துவங்களும் ஒப்பிடப்பெற்றுள்ளன.

தமிழ்க் காப்பியம் பல்வேறு கோணங்களில் மேல்நாட்டுக் காப்பியங்களோடு ஒப்பிடப்பட்டுள்ளது. ஜி.யு. போப், சித்தாந்தா, வையாபுரி பிள்ளை ஆகியோரின் கருத்துகள் காப்பிய ஒப்புமையைச் சுட்டிக்காட்டிச் சென்றமை மேலாய்விற்குப் பயன்பட்டதெனலாம். தமிழ்க் காப்பியங்களை வடமொழிக் காப்பியங்களோடு ஒப்பிட்டதுமின்றி, கிரேக்க இலத்தீன் காப்பியங்களோடும் ஆங்கிலக் காப்பியங்களோடும் ஒப்பிடலாம் என்ற உணர்வு தோன்றி வளர்ந்தது. *1885* இல் ஜி.யு. போப் கூறிய கருத்து இது தொடர்பாக எடுத்துக் காட்டத்தக்கது.

பழைய காப்பியங்களைப் பார்க்கும்போது அவற்றுக்கும் அவற்றுக்குச் சமமான கிரேக்க இலக்கியத்துக்கும் உள்ள ஒற்றுமை புலனாகிறது. உருவத்திலும் உள்ளடக்கத்திலும் சமுதாய நிலையிலும் பெரும் ஒற்றுமைகள் காணப்படுகின்றன என்ற கருத்து, முதன்முதலாக வெளிப்படுத்தப்பெற்றது. மேலைநாட்டுக் காப்பியங்களோடு தமிழ்க் காப்பியங்களை ஒப்பு நோக்குதற்கு இக்கருத்து உறுதுணையாக இருந்தது. வையாபுரி பிள்ளை, கி.வா.ஜ. போன்றவர்கள் காப்பியம் குறித்து எழுதிய நூல்களும் அவ்வெண்ணத்தை உரமூட்டி வளர்த்தன.

தமிழில் காப்பிய ஒப்பீடு பலகோணப்பார்வை உடையதாய்க் கிளைத்தது. ஒப்புமை என்ற நிலையிலும், ஒப்பியல் கொள்கையை ஏற்று ஒப்பீடு என்ற நிலையிலும் பல்வேறு ஆய்வுகள் நிகழ்ந்துள்ளன. சங்க இலக்கியத்தைக் காட்டிலும் காப்பிய ஒப்பீடு பற்றிய ஆய்வு விரிவாக மேற் கொள்ளப்படுதற்கு மிகுதியான களன்கள் காரணங்களாக உள்ளன. கதை, கதைமாந்தர் பண்பு, கட்டமைப்பு, நிகழ்ச்சி, வருணனை உத்தி முதலிய தளங்களில் விரிவாக ஒப்பு நோக்குதற்குக் காப்பியம், ஏனைய இலக்கிய வகைகளைவிட ஏற்றதாக உள்ளது. இருப்பினும் காப்பிய ஒப்பீட்டாய்வுகள், தமிழில் ஓரளவுதான் நிகழ்ந்துள்ளன.

வ.வே.சு. ஐயரின் கம்பராமாயணம் பற்றிய ஆங்கில ஒப்புமை நூல் குறிப்பிடத்தக்கது. **Kambaramayanam - A Study** என்ற அவரது நூல் காப்பிய ஒப்புமைக்கு முன்னோடி எனலாம். மேலை நாட்டுக் காப்பியக் கவிஞர்களான ஹோமர், வெர்ஜில், மில்டன் முதலான காப்பியப் புலவர்களோடு ஒப்பிட்டுக் கம்பனை உயர்த்திப் பிடிக்கிறார். ஒப்பியல் கோட்பாடு ஒருவரை மட்டுமே உயர்த்திக் கூறுவதற்கு இடந்தராது. எனினும் பெருங்கவிஞர் பற்றிய ஒரு முழுமையான பார்வையில், ஒப்பிட்டு ஆயலாம் என்பதன் முன் முயற்சியாக நோக்கப்பட்டமை கவனத்திற்கு உரியது. காப்பியக் கவிஞர்கள் பற்றி ஒப்பிடும் போக்கிற்கு வ.வே.சு. வழித்தடம் அமைத்துத் தந்துள்ளார்.

காப்பிய ஒப்பீட்டில் கம்பராமாயணம் பற்றிய ஒப்பீடுகள் ஓரளவு வளர்ந்துள்ளன. சிலம்பு குறித்த ஒப்பீட்டு ஆய்வுகள் அடுத்த இடம் வகிக்கின்றன.

எஸ். இராமகிருஷ்ணன், எழுதிய **கம்பனும் மில்டனும்** என்ற நூல் முதலில் சிறு நூலாக வெளிவந்து, பின் விரிந்த அளவில் எழுதப்பட்டதாகும். **கம்பனும் மில்ட்டனும் ஒரு புதிய பார்வை** என்ற அவரது நூல் கம்பராமாயணத்தையும், துறக்க நீக்கத்தையும் பலகோணங்களில் விரிவாக ஆராய்கிறது. இருகாப்பியங்களுக்கு முன் கதை நிகழ் சூழ்நிலையை வரலாற்றாய்வில் நிகழ்த்தியிருக்கும் பாங்கு சுட்டிக்காட்டத்தக்கது. இரு பெருங்கவிஞர்களிடையே காணப்படும் நோக்கு, காவிய மரபு, கட்டுக்கோப்பு, பழைய காவியங்களின் செல்வாக்கு ஆகியவற்றை முன்னுரை என்ற பகுதியில் சுட்டிக்காட்டிச் செல்லும் ஆசிரியர், பொருளுரை என்ற பகுதியில் இலட்சிய நோக்கு, நிகழ்ச்சிப் போக்கு, திருப்புமையம், சிக்கல் அவிழ்ப்பு முதலியவற்றை ஆராய்ந்துள்ளார். இணைவரைக் கோட்பாட்டிற்குள் இந்நூலை அடக்க முடிகிறது. இந்திய இலக்கியத்தில் இராமாயணம் பெற்ற செல்வாக்கையும், மில்டனுக்குத் தாக்கத்தை ஏற்படுத்திய கிரேக்க, ரோமானிய காப்பியங்களையும் முதற்பகுதி ஆராய்கிறது. கதை மாந்தர்களின் ஒற்றுமை, வேற்றுமைகளை நிகழ்ச்சிப் போக்கில் ஒப்பிட்டு ஆராய்கிறது. நியாயம் பேசுவதில் கைகேயியைத் திருத்தந்தையோடு ஆய்ந்திருப்பதை இவ்வகையில் அடக்கலாம். துன்பியல் சூழ்நிலையில் தயரதனோடு ஒப்பு விளங்கும் சாம்சனைக் காணுகிறோம். இராவணனைச் சாத்தானோடு ஒப்பிடும் ஆசிரியர், அந்த நிகழ்ச்சிப் போக்கை வேற்றுமை வழியேயும் விளக்குகிறார்.

கம்பனை, சேக்ஸ்பியரோடு ஒப்பிடும் நூலான **கம்பரும் சேக்ஸ்பியரும்** என்னும் நூலில் கம்பன் கவிதைக்கும், சேக்ஸ்பியரின் நாடகங்களுக்கும் இடையே நிகழ்ச்சிக் கோப்பு, பாத்திரப்படைப்பு, கருத்து வளர்ச்சி, சொல்லாட்சி ஆகிய பொதுவான ஒப்புமைகளைச் செய்துள்ளார் அந்நூலின் ஆசிரியர் எஸ். இராமகிருஷ்ணன்.

கம்பரும் சேக்ஸ்பியரும் முன்மாதிரியான கருவைப் புத்தாக்கம் செய்வதில் ஈடு இணையற்றவர்கள் எனவும், இருவரும் மானிட வாழ்வின் சூக்குமங்களை முற்றுமாக அறிந்தவர்கள் எனவும் கருத்துத் தெரிவிக்கும் ஆசிரியர், பாத்திரப் படைப்பில் கைகேயியையும், ஒத்தெல்லோவையும் ஒப்பிடுகிறார். இருவரும் அறிவும் சூழ்ச்சித் திறனுமுடைய கூனியாலும் இயாகோவாலும் எவ்வாறு ஏமாற்றப்படுகின்றனர் எனச் சுட்டியுள்ளார். கூனி, இயாகோ ஒப்பீட்டில் அவ்விருவருமே தாம் கொண்ட கூடா நட்பால் எவ்வாறு ஏமாற்றப்படுகிறார்கள்; அதனால் பெருந்துன்பத்திற்குள்ளாகி றார்கள் எனவும் காட்டியுள்ளார். இதுபோன்றே மாக்பெத் பெருமாட்டியும் கைகேயியும் ஒப்பிடப்படுகின்றனர். கைகேயியை அவளே அறியாமல் இயற்கை கடந்த சக்தி தன் கருவியாகப் பயன்படுத்திக்கொள்கிறது; ஆனால் மாக்பெத் பெருமாட்டி எண்ணித் துணிந்து இயற்கைக் கடந்த ஆற்றலைத் தானே நாடுகிறாள். இராமாயணத்தில் நன்மை செய்யும் ஆற்றல் தலையிட்டது, மேக்பெத்தில் தீமையே செய்யும் ஆற்றல் தலையிட்டது, அந்தச் சக்திகளாற்றிய வினையால் இருவருமே வீழ்ச்சியுறுகின்றனர் என்ற ஒப்பியல் நோக்கு நன்கு தெளிவுறுத்தப்பட்டுள்ளது.

கே. செல்லப்பன் எழுதியுள்ள **Shakespeare and Elango as Tragedians - A Comparative Study** என்னும் நூல் ஒப்பாய்வு பார்வையோடு செய்யப்பட்டுள்ளது. சேக்ஸ்பியரின் துன்பவியல் நாடகங்களோடு சிலப்பதிகாரத்தை ஒப்பிடுகிறது. இரண்டு நூல்களிலும் கதைமாந்தர் பண்பு, நிகழ்ச்சிப் போக்கு முதலான நிலைகளில் இவ் ஆய்வு அமைந்துள்ளது. கோவலனின் பண்பு குடும்பத்தையும், சமுதாயத்தையும் எங்ஙனம் பாதித்துள்ளது என்பதைச் சேக்ஸ்பியரின் ஹேம்லட், சியர் அரசன், மாக்பெத் ஆகிய நாடகங்களோடு பொருத்திக்காட்டுகிறது. கோவலன் ரோமியோவோடும், அண்டனியோடும், மற்றும் சில நிலைகளில் ஒத்தெல்லோவோடும் ஒப்பிடப்படுகிறான். மாதவி மடல், கிளியோபாட்ராவின் மடல் ஆகிய இரண்டிலும் காணப்பெறும் செய்திகள் அவரவர் பண்புகளை வெளிப்படுத்தும் திறம் ஆகியன ஒப்பாய்வுக்களனைச் சுட்டுகின்றன. சில பண்புகளின் அடிப்படையில் ஒபிலியா, டெஸ்டிமோனா, கார்னிலியா ஆகியோர் கண்ணகியோடு ஒப்பிடப்பட்டுள்ளனர்.

மில்டனையும் கம்பனையும் ஆராய்ந்துள்ள மணவாளனின் **Epic Heroism in Milton and Kamban** என்ற நூல் ஒப்பிலக்கியத்துறையில் குறிப்பிடத்தகுந்ததாகும். இணைவரைக் கோட்பாட்டு அடிப்படையில் இது அமைந்துள்ளது. காப்பிய மரபில் வீரயுகச் சிந்தனையை விளக்கும் இவ் ஆய்வு நூல், வீரயுகப் பண்பாடு, அறிவியல், அறவியல், ஆன்மீக நாட்டம் முதலிய அடிப்படைகளில் ஆராய்கிறது. காப்பியத்தின் கட்டுமானம் இரண்டிலும் அறவியல் அடிப்படையில் இயங்குவதை எடுத்துக் காட்டுகிறது.

இலக்கிய இயக்கம், அணுகுமுறை, இணைவரை ஆகிய போக்குகளில் அமைந்த கே. செல்லப்பனின் **ஒப்பிலக்கியம் கொள்கைகளும் கோட்பாடுகளும்** என்ற நூல் குறிப்பிடத்தகுந்த ஒப்பாய்வாகும்.

நாடகங்களையும் காப்பியங்களையும் ஒரு குறிப்பிட்ட வரையறைக்குள் ஒப்பிட்டுப் பொதுவுண்மை காணலாம் என்ற உணர்வைத் தோற்றுமாறு ஆய்வுகள் எழுபது எண்பதுகளின் மத்தியில்தாம் தொடங்கின. இப்போக்குகளை மேற்கூறிய இராமகிருஷ்ணனின் நூல்களில் மட்டுமின்றி கே. செல்லப்பன், அ.அ. மணவாளன் போன்றோரின் ஆய்வுகளிலும் காண முடிகிறது. ஒப்பியல் கோட்பாடுகளை உள்வாங்கிக்கொண்டு பின்னவர் இருவரும் எழுதியுள்ளனர்.

கம்பரையும் ஹோமரையும் மெய்ப்பாட்டு அடிப்படையில் விளக்கி ஆராய்கிறது ஆ.ரா.இந்திராவின் **கம்பரும் ஹோமரும்** என்ற நூல். இலியட், ஒடிஸி ஆகிய ஹோமரின் இரு காப்பியங்களில் காணக்கிடக்கும் மெய்ப் பாடுகளைக் கம்பரின் காவியத்தோடு பொருத்திக்காட்டும் நூல், மாந்தரின் மன உணர்ச்சிகளில் வெளிப்படும் எண்வகை மெய்ப்பாடுகளை ஆராய்கிறது.

தமிழில் மேலும் சில காப்பிய ஒப்பீடுகள் நிகழ்ந்துள்ளன. ஒப்பிலக்கிய பார்வையிலான ஆய்வுகள் குறைவே. காப்பிய ஒப்பீட்டை மேற்கொள்வதற்கு மேலை நாட்டுக் காப்பியங்கள் துணை செய்வனவாய் உள்ளன. மேலை நாட்டில் பல்கிப் பெருகிய ஒப்பியல் கொள்கைகளின் அடிப்படையில் ஆய்வதற்குப் பலவகைகளிலும் வாய்ப்பிருக்கிறது.

ஒப்பிலக்கியப் போக்கில் குறிப்பிடத்தக்க மாற்றம் எண்பது தொண்ணூறுகளில் காணப்படுதற்கு அதன் வளர்ச்சி எல்லை, விரிவான தளங்களில் இயங்கி வருவது காரணமாக உள்ளது. இக்கால கட்டம் புதியதொரு ஒப்பியல் வாசலைத் திறக்க வழிவகுத்துள்ளது. தனிப்பட்ட இரு கவிஞர்கள் பற்றிய பார்வை, தாக்கம் பற்றிய கோட்பாடு, சிலவகையான அணுகுமுறை ஆய்வுகள் போன்றவை தமிழ் ஒப்பிலக்கிய ஆய்வில் புகுந்தன.

எண்பதுகளிலும் தொண்ணூறுகளிலும் பாரதியார் பற்றிய ஒப்பிலக்கியப் பார்வை பரந்துபட்ட தளத்தில் ஆயப்பட்டது. இந்திய இலக்கியம், ஆங்கில, பிரெஞ்சு, உருசிய இலக்கியப் பதிவுகளோடு அப்பார்வை விரிவடையத் தொடங்கியது. தமிழில் பாரதி பற்றிய ஒப்பு நோக்கே குறிப்பிடத்தக்க வளர்ச்சி கண்டுள்ளது. பாரதி நூற்றாண்டுக்கு முன்னரும், பாரதி நூற்றாண்டிலும், அதன் பின்னருமான கால கட்டங்களில் வெளிவந்த நூல்களும், ஆய்வுகளும் பல. பாரதி பற்றிய ஒப்பிலக்கிய ஆய்வுகளைக் கீழ்க்காணும் வகைகளில் அடக்கலாம்.

1. தாக்கம் பற்றியவை
2. தேசியப் பார்வையிலானவை
3. தனிப்பட்ட புலவர்களோடு அணுகியுள்ளமை
4. பெண்ணியத் தொடர்பானவை
5. இலக்கிய இயக்கம் சார்ந்தவை
6. பொருண்மை அடிப்படையில் அமைந்தவை

பாரதி பற்றிய ஒப்பியல் பார்வைகள் தாக்கம், செல்வாக்கு ஆகிய கோட்பாடுகள் வழியே விரிந்த இடத்தைப் பெற்றன

அறுபது, எழுபதுகளில் வெறும் ஒப்புமை என்ற அளவில் பாரதி கவிதைகள் பற்றிய ஆய்வுகள் வெளிவந்தன. அதன் பின்னரே ஒப்பியல் கோட்பாடுகளின் நோக்கில் ஆய்வுகள் நிகழ்த்தப் பெற்றன. பாரதியாரை மேலை நாட்டுக் கவிஞரோடு ஒப்பிடும் நோக்கில் விரிந்த தளத்தைப் பெற்றது சச்சிதானந்தத்தின் **The Impact of Western thought on Bharathi** என்ற ஆய்வு நூல். மேலை நாட்டுக் கவிஞர்கள் பாரதியாரை எங்ஙனம் பாதித்துள்ளனர் என்ற கருத்தின் வெளிப்பாடு, ஷெல்லி, பைரன், டென்னிசன், காலரிட்ஜ், சேக்ஸ்பியர், வால்ட் விட்மன் முதலியோர் பாரதியிடம் தாக்கத்தை ஏற்படுத்தியமை ஆகியன விரிவாக ஆராயப் பட்டுள்ளன. புரட்சி, புதுமையில் ஷெல்லியும், இயற்கைப் புனைவில் சேக்ஸ்பியரும், அழகை ஆராதிப்பதில் கீட்சும், பாரதியைப் பாதித்த விதம் சொல்லப்பட்டுள்ளது. விட்மனையும் பாரதியையும் விடுதலை வேட்கை, பெண்மைப் புரட்சி, எளிய யாப்பு வடிவம் முதலிய தளங்களில் நின்று பொருத்திக் காட்டுகிறது.

சச்சிதானந்தத்தின் மற்றொரு நூலான **Whitman and Bharati- A Comparative Study** என்ற நூல் குறிப்பிடத்தக்கது. சமயக் கோட்பாட்டுணர்வு இருவரது கவிதைகளிலும் அமைந்துள்ளதை இணைவரை முறையில் ஆய்கிறது. வேதாந்த இறையியல் (Vedantic Mysticism) பற்றி விளக்கி யுரைக்கும் இந்நூல், உலக உடன்பிறப்பியம் (Universal brotherhood ) பற்றிய சிந்தனையை விதைக்கிறது. உலக மக்களைக் கடவுளின் கூறாகப் பார்க்கும் இருகவிஞர்களும், ஒரு நாடு எங்ஙனம் அமைய வேண்டும் என்று கனவு கண்டதில் உள்ளம் ஒருமித்திருந்ததையும் சுட்டிக்காட்டுகிறது.

**பாரதியும் மேல்நாட்டுக் கவிஞர்களும்** *(1966)* என்ற நூலில் கைலாசபதி, பாரதியிடம் இருந்த பிற நாட்டுக் கவிஞர் தாக்கம் பற்றிய செய்திகளை அளிக்கிறார். புனைவியல் கவிஞர்களான வேர்ட்ஸ்வொர்த், ஷெல்லி, பைரன், கீட்ஸ் முதலியோரின் கவிதைகளில் காணப்பெறும் விடுதலை வேட்கை, புதுமை காணல், பெண் புரட்சி போன்ற சிந்தனை களோடு பாரதி கவிதை பொருந்த விளங்குவதைச் சுட்டிக் காட்டுகிறார்.

கவிஞர் இருவரைப் பற்றிய முழுமையான பார்வை என்ற தளத்தில் அறுபதுகளின் மத்தியில் வெளிவந்த நூல் தொ.மு.சி. ரகுநாதனின் **பாரதியும் ஷெல்லியும்** என்பதாகும். இவ்விரு கவிஞர்களின் இளமை வாழ்க்கை, ஏகாதிபத்திய எதிர்ப்பு, பெண்மைப் புரட்சி முதலிய பொருண்மைகளில் ஒப்பிடுகிறது இந்நூல்.

இலக்கிய இயக்க வழியிலான ஆய்வுக்கு எடுத்துக்காட்டாக ஜி.ஜான் சாமுவேல் எழுதிய ஆய்வுநூல் **Aspects of Romanticism - With A Special reference to Shelley and Bharati - A Comparative Study** என்பதாகும்.

ஆங்கிலத்தில் எழுதப்பட்ட இவ் ஆய்வேடு, **ஷெல்லியும் பாரதியும் - ஒரு புதிய பார்வை** என்ற தலைப்பில் தமிழில் வெளியிடப் பெற்றது. வீறுணர்ச்சி (Romanticism) பற்றிய வரலாற்றாய்வு, தனிமனித வாதம், வீறுணர்ச்சிக் கற்பனை, இலக்கியக் கோட்பாடுகள் ஆகிய நிலைகளிலும், புரட்சிப் பெண்மை, இலட்சியக் குழந்தை, இயற்கையும் கவிதையும், இலட்சியக் காதல் ஆகிய பொருண்மைகளிலும் விரிகிறது இந்நூல். ஷெல்லி, பாரதி ஆகிய இருவரும் வீறுணர்ச்சி இயக்கத்தின் முற்போக்கு அணியைச் சார்ந்தவர்களாக விளங்குவதை எடுத்துக் காட்டுகிறது.

து. ஞானசம்பந்தன் எழுதிய **Shelley and Bharathy Comparative Study of their Poetic Creeds** என்ற ஆய்வேடு சமூக சீர்திருத்தம், புரட்சி, மதம், நாடு, காதல், உருவகம் ஆகிய பொருண்மைக் கூறுகளையும், உத்திமுறைகளையும் இருவரது கவிதைகளிலும் ஆராய்கிறார்.

**பாரதியும் கீட்சும்,** என்னும் பாலாவின் ஒப்பீட்டுச் சிறுநூல் பொருளாழம் மிக்கது. இவ்விரு கவிஞர்களிடையே மிளிரும் சில பண்புகளைத் தொட்டுக் காட்டுகிறது. பாரதி தன்னைச் செழுமைப்படுத்திக் கொள்ள மேலை நாட்டு இலக்கிய வாதிகளின் படைப்புகளே காரணம் என்பதைத் தெரிவிக்கும் பாலா, அழகின் தத்துவம் இவ்விருவரது கவிதைகளிடையே எவ்வாறு நோக்கப்படுகிறது என்பதை ஆராய்கிறார்.

> **சத்தியை முதலில் தேர்ந்து அதில் தெய்வீக அழகைப் பாரதி பார்க்கிறான்; அழகை முதலில் தேர்ந்து அதில் தெய்வ உண்மையைக் கீட்சு காண்கிறான்**

என்ற கருத்தை நிலைநாட்டுகிறார்.

பாரதியையும், ராபர்ட் பிராஸ்ட்டையும் பற்றிய ஒப்பாய்வில் அதன் ஆசிரியர் சுப்பிரமணியன் இரு கவிஞர்களின் இயற்கை ஆளுமையை விரிவாக ஆராய்ச்சி செய்துள்ளார். இயற்கையைப் பாடியிருப்பினும் அதனை வெளிப்படுத்தியிருப்பதில் மாறுபட்டவர்களாக இருவரும் விளங்குகின்றனர் என்பதை ஆராய்கிறார். பாரதியின் இயற்கை அறிவு மதச்சார்பினது என்று கூறும் ஆசிரியர், பிராஸ்ட்டின் இயற்கை, அறிவு சார்ந்த நிலையில் உலக நோக்கை ஒட்டியதாகக் காண்கிறார். அனுபவங்கடந்த அறிவு நிலையில் (Transcendentalistic) பிராஸ்ட்டைக் காணும் ஆசிரியர், இறையியல் உணர்வோடு கூடிய வேதாந்தியாகப் பாரதியாரை இனங்காண முற்பட்டுள்ளார்.

குயில்பாட்டு, பாரதியாரின் மேல்நாட்டுக் கவிஞர்களின் தாக்கத்திற்குத் தக்க எடுத்துக்காட்டாகும். புனைவியல் கவிஞர்களோடு பல வகைகளில் பொருத்திக் காட்டப்பெற்ற ஒப்பீடுகள் குயில்பாட்டின் மீது நிகழ்த்தப் பெற்றுள்ளன. கீட்சின் இலாமியாவோடு (Lamia) குயில்பாட்டை

ஒப்பிடும் சக்கர இலக்குமிகாந்தன், இரு பாவியங்களில் இடம்பெறும் நிகழ்ச்சிகள் சிலவற்றை எடுத்துக்காட்டி இணைவரை முறையில் ஆராய்ந்து உள்ளார். குயில்பாட்டில் இடம்பெறும் பாத்திர வார்ப்பு, இலாமியாவின் சாயலில் படைக்கப்பட்டுள்ளது என்பதை வெளிப்படுத்துகிறது இந்நூல்.

பாஞ்சாலி சபதத்தைச் சுவர்க்க நீக்கத்தோடும், குயில்பாட்டை கோமஸோடும் (Camus) சில இயைபுகளின் அடிப்படையில் காட்டுகிறது **பாரதியும், மில்டனும்** என்ற எம்.சோலையப்பனின் ஆய்வு நூல். துரியனைச் சாத்தனோடு ஒப்புமை தோன்றக் கூறியுள்ளார் ஆசிரியர். குயில்பாட்டையும் கோமஸையும் ஒப்பிடும் ஆய்வாளர் இவ்விரு படைப்புகளிலும் இயற்கை இறந்த நிகழ்ச்சிகள் இடம் பெறுவதைச் சுட்டிக் காட்டுவதோடு குயில்பாட்டு, காதலின் மேன்மையை உணர்த்த, கோமஸ் நற்குணத்தின் மேன்மையை வலியுறுத்துவதாகவும் சுட்டியுள்ளமை எண்ணத்தக்கது.

பாரதி கவிதைகளில் ஒப்பாய்வு விரிந்த தளத்தில் செய்யப்பட்ட பின்னர், பாரதிதாசன் கவிதைகளும் ஒப்பாய்வுக்கு உட்பட்டன. பாரதிக்கு அமைந்த ஒப்பாய்வுகள் போலப் பாரதிதாசனில் ஒப்பாய்வுகள் பெரிதுமாக வெளிவரவில்லை. பாரதிதாசனின் நூற்றாண்டு விழாவையொட்டி ஒப்பாய்வு நூல்கள் சில வெளிவந்தன. **பாரதிதாசன்** என்ற நூல், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தால் வெளியிடப்பட்ட ஒப்பாய்வுக் கட்டுரைகளைக் கொண்டது. பாரதிதாசனை இந்தியக் கவிஞர்களோடும், பிறநாட்டுக் கவிஞர்களோடும் ஒப்பாய்வு செய்யும் இந்நூல், பாரதிதாசனை மெக்கே, விட்மன், பிராஸ்ட், ஷெல்லி, கீட்சு, பைரன், செவ்சென்கோ முதலிய கவிஞர்களோடு ஒப்பிட்டாய்கிறது.

பாரதிதாசன் நூற்றாண்டு விழாவை ஒட்டி மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையின் சார்பில் வெளியிடப் பெற்ற ஆங்கில நூல் **Bharatidasan Critical Perspectives** என்பதாகும். இத்தொகை நூல் பாரதிதாசனைப் பல்வேறு கோணங்களில் ஆராய்கிறது. பொருண்மை, உத்தி, இலக்கிய இயக்கம், பெண்ணியம் முதலிய பார்வைகளில் ஒப்பீடு அமைந்துள்ளது. பிராஸ்ட், விட்மன், பர்னஸ், பைரன், வேர்ட்ஸ் வொர்த், பெர்னாட்சா, டி.எச்.இலாரன்ஸ் போன்ற கவிஞர்களின் பல்வேறு திறன்களைப் பாரதிதாசனோடு ஒப்பிட்டு ஆராய்கிறது.

பாரதிதாசனையும் அமெரிக்கக் கவிஞர் கார்ல் சான்ட்பர்க்கையும் (Carl Sandburg) ஒப்பிட்டு ஆராய்ந்த சண்முக செல்வகணபதி, தமது நூலில் இவ்விரு கவிஞர்கள் பற்றிய பார்வையை முழுமையாகத் தந்துள்ளார். இவ் ஆய்வேடு இரு கவிஞர்களிடையே காணப்பெறும் மனித நேய சமுதாயப் பார்வை, இயற்கைப் பார்வை, நாட்டுப்புறப் பார்வை, இசைப்பாடல்கள், சிறுவர் இலக்கியம், இலக்கிய நயம் ஆகிய தலைப்புகளில் அமைந்துள்ளது. சமுதாய முன்னேற்றத்தையும் மனித நேயத்தையும் இயற்கையைப் பாடும்போது இருவரும் எடுத்துக்காட்டியுள்ளனர் என்பதைச்

சுட்டும் ஆய்வாளர், நாட்டுப்புற இசையின் வளர்ச்சியான செவ்வியல் இசையைப் பாரதிதாசனிடமும், நாட்டுப்புற இசையைச் சான்ட்பர்க்கிடமும் காணமுடிகின்றது என்கிறார்.

**இலக்கியத்தில் பழம்புதுமையும், புதுப்பழமையும்** என்ற க. செல்லப்பனின் கட்டுரைத் தொகுதியில் இடம்பெற்றுள்ள 'வேர்ட்ஸ் வொர்த், பாரதிதாசனின் பார்வையில் இயற்கை வழி மனிதநேயம்' என்ற கட்டுரையும், **விடுதலைச்சிட்டும் புரட்சிக் குயிலும்**, என்ற நூலில் இடம் பெற்றுள்ள 'அழகியல் பார்வையில் பாவேந்தர்', 'புரட்சிக் கவிஞர் பாரதிதாசனிலும் கீட்சிலும் இயற்கையியம்', 'பாவேந்தர் பாரதிதாசனும் ரசூல் கம்சத்தோவும்', 'பாவேந்தரிலும் ஷெல்லியிலும் பெண்மையும் இயற்கையும் ஓர் ஒப்புநோக்கு' ஆகிய கட்டுரைகள் ஒப்பியல் இலக்கியக் கோட்பாட்டிற்குச் சரியான எடுத்துக்காட்டுகளாகும்.

**கிழக்கும் மேற்கும்** என்னும் ப. மருதநாயகம் எழுதிய நூல் பல ஒப்பியல் கட்டுரைகள் கொண்ட குறிப்பிடத்தக்க நூலாகும். இதில் உள்ள கட்டுரைகள் பல **Across Seven Seas** ஆங்கிலத் தொகுதியிலும் இடம் பெற்றுள்ளன. தொல்காப்பியர், பாரதியார், பாரதிதாசன், அரவிந்தர், டி.எஸ். எலியட் இவர்களின் படைப்புகளை ஒப்பியல் நோக்கில் விளக்கமாக ஆய்கின்ற ஆய்வாளர் ஏ.கே. ராமானுஜனின் 'மொழிபெயர்ப்புத் திறன்', தெ.பொ.மீ.யின் 'ஒப்பிலக்கிய ஆய்வுத்திறன்' போன்ற கட்டுரைகளைக் கொண்டுள்ளது. சமயம் சார்ந்த ஒப்பியல் கட்டுரைகளாக 'மணிமேகலையில் பௌத்த சமயம்', 'பௌத்தமும் சமணமும்', 'ஞானசம்பந்தர்' ஆகிய கட்டுரைகளும் அடங்கியுள்ளன. இவ்விரு நூல்களிலும் அமைந்துள்ள கட்டுரைகள் அணுகுமுறை, இணைவரை, தாக்கம் முதலிய ஒப்பியல் கோட்பாட்டின் அடிப்படைத் சிந்தனைகளைக் கொண்டவை.

மொழிபெயர்ப்புத் திறனாய்வு ஒப்பியலில் இன்னும் சரியான வீச்சில் தமிழில் செய்யப்படவில்லை. ஒப்பியல் துறையில் மொழிபெயர்ப்புக்கு இன்னும் சரியான ஒப்புதல் *(Recognition)* கிடைக்கவில்லை என்றே தோன்றுகிறது. இலக்கியத்தின் பன்முகப் பார்வைக்கு இது இன்றியமையாதது என்பதைத் தமிழ்த் திறனாய்வு ஆழமாக உணர வேண்டும். தமிழில் மொழிபெயர்ப்புத் திறனாய்வியல் வளராமை ஒரு குறையே. விரல் விட்டு எண்ணத்தக்க ஓரிரு நூல்கள் மட்டுமே வெளிவந்துள்ளன. **எட்வின் ஆர்னால்ட்-கவிமணி** இவ்விருவரின் பார்வைகள் மூலம், பெயர்ப்பு என்ற வகையில் நோக்கப்பட்ட ஆய்வாகும். பா.கார்த்திகேயன் எழுதிய இந்நூல் குறிப்பிடத் தகுந்ததாகும்.

ஒப்பிலக்கியத்துறையில் குறிப்பாக, சிறுகதை, நாவல் போன்றவற்றில் மிக அண்மைக் காலத்துப் படைப்பாளர்களை ஒப்பிடும் அளவிற்குக் கவிதை ஒப்பாய்வு நிகழ்த்தப் பெறாமை சுட்டிக் காட்டுதற்குரியது. இது பாரதி, பாரதிதாசனோடு மட்டுமே அப்பார்வை நின்று விட்டது என்ற உணர்வைத் தருகிறது. நிகழ்காலக் கவிஞர்களை மேலை நாட்டுக் கவிஞர்களோடு

ஒப்பிடும் நூல்கள் வளரவேண்டும். இல்லையேல் கவிதை ஒப்பாய்வில் தேக்க நிலையும் தேய்மானமுமே எஞ்சி நிற்கும்.

ஒப்பிலக்கியத்துறை தமிழோடு மட்டுமே தொடர்புடையது என்ற நிலையிலிருந்து விடுபட வேண்டும். ஏனைய பல துறைகளோடு ஒப்பு நோக்கும் முறை பெருகவேண்டும். நம் இலக்கியம் தமிழ்த்துறைப் பேராசிரியர்களுக்கு மட்டுமே தொடர்புடையது என்ற கருத்து இருந்து வருகிறது. இது மாற வேண்டும். தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட ஆங்கிலப் பேராசிரியர்கள் மத்தியில் இருமொழி இலக்கிய உணர்வு தோற்றுவிக்கப்பட வேண்டும். ஒப்பியல் துறையில் அவர்களுக்குப் பங்கு மிகுதி உள்ளது. இதை உணர்ந்து பல ஒப்பியல் ஆய்வுகள் கொண்டு வரப்படவேண்டும். ஆங்கிலப் பேராசிரியர்களில் சிலரே தமிழ் இலக்கியம் பற்றிய சிந்தனையும் நாட்டமும் கொண்டு திறனாய்வும், ஒப்பீடும் செய்துள்ளனர். இது மேலும் வளரவேண்டும். ஒப்பியல் துறையில் அகலப்படிப்பு விரிவடைய வேண்டும். அதற்கான பாடத்திட்டங்களும் முறையாகப் பேணப்பட வேண்டும். பிற மொழி இலக்கியத்தில் இன்னும் சரியான படிப்பு மேற்கொள்ள வேண்டும்.

கவிதை ஒப்பாய்வில் தாக்கம், செல்வாக்கு, இணைவரை குறித்த ஆய்வுகளே தமிழில் ஓரளவு வளர்ந்துள்ளன. இதனைக் கவிதை ஒப்பாய்வு பற்றிய சிந்தனையில் இறங்கும்போதுதான் உணர்தற்கு இயலுகிறது. அணுகுமுறை ஆய்வுகளும், பிற துறை ஆய்வுகளும் கவிதை ஒப்பாய்வில் நிகழ்த்தப் பெறவேண்டியுள்ளது.

# இதழியல் படைப்புகள்

**திருப்பூர் கிருஷ்ணன்**

---

பத்திரிகைக்குப் படைப்புகள் அனுப்புவோர் பலவகைப்பட்டவர்கள். அவர்கள் படைப்புகளை எழுதும் விதமும் பலவகைப்பட்டன.

எழுதித்தான் படைப்புகளைப் படைக்கவேண்டும் என்ற அவசியம் இல்லை. சொல்லி எழுதச் செய்தும் படைப்புகளைப் படைக்க முடியும்.

சொல்லி எழுதும் மரபுக்கு இந்தியப் பாரம்பரியத்தில் பிள்ளையார் சுழி போட்டவர் வேறு யாரும் அல்ல; பிள்ளையாரே தான். வியாசர் சொல்லி, பிள்ளையார் எழுதிய மகாபாரதம் தான் சொல்லி எழுதப்பட்ட பழம் படைப்பு என்று சொல்லப்படுகிறது.

தமிழ்ப் பத்திரிகை வரலாற்றில் சொல்லி எழுதியவர் என்று வை.மு. கோதை நாயகியைக் குறிப்பிடவேண்டும். அவரே நடத்திய **ஜகன் மோகினி** இதழில் வெளிவந்த அவரது தொடக்ககாலப் படைப்புகள் எல்லாம் சொல்லி எழுதப்பட்டவையே. இவ்விதம் சொல்லி எழுத வைத்ததற்கான அவரது காரணம் மற்ற எல்லா எழுத்தாளர்களையும்விட வித்தியாசமானது. அவர் நாவல் எழுதிய தொடக்க காலத்தில் அவருக்குத் தமிழ் எழுதப்படிக்கவே தெரியாமல் இருந்தது. ஐந்தாறு நாவல்கள் வெளிவந்த பின்னரே அவர் எழுதக் கற்றார். எழுதப்படிக்கத் தெரியாத ஒருவர் நாவல்கள் எழுதிப் பெரும்புகழும் பெற்ற பெருமை தமிழைத் தவிர வேறு மொழியில் உண்டா என்று தெரியவில்லை.

கண்ணதாசன் பின்னாட்களில் வேலை மிகுதி காரணமாகச் சொல்லி எழுதுவதைத் தன் வழக்கமாகக் கொண்டிருந்தார். கண்ணதாசன் எழுதிய பல கவிதைகள்கூட, கேட்டுக் கொண்டதன் பேரில் உடனுக்குடனே தொலைபேசியில் சொல்லப்பட்டவை என்பது ஓர் ஆச்சர்யம். தாம் பத்திரிகைகளில் எழுதிய தொடர்கதைகளின் அத்தியாயங்களையெல்லாம் அவர் சொல்ல அவர் உதவியாளர்தான் எழுதிவந்தார்.

சொல்லி எழுதப்பட்டவை கூட அல்ல, சொல்லி உடனுக்குடனே அச்சுக் கோக்கப்பட்டவை ம.பொ.சி. செங்கோல் இதழில் எழுதிய படைப்புகள். அச்சகத்திலிருந்து ஓர் ஊழியர் அவர் சொல்லச் சொல்ல உடனுக்குடன் அச்சுக்கோத்து அச்சேற்றிவிடுவார். இலக்கிய ஆராய்ச்சிக் கட்டுரைகளைக் கூட அவர் இவ்விதம் சொல்லி அச்சுக்கோக்க வைத்தார் என்பது அவரது தமிழ் மேதைமையைப் புலப்படுத்தும் செய்தி.

டி.எஸ். சொக்கலிங்கத்தின் அன்பரும் ராஜாஜியின் சீடரும் சிறந்த பத்திரிகையாளரும் பத்திரிகைகளில் ஏராளமாக எழுதிக் குவித்தவருமான எஸ்.எஸ். மாரிசாமி, தம் இறுதிக் காலத்தில் சொல்லி எழுதுவதற்கு ஓர் ஆள் தேடிக்கொண்டிருந்தார். அத்தகைய உதவியாளர் கிடைக்காமலேயே அவர் காலமானார். 'இது முன்பே தெரிந்திருந்தால் நான் உதவியிருப்பேனே' என்று அவர் காலமானபின் பெரிதும் வருந்தினார், அவரது பெருமைகளை முற்றிலும் உணர்ந்த படைப்பாளியான வண்ணநிலவன்.

எழுதிய படைப்புகளை இதழ்கள் வெளியிடுவதோடுகூட, படைப்புகளை எழுத வைத்தும் இதழ்கள் வெளியிட்டுவருகின்றன. வித்தியாசமான தலைப்பைக் கொடுத்துக் கதை எழுதச் செய்வது, ஏதாவது கருத்தைக் கொடுத்துக் கதை எழுதச் சொல்வது, ஒரு வாக்கியத்தைத் தொடக்கமாகக் கொடுத்துக் கதை எழுதச் சொல்வது, இரண்டு பேராகச் சேர்ந்து கதை எழுதுவது, பற்பல கதாசிரியர்களைக் கொண்டு சங்கிலித் தொடர்கதை எழுதச் செய்வது என்றிப்படி பத்திரிகை உத்திகளும் பலப்பல. இரண்டு பேர் ஒன்று சேர்ந்து ஒரு வாரம் ஒருவர் ஓர் அத்தியாயம் என்றபடி இந்துமதி, சிவசங்கரி இருவரும் ஒரு தொடர்கதை எழுதினார்கள். **புல்லைத் தின்னும் புலிகள்** என்ற தலைப்பைக் கொடுத்து தினமணிக்கதிர் நடத்திய சிறுகதைப் போட்டியில் கலந்து கொண்டு, இன்று சிறந்த படைப்பாளராக அறியப்பட்டிருக்கும் எஸ். சங்கரநாராயணன் பரிசு பெற்றார். **ரிலே ரேஸ்** என்ற தலைப்பில் ஆனந்த விகடன், ஒரு சிறுகதையின் இறுதி வரியை அடுத்த சிறுகதையின் தொடக்கமாகக் கொண்டு அந்தாதிக் கதை எழுதவைத்து வெளியிட்டது. இப்படிப் பல்வேறுபட்ட உத்திகளில் பத்திரிகைகள் எழுத்தாளர்களைச் சிறுகதைகள் எழுத வைக்கின்றன. பல முக்கியமான எழுத்தாளர்களும் கூட இத்தகைய உத்திகளில் பங்கு கொள்கிறார்கள். தங்கள் படைப்புகளைப் பத்திரிகைகள் கேட்டுக்கொண்டபடி வடிவமைத்துத் தருகிறார்கள்.

பத்திரிகைகளில் வெளிவரும் தொடர்கதைகளைப் பொறுத்தவரை மொத்தமாக எழுதிக் கொடுத்துவிடுவது என்ற ஒரு முறையும், வாரந்தோறும் ஒவ்வோர் அத்தியாயமாக எழுதித் தருவது என்ற ஒரு முறையும் ஆக இரு வேறு முறைகள் பின்பற்றப்படுகின்றன. இப்போதெல்லாம் மொத்தமாக எழுதிக் கொடுப்பவர்கள் குறைவு; .ஏன், இல்லை என்றே சொல்லிவிடலாம். வாரந்தோறும் ஒவ்வோர் அத்தியாயமாக எழுதித் தருபவர்கள்தான் அநேகம் பேர்.

ஒரே நேரத்தில் பல பத்திரிகைகளில் தொடர்கதை எழுதும் எழுத்தாளர்கள், ஒரு வாரத்திலேயே ஒவ்வொரு பத்திரிகைக்கு ஒவ்வொரு நாளில் எழுதித் தரும் வழக்கத்தைக் கொண்டிருக்கிறார்கள். ஓர் ஒழுங்கு முறைக்கு உட்பட்டுத் தடங்கல் இல்லாமல் இந்தக் காரியத்தைச் செய்து தருவது, மொத்தமாக எழுதித் தருவதைவிட சௌகர்யமாக இருப்பதாக அவர்கள் கருதுகிறார்கள்.

மொத்தம் ஆறு பத்திரிகைகளில் ஒரே நேரத்தில் தொடர்கதைகள் எழுதிய எழுத்தாளர்கள் இருவர் உண்டு. முன்பு ஆர்.வி. அண்மைக் காலத்தில் பி.வி.ஆர். இவர்கள் இருவருமே வாரா வாரம் எழுதித் தருபவர்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது.

நாவலை மொத்தமாக எழுதி முடித்தால் இலக்கியக் கட்டுக்கோப்பு சிறப்பாக இருக்கும் என்றும் வாரந்தோறும் துண்டுதுண்டாக எழுதினால் அத்தகைய கட்டுக்கோப்பு அமைவது சிரமம் என்றும் பரவலாக ஒரு கருத்து நிலவுகிறது. இக்கருத்து ஆய்வுக்கு உட்படுத்தப்பட வேண்டியது. இருவகைகளிலும் தமிழில் நல்லிலக்கியங்கள் மலர்ந்துள்ளன என்பதற்குப் பல எடுத்துக்காட்டுகள் சொல்ல முடியும்.

தினமணிக் கதிரில் தொடர்கதைகளாக வெளிவந்த ர.சு. நல்லபெருமாளின் **தூங்கும் எரிமலைகள், மருக்கொழுந்து மங்கை** ஆகிய நாவல்கள் மொத்தமாக அவரால் எழுதி வழங்கப்பட்டவை. அவர் பத்திரிகைகளுக்கு மொத்தமாக எழுதி அனுப்பும் பாணியையே தொடர்ந்து மேற்கொள்கிறார்.

அதுபோலவே, **பாதையில் பதிந்த அடிகள், மண்ணகத்துப் பூந்துளிகள்** போன்ற ராஜம் கிருஷ்ணனின் நாவல்கள் எல்லாம் கதிரில் தொடராக வெளிவருவதற்கு முன்னரே மொத்தமும் எழுதி முடிக்கப்பட்டவை. இந்த இரு நாவலாசிரியர்களுடைய இலக்கியத் தரத்தைப் பற்றி யாரும் குறைத்து மதிப்பிட்டுவிட முடியாது.

ஆனால் சாகித்ய அகாதமி பரிசு பெற்ற ஜெயகாந்தனின் **சில நேரத்தில் சில மனிதர்கள்** நாவல் வாரந்தோறும் ஒவ்வோர் அத்தியாயமாக எழுதி வழங்கப்பட்டது. அந்த நாவலின் இலக்கிய மேன்மை ஏற்கெனவே உறுதி செய்யப்பட்டதுதான். ஜெயகாந்தனின் எல்லாத் தொடர்கதைகளும் வாரா வாரம் எழுதி வழங்கப்பட்டவையே.

இவ்வளவு ஏன்? தற்காலத் தமிழிலக்கியத்தில் பெரிதும் குறிப்பிடத் தக்க படைப்பு என்று பலராலும் கொண்டாடப்படும் தி. ஜானகிராமனின் **மோகமுள்** மொத்தமாக எழுதப்பட்டதல்ல. சுதேசமித்திரன் வாரப் பதிப்பில் பல்லாண்டுகள் தொடராக வெளிவந்த அது ஒவ்வொரு வாரமும் எழுதி அளிக்கப்பட்டதுதான். தினமணிக்கதிரில் தி.ஜா. எழுதிய **செம்பருத்தி**, ஆனந்தவிகடனில் அவர் எழுதிய **உயிர்த்தேன்**, கல்கியில் அவர் எழுதிய **அன்பே ஆரமுதே**, கணையாழியில் எழுதிய **நளபாகம்** எல்லாமே துண்டு துண்டாக அவ்வப்போது எழுதப்பட்டதுதான், வாசகர்வட்ட வெளியீடாக வந்த **அம்மா வந்தாள்** நாவலை மட்டுமே அவர் மொத்தமாக எழுதிக் கொடுத்தார்.

வாராவாரம் எழுதிக் கொடுப்பதைப் பல நாவலாசிரியர்கள் விரும்பினாலும், மொத்தமாக எழுதி அளிக்கப்படுவதையே எல்லாப் பத்திரிகை ஆசிரியர்களும் விரும்புகிறார்கள். வேறு வழியில்லாமல்தான் புகழ்பெற்ற எழுத்தாளர்களின் வாராந்திரத் தவணை முறை எழுத்துக்குப் பத்திரிகை ஆசிரியர்கள் உடன்பட நேர்கிறது.

மொத்தமாக நாவல் கைக்கு வந்துவிடுகிறபோது பத்திரிகை ஆசிரியர்களின், பத்திரிகை துணை ஆசிரியர்களின் பரபரப்பு நீங்குகிறது. அத்தியாயங்களை ஓவியர்களுக்கு அனுப்புவது, முன்கூட்டியே அச்சுக்கோத்து வைத்துக்கொள்வது, வாரந்தோறும் இதழ் முடியும் தறுவாயில் நேரும் கடைசி நேரப் பரபரப்பைக் குறைப்பது ஆகிய சௌகர்யங்கள் மொத்த நாவல் கைக்கு வந்தால்தான் உண்டு.

வாரா வாரம் எழுதினால் கிட்டக்கூடிய இலக்கிய சௌகரியத்தை முழுவதும் அனுபவித்தவர் கல்கி என்றும், அவ்விதம் எழுதப்பட்டதாலேயே ஒரு தனித் தகுதியை அடைந்த நாவல் **அலை ஓசை** என்றும் கூறலாம். சாகித்ய அகாதமி பரிசுபெற்ற அலை ஓசை நாவல் மொத்தமாக எழுதப்பட்டிருந்தால் அதன் போக்கு வேறு மாதிரி இருந்திருக்கக்கூடும். *1948*இல் எழுதப்பட்ட இந்த நாவல், வாரா வாரம் எழுதப்பட்டதாலேயே, அந்தந்த வார இந்திய அரசியல் செய்திகளைத் தன்னில் தாங்கி நடந்தது. *1931* முதல் *1947* வரை கல்கி பங்கெடுத்துக்கொண்ட விடுதலைப் போராட்டத்தைப் பின்னணியாகக்கொண்ட இந்த நாவல், *48*இல் மகாத்மா காந்தி சுடப்பட்ட காலகட்டத்தையும் உள்ளடக்கி, மகாத்மாவின் மரணத்தையும்கூட நாவல் நிகழ்ச்சியாய்ப் பதிவு செய்து நடக்கிறது. மகாத்மா காலமானபோது, அஸ்தியை நேரு கங்கையில் கரைத்தது உள்பட பல்வேறு சம்பவங்களை நேரில் கண்டு, தம் வர்ணனை மூலம் வானொலியில் பதிவு செய்தவர் சிட்டி பி.ஜி. சுந்தரராஜன் என்றால் பொதுமக்கள் அடைந்த கடுந்துயர் உள்படப் பல்வேறு செய்திகளைப் படைப்பிலக்கியத்தில் பதிவு செய்தவர் கல்கி எனலாம். ‘அலை ஓசை சோக கீதத்தின் பல்லவி’ எனக் கூறி அந்நாவலைக் கல்கியின் முக்கியமான படைப்பாக இனங்காண்கிறார் கி.வா. ஜகந்நாதன் (தமிழ் நாவலின் தோற்றமும் வளர்ச்சியும், ப.*144*).

**அலை ஓசை**, கல்கியின் புனைகதைகளில் தன்னிகரற்று விளங்கும் அழியாப் படைப்புச் செல்வம் என்கிறார் தா.வே. வீராசாமி (*நாவல் வளர்ச்சி: டாக்டர் இரா. மோகன் தொகுத்த நூல், ப.212*). இந்தப் பெருமைக்கெல்லாம் காரணம் அது வாராவாரம் எழுதப்பட்டதுதான்.

படைப்புகளைப் பொறுத்தவரை **வெகுஜன இதழ்** என்றும் **சிற்றிதழ்** என்றும் பிரித்து உயர்வு தாழ்வு கற்பிக்க இயலும் என்று தோன்றவில்லை. சிற்றிதழ்களில் நல்லிலக்கியம் கிடைக்கும் என்பது பொதுவான நம்பிக்கை. பல சிற்றிதழ்கள் தமிழை மேம்படுத்தும் உயரிய படைப்புகளை வெளியிட்டு வருகின்றன என்ற உண்மையையும் மறுப்பதற்கில்லை. ஆனால் சில நேரங்களில் எப்படித்தான் இந்தப் படைப்புக்குப் பிரசுர வாய்ப்பு கிடைத்ததோ என்று நாம் திகைக்கும் வகையிலான, ஆகச் சுமாரான படைப்புகள் சிற்றிதழ்களிலும் அரங்கேறுவதைப் பார்க்கிறோம். பெரிய இதழ்களிலும் உயர்ந்த தரத்தில் அமைந்த பல படைப்புகள் இடம்பெற்றுவருகின்றன. இன்று சிற்றிதழ்ப் படைப்பாளர்களில் பலர் பெரிய இதழ்களில் ஊடுருவி யிருப்பதையும் அவர்கள் மூலம் பல நல்ல அம்சங்கள் பெரிய இதழ்களிலும் தென்படுவதையும் சுந்தர ராமசாமி உள்படப் பலரும் பாராட்டத் தொடங்கியிருக்கிறார்கள்.

கல்கி, நா. பார்த்தசாரதி, அகிலன், தி. ஜானகிராமன், ஜெயகாந்தன், இந்திரா பார்த்தசாரதி, ராஜம் கிருஷ்ணன், தற்போது பிரபஞ்சன் எனப் பல முக்கியமான படைப்பாளிகள் எல்லாம் சிற்றிதழ்கள் மூலம் அல்ல, பெரிய இதழ்கள் மூலம்தான் பெரும்புகழ் பெற்றார்கள்.

படைப்பை அதன் தரத்தை வைத்துக் கணிக்க வேண்டுமே அல்லாது படைப்பு வெளிவந்த இதழை வைத்து அல்ல; இது இன்டர்நெட் இதழின் காலம். இன்டர்நெட் இதழ் அச்சு வடிவ இதழ் அல்ல. கணிப்பொறித் திரையில் மட்டுமே அதை வாசிக்க இயலும். இன்டர்நெட் இதழ்கள் ஆங்கிலத்தில் பற்பல வெளிவருகின்றன. தமிழ் இதழியலிலும் தற்போது இன்டர்நெட் இதழின் முத்திரைகள் விழத் தொடங்கியுள்ளன. அச்சு வடிவ இதழுக்கும் இணைய இதழுக்கும் படைப்புக் கண்ணோட்டத்தில் ஒரு முக்கிய வேறுபாடு உண்டு. படைப்பாளிகளுக்கு இன்டர்நெட் இதழ் ஒரு முக்கியமான சௌகர்யத்தை ஏற்படுத்தித் தருகிறது. இந்த சௌகர்யம் அச்சு வடிவ இதழில் இல்லை.

அச்சு வடிவ இதழ்கள் குறிப்பிட்ட பக்கங்கள் என்ற எண்ணிக்கை வரையறைக்குட்பட்டவை. எனவே பக்க அளவுகோலையும் கவனத்தில் கொண்டுதான் அவைகள் படைப்பு வெளியிட இயலும். நான்கு அல்லது ஐந்து பக்கங்களுக்கு மேல் வரும் சிறுகதைகளுக்கு அச்சு வடிவ இதழில் இடம்கிடைப்பது சிரமம். பல நேரங்களில் ஒரு நான்கு வரி கூடுதலாக இருந்தால்கூட, அந்த வரிகளை வெட்டிக் குறைக்க வேண்டிய நிர்ப்பந்தம் பத்திரிகை ஆசிரியருக்கு நேர்வதுண்டு. குறிப்பிட்ட பக்கங்களுக்குப்

பத்திரிகை முடிந்தாக வேண்டும் என்ற கட்டாயம் இருப்பதே இதற்குக் காரணம்.

இன்டர்நெட் இதழ் பக்க வரையறைக்குட்பட்டதல்ல. ஒரு படைப்பாளி கலைநயம் குன்றாமல் இருக்க, கூடுதலாக இரண்டு பக்கம் எழுத வேண்டிய தேவை நேர்ந்தால் இணைய இதழ் அதைச் சுலபமாக அனுமதிக்க இயலும். கணிப்பொறித் திரை கூடுதல் பக்கங்களுக்கு எளிதாக இடம் வழங்கக் கூடியது.

படைப்பாளிகள் நோக்கில் இது மிகப் பெரிய வசதியாகும். ஒரு படைப்பு, கலை நேர்த்தி கெடாமல் எவ்வளவு பக்கம் வருகிறதோ அவ்வளவு புக்கம் எழுதப்பட இயலும் என்பது இன்றைய இண்டர்நெட் விஞ்ஞானத்தால் தமிழ்ப் படைப்பாளிகளுக்குக் கிடைத்துள்ள வரப்பிரசாதம் என்றுதான் சொல்லவேண்டும்.

ஆர். சூடாமணி முன்புபோல் இப்போது அதிக எண்ணிக்கையில் சிறுகதைகள் எழுதுவதில்லை. காரணம் பத்திரிகைகளின் பக்கக் கட்டாயம் என்று அவர் தெரிவிக்கிறார். ஒரு பாத்திரத்தை மையப்படுத்திக் கதை எழுதும் வழக்கமுடையவர் அவர். பாத்திரங்களும் அவற்றின் உளவியல் சிக்கல்களுமே அவரது இலக்கியப் பாணி. பாத்திரங்களைக் கதையில் வடிவமைக்க அவருக்குப் பத்திரிகைகளில் நாலைந்து பக்கங்களாவது தேவைப்படுகின்றன. பெரும்பாலான பத்திரிகைகள் அத்தகைய பக்கங்களைச் சிறுகதைகளுக்குக் கொடுக்கத் தயாராக இல்லை. பத்திரிகைகளைக் குறை சொல்ல முடியாது. அவைகளின் பக்க நிர்ப்பந்தம் அப்படி.

ஆர். சூடாமணி இப்போது இணைய இதழ்களில் கதைகள் எழுதி வருகிறார். அவர் மட்டுமல்ல, ஜெயகாந்தன், இந்திரா பார்த்தசாரதி, அசோகமித்திரன், வல்லிக்கண்ணன், தி.க. சிவசங்கரன், இன்குலாப், பா. செயப்பிரகாசம், சு. சமுத்திரம், சா. கந்தசாமி, சி.ஆர். ரவீந்திரன், நாஞ்சில் நாடன், கந்தர்வன், சுஜாதா உட்பட ஏராளமான ஆழ்ந்த இலக்கியப் படைப்பாளிகள் இப்போது இன்டர்நெட் இதழ் வழங்கும் சுதந்திரத்தைப் பெருமிதத்துடன் அனுபவித்து வருகிறார்கள். இன்டர்நெட் இதழின் இன்னொரு வசதியும் படைப்பாளிகளைக் கவர்கிறது. தகவல் பிழை ஏதுமில்லாமல் தம் படைப்பை இணைய இதழ் கொடுக்க இயலும் என்ற உத்தரவாதம் தான் அது.

படைப்பாளி, தம் படைப்பை எழுத்து வடிவில் அனுப்ப, அது அச்சு வடிவப் பத்திரிகைகளில் அச்சுக் கோக்கப்படுகிறது. பிறகு பிழை திருத்துநர் மூலம் சரிபார்க்கப்பட்டுப் பிரசுரிக்கப்படுகிறது. இதில் எங்கேனும் சிறு தவறு நேர்ந்தால் அதற்குப் படைப்பாளி பொறுப்பேற்க இயலாது. கல்வெட்டு ஆய்வு, இசை விமர்சனங்கள் போன்ற நுணுக்கமான படைப்புகளில் இவ்விதப் பிழைகள் நேர வாய்ப்பிருக்கிறது.

ஆனால் இண்டர்நெட் இதழுக்குப் படைப்பாளி இ-மெயிலில் படைப்புகளை அனுப்பும்போது அதில் படைப்பாளியே செய்தால் அன்றி வேறு பிழை வெளிவர வாய்ப்பேயில்லை. ஏனெனில் இ-மெயிலில் வரும் படைப்பு, மறு அச்சு செய்யப்படாமல் அப்படியே எடுத்து இணைய இதழில் வெளியிடப்படுகிறது. அந்தப் படைப்பை எழுதியவர் மட்டுமல்ல, அந்தப் படைப்பில் அச்சுக் கோப்பாளரும் அந்தப் படைப்பாளியேதான்.

இதனால் கல்வெட்டு ஆய்வு, தொல்லியல் ஆய்வு, பழங்கலை தொடர்பான ஆய்வுகள் எல்லாம் பிழையற இடம் பெற்று, அந்தந்தப் படைப்பாளிகளுக்கு அளவற்ற மனநிறைவைத் தருகின்றன. தங்கள் படைப்புகள் தாங்கள் விரும்பிய வண்ணமே பிரசுரமாகும் ஆனந்தத்தைப் படைப்பாளிகள் அனுபவித்து மகிழ்கிறார்கள்.

இறுதியாக ஒன்று சொல்லலாம். இதழியல் சார்ந்த படைப்புகள் என்று வரும்போது, அந்தப் படைப்பின் தரத்தை இதழைச் சார்ந்து கணிக்கக்கூடாது. எல்லா இதழிலும் நல்ல படைப்புகள், சுமாரான படைப்புகள் என எல்லாமே கலந்துதான் வருகின்றன.

படைப்பின் தரத்தைப் படைப்பாளியின் இனம், குலம், வட்டாரம் போன்ற புற அம்சங்களை வைத்தும் கணிக்கக்கூடாது.

படைப்பைக் கணிக்கும் ஒரே முறை படைப்பின் இலக்கியத் தரம் மட்டுமே. படைப்பாளியின் பெயர்கூட அல்ல.

இந்த வகையில் எல்லா விமர்சகர்களும் இயங்க முன்வரும்போது தமிழில் இதழியல் செழிக்கும். இப்போது உள்ளதைவிட இன்னும் சிறந்த படைப்புகள் உருவாகும்.

# இதழியல் மொழி நடை

பொன். தனசேகரன்

---

கையால் அச்சுக் கோப்பு, மோனோடைப், லைனோடைப் போன்ற அச்சுக் கோப்பு முறைகள் காலாவதியாகி, கம்ப்யூட்டர் உதவியுடன் செய்யப்படும் போட்டோ கம்போசிங் முறை வந்துவிட்டது. இதேபோல பத்திரிகைகளும் வடிவமைப்பிலும் பொருளிலும் தொடர்ந்து மாறிக் கொண்டேவந்துள்ளன. தகவல், பொழுதுபோக்கு என்ற அம்சங்களைத் தவிர விழிப்புணர்வு என்ற சமூகக் கடமையும் இதழ்களுக்கு உண்டு. பொதுமக்களிடம் கருத்துகளை உருவாக்குவதில் இதழ்களின் பங்கு தொடர்ந்து இருந்துவரும்.

பத்திரிகைகள் எப்போதுமே பண்டித நடை அல்லது இலக்கிய நடையிலிருந்து வேறுபட்டே இருந்துவந்துள்ளது. இலக்கணப் பிழையின்றி எழுதுகிறோமா என்பதைவிட ஒரு கருத்தை எளிமையாகக்கூறி, சாமான்ய மக்கள்வரை கொண்டுசேர்ப்பதையே பிரதானமாகக் கருதுகின்றன. புலவர்களின் கையிலும் மேல்தட்டுப் பிரிவினரின் கையிலும் இருந்த தமிழைப் பாமர மக்கள்வரைக் கொண்டுசென்றதில் இதழ்கள் முக்கியப் பங்காற்றியுள்ளன. இருபதாம் நூற்றாண்டில் ஏற்பட்ட அறிவியல் மறுமலர்ச்சிக்கு ஏற்ப, தமிழ் உரைநடையிலும் மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. புதுச்சொற்கள், புதுச்சொற்றொடர்கள், மொழி அமைப்புகள் போன்றவற்றில் பெரிய மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. தொடர்ந்து இதழ்களைப் படித்துவரும் தீவிர வாசகர்கள் இவற்றைக் கவனிக்கத் தவறமாட்டார்கள்.

இந்த நூற்றாண்டின் தொடக்க காலத்தில் **சென்சஸ்** ஆங்கில வார்த்தை **ஸ்திரீ புருஷ பால விருத்தாப்பிய ஜனன மரண ஜன சங்கியை** என்று தமிழில் கூறப்பட்டது. கால வெள்ளத்தில் அந்த வார்த்தை தற்போது மறக்கப்பட்டுவிட்டது. அந்த வார்த்தை இருந்த இடத்துக்கு **ஜனன மரணக் கணக்கு** வந்து, அதுவும் மாறி **மக்கள் தொகைக் கணக்கெடுப்பு** என்ற நல்ல தமிழ்ச் சொல் வந்துவிட்டது. அதேபோல, **ராஷ்டிரபதி** என்ற வார்த்தை **ஜனாதிபதி**யாகி, தற்போது **குடியரசுத் தலைவரா**கிவிட்டது. இதுபோல வார்த்தைகள் தொடர்ந்து மாற்றம்பெறும்.

'தற்காலத் தமிழின் தன்மையைப் பல்வேறுபட்ட முரண்போக்குகள் நிர்ணயிக்கின்றன. உலகளாவிய பல்துறை அறிவை ஆங்கிலம் வழியாகத் தமிழுக்குக் கொண்டுவருவது ஒரு போக்கு; தமிழ்நாட்டின் வட்டார அனுபவங்களை இலக்கியப் படைப்புகளின் மூலம் பொதுத் தமிழுக்குக் கொண்டுவருவது இன்னொரு போக்கு. புதிய சமுதாயத்தின் தேவைகளுக்கு ஈடு கொடுப்பது ஒரு போக்கு. மொழியை எளிமைப்படுத்துவதும் தூய்மைப்படுத்துவதும் ஒன்றாக நடைபெறும் இரண்டு போக்குகள். இந்தப் போக்குகளால் பலதரப்பட்ட மாற்றங்கள் நிகழ்கின்றன' (க்ரியாவின் தற்கால தமிழ் அகராதி - அறிமுகம் ப. xvii). எனவே காலத்தின் சூழலுக்கு ஏற்ப மாற்றங்கள் தொடர்ந்து ஏற்பட்டுவருகின்றன.

படைப்பு எழுத்துக்கும் பத்திரிகை எழுத்துக்கும் இடையே வேறுபாடுகள் இருந்தாலும்கூட இவற்றுக்கு இடையே பரஸ்பரத் தாக்கம் ஏற்பட்டுக்கொண்டிருக்கிறது. இதனால் பத்திரிகை எழுத்துகளின் செல்வாக்கு இலக்கிய எழுத்துகளிலும் இலக்கிய எழுத்துகளின் செல்வாக்கு பத்திரிகைகளிலும் தொடர்ந்து இருந்துவருகிறது.

தேசிய, இடதுசாரி, திராவிட, தமிழர் இயக்கங்கள், இலக்கிய அமைப்புகள் போன்றவை நடத்தும் இதழ்கள் தங்களது இதழ்களின் வேறுபட்ட மொழிநடைகள் மூலம் உரைநடை வளர்ச்சிக்குப் பெரிதும் துணை நின்றுள்ளன. இவைத் தவிர பல்வேறு எழுத்தாளர்கள், படைப்பாளர்கள், பத்திரிகையாளர்கள், தங்களது படைப்பு அல்லது எழுத்துகள் மூலம் நவீன மொழிநடைக்கு உரம் சேர்த்து வருகின்றனர். ஒவ்வொரு பத்திரிகையும் தங்களது வாசகர்களுக்கேற்ற மொழிநடையைக் கையாளுகின்றன. இதன்மூலம் தொடர்ந்து அந்த வாசகர்களைத் தக்க வைத்துக்கொள்ளும் முயற்சியில் மொழிநடை மாற்றங்களைப் படிப்படியாகச் செய்யத் தவறுவதில்லை.

இந்திய விடுதலைக்குமுன், ஆங்கிலம் கலந்தோ அல்லது சம்ஸ்கிருதம் கலந்தோ எழுதிவந்த காலகட்டத்திலேயே நல்ல தமிழில் எழுதும் போக்கையும் காண்கிறோம்.

**பெங்கால் புரொவின்ஷியல் கான்பரன்ஸில் மிஸ்டர் அம்பிகாசரண் மஜும்தாரின் பிரஸிடென்ஷியல் அட்ரஸில்**

> **இந்தியப் பிரஜைகளின் தேசிய அபிலாஷைகளை அடக்க இந்திய புயராகஸி கையாண்டு வரும் ரிடரஷன் முறைகளின் உபயோகமற்ற தன்மையைப் பற்றி கரதலாமகைமாய்க் கூறியிருப்பது ஹிஸ் எக்ஸெலென்ஸி வைஸ்ராய் அவர்களின் கவனத்திற்குக் கொண்டு வரப்படுமென்று நம்புகிறோம்**

இது அந்தக்கால சுதேசமித்திரன் நடைபற்றி கல்கி தந்துள்ள எடுத்துக்காட்டு.

இதே சுதேசமித்திரன், **F** என்ற ஒலியை எழுத்தில் சேர்த்து எழுதும் புதுமையைச் செய்தது. தமிழில் எழுதும்போது **F** என்ற ஒலியைக் குறிக்க அந்த எழுத்தே அச்சிடப்பட்டது. பிற்காலத்தில் துக்ளக் இதழிலும் இதுபோன்ற முறை (போர்டு - CFார்டு) சிறிதுகாலம் பின்பற்றப்பட்டு, பின்னர் கைவிடப்பட்டது.

தமிழ் இதழியல் முன்னோடி மகாகவி பாரதி கூறுகிறார்:

> **...தமிழ்நாட்டிலோ முழுவதும் தமிழ்நடையை விட்டு இங்கிலீஷ்நடையில் தமிழை எழுதும் விநோதமான பழக்கம் நமது பத்திரிகையாசிரியர்களிடம் காணப்படுகிறது. முதலாவது நீ எழுதப் போகிற விஷயத்தை இங்கிலீஷ் தெரியாத ஒரு தமிழனிடம் சொல்லிக்காட்டு. அவனுக்கு நன்றாக விளங்குகிறதா என்று பார்த்துக்கொண்டு பிறகு எழுது. அப்போதுதான் நீ எழுதுகிற எழுத்து தமிழ்நாட்டுக்கும் பயன்படும். இல்லாதுபோனால் நீயும் சிரமப்பட்டு மற்றவர்களுக்கும் பயனில்லாமற் போகிறது.**

அதே காலகட்டத்தில் வெளிவந்த **தேசபக்தன்** நல்ல தமிழைப் பின்பற்றியது. 'யான் தமிழ்ப் போதகாசிரியனாக இருந்தவன் இப்பொழுது தமிழ்ப் பத்திரிகை ஆசிரியரானேன். தேசபக்தனுக்கென்று தனிநடை கொண்டேன். சிறுசிறு வாக்கியங்கள் அமைக்கலானேன். எளிமையில் கருத்துகள் விளங்கும் முறையைப் பின்பற்றினேன். அந்நடையை நாடோறும் எழுதி எழுதிப் பண்பட்டமையால் அதுவே எனக்குரிய இயற்கையாகியது. பழைய தொடர்மொழிகளும் என்னுள்ளேயே ஒடுங்கின. சமயம் நேர்ந்துழிச் சிலநேரங்களில் அவை தலைகாட்டும்' என்கிறார் அதன் ஆசிரியர் திரு.வி.க.. திரு.வி.க. கையாண்ட நடுத்தரமான தமிழ்நடையை மற்ற பத்திரிகைக் காரர்களும் பின்பற்றத் தொடங்கினர். ஒரு பத்திரிகையில் ஏற்படும் மாற்றம் சங்கிலித் தொடர்போல அடுத்தடுத்த மாற்றங்களுக்கு இட்டுச் சென்றுள்ளன.

'நீதிக்கட்சி தோன்றுவதற்கு முற்பட்ட காலத்தில் தமிழ்நாட்டில் பிராமணர்கள் மட்டுமே படித்தவர்களாகவும், பத்திரிகையாசிரியர்களாகவும்,

எழுத்தாளர்களாகவும், நாடக ஆசிரியர்களாகவும், மேடைப் பேச்சாளர் களாகவும் இருந்தார்கள்; அதனாலே, அப்போது நேக்கு, நோக்கு, ஜலம், தூத்தம், ஆத்துக்குப் போவது, அத்திம்பேர் என்று அழைப்பது, அக்கிராசனாபதியாக இருப்பது, அபேம்சாபத்திரம் தாக்கல் செய்வது என்று சகல துறைகளிலும் அம்மாமித் தமிழே அரசோச்சிக்கொண்டிருந்தது. ஆரம்பகாலத்து ஆனந்தவிகடன், சுதேசமித்திரன் உள்ளிட்ட அனைத்து ஏடுகளிலும் சம்ஸ்கிருதம் கலந்த தமிழ், ஆங்கிலம் கலந்த தமிழ் ஆகியவைகளே இலக்கிய - நாடக - பத்திரிகை மொழிகளாக இருந்தன. திராவிட இயக்கம் தோன்றிய பின்னர்தான் நல்ல தமிழில் எழுதும் பழக்கம், தூய தமிழில் பேசும் பழக்கம் வலுவடைந்தது' என்கிறார் தனித்துவமிக்க தனது நடையால் முத்திரை பதித்து வரும் மூத்தபத்திரிகையாளர் சின்னக் குத்தூசி (அவர் அளித்த பேட்டி ப. *29*, காலச்சுவடு - *25*, ஏப். - ஜூன் *1999*).

இந்திய விடுதலைப் போராட்டத்துடன் இணைந்து வளர்ந்த இதழ்கள், சுதந்திரத்துக்குப் பிறகு மேலும் வளர்ச்சி அடைந்தன. படித்தவர்களின் எண்ணிக்கை அதிகரிப்பின் காரணமாக வாசகர் வட்டம் விரிவடையத் தொடங்கியது. வாசகர்களைத் தங்கள் பக்கம் வைத்துக் கொள்ள எத்தகைய நடையைக் கையாள வேண்டும் என்பதைத் தீர்மானித்து அதற்கேற்ப இதழ்கள் தங்களது உத்திகளை வகுத்துக் கொண்டன.

தேசியவாதிகளை, தொடர்ந்து வாசகர்களாகத் தங்கள் பக்கம் வைத்துக்கொள்ள அதற்கேற்ற செய்திகளையும் தனது பாணியில் தந்தது **தினமணி**. சாதாரண பாமரர்களையும் படிக்க வைக்கவேண்டும் என்ற நோக்கில் களம் அமைத்துச் செயல்பட்டது தினத்தந்தி. **தினமலர்** தனக்கென புதிய பாணியைப் பின்பற்றி, புதிய வாசகர்கள் கூட்டத்தைப் பெற்றது. இந்த இதழ்களும் தாங்கள் செய்திதரும் பாணியையும் மொழிநடையையும் தொடர்ந்து மாற்றிவந்துள்ளன.

பெரியார் எழுத்துகளைத் தமிழக அரசு அங்கீகரித்து ஆணையிட்ட பிறகு இந்த எழுத்துகள் பாடப்புத்தகங்களிலும் மற்ற நூல்களிலும் பரவலாகப் பயன்படுத்தப்பட்டன. ஆனால் பெரும்பாலான இதழ்கள் தொடக்கத்தில் இதனைச் செயல்படுத்துவதில் அக்கறை காட்டவில்லை. பெரியார் எழுத்துக்களைப் படித்துவரும் புதிய தலைமுறையிடம் பழைய எழுத்து வடிவில் செய்திகளைக் கொண்டு செல்லமுடியுமா? என்ற கேள்வி முன்னெழுந்தபோது **பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல காலவகை யினானே** என்று எழுத்துச் சீர்திருத்தத்தை ஏற்றுக் கொண்டு விட்டன.

'பேச்சு வழக்கில் இருக்கும் தமிழே உயிருள்ள தமிழ். அதைக் கொச்சை நீக்கி எழுத வேண்டும். செந்தமிழில் எழுதுவது பெருமையாகக் கருதப்படுகிறது. அவ்வாறு நாளிதழில் எழுதினால், அது பலருக்குப் புரியாது. பேச்சுத் தமிழையே எழுத வேண்டும். அதுவே தமிழ் உரைநடை வளர்ச்சிக்கு

ஒரு நாளிதழ் செய்ய வேண்டிய தொண்டு' என்பது தினத்தந்தியை உருவாக்கிய சி.பா. ஆதித்தனாரின் கருத்து. அவரது இந்தக் கோட்பாட்டுக் கேற்ப சாமான்யர்களுக்கான நாளிதழை நடத்துவதில் மிகப் பெரிய வெற்றியையும் பெற முடிந்துள்ளது. அந்தப் பத்திரிகை கடைப்பிடித்து வரும் தமிழ்நடையை, அங்குப் பணிபுரியும் துணை ஆசிரியர்களும் நிருபர்களும் தெரிந்துகொள்ளும் வகையில் அவர் எழுதிய குறிப்புகள் **இதழாளர் கையேடு** என்ற பெயரில் நூல் வடிவம் பெற்றுள்ளது. அவரது சில வழிகாட்டிக் குறிப்புகள் தினத்தந்தியின் மொழிநடையைப் புரிந்துகொள்ள உதவும்.

'கடின நடையில் எழுதக் கூடாது. எடுத்துக்காட்டாக **நான் மாடக் கூடலை நண்ணினோம்** என்றோ **கரத்தில் பெற்றார்** என்றோ எழுதாமல், பேச்சு வழக்கில் இருப்பது போல் **மதுரைக்குப் போனேன்** என்றும், **கையில் வாங்கினார்** என்றும் புரிகிற தமிழில் எழுத வேண்டும்.

புரிகிற தமிழில் எழுதினால் மட்டும் போதாது; பேசுகிற தமிழில் எழுத வேண்டும். எடுத்துக்காட்டாக, **புள்தோன்றுகிறது** என்பது பண்டிதர் மொழி; இது வெகு சிலருக்குத்தான் தெரியும். **பட்சி இருக்கிறது** என்பது பலருக்குப் புரியும்; ஆனால், **பட்சி** என்ற சொல், பேச்சு வழக்கில் இல்லை. அதனால் அப்படியும் எழுதக் கூடாது. **குருவி** அல்லது **பறவை** என்பது எல்லோரும் சாதாரணமாகப் பேசுவது. அந்தச் சொற்களையே பயன்படுத்த வேண்டும்.

எழுத்துக் கூட்டிப் படிப்பவர்களுக்கு **ஒள** என்ற எழுத்தைப் படிப்பது கடினம். **ஒளவையார்** என்பதை **அவ்வையார்** என்றும் **கௌரி** என்பதைக் **கவுரி** என்றும் எழுத வேண்டும். ஃ என்ற எழுத்தைத் தவிர்க்க வேண்டும். ஏனென்றால் இந்த எழுத்தைப் பேச்சு வழக்கில் உச்சரிப்பது இல்லை. அதற்குப் பதில் படிப்பதற்கு வசதியான சொற்களைப் பயன்படுத்த வேண்டும். **எஃகு** என்பதை **இரும்பு** என்றும் **அஃதாவது** என்பதை **அதாவது** என்றும் எழுத வேண்டும்.

ஸ, ஷ, க்ஷ, ஜ, ஹ ஆகிய வடமொழி எழுத்துகளைக் கூடியவரை தவிர்க்க வேண்டும். சொல் சிதையாதபடியும் உச்சரிப்பு மாறாதபடியும் அவற்றைப் பேச்சு வழக்கில் உள்ள தமிழ் எழுத்துகளில் மாற்றி எழுதலாம்.

**ராஜேஸ்வரி** என்பதை **ராஜேசுவரி** என்றும் **செக்கஸ்லோவாகியா** என்பதைச் **செக்கசுலோவாகியா** என்றும் **பட்டாஸ்** என்பதைப் **பட்டாசு** என்றும் எழுதலாம். ஆனால், **மாஸ்கோ** என்பதை **மாசுகோ** என்றோ **பாகிஸ்தான்** என்பதைப் **பாகிசுதான்** என்றோ எழுதக்கூடாது. இது உச்சரிப்பதற்கும் கடினமாக இருக்கும். **பஸ்** என்பதைப் **பசு** என்று எழுதினால், பொருள் மாறிவிடும்.

**ராமஸ்வாமி** என்பதை **ராமசுவாமி** என்று எழுதக்கூடாது. **ராமசாமி** என்று எழுத வேண்டும். உச்சரிக்க எளிதாக இருக்கும்.

**ஜாதி** என்பதைச் **சாதி** என்று எழுதலாம். ஆனால் **ராஜாஜி** என்பதை **ராசாசி** என்றோ, **எம்.ஜி.ஆர்.** என்பதை **எம்.சி.ஆர்.** என்றோ எழுதக் கூடாது.

**கக்ஷி** என்பதைக் **கட்சி** என்றும் **ரக்ஷாபந்தன்** என்பதை **ரட்சாபந்தன்** என்றும் எழுத வேண்டும்.

சொல்லுக்கு முதலில் வரும் **ஷ** என்ற எழுத்தை, **ச** என்று எழுதலாம். எடுத்துக்காட்டாக, **க்ஷத்திரியர்** என்பதை, **சத்திரியர்** என்று எழுத வேண்டும்.

**ஹரியானா** என்பதை **அரியானா** என்றும் **ஹோமியோபதி** என்பதை **ஓமியோபதி** என்றும், **ஹெரால்டு** என்பதை **எரால்டு** என்றும் எழுதலாம். ஆனால், ஆங்கிலேயர் பெயர்களான **ஹீத்** என்பதை, **கீத்** என்றோ **ஈத்** என்றோ எழுதக் கூடாது. **ஹோம்** என்பதை, **கோம்** என்றோ **ஓம்** என்றோ எழுதக் கூடாது. உச்சரிக்கக் கடினமாக இருக்கும். பொருளும் மாறிவிடும்.

வடமொழி எழுத்துகள் உள்ள சொற்களைத் தவிர்த்து, அவற்றுக்குச் சரியான, பழக்கத்தில் உள்ள தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்தலாம். **ஜலம்** என்பதைத் **தண்ணீர்** என்றும் **புஷ்பம்** என்பதைப் **பூ** என்றும் **புருஷன்** என்பதைக் **கணவன்** என்றும் **க்ஷயரோகம்** என்பதைக் **காசநோய்** என்றும் **பலஹீனம்** என்பதைப் **பலவீனம்** *(பலகீனம் அல்ல)* என்றும் எழுத வேண்டும்.

தமிழ் எழுத்துகளுடன் கூடிய, வழக்கத்தில் உள்ள, வடமொழிச் சொற்களை அப்படியே பயன்படுத்தலாம். **நஷ்டம்** என்பதை **நட்டம்** என்றும் **வருஷம்** என்பதை **வருடம்** அல்லது **ஆண்டு** என்றும் **புஸ்தகம்** என்பதைப் **புத்தகம்** என்றும் **வேஷ்டி** என்பதை **வேட்டி** என்றும் எழுத வேண்டும்.'

இப்படி, பொருத்தமான சொற்களைப் பயன்படுத்துவதிலிருந்து மொழி நடை சிறிய வாக்கியங்களில் நறுக்குத் தெறித்தாற்போல இருக்க வேண்டும் என்பது வரை விரிவாக எழுதியுள்ளார். பத்திரிகையில் எதை எழுதினாலும் அது சாமானியருக்கும் புரிய வேண்டும். அதுதான் **தினத்தந்தி தமிழ்.**

'சதக்சதக் என்று குத்தினான், டமார் என்று மோதியது, கொல் என்று சிரித்தார்கள்' என்றெல்லாம் பாமர மக்களைக் கவர்ந்திழுப்பதற்காகத் துடிப்பான சொற்கள் முன்பு பயன்படுத்தப்பட்டன. காலத்திற்கேற்ற வகையில் இப்போது இதுபோன்ற சொற்கள் பயன்படுத்தப்படுவதில்லை. பத்திரிகைகளைப் படிப்பது மிகவும் குறைவாக இருந்த காலத்தில் சாதாரண மக்களைக் கவருவதற்காக, அந்தச் செய்தியை அவர்கள் படிக்கத் தூண்டும் வகையில் பேச்சு வழக்கில் உள்ள இச்சொற்கள் முன்பு பயன்படுத்தப்பட்டன. தற்போது பத்திரிகை படிக்கும் வழக்கம் பெருகிவிட்ட சூழ்நிலையில், சாதாரண வாசகர்களுக்குக் கூட இச்சொற்பிரயோகங்கள் பிடிக்காமல் போய்விடும். இவைபோன்ற சொற்கள் பத்திரிகையின்

தரத்துக்கு உகந்ததாக இல்லாததால் தற்போது பெரும்பாலான பத்திரிகைகள் அவற்றைப் பயன்படுத்துவதில்லை.

'பிறமொழிச் சொல்லைத் தமிழில் மொழிபெயர்க்கும்போது அதை அப்படியே நேரடியாக மொழிபெயர்க்காமல் அதன் பொருளை மனதில் கொண்டே மொழிபெயர்க்க வேண்டும்' என்பார் ஆதித்தனார்.

**ஆலிங்கனம் செய்து வரவேற்றார்** என்பதை, **கட்டித் தழுவி வரவேற்றார்** என்றும் **பகாளாபாத் - தயிர் சோறு** என்றும் மக்கள் தமிழுக்கு மாற்றிய பெருமை ஆதித்தனாருக்கு உண்டு. அனைத்துப் பத்திரிகைகளுக்கும் ஒரே மாதிரி செய்தி கிடைத்தாலும் அதைத்தன் வாசகர்களின் ரசனைக்கேற்ப 'சுடச்சுட' பரிமாறுவது தினத்தந்தி.

துணை ஆசிரியர்கள் செய்திகளை எப்படி எழுதவேண்டும் என்பதற்குத் தினச்சுடர் பத்திரிகை ஆசிரியர் பா.சு. மணியின் *10* கட்டளைகள் (செய்தி பிறந்த கதை - பா.சு. மணி, ப. *6*):

'சிறு சிறு வாக்கியங்களாக எழுதுங்கள் - எளிய சொற்களே இருக்கட்டும். புரிந்த சொற்களில் எழுதுங்கள். தேவையற்ற சொற்களை நீக்குங்கள். வாசகர்களைக் கவரும் வகையில் சொற்களில் துடிப்பு இருக்க வேண்டும். வாசகர்களுடன் நேரில் பேசுவது போல எழுதுங்கள். படம் பார்ப்பது போல உங்கள் எழுத்து இருக்க வேண்டும். வாசகர்களுடன் நெருக்கமாக இருக்க வேண்டும். உங்கள் எழுத்தில் பல ரகம் இருக்க வேண்டும். வாசகர்களுக்கு விளங்குவதாக இருக்கவேண்டும்'.

**அபேட்சகர் - வேட்பாளர்;** **கவர்னர் - ஆளுநர்;** **ஆஸ்பத்திரி - மருத்துவமனை;** **அசெம்பிளி - சட்டப் பேரவை;** **சபாநாயகர் - சட்டப் பேரவைத் தலைவர்;** **ஜில்லா - மாவட்டம்;** **காவிரி ஜல தாவா - காவிரி நதி நீர்ப் பிரச்சினை;** **விஞ்ஞாபனம் - கோரிக்கை;** **யாதாஸ்து (மகஜர்) - மனு;** **அக்கிராசனர் - தலைவர்...** என்று பல்வேறு வார்த்தைகளில் மாற்றம் ஏற்பட்டுள்ளது. ஸ்ரீ, கனம், திரு, அவர்கள் போன்ற அடைமொழிகள் பெயருக்கு முன்பு தற்போது இடம் பெறுவதில்லை. மக்களுக்குப் புரியும் வகையில் தேவைப்படும் இடங்களில் பிரித்து எழுதப்பட்டன (வர வேண்டுமென்று- வரவேண்டும் என்று). அதேபோல சின்ன வாக்கியங்களில் கதைபோல செய்திகளைக் கூறும் மொழிநடையும் வழக்கத்துக்கு வந்து விட்டது. இதழ்களின் மொழி அமைப்பு, புனைவுகளின் வடிவமைப்பு புதிதுபுதிதாக உருவாவது காலத்தின் கட்டாயம்.

'தாய்மொழிப் பத்திரிகைகளின் உண்மையான தொண்டு, விபத்து, கொலை, கொள்ளை, அடிதடி, காதல், சினிமா, பந்தயம் போன்ற **விறுவிறுப்பு பரபரப்புச்** செய்திகளையே முக்கியமாகக் கொண்டு, நேரப் போக்குக்கும் வம்பளப்புக்கும் உதவுவது அல்ல. விறுவிறுப்புச் செய்திக்கு இடமிருக்கலாம். ஆனால் அதுவே முக்கியம் என்று ஆகிவிடக் கூடாது' என்பதே **தினமணி** போன்ற பத்திரிகைகளின் நிலை. 'இவற்றை மட்டும்

அடிப்படையாகக் கொள்ளாமல் பொது விஷயங்கள் பற்றிய அறிவை ஆதாரமாகக் கொண்டால்தான் ஜனநாயகம் சரியானபடி உருவாகும் என்பது என் நம்பிக்கை' என்பது தினமணி முன்னாள் ஆசிரியர் ஏ.என். சிவராமனின் கருத்து. இதற்கேற்றக் கருத்துக்களத்தில் செயல்பட்டவர் அவர். பொது விஷயங்கள் பற்றிய நுணுக்கங்களை மக்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும் என விரும்பி, சாமானிய மக்களுக்கு எளிதில் புரியாத பொருளாதாரக் கொள்கைகள், வெளியுறவு விவகாரங்கள், அறிவியல் விஷயங்கள் குறித்து அவர் எழுதினார். அவருடைய கட்டுரைகளில் இடையிடையே ஆங்கிலச் சொற்களும் இருக்கும். அது ஏன் என்பது குறித்து இந்தியாவின் வறுமை பற்றிக் **கணக்கன்** ஆராய்ச்சி *(ப.2,* தினமணி வெளியீடு, *1968)* என்ற நூலில் கூறியிருப்பதாவது:

'கட்டுரையில் இடையிடையே சில ஆங்கிலச் சொற்கள், ஆங்கிலச் சொற்றொடர்கள், ஆங்கில வாக்கியங்கள் இருக்கின்றன. ஆங்கிலம் தெரியாதவர்கள் அதைக் கண்டு பயப்பட வேண்டியதில்லை. அந்த ஆங்கிலச் சொற்களை அறவே படிக்காமல் விட்டுவிட்டாலும் **நஷ்டம்** எதுவுமில்லை. ஆங்கிலச் சொற்களை ஒதுக்கியே படித்தாலும் நான் சொல்லவந்த கருத்து பூரணமாக விளங்கும். ஏனென்றால் நான் உபயோகித்துள்ள ஆங்கிலச் சொற்களுக்குச் **சொல்லுக்குச் சொல்**லாக மொழிபெயர்ப்புத் தராவிட்டாலும் கருத்தை நிச்சயமாக விளக்கியிருப்பேன் என்று வாசகர்கள் சுமாராக *(என்னை)* நம்பலாம்.

பல இடங்களில் அந்த ஆங்கிலச் சொற்கள் வேண்டியதே இல்லை. ஆனாலும் ஏதோ விசித்திரமான காரணத்தால் ஆங்கிலச் சொற்களையே அதிகம் கையாண்டு பழகியவர்களில் சிலருக்குத் தமிழ் புரிவதில்லை. ஆங்கிலச் சொல்லையும் சேர்த்துப் படித்தால் ஒரு **புது ஒளி** கிடைத்தது போன்ற உணர்ச்சி அவர்களுக்கு ஏற்படுகிறது. இது பழக்கம் பற்றிய கோளாறு. அவர்களை நான் குறை கூறவில்லை. இந்தக் **குறை** என்னிடமும் ஓரளவு இருக்கக்கூடும் இவ்வாறு ஆங்கிலத்தில் பழகிப்போனவர்களுக்காக ஆங்கிலச் சொற்களை உபயோகித்திருக்கிறேன்'.

தமிழ் இதழ்களின் சமூகக் கடமையில் தீராத நம்பிக்கைக் கொண்டிருந்த ஏ.எஸ். சிவராமன், தனது கருத்துகளைக் கொண்டு செல்வதற்கான ஊடகமாகப் பத்திரிகையைக் கருதினார். அதனால் எந்தவித மொழிநடையில் சொல்வது என்பதைவிட புரிகிற விதத்தில் துல்லியமாகச் சொல்ல வேண்டும் என்பதே அவருடைய நோக்காக இருந்தது. தமிழ் தவிர வேறு மொழி தெரியாத காரணத்தால் அவர்கள் கருத்துகளைத் தெரிந்துகொள்வதில் பின்தங்கிவிடக் கூடாது என்ற எண்ணத்தில் செயல்பட்டவர் அவர்.

தினமணி ஆசிரியராகப் பொறுப்பேற்ற பிறகு அதற்கு **நவீன முகம்** கொடுத்த ஐராவதம் மகாதேவன், செய்திகளை எழுதும்போது நல்ல தமிழைப் பயன்படுத்த வேண்டும் என்ற அவசியத்தை வலியுறுத்துவார். சில

நேரங்களில் தவறுதலாக ஒரு வார்த்தை பயன்படுத்தப்படும்போது, சரியான சொல் எது என்பதைச் சுட்டிக்காட்டுவார். சில எடுத்துக்காட்டுகள்:

**பஞ்சலோகச்சிலை** என்று எழுதக் கூடாது. **செப்புச் சிலைகள்** என்று எழுத வேண்டும். செப்புச் சிலைகளில் பஞ்சலோகங்கள் இல்லை. மேலும் இவ்வாறு கூறுவதால் **சிலை** என்றே எழுத வேண்டும்.

**மனைவி** என்ற சொல்லுக்குப் பதிலாகத் **துணைவி** என்று எழுத வேண்டாம். மனைவி (wife), துணைவி (companion) என்ற இரு சொற்களும் வெவ்வேறு பொருளைத்தரும்.

**வருஷம், ஆண்டு** - இரண்டு சொற்களையும் பயன்படுத்தலாம் வருடம் என்று எழுதுவது காதுக்கு இனிமையாக இல்லை.

இதுபோல **விஷம், விசேஷம்** என்ற சொற்களை **நஞ்சு, சிறப்பு** என்று தமிழ்ப்படுத்தலாம். ஆனால் **விடம், விசேடம்** என்று எழுதுவது நன்றாயிராது.

சுமுகமாக என்பது சரி. சுமூகமாக என்பது தவறு.

High level committee என்பதை **மேல்நிலைக் குழு** என்றோ, **உயர்நிலைக் குழு** என்றோ மொழிபெயர்க்கலாம். **உயர்மட்டக் குழு** என்று குறிப்பிடுவது தவறு.

**ஷ**, **ஜ**, **ஸி**, **ஹ** என்ற நான்கு கிரந்த எழுத்துக்களை உரிய இடத்தில் பயன்படுத்தத் தயக்கம் காட்டக் கூடாது. (உ-ம்) **ஹிந்து, ஹரிஜன், ஹைதராபாத், ஹிமாசலபிரதேசம்**. ஆனால் சொற்களின் நடுவில் **ஹ** என்ற எழுத்தை **க** என்று எழுதுவது தமிழ் மரபாகும். (உ-ம்) மகாராஜா (Maharaja), அலகாபாத் (Allahabad).

**ப்ரணவ முகர்ஜி** என்பது சரியானதே என்றாலும் அப்படி எழுத வேண்டாம். **பிரணாப் முகர்ஜி** என்று வங்காளி மொழி மரபிலேயே எழுதவும்.

குடியரசுத் தலைவரின் பெயரை வெங்கட்ராமன் என்று எழுதுவது தவறு; வெங்கடராமன் என்று எழுதுவதுதான் சரி.

காங்கிரஸ் (இ) என்று ஆங்கில மரபில் எழுத வேண்டாம். இ. காங்கிரஸ் என்று எழுதுவதுதான் தமிழ் மரபு. தமிழில் உரிச்சொல் பெயர்ச் சொல்லின் முன்னால் வரவேண்டும்.

**சர்க்காரியா** என்று எழுதுவது சரி. மேகாலய, மேகாலயத்தில் என்றும் திரிபுரா, திரிபுராவில் என்றும் எழுத வேண்டும்.

வக்கீல்கள் கிளர்ச்சியில் சம்பந்தப்பட்டிருந்த தில்லி வடக்கு போலீஸ் கமிஷனரின் பெயர் திருமதி கிரண்பேதி (கிரண்பேடி அல்ல).

செய்திகளில், அலறித் துடித்தார், துடிதுடித்து இறந்தார், ரத்த வெள்ளத்தில் மிதந்தார் என்பன போன்ற சொற்கள் வரக்கூடாது.

கழகம் என்ற சொல்லைத் தமிழ்நாடு அரசு நிறுவனங்களுக்கு மட்டுமே பயன்படுத்த வேண்டும். (உ-ம்) பல்லவன் போக்குவரத்துக் கழகம்.

மற்றபடி **கம்பெனி, கார்ப்பொரேஷன், இன்ஸ்டிடியூட்** போன்ற ஆங்கிலச் சொற்களுக்கு **நிறுவனம்** என்ற சொல்லைப் பயன்படுத்தலாம். (உ-ம்) Life Insurance Corporation என்பதை **ஆயுள் காப்பீட்டு நிறுவனம்** என்று மொழிபெயர்க்கலாம். மேலும் **நிலையம், ஸ்தாபனம், மையம்** போன்ற தமிழ்ச் சொற்களை இடமறிந்து பயன்படுத்தலாம். Company, Corporation என்ற ஆங்கிலச் சொற்களை அப்படியே ஒலிபெயர்த்து எழுதினாலும் தவறில்லை.

உயிரெழுத்துக்களில் தொடங்கும் சொற்களின் முன்னால் **ஓர்** என்றும் மெய்யெழுத்துக்களில் தொடங்கும் சொற்களுக்கு முன்னால் **ஒரு** என்றும் எழுத வேண்டும் (ஓர் ஊர். ஒரு கிராமம்).

தலைப்புகள் இரு வரிகளில் வருமாயின் முதல் வரியின் முடிவில் ஒற்றுத் தேவையில்லை. இவைபோன்ற நடைமுறைகள் மூலம் **தினமணி**க்கு நல்ல தமிழ் மூலம் நவீன முகம் கொடுக்க முயன்றார் மகாதேவன்.

'வகுப்புவாதிகள், மதவெறியர்கள், பிற்போக்குக் கும்பல்கள், குழப்பங்கள் உண்டு பண்ணுகிறவர்கள், நாட்டைக் காட்டிக் கொடுக்கும் நயவஞ்சகர்கள், தமிழினத்திற்குத் துரோகம் செய்யும் கோடாலிக் காம்புகள், இத்யாதி கோஷ்டிகள் அத்தனை பேரும் எமது விரோதிகள். இவர்களை முறியடிப்பதில் தினமலர், முன்னணியில் நின்று பணியாற்றிவரும்....' என்ற முழக்கத்துடன் (தினமலர் முதல் தலையங்கம் - *7-9-1951*) வெளியானது **தினமலர். தினமணி**க்கும் **தினத்தந்தி**க்கும் இடைப்பட்ட வாசகர் கூட்டத்தை ஈர்க்கும் வகையில் தொடக்கத்தில் செயல்படத் தொடங்கினாலும்கூட, தனக்கென **தனிப்பாணி** உருவாக்கித் தமிழகத்தில் தனக்கென தனித்த ஓர் இடத்தைப் பிடித்துக் கொண்டது.

கார் போகாத பட்டிதொட்டிகளையும் ஒற்றைப் பாதையோர குக்கிராமங்களையும் தேடிப்பிடித்து அதுகுறித்து படங்களுடன் செய்திகளை வெளியிட்டது. இதன் மூலம் அச்செய்திகள் அரசின் கவனத்தையும் மக்களின் கவனத்தையும் ஒரு சேர ஈர்க்க முயன்றது. இதனால் அந்தந்தப் பகுதிகளில் புதிய வாசகர் வட்டத்தை கவர்ந்தது. அதற்கேற்றபடி தனக்கெனத் தனி மொழிநடையை ஏற்படுத்திக்கொண்டது. மற்ற பத்திரிகைகளிலிருந்து வித்தியாசமான தலைப்புகளைத் தேர்ந்தெடுத்துத் துடிப்பான வார்த்தைகளில் **நறுக்**கென கொடுப்பது **தினமலர்** பாணி. திரைப்படப் பாடல்வரிகள், 'நையாண்டி' தலைப்புகள், ஆங்கிலக் கிண்டல் வாசகங்கள்... இப்படி ஏதாவது ஒன்றைச் செய்து தினமலர் முத்திரையைச் செய்திகளில் பதிக்கத் தவறுவதில்லை. இந்தச் செய்தியை 'இப்படித்தான் எழுத வேண்டும்; இந்த நடையில் இந்த மாதிரி இருக்க வேண்டும்' என்ற இலக்கண வரம்புக்குள் தினமலர் சிக்கிக்கொள்ளவில்லை. இதேபோல

ஒவ்வொரு **இதழ்களுக்கும்** தனிப் பண்புகள் இருக்கின்ற அதே நேரத்தில் பொதுப் பண்புகளும் பல உண்டு என்பதையும் கவனிக்க வேண்டும். ஓர் இதழில் ஏற்படும் மாற்றத்தின் தாக்கம், மற்ற இதழ்களுக்கும் விரைவில் தொற்றிக்கொண்டுவிடுகிறது.

பத்திரிகையுலகில் ஒவ்வொரு இதழாசிரியர்களும் தனக்கெனத் தனி நடையை உருவாக்கி வாசகர்கள் மனதில் இடம் பிடித்துள்ளார்கள். அரசியல் பணிக்கு இதழ்களையும் ஒரு கருவியாகப் பயன்படுத்திய பெரியாரின் இதழியல் திறமைக்கு ஓர் எடுத்துக்காட்டு:

ஒரே நாளில் திருப்பூருக்கு மூன்று அமைச்சர்கள் வருகை தந்த செய்திக்கு *14-8-1927* **குடியரசு** இதழில் அவர் கொடுத்த தலைப்பு:

**'திருப்பூர் மார்க்கெட்டு நிலவரம்**
**மந்திரிகள் சவுதம்**
**புஷ்பம் கிராக்கி'**

சவுதம் என்றால் மலிவு.

'கழகம் நல்லபடி இயங்க வேண்டுமானால் பிரசாரமும் பத்திரிகையும் மிக அவசியம் ஆகும்' (விடுதலை *10-8-1962)* என்று கருதிய பெரியார், துணிச்சலான கருத்துகளை மக்களுக்குச் சுரணை ஏற்படுத்தும் நடையில் தந்தார்.

தனித்துவமிக்க நடையால் தமிழ்மொழி நடை வரலாற்றில் என்றைக்கும் நினைவு கூரத்தக்கவர் குத்தூசி குருசாமி. **பலசரக்கு மூட்டை** என்ற தலைப்பில் எழுதிய சமூக, அரசியல் கட்டுரைகளில் உள்ள **நையாண்டி**யை இன்றைக்கும் ரசித்து மகிழ முடியும். அதற்கேற்ற துள்ளல் நடையை அவர் கையாண்டார்.

'பொங்க வேண்டியது எது*?' (*அறிவுப்பாதை *- 15-1-1964)* என்ற தலைப்பில் அந்த இதழாளரின் கோபாவேசம் நகைச்சுவை வடிவில் சமூக விமர்சனமாக வெளிப்படுகிறது. அக்கட்டுரையின் ஒரு பகுதி:

....அரிசியைப் பொங்கிச் சாப்பிடு என்ற இந்தப் புதிய கருத்துப் பற்றித் தொல்காப்பியம் என்ன கூறுகிறது? வேதம் என்ன சொல்கிறது? கம்பர் எங்காவது இதுபற்றிக் குறிப்பிடுகிறாரா? கீதையில் பகவான் கிருஷ்ணன் **பொங்கல் சோறு** பற்றி ஏதாவது ஜாடை காட்டியுள்ளாரா? மனுதர்ம சாஸ்திரத்தில் ஏதாவது பொங்கல் வாசனை தெரிகிறதா?

இப்படியெல்லாம் ஆராய்ந்து பார்க்காதபடி அவசரக்குடுக்கையாக நடக்க மாட்டான், நம் தமிழன்.

சரி. 'இந்த நாளுக்கு மட்டும் **பொங்கல்** என்று ஏன் பெயரிட்டிருக்கிறார்கள்? இதிலிருந்தே தமிழன் மீதி நாட்களில் கஞ்சி வடித்த சக்கையைத்தான் மென்று கொண்டிருந்திருக்கிறான் என்பது

விளங்கவில்லையா?' என்று தமிழ்ப்புலவர் திருவாளர் ஆராய்ச்சி மணியவர்கள் கேட்பது உங்களது காதில் விழுகிறதா?

எனவே, இன்று தமிழனுக்கு அவசரமாகப் பொங்க வேண்டியது அரிசி கூட அல்ல!

அறிவு பொங்க வேண்டும்! துணிவு பொங்க வேண்டும்! அவசரம் (நல்ல காரியத்துக்கு) பொங்க வேண்டும்! குறிப்பாகச் சொல்ல வேண்டுமானால் செக்கு மாட்டுக் குணத்தின் மீது எதிர்ப்புணர்ச்சி பொங்க வேண்டும்!

பொங்குக இத்தனையும் உடனடியாக!-என்று வாழ்த்துக் கூறுகிறேன்.' குத்தூசி குருசாமியைப் போல தனித்துவமிக்க மொழி நடையால் தமிழுக்கு அரிய பங்களிப்பைச் செய்த இதழாளர்கள் பலர் உள்ளனர்.

குறுகிய கால இடைவெளியில் பெரும்பாலும் ஆங்கிலத்தில் வரும் செய்திகளைத் தமிழில் தரவேண்டிய சூழ்நிலையில் பல நேரங்களில் தகுந்த வார்த்தைகளைக் கண்டுபிடிப்பது என்பது கடினமான காரியம். இது அன்றிலிருந்து இன்றுவரை இருந்துவரும் பிரச்சினை.

இந்தியாவில் விதவைகளின் பரிதாபகரமான நிலைமைப்பற்றி, காந்திஜியின் கருத்தை விமர்சனம் செய்யும்போது பாரதி கூறுகிறார்:

'ஸ்திரீ - விதவைகளின் தொகையைக் குறைக்க வழிகேட்டால் ஸ்ரீமான் காந்தி 'புருஷ விதவைகளின் (அதாவது புனர் விவாகமின்றி வருந்தும் ஆண் மக்களின்) தொகையை அதிகப்படுத்த வேண்டுகிறார்...' மனைவியை இழந்த ஆண்களுக்குப் **புருஷ-விதவை** என்ற வார்த்தையைத் தேடிப் பிடித்துப் பயன்படுத்துகிறார். அதே சமயம் **மெம்பர்** என்ற வார்த்தைக்கு உரிய தமிழ் வார்த்தை கிடைக்காமல் பழக்கத்தில் உள்ள அந்த வார்த்தையை அப்படியே விட்டுவிடுகிறார்.

நடுவிலே ஒரு ரசமான வார்த்தை. **மெம்பர்** என்பதற்குச் சரியான தமிழ்ச் சொல் எனக்கு அகப்படவில்லை. ஆச்சரியத்திலும் ஆச்சர்யம் **அவயவி** சரியான வார்த்தையில்லை. **அங்கத்தான்** கட்டிவராது. **சபிகன்** சரியான பதந்தான். ஆனால் பொதுஜனங்களுக்குத் தெரியாது. யாரேனும் பண்டிதர்கள் நல்ல பதங்கள் கண்டுபிடித்துக் கொடுத்தால் புண்ணிய முண்டு. அரைமணி நேரம் யோசித்துப் பார்த்தேன். உறுப்பாளி, ஏதெல்லாமோ நினைத்தேன். ஒன்றும் மனதிற்குப் பொருந்தவில்லை. என்ன செய்வேன்! கடைசியாக **மெம்பர்** என்று எழுதிவிட்டேன் இன்றும் ஆரஅமர யோசித்துச் சரியான பதங்கள் கண்டுபிடித்து மற்றொரு முறை சொல்லுகிறேன்' என்கிறார் பாரதி. இதைச் சொல்லும் அவருடைய மொழிநடை நம்மை ஈர்க்கிறது.

'பாகிஸ்தானை எந்தத் தமிழ்ப் புலவராவது மொழிபெயர்க்க முடியுமா? **பெடரேஷன்** இதற்குத் தனித்தமிழில் என்ன வார்த்தை இருக்கின்றது? **தெர்மா மீட்டர்** என்று சொன்னால் சகலருக்கும் புரியும்போது ஒருவருக்கும் புரியாத ஒரு தமிழ்ச் சொல்லடுக்கை உபயோகிக்க வேண்டிய அவசியம் என்ன? **டாங்கி, விமானம், பெட்ரோல், மோட்டார், பீரங்கி, குண்டு, துப்பாக்கி, தோட்டா** ஆகிய வார்த்தைகளை உபயோகிக்காமல் யுத்தச் செய்திகளைச் சொல்லவே முடியாது. டாங்கியும், பெட்ரோலும் மோட்டாரும் ஆங்கிலம். இவற்றை எப்படி மொழிபெயர்ப்பார்கள்? **தானே இயங்கும் ஊர்தி** என்று ஒவ்வொரு தடவையும் மோட்டாருக்குப் பதில் நீளமாக எழுதுவார்களா? விமானம், பீரங்கி, குண்டு, துப்பாக்கி, தோட்டாவை எடுத்துக்கொள்வோம். இவை எல்லாம் தமிழ் வார்த்தைகள் தானே என்று நீங்கள் நினைக்கலாம். புலவர்கள் தனித்தமிழ் கொள்கைப்படி இவை தமிழ் வார்த்தைகள் அல்ல. **விமானம்** சமஸ்கிருதம். **பீரங்கி** போர்ச்சுக்கேய பாஷையிலிருந்து வந்தது. **குண்டு** மராத்திய பாஷை. **துப்பாக்கி** துருக்கி பாஷை. **தோட்டா** உருதுவிலிருந்து வந்து சேர்ந்தது. இவ்வளவையும் பிற மொழிச் சொற்கள் என்று தள்ளிவிட்டால், இவற்றிற்குப் பதிலாகத் தனித் தமிழில் எப்படிச் சொல்வார்கள்? விமானத்திற்குப் **பறக்கும் வண்டி** என்றும் பீரங்கிக்கு **உருண்டு நீண்ட குழாயுள்ள வெடி**யென்றும் சொல்வார்களா? அப்படிச் சொன்னால் அவை பொருத்தமாயிருக்குமா? அல்லது ஜனங்களுக்குத்தான் புரியுமா?' என்கிறார் தினமணியின் முதல் ஆசிரியர் டி.எஸ். சொக்கலிங்கம் (எனது ராஜினாமா, *1943*). இதழ்கள் எத்தகைய வார்த்தைப் பிரயோகங்களை அமைத்துக் கொள்கின்றன என்பதற்கு இது ஓர் எடுத்துக்காட்டு. வாசகர்களுக்குப் பழக்கமான வார்த்தைகள் பிறமொழிச் சொற்களாக இருந்தாலும் இதழ்கள் பயன்படுத்தத் தயங்குவதில்லை.

தூய தமிழைப் பயன்படுத்திய கருமுத்து தியாகராச செட்டியார் நடத்திய **தமிழ்நாடு** இதழில் ஐ, ஸ, ஷ, ஹ.... போன்ற வடமொழிச் சொற்கள் இடம்பெறாது. ஔவை துரைசாமி, ராஜமாணிக்கனார் போன்றவர்கள் நல்லதமிழில் எழுத ஆலோசனை வழங்கினார்கள். அது போன்று தனித் தமிழுடன் கூடிய நாளிதழ்களுக்குத் தற்போது சாத்தியங்கள் இருப்பதாகத் தெரியவில்லை. மக்கள் தமிழில் எழுதாவிட்டால் வாசகர்களை எப்படி எட்டுவது?

நல்ல தமிழ் வார்த்தைகளைக் கண்டுபிடித்துப் பத்திரிகைகளில் எழுதுவது என்பது இதழாளர்களுக்குப் பல நேரங்களில் கடினமான காரியம். புதிய கலைச்சொல்லுக்குப் புதிய தமிழ் வார்த்தையை அறிமுகப்படுத்தும் போதே அதற்கு உரிய ஆங்கிலச் சொல்லை அடைப்புக் குறிக்குள் கொடுக்க வேண்டியதிருக்கும். காலப்போக்கில் மக்கள் மனதில் இடம்பெற்ற பிறகு அந்த ஆங்கில வார்த்தையை அடைப்புக்குறிக்குள் போடவேண்டிய அவசியம் இராது.

**டிஸ்மிஸ், சஸ்பெண்ட்** போன்ற ஆங்கில வார்த்தைகள் இன்றைக்கும் பயன்படுத்தப்படுகின்றன. **சஸ்பெண்ட்** என்பதற்கு **இடைநீக்கம்** என்ற வார்த்தை அறிமுகப்படுத்தப்பட்டபோது சிலர் கேலி செய்தனர். பெண் உறுப்பினர் ஒருவர் சஸ்பெண்ட் செய்யப்பட்டால் **பெண் உறுப்பினர் இடைநீக்கம்** என்று எழுதலாமா? என்று கேள்வி எழுந்தது. தற்போது **சஸ்பெண்ட்**டும் உள்ளது. **இடைநீக்கமும்** இடம் பெற்றுவிட்டது.

சமீப காலங்களில் பத்திரிகைகளில் தேவையில்லாமல் ஆங்கிலக் கலப்பு அதிகமாகிவருகிறது. ஒரே நாளில் சட்டம் போட்டோ, அகராதியை உருவாக்கி அதன்படிதான் எழுதவேண்டும் என்று கட்டாயப்படுத்தியோ நல்ல தமிழ் நடையை அனைத்து இதழ்களிலும் கொண்டு வந்துவிட முடியாது. எனினும், நல்லமொழி நடையையும் மரபுகளையும் கையாள்வதற்கு இதழாளர்களுக்கு என **மொழிநடை வழிகாட்டி** (Style Book) உருவாக்கப்பட வேண்டிய தேவை உள்ளது.

'.... எனக்குப் பேசும் தமிழ்தான் முக்கியம். அது எவ்வளவு கலப்படமாக இருந்தாலும், அந்தத் தமிழே எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது. என் தமிழ் **இஸ்த்திக்கினு போற** தமிழ். **நாஷ்டா** சாப்பிடுகிற தமிழ். மின்சாரத்தைத் தமிழ்ப்படுத்தினாலும் தொட்டால் **ஷாக்** அடிக்கிற தமிழ் நம்ம தமிழ்' என்கிறார் எழுத்தாளர் ஜெயகாந்தன் (**தொடரும்** இதழுக்கு அளித்த பேட்டி). இதுதான் இன்றைய இதழ்களின் யதார்த்தம்.

நல்ல தமிழ் தேவை என்பது தமிழ் ஆர்வலர்களின் ஆதங்கம். வாசகர்களுக்கு எளிமையாக எடுத்துச் சொல்ல வேண்டும் என்பதே இதழாளர்களின் பிரதான நோக்கம். இந்த இரண்டுக்கும் இடையில் உள்ள இடைவெளியை நிரப்புவது எப்படி என்பதுதான் பிரச்சினை. எந்த மொழி நடையும் நிரந்தரமாக நின்று நிலவக் கூடியதாக இருக்கும் எனக் கருத வேண்டியதில்லை. தேவைகளுக்கு ஏற்பவும் காலமாறுதல்களுக்குத் தகுந்தபடியும் மொழிநடையும் தன்னைத் தொடர்ந்து புதுப்பித்துக் கொள்ளும். காலம் என்ற தீரா நதியில் மாற்றம் வற்றாத பேராறு.

# கள ஆய்வு

ஆறு. இராமநாதன்

ஆய்வாளர்கள் தங்களுடைய ஆய்விற்கான தரவுகளை நூலகங்கள், ஆவணக் காப்பகங்கள், அருங்காட்சியகங்கள் போன்றவற்றிலிருந்து சேகரிக்கின்றனர். மேலும், அஞ்சல் வாயிலாக வினாநிரலை அனுப்பியும் இதழ்களில் விளம்பரம் செய்தும் தரவுகள் சேகரிக்கப்படுவதுண்டு. அனைத்து ஆய்வுகளுக்கும் இத்தகைய தரவுகள் போதுமானவையாக இருப்பதில்லை.

தொல்பொருள் ஆய்வுத் துறையினர் கல்வெட்டுக்கள், பாறை ஓவியங்கள், புதையுண்ட பண்டைக்காலப் பொருட்கள் முதலானவற்றைத் தேடியும், நிலஅறிவியல் துறையினர் பல்வேறு வகைப்பாறைகள், கனிமங்கள், மண் மாதிரிகளைத் தேடியும், தாவரவியலார் புதுப்புது தாவரங்களைத் தேடியும், மருத்துவவியலார் பச்சிலைகளைத் தேடியும், பூச்சியியலார் பூச்சிகளைத் தேடியும், விலங்கியலார் விலங்குகளைத் தேடியும் களத்திற்குச் செல்வர். இத்தகைய ஆய்வுத் துறையினர் அஃறிணைப் பொருட்களைத் தேடிக் களத்திற்குச் செல்லும்போது அங்குள்ள மக்களை அணுகி விவரம் சேகரித்து அதனடிப்படையில் தங்களின் பணிகளை முன்னெடுத்துச் செல்வதுண்டு.

சமூகவியல், மானிடவியல், மொழியியல் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் மக்களை அணுகி மக்களிடமிருந்து பெறப்படும் தரவுகளை அடிப்படையாகக் கொண்டு தங்களுடைய ஆய்வுகளை மேற்கொள்கின்றனர்.

பத்திரிக்கைகள், தொலைக்காட்சிகள், வானொலி நிலையங்கள் போன்றவற்றைச் சேர்ந்தோர் மக்கள் கருத்தறியவும் வேறு தகவல்கள் திரட்டவும் களத்திற்குச் செல்கின்றனர். தேர்தலின்போது வாக்காளர்களின் மன இயல்புகளை அறியவும், கருத்துக்கணிப்பு நிகழ்த்தவும் மக்களை அணுகுகின்றனர். வணிகநோக்கில் உற்பத்தி செய்யப்படும் பொருள்கள் குறித்து நுகர்வோருக்கு விளக்கவும் அவர்தம் கருத்தறியவும் களப்பணியாளர்கள் செல்கின்றனர்.

இவ்வாறு ஆய்வுக்குரிய களத்திற்கு ஆய்வாளர்கள் நேரடியாகச் சென்று மக்களிடமிருந்து கட்டற்ற பேட்டி (Instructured Interview) வாயிலாகவும் வினாப்பட்டியல் (Questionnaire & Schedule) வாயிலாகவும், உற்றுநோக்கல் வாயிலாகவும் தரவுகளைச் சேகரிப்பதனைக் களஆய்வு என்று குறிப்பிடுகிறோம்.

நாட்டுப்புறவியல் துறையினர் மக்களின் கலை, இலக்கியங்கள், பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், சடங்குகள், வழிபாடுகள், மரபுவழி அறிவியல் தொழில்நுட்பங்கள் முதலான வாய்மொழி வழக்காறுகளைச் சேகரிப்பதற்குக் கள ஆய்வினை மேற்கொள்கின்றனர். மக்களின் வழக்காறுகளே இத்துறை ஆய்வுக்கான தரவுகளாக அமைவதால் இத்துறையில் கள ஆய்வு மிகுந்த முக்கியத்துவம் பெறுகிறது.

நாட்டுப்புறவியல் துறையில் கள ஆய்வுப் பணியைத் தொடங்கி வைத்தவர்கள் ஐரோப்பியர்களே. கள ஆய்வினை அடிப்படையாகக் கொண்டு பார்த்தலோமியஸ் சீகன்பல்க் என்னும் செருமானியப் பாதிரியார் *1713*இல் **மலபார் மக்கள் தெய்வங்களின் குடிவழிப் பட்டியல்** என்னும் நூலினை எழுதினார். பின்னர் பெர்சிவல் பாதிரியார் *(1842)*, எச்.டபிள்யு. லாரி *(1870)*, ஜான் லாசரஸ் *(1894)*, ஹெர்மன் ஜென்சன் *(1897)* போன்ற பலரும் பழமொழிகளைச் சேகரித்தனர். சார்லஸ் இ. கோவர் *1871*இல் நாட்டுப்புற பாடல்களைச் சேகரித்து **Folk songs of Southern India** என்ற தலைப்பில் நூலாக வெளியிட்டார். பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலும், இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் ஹென்றி ஒயிட்ஹெட், எட்கார் தர்ஸ்டன், பெர்சி மாக்யூன் போன்ற பலரும் நாட்டுப்புற வழக்காறுகளைச் சேகரித்தனர். இவர்கள் அனைவரும் தமிழர்களின் உதவியுடனேயே இப்பணிகளைச் செய்துள்ளனர். ஆனால் இவர்கள் கள ஆய்வு செய்து தரவுகள் சேகரித்த முறை குறித்த விவரம் நமக்குக் கிடைக்கவில்லை. காசு கொடுத்துத் தகவலாளரிடமிருந்து பாடல்கள் சேகரிக்கப்பட்டதாக ஒன்றிரண்டு செய்திகள் மட்டும் நமக்குக் கிடைக்கின்றன. இதே காலகட்டத்தில் இராமசாமி ஐயங்கார் *(1874)*, வேணுகோபால் நாயுடு *(1877)*, கிருஷ்ணசாமி செட்டியார் *(1894)*, செல்வ கேசவராய முதலியார் *(1899)*, நடேச சாஸ்திரி *(1888)* போன்ற தமிழர் பலரும் பழமொழிகள், நாட்டுப்புறக் கதைகள் போன்ற வழக்காறுகளைச் சேகரித்தனர். இவர்களும் தங்களுடைய களஆய்வு பற்றிய விவரங்களைத் தங்களுடைய நூல்களில் தரவில்லை.

இந்திய விடுதலைக்குப் பின் நாட்டுப்புற வழக்காறுகளைச் சேகரித்த கி.வா. ஜெகந்நாதன், பெ. தூரன், மு. அருணாசலம் போன்ற அறிஞர்கள் தங்களுக்குத் தெரிந்த குடும்ப நண்பர்கள், உறவினர்கள், மாணவர்கள் போன்றவர்களிடமிருந்து தரவுகளைச் சேகரித்தனர். இவர்கள் களத்திற்குச் சென்று வழக்காறுகளைச் சேகரித்ததாகத் தகவல்கள் ஏதுமில்லை. செ. அன்னகாமு *1947*இல் நாட்டுப்புறப் பாடல்களைச் சேகரிக்கத் தொடங்கி *1959*இல் **ஏட்டில் எழுதாக் கவிதைகள்** என்னும் பாடல் தொகுப்பினை வெளியிட்டார். இந்நூலில் அவர் களஆய்வு செய்து பாடல்கள் சேகரித்ததை ஆங்காங்கே சுட்டியுள்ளார். *1960, 64* ஆகிய ஆண்டுகளில் நாட்டுப்புறப் பாடல் தொகுப்பு நூல்களை வெளியிட்ட நா. வானமாமலை தர்மபுரி, சேலம், நெல்லை போன்ற வெவ்வேறு பகுதிகளில் வழங்கும் நாட்டுப்புறப் பாடல்களைச் சேகரித்திருந்தார். இவர் தாமே களத்திற்குச் செல்லாமல் பல கள ஆய்வாளர்கள் உதவியுடன் இப்பணியைச் செய்தார். பதிப்பாசிரியர் என்ற முறையில் சேகரிப்பாளர்கட்குப் பொதுவான சேகரிப்பு வழிகாட்டிக் குறிப்பு ஏதும் இவர் தரவில்லை என்று பா.ரா. சுப்பிரமணியம் *(1975:45)* சுட்டுகின்றார்.

பா. ரா. சுப்பிரமணியம் *1969*இல் சமர்ப்பித்த முனைவர் பட்ட ஆய்வேட்டில் நெல்லை மாவட்டப் பகுதியிலிருந்து தாலாட்டு, ஒப்பாரிப் பாடல்களைச் சேகரித்த முறைகளைத் தெளிவாக விளக்கியுள்ளார். இவருடைய ஆய்வு, நூல் வடிவம் பெறுமுன்னர் சரசுவதி வேணுகோபால் மற்றும் மு. இராமசாமி *(1976)* ஆகியோர் எழுதி வெளியிட்ட **கள ஆய்வில் சில அனுபவங்கள்** என்னும் நூல் வெளிவந்தது. இந்நூலில் தாலாட்டு ஒப்பாரிப் பாடல்களைச் சேகரித்த தம் அனுபவங்களைச் சரசுவதி வேணுகோபால் விரிவாகச் சுட்டியுள்ளார். மு. இராமசாமி தோற்பாவை நிழற்கூத்துக் கலை குறித்த தரவுகளைச் சேகரித்த தம் அனுபவங்களையும் முறைகளையும் சுட்டியுள்ளார். இவ்வகையில் தமிழில் வெளிவந்த முதல் நூல் இது. ஆறு. இராமநாதன் *(1982)* தன்னுடைய முனைவர் பட்டத்திற்குப் பாடல் சேகரித்த முறைகள், அதன் குறைநிறைகள் குறித்து சுருக்கமாகச் சுட்டியுள்ளார். தே. லூர்து *(1986)* **நாட்டார் வழக்காற்றியல் கள ஆய்வு** என்னும் நூலினை வெளியிட்டுள்ளார். கள ஆய்வு குறித்த மேலை நாட்டாரின் குறிப்பாக, கென்னத் கோல்ட்ஸ்டெயின் என்பாரின் கருத்துக்களைத் தொகுத்தளிக்கும் இவர் தன் கள ஆய்வு அனுபவக் குறிப்புகளை இடையிடையே சான்றுகளாகத் தந்துள்ளார். இவ்வகையில் தமிழில் வெளிவந்த நல்லதொரு முயற்சி இது. ஆறு. இராமநாதன் *(1988)* **வரலாற்று - நிலவியல் ஆய்வுமுறை - அறிமுகமும் ஆய்வுகளும்** என்ற நூலில் அந்த ஆய்வுக்காக மேற்கொண்ட கள ஆய்வு முறைகளைத் தெளிவாக எடுத்துரைத்துள்ளார். ச. முருகானந்தம் **கள ஆய்வு** என்னும் சிறு நூலினைச் சமீபத்தில் வெளியிட்டுள்ளார். மேலே குறிப்பிட்டவையேயன்றி, சமீப காலத்தில் நிகழ்த்தப்பட்ட நாட்டுப்புறவியல் ஆய்வுகளில் ஆய்வாளர்கள் தத்தம் கள ஆய்வு முறைகளைப் பதிவுசெய்துள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது. பாளையங்கோட்டை தூய சவேரியார் கல்லூரி

நாட்டார் வழக்காற்றியல் ஆய்வு மையத்தின் கள ஆய்வாளர்கள் தத்தம் களப்பணி பற்றி விரிவாகவும் நுணுக்கமாகவும் பதிவு செய்துள்ளனர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

கள ஆய்வு முறைகள் ஆய்வுக்கேற்ப மாறத்தக்கவை. முன்னோர்களின் கள ஆய்வு அனுபவங்களும் முறைகளும் ஓரளவு மட்டுமே கள ஆய்வு வெற்றிக்கு உதவக் கூடியதாக இருக்கும். கள ஆய்வு குறித்த அனுபவங்களை விரிவாகச் சுட்டுவதைவிட, கள ஆய்வு வெற்றிகரமாக அமைவதற்குத் தேவையான கருத்துக்களை மட்டும் இங்குச் சுட்டுவது பயனுடையதாக இருக்கும் என்னும் நோக்கில் பின்வரும் கருத்துக்கள் கூறப்படுகின்றன.

ஆய்வுத் தலைப்பு தெளிவாகவும் நுண்மையாகவும் அமைதல் வேண்டும். இதில் ஏற்படும் குறைபாடுகள் கள ஆய்வினைப் பயனற்றதாக்கி விடும் என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டும்.

அதனையொட்டிய ஆய்வாளரின் கருதுகோள் தெளிவாக உருவாக்கப்படவேண்டும்.

தலைப்புக்கேற்ற சரியான ஆய்வுக்களம் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். ஓர் ஊர், ஒரு பண்பாட்டுக் குழுவினர் வசிக்கும் பகுதிகள், வட்டம், மாவட்டம் என்று ஆய்வுக்களங்கள் ஆய்வுத் தலைப்புக்கேற்ப மாறுபடும். அதற்கேற்ப கள ஆய்வுத் திட்டங்கள் மாறுபடும். களப்பணி செல்லுமுன் ஆய்வுக்களத்தின் நிலவியல் தன்மைகள், போக்குவரத்து வசதிகள், அப்பகுதியில் வாழ்கின்ற சாதியினர், அவர்கட்கிடையேயான உறவுகள், அவர்தம் பழக்கவழக்கங்கள், பேச்சுமொழி, அண்மைக்கால நிகழ்வுகள் போன்ற விவரங்களை நன்கு அறிந்து செல்லவேண்டும்.

ஆய்வு முன்னோடிகளின் அனுபவங்களும் நூல்களும் செய்தி ஏடுகளும், காவல்துறை, வருவாய்துறை போன்ற தொடர்புடைய துறைகளில் பெறப்படும் செய்திகளும் இதற்கு உதவும்.

எவ்வளவு காலம் கள ஆய்வு செய்ய வேண்டும் என்று திட்டமிடுதல் வேண்டும். ஒரே நாளிலா? சில நாட்களிலா? சில மாதங்களிலா? சில நாட்கள் / மாதங்கள் எனில் அங்கேயே தங்கியா, தினம் சென்றுவந்தா? எவ்வாறு? என்பதையும் திட்டமிடுதல் வேண்டும். அதன் குறைநிறைகள் குறித்துச் சிந்திக்க வேண்டும்.

கள ஆய்வு எவ்வாறு செய்யப்பட வேண்டும்? கட்டற்ற பேட்டிமுறை வாயிலாகவா? வினாப்பட்டிமுறை வாயிலாகவா? ஒன்றிப் பழகுதல், உற்று நோக்கல்/கலந்துகொள்ளல் வாயிலாகவா? அல்லது அனைத்து முறைகளிலுமா? இதனைத் தீர்மானித்து அதற்கேற்ப முன் ஏற்பாடுகள் செய்ய வேண்டும்.

தரவுகளை எவ்வாறு பதிவுசெய்ய வேண்டும்? கேட்டு உடனே எழுதிக் கொள்ளுதல்; கேட்டுப் பின் தொகுத்து எழுதிக் கொள்ளுதல்;

ஒலிப்பதிவுக் கருவியில் பதிவுசெய்து கொள்ளுதல்; புகைப்படம்/ஒளிப்படம் எடுத்துக் கொள்ளுதல்; இவை அனைத்து முறைகளையும் பயன்படுத்துதல் போன்றவற்றை முன்னரே தீர்மானித்து அதற்கேற்ப முன் ஏற்பாடுகள் செய்துகொள்ள வேண்டும்.

நேரடியாக மக்களை அணுகி அறிமுகப்படுத்திக்கொள்ளல்; நண்பர்கள் - உறவினர்கள் வாயிலாக அறிமுகப்படுத்திக்கொள்ளல் என்று பல அணுகுமுறைகள் உண்டு. இவை ஒவ்வொன்றிலும் நன்மைகளும் உண்டு, தீமைகளும் உண்டு. இதனை நன்கு உணர்ந்து செயல்பட வேண்டும். அவ்வாறு செயற்பட்டால் குறைகளைத் தவிர்க்கலாம். கள ஆய்வினை எளிதாகவும் சிறப்பாகவும் செய்து முடிக்கலாம்.

தகவலாளரிடம் காட்டும் பரிவு, மரியாதை, ஆய்வாளரின் பழகுமுறை, பொறுமை, நேர்மை போன்றவை கள ஆய்வை வெற்றியடையச் செய்யும்.

சமயோசிதமாக நடந்து கொள்வது மிகமிக அவசியம். சில நேரங்களில் நாம் திட்டமிட்டதற்கும் எதிர்பார்த்ததற்கும் மாறான சூழல் ஏற்படலாம். அப்போது கள ஆய்வாளரின் சமயோசித அறிவுதான் கள ஆய்வின் வெற்றிக்கு வழிசெய்யும்.

சமூகவியல் துறை ஆய்வில் ஆய்வு மேற்கொள்ளும்போது தகவலாளர் பற்றிய விவரம் அளிக்கப்படுவதில்லை. கள ஆய்வு செய்த ஊர்ப்பெயர்கூட போலியாகத் தரப்படுகிறது. நாட்டுப்புறவியல் துறையில் தகவலாளர் பற்றிய முழுவிபரங்களும் (பெயர், வயது, கல்வி, சாதி, ஊர், வட்டம், மாவட்டம்) தரப்படும். மேலும் தரவுகளை அவர் அறிந்த முறை, அவற்றைப் பயன்படுத்தும் சூழல்கள், பயன்படுத்தும் நோக்கங்கள், சேகரித்த முறை, சேகரித்த சூழல்கள், சேகரித்த இடம், தேதி போன்ற அனைத்து விவரங்களும் தரப்படுதல் வேண்டும். இதனை மனதில் கொண்டே திட்டமிடுதல் வேண்டும்.

தரவுகள் குறித்த தகவலாளர் கருத்துக்கள், விவரங்கள், அதனைக் கேட்கும் பிறரின் உணர்வுகள், விளக்கங்கள் போன்றவற்றைக் கேட்டும், கூர்ந்து கவனித்தும் விவரங்கள் சேகரிக்கப்பட வேண்டும். சிறுசிறு நிகழ்வுகளும்கூட உண்மைகளை அறிய உதவக்கூடும் என்பதை மனதிற்கொண்டு அவற்றையும் சேகரிக்க வேண்டும்.

கள ஆய்வுக்குப் பின்னர் பதிவு செய்துள்ள தரவுகளைப் பெயர்த்தெழுதுதல், சரிபார்த்தல், வகைப்படுத்தல் என்பனவும் மிகவும் அவசியம். இப்பணியின் செம்மையைப் பொறுத்தே கள ஆய்வின் பயன்பாடு செம்மையாக அமையும்.

கள ஆய்வுத் தரவுகளை ஆய்வுக்கு உட்படுத்தும்போது எழும் ஐயங்களைத் தீர்த்துக் கொள்ள 'மறு கள ஆய்வு' மேற்கொள்ளப்பட வேண்டும். அப்போதுதான் கள ஆய்வு முழுமைபெறும்.

இவற்றை எல்லாம் கவனத்தில் கொண்டு செயல்பட்டால் கள ஆய்வு சிறப்பாக அமையும். முன்பே சுட்டியபடி இவை எல்லாம் ஆலோசனைகளே. இவை ஓரளவே பயன்படக்கூடும். எடுத்துக்கொள்ளும் தலைப்பிற்கேற்ப ஆய்வாளர் திட்டமிடுதலும் சமயோசிதமாகச் செயல்படுதலுமே கள ஆய்வில் முழு வெற்றியைத் தேடித்தரும் என்பதை மனதில் கொள்ள வேண்டும்.

## பார்வை நூல்கள்


1. இராமநாதன், ஆறு., **நாட்டுப்புற பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல்,** மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், *1982.*
2. இராமநாதன், ஆறு., **வரலாற்று நிலவியல் ஆய்வுமுறை - அறிமுகமும் ஆய்வுகளும்,** தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், *1988.*
3. சரசுவதி வேணுகோபால் & இராமசாமி, மு., **கள ஆய்வில் சில அனுபவங்கள்,** வெற்றிவேல் பிரசுரம், மதுரை, *1976.*
4. சுப்பிரமணியன், பா. ரா., **தமிழக நாட்டுப் பாடல்கள்,** தமிழ்ப் புத்தகாலயம், சென்னை-*5, 1975.*
5. லூர்து, தே., **நாட்டார் வழக்காற்றியல் - கள ஆய்வு,** பாரிவேள் பதிப்பகம், திருநெல்வேலி, *1986.*
6. Goldstein, Kenneth, S., **A Guide for Field-Workers in Folklore,** American Folklore Society, Hatbon, 1964.

விருத்தம், வாக்கியம், கீர்த்தனை, சண்டை, போர், யாகம், குறம், சிந்து, தூது எனப் பல்வேறு பெயர்களில் வழங்கப்பட்டன. வில்லுப்பாட்டு, கணியான் பாட்டு, லாவணிப்பாட்டு, உடுக்கைப் பாட்டு எனச் சில வடிவங்களில் பாடப்பட்டன. விடுதலைக்குப் பின்னும் இது தொடர்ந்தது.

*1950*இல் கொத்தமங்கலம் சுப்புவால் எழுதப்பட்ட காந்தி மகான் வில்லுப்பாட்டை என்.எஸ். கிருஷ்ணன் பாடிவந்தார். இதைப் போலவே ஜீவானந்தம், பாரதி, வ.உ.சி., காமராசர் போன்ற அரசியல் தலைவர்களையும் வில்லுப்பாட்டில் வைத்துப் பாடத் தொடங்கினர். இராமாயணம், பாரதம், புராணம், சிலப்பதிகாரம், பெரியபுராணம் போன்றவற்றிலுள்ள கதைகளையும் வில்லடித்துப் பாடினர். கோவில் அல்லாத மேடைகளிலும் வீதிகளிலும் பாடிவந்தனர். அதில் விடுதலைப் போராட்ட வீரத் தலைவர்களின் வரலாறுகளையும் சமுதாயத் தலைவர்களையும் பற்றிப் பாடினர். இது இந்திய விடுதலைக்குப் பின் ஏற்பட்ட மாற்றங்களாகும்.

தமிழகத்தில் *16* ஆம் நூற்றாண்டு முதல் கதைப்பாடல்களின் காலம் என்பர். பத்தொன்பதாம் நூற்றாண்டைப் பதிப்புக் காலம் என்றும் இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியை ஆய்வுக் காலம் என்றும் கூறலாம். அச்சு எந்திரங்களின் வருகையால் இவை அச்சிடப்பட்டு விற்பனை செய்யப்பட்ட போது வாசிக்கத் தெரிந்தவர்கள் வாங்கி மகிழ்ந்தனர். ஓலையில் ஊசலாடிக் கொண்டிருந்தவை தாள்களில் தவழ்ந்தன. வாய்மொழி இலக்கியத்துக்குக் கிடைத்த மறுவாழ்வு இது.

விற்பனை நோக்கில் வியாபாரமாகத் தொடங்கிய இப்பதிப்புப் பணி, பின்னர், வட்டாரப்பற்று, தேசபக்தி, தெய்வபக்தி, தமிழ்ப்பணி, சமூகப்பணி என்ற வகையில் விரிவுபடுத்தப்பட்டது. எனவே இருபதாம் நூற்றாண்டின் இறுதியில் ஏராளமான கதைப்பாடல்கள் வெளியிடப்பட்டன.

குஜலிக் கடை பதிப்புகள், பவானந்தம்பிள்ளை, பூமகள், திருமகள், ஸ்ரீமகள், மனோன்மணி விலாசம், ஆர்.ஜி.பதி, ந. இரத்தின நாயக்கர் & சன்ஸ், சங்கு ஆகியோர் கதைப்பாடல்களை வணிக நோக்கிலேயே பதிப்பித்தனர். நியூஸ் பிரிண்ட் தாளில், பெரிய எழுத்தில், ஆப்டோன் ஜதீகப் படங்களுடன், விளம்பரங்களோடு செய்தனர். *1947*க்குப் பிறகு இந்த வணிகம் அதிகரித்தது. குறைந்த விலையில் திருவிழாக் காலங்களில் தெருவில் விரிக்கப்பட்டது.

பெரிய எழுத்தில் அச்சிட்டதற்குக் காரணங்கள் உள்ளன. அன்று அகல் விளக்கில் படிக்க வசதியாகும். பெரிய இதிகாசங்கள், பெரிய எழுத்து, பெரிய படிப்பு, பெருமைக்குரிய வாசிப்பு எனக் கருதினர். எனவே பெரிய எழுத்து நூல்கள் என்று அழைக்கப்பட்டன.

பொதுவாகக் கதைப்பாடல்களைப் படிப்பது என்பது கோவில்களில் வழக்கம். புதுவை, காரைக்கால் பகுதிகளில் காத்தவராயன் கோவில்களிலும்

ஆர்க்காடு மாவட்டங்களில் திரௌபதை கோவில்களில் பாரதக் கதைகளையும், மார்க்கண்டேயர் கோவிலில் இராமாயணக் கதைகளையும், ஜக்கம்மாள் கோவில்களில் நெல்லை கட்டபொம்மன் கதையையும், நெல்லை, குமரி மாவட்டங்களில் கோவில் கொடை விழாக்களிலும் கதைப் பாடல்களைப் பாடிவருகின்றனர். கோவிலைத் தவிர வீடுகளிலும் ஊர்ப் பொதுவிலும் முறையே அம்மை நோய்க்காக மாரியம்மன் கதையையும் மழைக்காக விராட பர்வமும் பாடுவர். ஏகாதசி, நவராத்திரி போன்ற பண்டிகை நாட்களில் இரவு முழுவதும் கதைப்பாடல்கள் பாடுவர்.

குமரி மாவட்ட பட்டசாலியன்விளை பெருமாள்சாமி கோயிலில் சித்திரை விழாவில் சோதிடம் பார்க்கக் கதைப்பாடல் ஓலைச் சுவடிகளைப் பயன்படுத்தினர். அதாவது சுவடிகளுக்குள் நூல் கயிற்றைப் போட, பூசாரி ஓலையில் உள்ளதை வாசித்துப் பலன் சொல்லுவார். குழந்தைப்பேறு போன்ற நன்மைகளுக்காகப் பலர் இதனை நம்புகின்றனர் என்பார் தி. நடராசன்.

கதைப்பாடல்களைப் படித்தாலேயே பலன் கிடைக்கும் என்றும் மக்கள் நம்பினர். 'இம் மதுரைவீரஅம்மானையைப் படித்தவர்களுக்கும் கேட்டவர் களுக்கும் சுக்கிர வாரந்தோறும் பூசை செய்பவர்களுக்கும் கலியாணம் கூடிவரும். உத்தியோகம் வரும். வியாதியால் மெலிகின்றவர்களுக்கு வியாதி நீங்கிவிடும். மனோ கவலை நீங்கும். சகல பாக்கியமும் சந்தான சம்பத்தும் அஷ்ட ஐஸ்வர்யமும் தனகனக வஸ்துவும் தீர்க்காயுசும் புத்திர சம்பத்தும் மாடுகள் கன்றுகள் தழைத்துப் பயிர்கள் நீஷிமை யோங்கி எப்பொழுதும் அழிவில்லா பெருமை உண்டாகும். காசிக் காண்டத்தில் வியாசரால் சொல்லிய கவிகள் இருந்தன. இக்கதைக்காக மொழிபெயர்த்து அருளியது சுபம்! சுபம்!' என்று புத்தகத்திலேயே அச்சிட்டனர்.

விடுதலைக்குப் பின்னரும் கதைப்பாடலைப் புனிதமாகக் கருதும் போக்கு வளர்ந்தது. இன்று வரை பல்வேறு இடங்களில் இது தொடர்ந்து வருகிறது.

வியாபாரிகளைத் தவிர்த்த பதிப்பாளர்கள் தன் நூலிலேயே தமது நோக்கங்களை விளக்கிச் சொல்லியுள்ளனர். வில்லிசை கலைஞர்கள் பயில்வதற்கு உதவியாகவும் நாட்டுப்புற வழிபாட்டினர் படிப்பதற்காகவும் வெளியிட்டனர். இவை மலிவாக இருப்பினும் இவற்றில் அச்சுப் பிழைகள் மிகுதி. நா. வானமாமலை பதிப்புகளில் மூல ஏடுகள் பலவற்றைக் கூட்டிக் குறைத்தது (எடிட்) குறை என்பர். ஆனால் வரலாற்று நூல்களை ஆராய்ந்து ஆய்வுரையும் கடினமான சொற்களுக்குப் பொருளும் தந்தார். இவரது நோக்கம் சமூக மாற்றத்துக்கு உதவுவதுதான்.

அகத்தீசுவரம் குமாரசாமி நாடார் குமாரர். ஆறுமுகப் பெருமாள் நாடார் தான் பதிப்பித்த நூல்களில் மருத்துவக் குறிப்புகளையும் அச்சிட்டார். காரணம் இவர் ஒரு வைத்தியர். 'எமது முன்னோரால் எழுதி ஏட்டுப் பிரதியில் இருந்ததைப் பல பெரியோர்களின் வேண்டுகோளுக்கிணங்க

அச்சானது' என்று குறிப்பிடுவார். 'இதனை வாங்கி வில்லில் பாடி என்னை ஊக்குவிக்கும்படிக் கேட்டுக் கொள்கிறேன்' என்பார். 'ஊக்கம்' பற்றிய தெளிவில்லை.

பல்கலைக்கழகங்களும் கதைப்பாடல்களை வெளியிடுவதில் ஆர்வம் கொண்டன. இவற்றில் சென்னை, திருவனந்தபுரம், மதுரை போன்றவை குறிப்பிடத்தக்கவை. வையாபுரிப்பிள்ளைப் பதிப்பித்ததைச் சென்னை பல்கலைக்கழகமும் நா.வா. பதிப்பித்ததை மதுரை பல்கலைக்கழகமும் சிறப்பாக வெளியிட்டன. பேரா. நா.வா., 'இப்பணி தமிழ்நாட்டுப் பாடல் துறைக்குச் செய்திருக்கும் நற்பணி' என்றும் குறிப்பிடுவார். இது நாட்டுப்புறவியல் துறைக்கான தொண்டு என்பது இவர் கருத்து.

சக்திக்கனலின் **அண்ணமார் சுவாமி கதை** *(1971)* பதிப்பு குறிப்பிடத் தக்கது. பாடகன் உடுக்கை அடித்துப் பாடுவதும் இதைக் கேட்டு மக்கள் நெஞ்சுருகி நிற்பதும் இந்த இலக்கியத்தின்மீது கொங்கு நாட்டு மக்களுக்குள்ள ஈடுபாட்டைக் காட்டுவதுடன் கொங்கு நாட்டு மண்ணில் இன்றும் வழக்கமாக இருந்துவருகின்றது. கொங்கு நாட்டு வேளாளர் பண்பாடு, அவர்கள் வெள்ளை உள்ளம், உண்மைக்காக உயிர்கொடுக்கும் பண்பு இவை கதை முழுவதும் பின்னிப் பிணைந்து கிடக்கின்றன என்பார். எனவே இவருக்கு இப்பணி ஒரு பண்பாட்டுத் தொண்டானது. அத்துடன் குலதெய்வத் தொண்டு. இவ்வெளியீட்டுக்குக் கல்வெட்டுப் பாளையம் கவுண்டர்கள் நிதி உதவி செய்தனர்.

தி. நடராசன் *1977* முதல் பத்து கதைப்பாடல்களைப் பதிப்பித்துள்ளார். 'பலரும் அறிதல் வேண்டும்', 'இது அச்சேறுவதால் மேலும் பல வரலாற்று நிகழ்ச்சியைக் கொண்ட ஏட்டுச் சுவடிகள் வெளி வரலாம் எனக் கருதுகிறேன்' என்பார். இவருக்குத் 'துறை' அக்கறை மிகுதி. இவரது அயோத்திக் கதைக்குத் தமிழண்ணல் எழுதிய முன்னுரையில், 'வாய்மொழி இலக்கிய ஆராய்ச்சிக்கு மிகவும் உதவும்' என்பார். 'மொழிவரலாற்றைப் புரிந்து கொள்ள· இது பெரிதும் துணை செய்ய வல்லது. தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கும் பெரிதும் ஆக்கம் தர வல்லது' என்பார் நீதிவாணன்.

**வன்னிராசன் கதை**யைப் பதிப்பித்த லாரன்ஸ் நாயகம் *(1977)*, 'இது நாட்டுப்புற இலக்கிய ஆய்வை வளர்க்கும் ஒரு சீரிய பணியாகும்' என்பார். ஏறக்குறைய *10* கதைப்பாடல்கள் பதிப்பித்துள்ளார், *1982* முதல். 'இவற்றின் வழியாகத் தமிழுக்கும் தமிழ் மக்களுக்கும் தூர்ந்து போன பல உண்மைகள் அறிய கிடைக்கின்றன. வரலாறு, சமயம், சமூகம் போன்றவற்றைப் பற்றிய பல அரிய செய்திகளை அறிய கூடியவைகளாக உள்ளன' என்பார். இவர் 'தமிழ் அன்னையின் மலரடிகளில் பணிவுடன் படைக்கப்படுகிறது' என்று கூறி இதனைத் தமிழ்ப் பணியாக்குகிறார்.

**முத்தாரம்மன் கதை**யை *1995*இல் பதிப்பித்த சு. நிர்மலாதேவி, 'கதைப்பாடல்கள் வரலாற்று நிலையைத் தெளிவுபடுத்துவதில் முக்கிய

பங்கு வகிக்கின்றன' என்பார். **குசலவர் சுவாமி கதை**யை இதே ஆண்டில் பதிப்பித்த இரா. வசுமதி, 'பழமை வாய்ந்த ஓலைச்சுவடிகளும் தாள் சுவடிகளும் நம்முடைய பாரம்பரியப் பொருள்களாகும்' என்பார்.

**சந்தனத்தேவன் கதைப்பாடலை**த் தொகுத்த ஓ. முத்தையா, 'நவீன மக்கள் தொடர்பு சாதனங்களால் பண்பாட்டு எச்சங்களான மரபுக் கலைகளும் கதைப் பாடல் வடிவங்களும் பார்ப்பாரும் கேட்பாரும் இன்றி மங்கி மறைந்து வருகின்றன. காலங்கடந்துவரும் பண்பாட்டு மரபுகளைப் பாதுகாத்து வளர்க்கும் மிகப் பெரிய பொறுப்பு நிகழ்காலச் சந்ததியினருக்கு உண்டு. கதைப்பாடல்களைச் சேகரித்துப் பாதுகாப்பது நமது கடமையாகும்' என்றார்.

ஆ. தசரதன் *(1992)* பத்துக்கும் மேற்பட்ட கதைப் பாடல்களைப் பதிப்பித்துள்ளார். இவருக்குச் சின்ன வயதிலேயே மாரியம்மன் கதையை அச்சிட்டு வெளியிட வேண்டும் என்ற எண்ணம் இருந்தது. இதைப் பற்றிச் சொல்லும்போது, 'எங்கள் குடும்பக் கோயில் கொடை விழாவின்போது, எனக்கு ஓர் அருள்வாக்குக் கிடைத்தது. சாமியாடியவர், நீதானப்பா பெரிய படிப்பு படிக்கப் போகிறாய் என்று சொல்லித் திருநீறு பூசி ஆசி கூறினார். பல ஆண்டுகளாக மறக்க முடியாத அச்செய்தி இப்போது பலித்துவிட்டது' என்றார். 'தமிழகத்தின் புராதன, கிராமியக் கதைகளிலும் நாட்டுப்புறப் பாடல்களிலும் உள்ள சிறப்புகளை இன்றைய தமிழ் மக்கள் அறிந்து கொண்டு பெருமிதம் அடைய வேண்டும் என்றும் *(ஆதித்தனார்)* விரும்பினார். பாமர மக்களிடம் பக்தி உணர்வை வளர்க்க வேண்டும் என்றும் விரும்புகிறார்' என்பார் பா. இராமச்சந்திர ஆதித்தனார்.

*1983*இல் கட்டபொம்மன் கும்மிப்பாடலை வெளியிட்ட பாளை மாநிலத் தமிழ்ச் சங்கத் தலைவர், 'கட்டபொம்மன் ஊமைத்துரை வெள்ளையத் தேவன் சுந்தரலிங்கம் போன்ற நாட்டுப்பற்று மிக்க வீரர்களைப் போல் நம் இளைஞர்களும் விளங்க வேண்டும். அவ்வுணர்வினை இத்தகைய கதைப் பாடல்கள் நிச்சயமாக ஊட்ட வல்லன' என்றார். இதைப் பதிப்பித்த மாணிக்கம், 'ஓலைச் சுவடியிலேயே இருந்தால் வைத்திருப்பவர் மட்டுமே படிக்க முடியும். அது மட்டுமன்றி, காலப்போக்கில் சிதைந்து அழியும். இதனை நூலாக வெளியிட்டது தமிழன்னைக்குப் புதியதொரு அணிகலம்' என்பார். இதில் தேசப்பற்றும் தமிழ்ப்பற்றும் அடங்கியுள்ளன.

*1987* முதல் மூன்று கதைப்பாடல்களைப் பதிப்பித்த சிவ. விவேகானந்தன், 'இந்நூல் தமிழன்பர்களுக்கு மிகவும் பயனுடையதாக அமையும்' என்பார்.

*1988*இல் நகர்சார் நாட்டுப்புறக் கதைப்பாடல்களை வெளியிட்டவர் கே.ஏ. குணசேகரன். '*1947*க்குப் பின் உருவாகியுள்ள இவ்வகைப் பாடல்களில் போர்க்குணம் கொண்ட கதாநாயகர்கள் ஒடுக்கப்பட்ட சமூகங்களிலிருந்து உருவாகிடக் காரணங்கள் கண்டறியும் பட்சத்தில் இந்தச் சமூக அமைப்பில்

இவ்விதமான கதாநாயகர்கள் உருவானமை ஆச்சரியப்படுவதற்கில்லை. மணிக்குறவன் கருவாய்த் தேவன், மைக்கேலம்மா, முத்து ராமலிங்கத்தேவர் ஆகியோர் ஒடுக்கப்பட்ட சாதியினர். அதிகார வர்க்கத்துடன் பகையுணர்வு கொண்டவர்கள்'. எனவே சமூகப் போராட்டங்களுக்கு இக்கதைப்பாடல் தூண்டுகோல்கள்.

செங்கோ வரதராசன் *1988*இல் மேற்கு தமிழகக் கதைப் பாடல்களை வெளியிட்டார். ஸ்டீபன் சாம் *1991*இல் **நீலோடு நீலம் பொருந்திய நீல மங்கரசியாள் கதை**யின் முன்னுரையில் 'மொழியின் தொன்மை அழியாமல் இவற்றால் பாதுகாக்கப்படும்' என்பார். ச. முருகானந்தம் மூன்று கதைப்பாடல்களை *1991*இல் வெளியிட்டார். இவை ஒலிப்பதிவு நாடா மூலம் தொகுக்கப்பட்டவை. 'தமிழ் உலகம் தன்னைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்' என்பார் முன்னுரையில்.

*1992*இல் முத்துப்பிள்ளைக் கதைப்பாடலைப் பதிப்பித்த சு. தங்கத் துரை 'புனிதத்தன்மை மாறாமல் பதிப்பிக்க' வேண்டும் என்றார். அதோடு, 'இக்காலம் மறைந்து கிடக்கும் கலாச்சாரங்களை வெளிக் கொண்டு வந்து அதன் மூலம் நாட்டின் முன்னேற்றத்திற்கு உதவியாக இருக்குமா என்று ஆராய்ந்து கொண்டிருக்கும் காலம்' என்று சிதம்பரநாடார் கதை முன்னுரையில் கூறினார்.

*1992*இல் **புலமாடன் கதைப்பாடலைச்** சு. சக்திவேல் பதிப்பித்தார். அதன் முன்னுரையில், 'இது தமிழகப் பண்பாட்டு வரலாற்றை மீட்டுருவாக்கம் செய்யப் பெரிதும் பயன்படும்' என்றார்.

இவ்வாறு பல்வேறு நோக்கங்களுடன் கதைப்பாடல்கள் தமிழில் பதிப்பிக்கப்பட்டன. மிக முக்கியமானது வட்டாரப்பற்று.

நெல்லை மாவட்டத்தைச் சேர்ந்த நான் வட்டாரப்பற்று காரணமாகவே நெல்லைக் கதைப்பாடல்களைப் பதிப்பிக்க விரும்பினேன். *1974*இல் **ஈனமுத்து பாண்டியன் கதை**யை வெளியிட்ட நான் தொடர்ந்து மெச்சும் **பெருமாள் பாண்டியன் கதை, சுடலைமாடன் கதை, பாலம்மாள் கதை, சிவராமப் பாண்டியன் கதை** ஆகியவற்றை வெளியிட்டேன். திக்கெலாம் புகழும் திருநெல்வேலிக்கு இதன் மூலமும் புகழ் வரவேண்டும் என்று ஆசைப்பட்டேன்.

எனக்கு முன்னர் பேரா.நா.வா. **கட்டபொம்மன்** பற்றிய 3 **கதைப் பாடல்களை** மதுரைப் பல்கலைக்கழகம் மூலம் பதிப்பித்தார். **ஐவர் ராசாக்கள் கதை**யையும் **வீணாதி வீணன் கதை**யையும் நா.வா.வே வெளியிட்டார். **ஜம்புலிங்கம் கதைப் பாடலை மலையருவி** மூலம் கி.வா.ஜ. வெளியிட்டார். ச. முருகானந்தம் **சூரவல்லி மாதரவல்லி, மன்னான் சின்னாண்டித் தேவர், அழகுத் தேவர்** ஆகிய *3* கதைப் பாடல்களைப் பதிப்பித்தார். இதைத் தவிர ஆ. சிவசுப்பிரமணியன் **பூச்சியம்மன் வில்லுப்பாட்டையும்,**

ஒ. முத்தையா **பூலித்தேவன் கதைப்பாடலையும்** பதிப்பித்தனர். கழனியூரன் இசுலாமிய சமூகத்திலுள்ள **பக்கிரி ஷாக்களின் கதைப்பாடல்கள்** ஐந்தினை வெளியிட்டார். இத்தோடு, **வன்னியடி மறவன், வன்னிராசன் கதை, சிவகாசி கலகம், சின்ன நாடான், சின்ன தம்பி, சேர்வைக்காரன்** போன்ற கதைப்பாடல்களும் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

குமரி மாவட்டம் கதைப்பாடல்களுக்கான களஞ்சியம் என்று சொல்லலாம். சோபிதத்திடம் 'நீங்கள் ஏன் குமரி மாவட்டம் தொடர்புடைய நூல்களையே வெளியிடுகிறீர்கள்?' என்று கேட்டபோது, 'நான் பிறந்து வளர்ந்த மண்ணில் பல்வேறு கலைச் செல்வங்கள், ஆய்வுக்கு ஆதாரமான கல்வெட்டுக்கள்... மண்ணின் புகழ்பாடும் இலக்கியங்களை வெளியிடுவதே என் கடமையாகக் கருதுகிறேன். எம்மாவட்டத்தின் அரிய செல்வமாம் பனை ஓலைச் சுவடிகள் பல ஆய்வாளர்களாலும் நிறுவனங்களாலும் கவர்ந்து செல்லப்படுகையில் சிலவற்றையேனும் பாதுகாக்க வேண்டுமெனும் அவா. பழம்பெரும் கலைகளில் ஒன்றான வில்லுப்பாட்டு மீண்டும் உயர்வும் சிறப்பும் பெற இவ்வெளியீடு துணை நிற்கும்' என்றார்.

*1978*இல் குமரி மாவட்ட வில்லுப்பாட்டுக்காரர்கள் ஈசாக்கும், கண்ணஞ்சேரி சங்கர நாராயணனும் தந்த **நீலிக்கதை** கையெழுத்துப் பிரதியைக் கொடுமுடி சண்முகம், மற்றும் பூம்புகார் பிரசுரம் மூலம் இரு பதிப்புகள் வெளியிட்டேன். காரணம் குமரி மாவட்டம் என் மனைவியின் மாவட்டம். அப்படியொரு பந்தம்.

தி. நடராசன், ஆறுமுகப் பெருமாள் நாடார், சிவ. விவேகானந்தன், ஆ. தசரதன், ஏ.என். பெருமாள், அ.கா. பெருமாள், ஸ்டீபன் சாம் போன்றோர் குமரி மாவட்டக் கதைப்பாடல்களைப் பதிப்பித்துள்ளனர்.

**பொன்னிறத்தாள், கௌதலமாடன், சின்னான், மருதநாயகம் பிள்ளை, வெங்கலராசன், வெள்ளைக்காரன், சின்ன நாடான், சின்னணஞ்சி, திவான் வெற்றி, சாத்தா வரலாறு, முத்தாரம்மன், தக்கராஜன், பார்வதி அம்மன், மார்க்கண்ட தவசு, பெருமாள் சாமி, கிருஷ்ணசாமி, தோட்டுக்காரி, பிச்சைக்காவலன், சிதம்பரநாடன், பூலங்கொண்டாள், உடையார், தம்பிமார், முப்புராதி, ஸ்ரீபத்மநாப சுவாமி, கம்சன், அய்யனார், பிரம்ம சக்தி அம்மன், செங்கிடாக்கிரன், நீலோடு நீலம் பொருந்திய நீல மங்கரசியாள் கதை, முத்துப்பிள்ளை, பலவேசஞ் சேர்வைக்காரர்** போன்ற கதைப்பாடல்கள் குமரி மாவட்டத்துக்குரியவை.

கொங்கு நாட்டில் பிரபலமான கதைப்பாடல் **அண்ணமார் சுவாமிக்கதை**. இது பல்வேறு வடிவங்களில் வெளியிடப்பட்டுள்ளன. சக்திவேல், தூரன், பெரியணக்கவுண்டர், அருணாசலக் கவுண்டர் ஆகியோருக்கு இதில் ஈடுபாடு மிகுதி. செங்கோ வரதராசன் *1988*இல் **நுலையக்காள், மாராள்** எனும் தமிழ்க்கதைப்பாடல்களையும், ஏழு கன்னடக் கதைப்பாடல்களையும் வெளியிட்டுள்ளார். 'கொங்கு நாட்டில் தமிழ்,

தெலுங்கு, கன்னட மொழிகளில் பல கதைப்பாடல்கள் பழங்குடி மக்களிடையேயும் அவர்களுடைய மொழியிலும் உள்ளன' என்றார். **வெள்ளையம்மன் வரலாறு** என்ற கதைப்பாடலை *1990*இல் எம். துரைசாமி பதிப்பித்துள்ளார். இது கொங்கு வேளாளர் இல்லந்தோறும் பாதுகாத்துப் படிக்க வேண்டியது என்பார், செ. இராசு. இதைத் தவிர **ஒலெயக்காள், மாராள், மம்முட்டியான், சின்னமலை** ஆகியோரைப் பற்றிய கதைப் பாடல்களும் உள்ளன.

முகவை அதாவது இராமநாதபுரம் மாவட்டத்தில் **சிவகங்கை சரித்திரக் கும்மி, மருதுபாண்டி, புதுக்கோட்டை சண்டை, நல்லதங்காள்** போன்ற கதைப்பாடல்கள் பிரபலம். கே.ஏ. குணசேகரன் *11* நகர்சார் நாட்டுப் புறக்கதைப்பாடல்களை வெளியிட்டார். **கருவாய்த்தேவன், மணிக்குறவன், அரியலூர் ரயில் விபத்து, மைக்கேலம்மாள், முத்து ராமலிங்கத் தேவர், தனுஷ்கோடி அழிந்தது, சரஸ்வதி பள்ளிக்கூடம், கோனார், வைகை வெள்ளத்துயர், ஸ்கைலேப், பஞ்சு மில்** என்பவை அக்கதைப்பாடல்கள் ஆகும்.

மதுரை மாவட்டத்தைச் சார்ந்து **மதுரை வீரன் கதை, கான் சாகிபு கதை, இராமப்பய்யன் அம்மானை, இரவிக்குட்டிப் பிள்ளைப் போர்** போன்ற கதைப்பாடல்கள் வழங்கி வருகின்றன. இவற்றைப் பதிப்பித்தவர்கள் வையாபுரிப்பிள்ளை, நா. வானமாமலை ஆகியோராகும்.

திருச்சி மாவட்டத்தில் **கள்ளழகர் அம்மானை, காத்தவராயன் கதை** இரண்டும் பிரபலம். கள்ளழகர் கதை பெரிய எழுத்துப் பதிப்பாகும். காத்தவராயன் கதையை நா.வா. பதிப்பித்துள்ளார்.

ஆர்க்காடு மாவட்டத்தில் **தேசிங்கு ராஜன் கதை, சின்னண்ணன் கதை, பாரதக் கதைப்பாடல்கள்** போன்றவை அச்சாகியுள்ளன.

## 3

'தமிழ் மொழிக்கும் பண்பாட்டுக்கும் ஊறு நேரும்போது தமிழ் உணர்வையும் பண்பாட்டையும் நாட்டுப்புற மக்களிடையே பாதுகாத்தும் வளர்த்தும் வந்துள்ளன என்பதை இன்று உணரத் தொடங்கியிருக்கிறோம். இனிவரும் தமிழகம் அனைத்துத் தமிழர்களையும் அணைத்தும் இணைத்தும் செல்கின்ற உணர்வை வளர்க்க வேண்டிய கட்டாயத்தில் இருக்கின்றது. இந்த நிலையில் அனைத்து மக்களின் வட்டார மொழிகள், இலக்கியங்கள், கலைகள், பண்பாடுகள் ஆகியவற்றைப் போற்றி வளர்க்கின்ற வழி முறைகளைத் தேர்ந்து காண வேண்டும்' என்பார் இராம. சண்முகம், **அயோத்தி கதை** முன்னுரையில். இதற்கு ஒரே வழி தமிழ் நாட்டுப்புறவியல் ஆய்வு வழியேதான் கிடைக்கும்.

விடுதலைக்குப்பின் கதைப்பாடல்கள் மீது பல்வேறு வகையான ஆய்வுகள் நிகழ்ந்தன. நாட்டுப்புறவியல் தமிழ்நாட்டில் ஐம்பதுகளில் முகிழ்த்து

அறுபதுகளில் அரும்பு விட்டு எழுபதுகளில் போதாகி எண்பதுகளில் மலராகி மணம் பரப்புகிறது. ஐம்பது ஆண்டுகளாக இத்துறை பற்றிய சிந்தனை இருந்தாலும் இச்சிந்தனையில் தொடர்ச்சி இல்லை. ஆய்வுகள் ஆங்காங்கே தீவுகளாகவும் திட்டுகளாகவும் நின்றன. அண்மைக்காலமாகத் தான் அவற்றை ஒருங்கிணைத்துச் செல்லும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாகத்தான் நாட்டுப்புறவியல் ஆய்வு வீறு கொண்டுள்ளது. ஆய்வுகளிலும் மதிப்பு ஏற்பட்டதுடன் பல்கலைக் கழகங்களில் பாடப் பொருளாய் ஆய்வுப் பொருளாய் ஏற்றுக் கொள்ளப் பட்டுள்ளது. தனித்துறையாகவும் வளர்ச்சி பெற்றுள்ளது என்னும் சு. சக்திவேல் குறிப்பு (புலமாடன் கதைப்பாடல் முன்னுரை) பொருந்தும்.

நாட்டுப்புறவியல் வரலாற்றைச் சேகரிப்புக் காலம் *(1871-1959)*, ஆய்வின் தொடக்கக் காலம் *(1960-1969)*, ஆய்வுகளின் வளர்ச்சிக் காலம் *(1970-2000)* என்று பகுப்பர். விடுதலைக்குப் பின்னர் ஆய்வுக் காலம் என்றே சுட்டலாம்.

பேரா. நா.வா. மார்க்சிய அணுகுமுறைக்கு முக்கியத்துவம் கொடுத்தார். **முத்துப்பட்டன், சின்னத்தம்பி, சின்ன நாடான், வன்னியராயன், தடிவீரன், முத்துவீரன், அணைஞ்சி** போன்ற கதைப் பாடல்களில் நில பிரபுத்துவ எதிர்ப்புச் சாரத்தைப் புரிந்து கொள்ளலாம் என்பார். வில்லடித்துப் பாடும் சின்னத்தம்பி, தமிழ்நாட்டு உழைக்கும் மக்களின் கண்ணோட்டத்தில் கற்பனையை ஓடவிட்டு அதற்கேற்ப பின்னப்படுவதே கதைப்பாடல்கள். சாதி அடக்கு முறை, கலப்பு மணமும் அதன் விளைவுகளும், தந்தை வழிக்கூட்டுக் குடும்ப அமைப்பில் பெண்படும் துன்பம், சுரண்டலுக்கு ஆட்பட்ட விவசாயி வேலையின்மையாலும் அதன் விளைவுகளாலும் கொள்ளைக்காரனாக மாறுதல் போன்றவை சமூகக்கதைப் பாடல்களில் அடிக்கருத்தாக எவ்வாறு அமைந்துள்ளன என்பதை ஆராய்ந்தார். தமிழ்க் கதைப்பாடல்களில் பெரும்பாலானவை சோகமாக முடிகின்றன. அதற்கான காரணங்களை இவர் சமூகவியல் கண்ணோட்டத்துடன் அணுகியுள்ளார். நா.வா. ஒரு வரலாற்றுப் பொருள் முதல்வாதியாகையால் இவரது ஆய்வுகள் வரலாற்றுப் பொருள்முதல் வாத அடிப்படையில் அமைந்துள்ளன.

இவர் வழியில் ஆ. சிவசுப்பிரமணியன் **பூச்சியம்மன் வில்லுப்பாட்டை** ஆய்ந்தார்.

சமூகவியல் ஆய்வுகள் சில தமிழ்க் கதைப்பாடல்களில் நிகழ்ந்தன. மார்க்சியரான கோ. கேசவனின் **கதைப்பாடல்களும் சமூகமும்** என்ற நூல் இத்தகையது. ஏ.என். பெருமாள் (தமிழில் கதைப்பாடல்கள்) திருமாவளவன் (கதைப்பாடல்களில் சாதிச் சிக்கல்), சரளா ராசகோபாலன் (நாட்டுப்புறக் கதைப் பாடல்களில் கலப்பு மணம்), ப. குழந்தைசாமி (அண்ணமார்சாமி கதை காட்டும் நம்பிக்கைகள்) ஆறு. இராமநாதன் (தேசிங்கு ராசன் கதைப்பாடல்கள் காட்டும் இந்து முசுலீம் உறவு நிலை),

சண்முக சுந்தரம் *(பாலம்மாள் கதைப்பாடலில் பாலியல் வன்முறையும் சாதீய அமைப்பும்)*, சு. சக்திவேல் *(கதைப்பாடல்களில் மேல்நிலை யாக்கம்)*, நா. இராமச்சந்திரன் *(சமூகக் கதைப்பாடல்கள்)* ஆகியோரின் ஆய்வுகள் குறிப்பிடத்தக்கவை.

மானிடவியல் ஆய்வுகளில் கோ. கேசவனின் நூல் குறிப்பிடத்தக்கது. அல்லியும் பவளக்கொடியும் கொடிகளில் உதித்தவர்கள். இவை இரண்டும் புராதனக் கால இனக்குழுக் குறியீடுகள் (Totemic Symbols) என்று ஆய்கிறார். என்னால் **சுடலை மாடன் கதைப் பாடலைச்** சமூக மானிடவியல் கோட்பாட்டின் அடிப்படையில் ஆராய முடிந்தது.

வரலாற்று அணுகுமுறையிலும் சில ஆய்வுகள் நிகழ்ந்தன. நா.வா. குறிப்பிடத்தக்கவர். *(1)* கன்னடிய மன்னர்களுக்கும் பாண்டிய அரசு மதுரையிலிருந்து அகன்ற பின் தென்தமிழ் நாட்டில் பரவிய பாண்டியச் சிற்றரசர்களுக்கும் நடைபெற்ற போர்களின் நடை காலம் *(2)* மதுரை நாயக்கர்களுக்கும் இராமநாதபுரம் பாளையக்காரர்களுக்கும் நடைபெற்ற போர் *(3)* பிரிட்டிஷ் ஆட்சி தமிழகத்தின் தென்பகுதியில் பரவியதை எதிர்த்துப் பாளையக்காரர்களின் போர் என மூன்றாகப் பகுப்பார். ஆறு. இராமநாதன் **தேசிங்குராசன் கதைப் பாடலை** வரலாற்றுக் கண்ணோட்டத்தோடு ஆய்ந்துள்ளார். ச. முருகானந்தம் வரலாற்றின் அடிப்படையில் ஓர் ஆய்வு நூல் எழுதியுள்ளார்.

உளவியல் அணுகுமுறையில் கோ. கேசவன் **புராணச் சார்புக் கதைப்பாடல்கள்** எனும் நூலில் சில உண்மைகளை வெளிப்படுத்துகிறார். அல்லி போன்ற வகை மாதிரியான பாத்திரம் ஒரு கற்பனை எதார்த்தமே. பிராய்டிஸ் தொடரில் சொன்னால் ஒரு உளவியல் எதார்த்தமே (Psychological reality) என்பார். ஆண்பெண் உறவு நிலைகளையும் ஆராய்கிறார். இதையே இ. சேனாவரையன், **நீலாவதி நீலகண்டன் கதைப் பாடலில்** ஆளுமை கோட்பாட்டில் ஆய்வு செய்தார்.

அமைப்பியல் ஆய்வுமுறை பரவலாக, ஒரு ஃபாஷனாகியது. **பழையனூர் நீலிக்கதை**யையும் **கண்ணகி கதை**யையும் கே.பி.எஸ். ஹமீது முதலில் ஆய்ந்தார். ஆலன்டண்டிஸ் முறை இவருக்குக் கைகொடுத்தது. சரசுவதி வேணுகோபால் **மதுரைவீர சுவாமி கதை**யில் ஜன்டிவிரைஸின் அமைப்பியல் கோட்பாட்டைப் பயன்படுத்தி ஆய்வு செய்தார்.

வாய்மொழி வாய்ப்பாட்டுக் கோட்பாட்டை, தே. லூர்து, தமிழகக் கதைப்பாடல் சிலவற்றுக்குப் பொருத்திப் பார்த்தார். வரலாற்று நிலவியல் கோட்பாட்டினைப் பயன்படுத்தி ஆறு. இராமநாதன் **சின்னண்ணன் சின்னசாமி கதைப்பாடல்** *25* கதை வடிவங்களை எடுத்துச் சிறந்த ஆய்வு செய்துள்ளார்.

ஆக மொத்தத்தில் ஆய்வுகள் இரண்டு வகைப்பட்டன. ஒன்று, ஆய்வுக்காக ஆய்வு. இரண்டு, சமூகத்துக்காக ஆய்வு - ஆய்வுக்காக ஆய்வு என்பது பட்டம் பெற உதவலாம்; பதவி பெற உதவலாம். மேனாட்டரின் கோட்பாடுகளை இறக்குமதி செய்ய, எல்லாம் தெரிந்த ஏகாம்பரமாக விளங்க உதவலாம். அதைவிடச் சமூகத்துக்காகத் தமிழ்ச் சமூகத்துக்காகச் செய்யப்படும் ஆய்வுகளே சிறந்தவை; தேவையானவை. நம் அடையாளங்களுக்கான மூலங்கள்.

# பெண்ணியக் கோட்பாடுகள்

தி. கமலி

விடுதலைக்கு முந்தைய இலக்கியப் போக்கு, விடுதலைக்குப் பிந்தைய - ஐம்பத்திரண்டு ஆண்டுகள் முடிவுற்று - இருபத்தொன்றாம் நூற்றாண்டில் அடியெடுத்து வைக்கும் இத்தருணத்தில் வேண்டிப்பெற்ற விடுதலைக்குப்பின் நாம் அடைந்தவை எவை? அடையவியலாது போனவை எவை என்று பரிசீலிப்பது முழுமையைத் தேடியும், ஓரளவு எளிதாக இருப்பதாலுமே ஆகும். காலனியாதிக்கத்தின் கீழ், பெற்ற அனுபவங்கள் இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் பெண்ணிய இயக்கத்தை வழிநடத்திக் கோட்பாடுகளை நெறிப்படுத்தின என்றால், சுதந்திர இந்தியாவின், மக்களால் மக்களுக்காக மக்களே தேர்ந்தெடுக்கும் அரசு, ஆட்சியமைப்பு போன்றவற்றின் தாக்கம், குறைகள் இவை, அகற்றும் நெறிகள், வழிகள் எவை என்று பரிசிலிக்கும் உந்துதல் சமகாலப் பெண்ணியத்தை வழி நடத்துகின்றன. அவ்வளவே! முந்தைக்கும் பிந்தைக்கும் எவ்விதத் தொடர்புமில்லை என்று பொருள் தராது. வேர்கள் முன்னதில் இருக்க, தொடர்ச்சியான வளர்ச்சியில்தான் வேறுபட்ட கோட்பாடுகளை, அணுகு முறைகளைக் காணவியலுமே அல்லது, தொடர்ச்சியே இல்லை என்று கூற முடியாது. தமிழ் இலக்கியத்தில் பதிவான பெண்ணிய சிந்தனை களுக்கும், முன் மொழியும் கோட்பாடுகளுக்கும் இதுவே பொருந்தும்.

பெண்களுக்கு எதிரான சமூகத்தீங்குகளை அகற்றி, பெண் கல்வி, வேலைவாய்ப்பு, பெண் வாழ்விற்குச் சட்டபூர்வ பாதுகாப்பு பெறுவது

விடுதலைக்கு முந்தைய இலக்குகளாக இருந்தன. சுதந்திர இந்திய அரசியல் சாசனம் ஆண் - பெண் பாலினருக்கிடையிலான சமத்துவத்தை உறுதி செய்ததைத் தொடர்ந்து, அச்சமத்துவத்தை நடைமுறைப்படுத்து வதற்கான அலைபாய்தலை இந்த வினாடி வரை எங்கும் காண முடிகிறது.

**எனக்குப் பிடிபடவில்லை ஓட்டம்**
**இப்பொழுதுதான்**
**மடியிலிருந்து இறங்கினாற் போலிருக்கிறது.**
**. . . . . . . . . . . . . . . . . . .**
**எவ்வளவுதூரம் போகவேண்டும் இன்னும்?**
**என்று பெண்ணாகப் பிறந்ததன் வலி,**
**ஏன் என்னால்**
**மடியில் கட்டிக்கொண்ட நெருப்பாக**
**போனபிறவியின் பாவப்பலனாக மட்டுமே**
**இருக்க முடிகிறது?**
**பூவாக புன்னகையாக உங்கள் ஆயுதம்**
**மாறும் காலம் வராதென்ற நம்பிக்கை உறுதிப்படுகிறது**
**ஒவ்வொரு நேரங்கழித்து வரும் மாலையிலும்**
**அபத்தமில்லையா, பெண்ணாக இருப்பது?**

பெண்ணாக வாழ்வதில் உள்ள இயலாமை, செயலற்ற தன்மை, பருவமுறுதலில் உணரும் மின்சார அதிர்ச்சி, ஆக்கிரமிக்கும் உடலுறவு தோற்றுவிக்கும் பாலியல் அச்சம், திருமணம் என்ற பெயரில் பெற்றோரால் அனுப்பப்பட்டுப் புதியோன் பின் செல்லும் மருட்சி, குடும்ப அமைப்பில் ஒத்திசையத் தன் முகம் தொலைத்துத் தன் வாழ்க்கை தன்னிடம் இல்லையென்ற யதார்த்தம் நெஞ்சைச் சுடும் அவலம் இலக்கியப் படைப்புகளில் பதிவு செய்யப்படுவது புத்தம்புது போக்காகும். தன்னைத் தேடிக் கண்டெடுக்கும் முயற்சியில் வெற்றிபெற்ற ஞானிகளது படைப்புகளை, பக்தி இலக்கியமாகக் கொண்ட ஆன்மீக இந்தியாவில், சுயத்தைத் தேடிக் கண்டடையத் துடிக்கும் பெண்ணின் குரல் அதிக அளவில் பதிவுகளாகி வரும் போக்கினை இன்றைய நிலையில் காணமுடிகிறது.

**வார்த்தையின்றியே உணர்த்த முடியும்**
**நிறைய . . . . . .**
**எதற்காக இதை எழுதுகிறேனென்று**
**எனக்கும் தெரியாது.**
**எனக்கு என்ன உரிமை இருக்கிறது?**
**நான் தனி**
**அருவம் மட்டும் போதும் எனக்கு**
**பெயர்கள் வேண்டாம்.**
**அவளோ இவளோ**
**என்ன வேற்றுமை கிடக்கிறது**

இன்னும் நிமிராமல்
எல்லோருமே
செக்கடியில் சுற்றிக்கொண்டிருக்கிறோமென்று
தெரிந்துவிட்ட பிறகு?

என்று, தன்னிலையை - சமூகத்தில் பெண் நிலையை - பெண்ணாக - பெண் உணர்வைப் பெண் வெளிப்படுத்துவது- தன்னியலாக வெளிப்படுத்துவது ஆரோக்கியமான போக்காகும்.

இந்தியாவில் எழுபதுகளின் பிற்பகுதியிலும், எண்பதுகளிலும், அனைத்துலக மகளிர் ஆண்டு - மகளிர் பத்தாண்டு தோற்றுவித்த பிரக்ஞையினாலும், இந்தியப் பாராளுமன்றத்தில் சமர்ப்பித்த, இந்தியப் பெண்டிர் நிலை, ஆய்வறிக்கையின் கண்டுபிடிப்புகள் ஏற்படுத்திய சமூகப்பண்பாட்டுக் கவலைகளினால் தோன்றிய பெண்ணிய விழிப்புணர்வுச் சூழலில் தமிழ் உலகின் இலக்கியப் படைப்புகளும், திறனாய்வுகளும் பல்வேறு சோதனைகட்கும், பரிசீலனைகட்கும் உட்படுத்தப்பட்டன.

அறுதியிட்டுக்கூறமுடியாத நாகரிக வரலாற்றின் சொல்லாடல்களைப் பழக்கப்பட்டுப்போன மனப்பான்மையின் பாரத்தை இறக்கிவைத்துவிட்டு மேற்கத்திய பெண்ணியச் சிந்தனைகள் தந்துள்ளவற்றில் பொருத்தமான சில கருவிகளைக் கொண்டு மறுபொருள் கோடல் செய்யும் போக்கும், ஆதிக்க சக்தியின் நலன்களை நிலைக்கச் செய்யும் நோக்குடன், பெண் ஒடுக்கு முறைக்கான கருத்தியல் கருவிகளாகவே இலக்கியங்கள் செயல்பட்டு வந்திருப்பதைப் பரிசீலிக்கும் நோக்கும் உருவாகியுள்ளன.

'திருமாலே தன் கணவன்' என்று சிறுவயதில் இருந்து சங்கற்பம் செய்து கொண்ட ஆண்டாளின் பாடல்கள், 'மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்' என்று உறுதி கூறி, திருமாலை அடைய முடியாவிட்டால் தன் கொங்கையை வேரோடு அள்ளிப் பறித்து அவன் மார்பில் எறிந்து தன் விரகத் தீயை அணைக்கப் போவதாகக் கூறும் கூற்று, 'தமிழிலக்கியத்தில் முதன்முதலில் பதிவாகியுள்ள பெண்ணிய மொழி' என்று பேராசிரியர் மீனாட்சி முருகரத்தினம் கூறுவார்கள். 'துளசி மாடத்தின்கீழ் கண்டெடுக்கப்பட்டதான தோற்றம், திருமாலையே மணமுடித்துக் கணப்பொழுதிற்குள் மறைந்த முடிவு முதலியன பெரியாழ்வாரால் பெற்றெடுக்கப்படாத - வளர்ப்பு மகளான ஆண்டாள் தேவதாசி போன்ற தொரு இனத்தினளாக இருத்தல் வேண்டும்; அப்பெண்ணுக்கு மண முடிப்பது இயலாததொரு சூழல் இருந்திருக்க வேண்டும்' என்று ராஜம் கிருஷ்ணன் அவர்கள் கூறுவர்கள். 'ஓர் ஆணால் கற்பனை செய்யவியலாத பிராந்தியங்களில் சஞ்சாரம் செய்யும் ஆண்டாள் பாடல்கள் ஆண்டாள் என்ற பெண்ணால் பாடப்பட்டிருக்கும் பட்சத்தில் ஒன்றை உறுதிப்படச் சொல்லலாம். இவற்றில் குமுறும் உணர்வு சோகம்தான். பெண் குலத்தின் ஒடுக்கப்பட்ட பாலியலின் தவிர்க்கவியலாச் சோகம் இது. ஒடுக்கப்பட்ட

பெண்கள், மணம் செய்யவியலாத பெண்கள், விதவைகள், அலிகள், இன்னும் வெவ்வேறு தளங்களில் ஒடுக்கப்பட்டவர்கள் அனைவர்க்கும் இந்தச் சோகம் பொதுவானது' என்று ராஜ் கௌதமன் எழுதுவார். பெண் எழுதிய பிரதியினூடே சென்று பரிசீலித்து என்ன சொல்லப்பட்டுள்ளது? எச்சூழலில் சொல்லப்பட்டிருத்தல் வேண்டும்? சொன்னது இதுவாதல் கூடுமா? அதுவாதல் கூடுமா? ஒற்றைக் குரலா? பெண்ணினத்தின் ஒட்டு மொத்தக் குரலா? அக்காலத்திய பெண்ணின் நிலை எதுவாக இருந்தது என்று இதை வைத்து அறியலாகுமா? போன்ற **தேடல், பெண்ணியத் தேடல்**, இலக்கிய பரிசீலிட்டாளர்களிடம் காணமுடிவது மற்றொரு போக்காகும்.

**மௌனக்குறம், பச்ச மண்ணு, செவத்த புள்ளை, ஒளவை** போன்ற நாடக ஆக்கங்கள், நிகழ்த்தும் புதுமுறை போல்வன, தமிழிலக்கியத்தில் பதிவு செய்யப்பட்ட இலக்கியத்தினூடே பயணித்து, கேட்கப்படாத மௌனத்தை - உணர மட்டுமே முடிகின்ற பெண்ணின மௌனத்தை ஸ்வரம் பிரிக்கும் முயற்சி, மௌனக் குரலாக (Voice of Silence) அரங்கத்தை இடமாகக் கொண்டு, வெகுஜன விழிப்புணர்வை - சிந்தனையைத் தூண்டுவது பெண்ணியத் தேடலின் மற்றொரு பரிமாணமாகப் பரிணமித்துள்ளது.

இடக்கொள்கை (space theory) பெண்ணின் செயல்பாட்டை எங்ஙனம் குறுக்கி அவளைச் சிறுவட்டத்திற்குள் ஒற்றைப் புள்ளியாக்கி விடுவதை விளக்கும். **ஆத்துக்குப் போகணும்** (லக்ஷ்மி கண்ணன்) சிறகுகள் பறக்கவியலாது முறிவதையும், வீட்டின் மூலையிலிருக்கும் சின்னஞ்சிறு சமையலறைக்குள் உணவு தயாரிக்கும் ஆயுட்கால இயந்திரமாய் உழலும் வாழ்வைச் சித்திரப்படுத்துவதும், சொல்லாத சேதிகளைச் சொல்வதும், இலக்கிய தளத்தில் சோதனை முயற்சிகளாக உருக்கொள்வதைக் கூறலாம். தந்தைவழிக் கொள்கையின் வழி, **பால்** என்பது எங்ஙனம் அந்தஸ்தை அளிக்கும் குறியீடாகப் பயன்படுத்தப்பட்டது என்பதை விளக்க முயலும் முன்னோடி முயற்சிகள் இலக்கியவுலகில் - திறனாய்வுலகில் மேற்கொள்ளப் பட்டன. அதிகார உறவை வரையறுக்க முயலும் இவ்வணுகுமுறை முழுமை யற்றதாகவோ, தற்காலிகமானதாகவோ, கருத்து வேறுபாடுகளுக்கு இடமளிப்பதான பொருட்புரிதலைக் கொண்டதாகவோ இருக்கலாம். என்றாலும் முழு அளவிலான விளக்கங்காணல், விளக்க வரையறைகளை இயன்ற அளவில் பொதுமைப்படுத்துதல், புறனடைகளைப் புறக்கணித்தல், உபதலைப்புகள் மீண்டும் ஒன்றுடன், ஒன்று இணைந்து வருதலைக் கவனித்தல் ஆகிய கூறுகளைக் கொண்டுள்ளது.

ஆணின் உடல்வலிமைதான் தந்தைவழிச் சமூக அமைப்பிற்கு வித்தாக ஆதிநாளில் அமைந்திருந்தது என்று கூறினால் புதுப்புது அறிவுத் துறைகளின் இன்றைய அசுர வேக வளர்ச்சியால் அது அடிபட்டுப் போகாமல், வேரூன்றி இருப்பதற்கு விழுமியங்கள் பண்பாடு, நாகரிகம்,

சமயம் போன்றவற்றால் பராமரிக்கப்பட்டு வருதலே காரணமெனலாம். மனிதரை உற்பத்தி செய்வதால் பெண்ணே பெரியவளாகக் கருதப்பட்ட நிலை தந்தை வழிச் சமூக அமைப்பால், பெண்ணுக்கு மேல் அதிகாரமிக்க ஆண் கடவுளரை உருவாக்கியதன் மூலம் மாற்றப்பட்டு விட்டது. ஆண் மேலாண்மைக்கு உயர்வளித்து, ஆடவர் தலைமையைத் தோற்றுவித்தது. தந்தைமைச் சமூக அதிகார ஆளுமை எங்ஙனம் தோற்றம் பெற்றது என்பதற்கு ஆணின் உடல் வலிமையைச் சுட்டிக் காட்டலாம். எங்ஙனம் வளர்த்தெடுக்கப்பட்டது என்பதற்குப் பல்வேறு சமூக நிறுவனங்களைக் கூறலாம். ஆனால் இன்று வரை எப்படி கொஞ்சமும் மாறாமல் உலகெங்கும் அதிகாரஞ்செலுத்தி வருகிறது என்பதைப் பரிசீலித்தால்தான் தெளிவுற்று இருத்தலை உணரமுடியும் என்று தந்தைமை தலைமை (Patriarchy), ஆண் மேலாண்மைக் கருத்தாக்கம் (Male Chauvnism), ஆண்-பெண் இடையிலான அதிகார உறவு (Power Structure), பெண்ணின் முடிவெடுக்கும் - தீர்மானிக்கும் உரிமை (Decision Making Authority), ஒடுக்குமுறை (Oppression), அடக்குமுறை (Suppression), இரண்டாமிடம் (Secondary Status) போன்றவை வெகுவிரிவாக அலசப்பட்டு வருவதும் விடுதலைக்குப் பிந்தைய போக்காக உள்ளது.

அறுவை சிகிச்சை மூலம் ஆணைப் பெண்ணாக மாற்றலாம். ஆனால் ஆணுள் இருக்கும் பாலிய மேலாண் உணர்வை மாற்றவியலாது என்கிறது ஓர் ஆய்வு முடிவு. பால் (Sex) உடலியல் வேறுபாடென்று அகராதிகள் கூறுகின்றன. பால் சார்ந்ததாகச் சமூகம் எதிர்பார்க்கும் நடத்தை, போக்கு, ஆண்மை - பெண்மை குணங்கள், உணர்வுகள், எண்ணங்கள் போல்வன பாலின வேறுபாடுகள் (Gender Differences). இவை செயற்கையானவை; அகற்றப்பட வேண்டியவை. எனவே, பாலின சமத்துவமே (Gender Equality) வேண்டுவது. பெண் சமத்துவம் (Women's Equality) என்பதைவிட, ஆணோ - பெண்ணோ யாராயினும் ஒடுக்கப்படாது சமமாக வாழும் பாலின சமத்துவமே பாரபட்சமற்றது, சரியானது என்று அதற்கான வழி முறைகளைக் கண்டடையும் முயற்சிகளில் இறங்கியிருப்பது நவீனப் போக்காக இருத்தலை அறியலாம். சம்பாத்தியம் ஆணுக்குப் பொருளியல் பூர்வ அதிகாரத்தை வழங்குகிறது. சார்ந்திருத்தல் பெண்ணுக்குள் சேவக மனப்பான்மையைத் தோற்றுவிக்கிறது. இருசாராரும் பணிபுரிந்து பொருளீட்டத் தொடங்கிவிட்டதும், பெண்ணுக்குக் குடியுரிமை, மண விலக்குரிமை, சொத்துரிமை முதலியன வழங்கப்பட்டு விட்டதால், ஆண் முதன்மை நிலை மாறி வருவதும், பெண் முன்னேற்றம் காணப்படுவதும், பாலின சமத்துவ கோரிக்கைக்குத் தளமமைத்துள்ளது.

1. பெண் விடுதலை (Women's Liberation) என்ற கருத்தாக்கத்தை ஏற்றும், எதிர்த்தும் தமிழுலகில் பரந்த அளவில் விவாதிக்கப் பட்டுள்ளன.
2. புதுமை பெண் (Concept of New Women) யார்? இருக்கிறாளா? இனி வருவாளா? சாத்தியக் கூறுகள், உள்ளனவா? என்று புதுமைப் பெண் தேடலும்

3. பெண்ணுரிமைச் சிக்கல் (Women's right's issue)
4. பெண்மை என்பதன் பழைய - புதிய பரிமாணங்கள்
5. பெண் அடக்குமுறை - வரலாற்றுக் கண்ணோட்டம்
6. ஆண் - பெண் சமத்துவக் கருத்தாக்கம்
7. ஆண் - பெண் பால் வேறுபாட்டின் உளவியல் பின்னணி
8. பெண்ணிய இலக்குகள்
9. குடும்ப அமைப்பும், பெண் விடுதலையும்

என்றின்னோரன்ன கோணங்களில் பெண்ணியக் கோட்பாடுகள் விடுதலைக்குப்பின் தமிழறிஞர்களால் இலக்கிய உலகில் பரந்த அளவில் விவாதிக்கப்பட்டு வந்துள்ளன.

பெண் விடுதலை என்ற கோட்பாட்டிற்கு 'ஆணுக்கிருக்கும் அதே சமூக, பொருளாதார உரிமைகளைப் பெண்ணும் அனுபவிப்பதற்குரிய சுதந்திரம்' என்று விளக்கமளிக்கலாம். பெண்கள் பொதுவானதொரு அடக்குமுறைக்கு ஆட்பட்டுள்ளனர். அவ்வடக்குமுறை பற்றியும், விடுதலை பற்றியும் அவர்களுக்கு விழிப்புணர்வை ஏற்படுத்த வேண்டியது மிகவும் அவசியமானது. முழு விடுதலை பெற்ற ஒரு பெண் கூட உலகில் இல்லை என்பது நடைமுறை உண்மையாகும். உலகெங்கும் பிரிந்து கிடக்கும் மகளிரிடையே சகோதரித்துவ ஒருமைப்பாடு (Sisterly Solidarity) உருவாக வேண்டும். படிநிலையமைப்பு நிராகரிக்கப்பட வேண்டும். பெண்கள் பொருளாதார ரீதியில் ஆடவரைச் சார்ந்து வாழாமல் தன் காலிலேயே நிற்கும் தகுதி பெற்று விட்டால், பொருளாதார விடுதலை பெற்றுவிட்டால், பெண் விடுதலை தானாகக் கிடைத்துவிடும் என்ற கருத்து, **பெண்கள் உலகம், பெண்கள் போராட்டம், பெண் சமூகம், பெண்கள் புரட்சி** ஆகிய நூல்களில் விவாதிக்கப்பட்டுள்ளது. பெண் விடுதலை என்பது மேனாட்டுச் சித்தாந்தம் ஆகும். அச்சுறுத்தும் தோற்றம் பெண்களுக்குக் கிடையாது. எனவே காவலர் மற்றும் இராணுவ வேலைகளில் பெண்கள் இடம்பெறக் கூடாது. இடம்பிடிக்க முயலுவது செயற்கைத் தனம். பெண்களுக்கு மேனாட்டு மோகம், மேனாட்டு நாகரிக ஆவல் தவிர்க்கப்பட வேண்டும் என்று, **பெண்ணுலகு** எனும் நூலில் முனி. இராசகோபால் குறிப்பிடுகிறார்.

1. பெண் விடுதலைக்காகத் தனி அமைப்புகள் வேண்டுமா?
2. தனியாக ஒரு இயக்கம் தேவையா?
3. உலக அளவிலும், இந்தியாவிலும், தமிழகத்திலும், பெண் விடுதலை இயக்கம் எந்த நிலையில் இருக்கிறது?
4. எந்தெந்த சிக்கல்களை முன்வைத்துப் போராடுகிறது?

என்ற வினாக்களை முன் வைத்துப் **புதுமைப் பெண்** என்ற நூலைப் ப. ஜீவானந்தம் எழுதியுள்ளார்.

பெண் விடுதலை என்பது ஆண்களை அடக்கி, அடிமைகளைப் போல் நடத்தி அவர்களைச் சேவை செய்ய வைப்பதாக இருந்தால், அது நீண்டகாலம் நிலைக்காது. வரலாற்றில் தாயாட்சி மறைந்து தந்தையாட்சி மலரவும் பல காலம் மகளிர் வாடி வதங்கவும் முன்னர் அவர்கள் ஆண்களுக்குச் செய்த கொடுமைகளே காரணம். எனவே மீண்டும் ஆணுலகைப் பழிவாங்கப் பெண்ணுலகம் திரும்பிற்று எனில் இருபாலருக்கும் நன்மை விளையாது என்று, **பெண்ணே பெரியவள்** என்ற நூலில் புலவர் அரசுமணி எச்சரிக்கிறார்.

ஆணுருவம் இருக்கும் வரையில் ஆணாகவும் பெண்ணுருவம் இருக்கும் வரையிலும் பெண்ணாகவும்தான் மனிதர் நடந்து கொள்ள வேண்டும். வாழ்க்கை முறைகளிலே ஆணுக்கும், பெண்ணுக்கும் சில வேற்றுமைகள் இருந்துதான் தீரும். எனவே மேனாடுகளில் பெண் மெல்ல மெல்ல ஆணாகிவிட முயன்றுவருவது போன்று இந்த நாட்டில் வர வேண்டாம். பெண் தெய்வத்திடம் நான் வேண்டிக்கொள்ளும் பிரார்த்தனை இது ஒன்றுதான் என்று தி.ஜானகிராமன் எழுதியுள்ளார்.

பெண்கள் அடிமைகளாக இந்த நாட்டில் வாழ்கின்றனர். தம் உடம்பைக் கருவியாகக் கொண்டு, ஆண்களைக் கவர்கின்ற வரைக்கும், பெண்கள் அடிமைகளாகத்தான் வாழ நேரும். இங்கிலாந்து முதலான மேனாடுகளில் பெண்கள் தம் உடம்பை அழகுபடுத்தினாலும், உள்ளத்தின் அழகால் ஆண்களைக் கவர்கின்றனர். அதனால்தான் அங்கு, பெண் விடுதலை பெற்று வாழ்கிறாள் என்று மு.வ. அவர்கள் **பெண்மை வாழ்க** எனும் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

தியாகம் செய்வதே பெண்டிர்தம் இயல்பு. பாலினடிப்படையில் காட்டப்படும் வேற்றுமை, பொருளாதாரச் சார்புநிலை, பொதுப்படையான தத்துவங்கள் முதலியன பெண் விடுதலையைத் தடை செய்வதாக, வெ.சாமிநாத சர்மா **பெண்மையிலே தான் வாழ்வு** எனும் நூலில் எடுத்துரைத்துள்ளார்.

பெண் விடுதலை பற்றி நூல்கள் வெளிவருவது ஒரு புறமிருக்க அடிமை நிலையின் சௌகரியத்தை - வசதியை - வலியுறுத்திப் பெண்டிரே வெளியிட்ட நூல்களும் காணக்கிடக்கின்றன. புகுந்த வீட்டில் எங்ஙனம் பெண் அடங்கி ஒடுங்கி வாழ்ந்து நல்ல பெயர் *(?)* எடுக்க வேண்டும் என்ற அறிவுரைகளது பெட்டகமாக **மணப்பெண்ணுக்கு உபதேசம்** என்ற நூல் நாகலட்சுமி என்பவரால் எழுதப்பட்டுள்ளது.

கணவனையே தெய்வமென்று எண்ணிப் பெண் வாழவேண்டுவதன் அவசியத்தைப் போதிக்கும் நோக்குடன் கற்பரசிகளின் கதைத் தொகுதிகளைப் **பெண்ணின் நல்லார்** என்ற தலைப்பில் ஈ. மீனாட்சியம்மை எழுதியதாகக் குறிப்பிட்டுள்ளார்.

புதுமை, புதுமை என்று இன்றைய பெண்களிடம் புதுமை மோகம் தலைவிரித்தாடுகிறது. புத்தகம் படிப்பதும், புருஷனுடன் வாழாமல் இருப்பதும் புதுமைப் பெண்ணுக்கு அழகல்ல. பெண் விடுதலையைத் தற்காலப் பெண்கள் நேரான வழியில் பயன்படுத்தவில்லை, சீர்கேட்டிற்குத்தான் வழி வகுத்துள்ளார்கள் என்று எம்.எஸ்.கமலி, ஆர். கிருஷ்ணவேணி அம்மாள் போன்றோர் எச்சரித்துள்ளதும் காணக்கிடக்கிறது.

**'புதுமைப் பெண்' சித்தாந்தம்**

பெண் என்பவள் பரிபூரணத்துவம் நிறைந்தவள் என்ற பழம்படிமத்தைத் தவிர்த்துவிட்டு, **புதுமைப் பெண்** (New Woman) என்ற கருத்தாக்கத்தைத் தோற்றுவிக்கும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. தமிழுலகில் இச்சொல்லை முதன்முதலில் அறிமுகப்படுத்திய பெருமை மகாகவி பாரதியையே சேரும். உலகெங்கும் **புதுமைப் பெண்** இலட்சிய படிமமாகத்தான் குறிப்பிடப்படுகிறாளே அல்லாமல் வாழ்ந்த பெண்ணோ, வாழ்கின்ற பெண்ணோ, ஏன் பெண் விடுதலை மற்றும் உரிமைகளுக்காகப் போராடும் போராட்ட முயற்சியில் தம்மை ஈடுபடுத்தி உயிர் நீத்த அல்லது வெற்றி வாகை சூடிய பெண்ணியவாதிகளோ கூடக் குறிக்கப்படாத நிலையே உள்ளது.

**புதுமைப் பெண்** என்பது இலட்சியவாதிகளது வார்ப்படம்; கருத்துத் தொடர்பு சாதனங்களது ஆக்கம்; நல்லோர் காண விழையும் இலக்கு அவ்வளவே. புதுமைப் பெண் ஆண்களைக் கண்டதுமே அஞ்சி மறைய மாட்டாள்; நாணிக் கோணி மினுக்க மாட்டாள்; கை குலுக்கி வரவேற்பாள்; கட்டுகளையும், அடிமைத்தளைகளையும் காளி என்று தகர்ப்பாள்; சாயப்பூச்சு அலங்கரிப்பில் மினுக்க மாட்டாள்; தங்க நகை மீது ஆசை கொள்ள மாட்டாள்; இயற்கை வனப்புடன் பொலிவாள்; வீட்டிற்கு வந்தவரை விருந்திட்டு உபசரிப்பாள்; நாட்டின் அழைப்பிற்கும் சங்க நாதமேந்தி விரைவாள்; கல்விக் கடல், கற்புச் சுடர், அறிவெனும் ஆண்மையைக் காதலிப்பாள்; பொறிப் புலனடக்கிச் சுகபோகம் துப்பப்பாள்; கற்பை அழிக்க முற்படுபவனைக் கண்ணகி போல் சுடுவாள்; புதுவுலகம் படைக்கும் வீரப்பெண் அவள் என்று புதுமைப் பெண் எப்படி இருக்க வேண்டும் என்பது பற்றி வெகுவாகப் பரிசீலிக்கப்பட்டுள்ளது.

**'பெண் உரிமை'க் கோட்பாடு**

**பெண்ணுரிமை** என்றவுடனே ஆடவர் எச்சரிக்கை அடைகின்றனர். மனிதர்களுக்கு இத்தனை உரிமைகள் என்று ஏதோ எண்ணிக்கை விகிதம் இருப்பது போலவும், அவ்வுரிமைகள் அனைத்தும் ஒரு பெட்டிக்குள் வைக்கப் பட்டிருப்பது போலவும், அவ்வுரிமைகளின் எண்ணிக்கைக்கு ஏற்பப் பெண்டிருக்கு வழங்க மனமின்றி, மிகுந்த வருத்தத்திற்கு இடையே வழங்குவது போலவும் கருதுகின்றனர். மனிதராகப் பிறந்த ஒவ்வொரு வருக்கும் உரிய உரிமைகளது பட்டியலை **மனித உரிமைகள் பிரகடனமாக**

ஐக்கிய நாடுகளது சபை *1948* இல் அறிவித்தது. உரிமை அத்துமீறல், மகளிர்க்கு எதிரான வன்முறைகள், அசம்பாவிதங்கள் நேரும் போதெல்லாம் பெண்ணினம் திரண்டு, எதிர்த்துக் குரல் கொடுக்கத் தொடங்கியிருப்பது விருப்பத்திற்குரிய போக்காகும்.

**பெண்மை - பழைய - புதிய தமிழிலக்கியப் பரிமாணங்களைப் பரிசீலித்தல்**

**பெண்மை** வேறு, **பெண்** வேறு, அதுபோன்றே **ஆண்மை** வேறு, **ஆண்** வேறு, பெண்மை என்பதும், ஆண்மை என்பதும், மொழியில் பண்பாட்டடிப்படையில் வேறுபடுத்தப்படுபவை. உடலியல் பூர்வமாகப் பெண்மை பெண்ணுக்கும், ஆண்மை ஆணுக்கும் முற்ற முழுக்கப் பொருத்த வியலாது. எனினும், பெண் அல்லது ஆண் எப்படி இருக்க வேண்டும் என்று ஒரு இனம் அல்லது குழு விரும்பி முடிவெடுத்துள்ளதோ அதற்கேற்ப, பெண்மை ஆண்மை குணங்கள் சித்திரிக்கப்படுகின்றன எனலாம்.

ஆண் என்பவன் ஆளப் பிறந்தவன்; பெண் என்பவள் அவனையும், அவனுடைய வழித்தோன்றல்களையும் பேணப் பிறந்தவள்; பெருமையும் உரனும் ஆடவனுக்கு உரியவை; அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என்ற நான்கும் பெண்ணுக்கு உரியவை என்பது தொல்காப்பியக் கருத்தாகும் என்று தொடங்கி, காலந்தோறும் சித்திரிக்கப்பட்ட விதம், இலக்கியப் படைப்புகள் தோறும் இடம் பெற்ற பரிமாணம் பற்றி வெகுவாகத் தமிழுலகில் விவாதித்துவந்திருப்பது கருதத்தக்கது. பெண்மைக் குணங்களை ஏற்றியும், போற்றியும் வந்த கட்டுரைகள் மிகுதி எனலாம். 'நாணும் மடனும் நாய்கட்கு வேண்டும்' என்றுரைத்த பாரதியைத் தவிர - பாரதி அளவிற்கு வேறு எவரும் கடிய முற்பட்டிராததும் காணக் கிடக்கிறது. **புறநானூற்றுப் பூவையர், பெரியபுராணத்தில் பெண்மை, மாதரார் தொழுதேத்தும் மாண்புடையாள், பெண்கள் பெருமை, வீரப் பெண்மணிகள், இலக்கியத்தில் பெண்கள், வீரப்பெண்கள் இருவர், மாதர்குல மாணிக்கங்கள், நம் நாட்டுப் பெண்மணிகள், பெண் மாட்சி, தமிழ் தந்த பெண்கள், மங்கையரில் மகரிஷிகள்** என்று எண்ணற்ற ஆக்கங்கள் வெளியிடப்பட்டுள்ளன.

**பெண்ணடக்குமுறை - கோட்பாடுகள்**

பெண்ணடக்குமுறை (Oppression of Women) என்பது பெண்ணியவாதிகள் வெகுவாகப் பயன்படுத்தும் கோட்பாடாகும். பெண்ணடக்குமுறையின் இயல்பு, தன்மை, அடக்குமுறைக்கான காரணங்கள், எங்ஙனம் வேரூன்றியது? எத்தகு அனுபவங்களால் உணரப்பட்டது? மாற்றுவதற்குரிய வழிமுறைகள் எவை? என்று வரலாற்று நோக்கில் இலக்கியச் சான்றுகளின் அடிப்படையில் கண்டறியும் முயற்சி அறிஞர்களால் வெகுவாக மேற்கொள்ளப்பட்டுள்ளது.

ஆதிகாலத்தில் 'தாயாட்சிமுறை' இருந்துள்ளமை; அதனால் பெண்கள் உரிமை நிரம்பப் பெற்று, போற்றத்தகு நிலையில் இருந்தமை; இடைக்காலத்தில் இந்நிலையில் மாற்றம் ஏற்பட்டமை, பெண்டிர் இழிவான நிலைக்குத் தள்ளப்பட்டமை போன்றவற்றுடன் பெண்ணடக்குமுறை எங்ஙனம் தோற்றம்பெற்று, வளர்ந்து, எங்கும் கால் கொண்டது என்பதை வரலாற்று நோக்கில் பரிசீலித்தலையும், பெண்ணடக்கு முறைக்குக் காரணங்களாக இருந்தவற்றைக் கண்டறிய முயலும் முயற்சியையும் காண முடிகின்றன. இவற்றைப் **பெண்ணடிமை தீர, பெண் - வார்ப்பும் - வளர்ப்பும், தமிழகப் பெண்கள் வாழ்வும் வளர்ச்சியும், பெண்களின் சுவடுகளில், காலந்தோறும் பெண்மை, மார்க்சியமும் பெண் நிலை வாதமும் காலந்தோறும் பெண்** போன்ற நூல்கள் சிறப்பாகப் பரிசீலிக்கின்றன.

ஆண் -பெண் அறங்கள் பற்றி ராஜ் கௌதமனின், **அறம்/அதிகாரம்** என்ற நூல் பரிசீலிக்கிறது.

கடந்த காலத்தில், பெண்டிர் தம் வாழ்வியல் இருந்தவாற்றினைக் கண்டறியும் நோக்குடன் தொன்மை இலக்கியங்களைப் பரிசீலிப்பதும், மதிப்பீடு செய்வதும், பெண்ணியத் திறனாய்வுக் கோட்பாட்டின் ஒரு பரிமாணமாகத் தமிழ் இலக்கியவுலகில் தொடர்கிறது. ஆதிநாட்களில், மனித இனக் குழுக்களின் தலைவியாகத் தாயே முதன்மை பெற்றிருந்தாள். பின்னாளில் ஆண் மேலாதிக்கம் பெற்றுப் பெண்ணை அடக்கியாளத் தொடங்கும் வரலாற்று ஆளுமை மாற்றம் ஏற்பட்டது. எழுத்துலகிலும், ஊடகச் சித்திரிப்புகளிலும், வணிக எழுத்துகளிலும், கருத்தடை முறைகளிலும் பெண்ணைச் சுரண்டும் நிலை இன்றளவும் இருந்து வருவதை எதிர்த்தும் தக்கச் சான்றுகளுடன் நிறுவும் பாங்கினை எழுத்தாளர் - பெண்ணியத் திறனாய்வாளர் ராஜம் கிருஷ்ணன் அவர்களது நூல்களில் காணலாம்.

இலக்கியப் பாடுபொருளையும், சம்பவக் கோர்வைகளையும், பெண் பாத்திரச் சித்திரிப்பினையும், பெண் படிமம் உருவாக்கப்பட்டிருக்கும் முறையினையும், ஆண் நோக்கில் படைக்கப்பட்டுள்ள விதத்தையும் பரிசீலித்து இலக்கியத்தை மறுபார்வைக்குட்படுத்திப் பெண்ணிய நோக்கில் விவாதிக்கும் முறை பெண்ணிய இலக்கியத் திறனாய்வு முறையாகவே இக்காலத்தில் உருப்பெற்றிருப்பது பெண்ணியக் கோட்பாடுகளும், இலக்கியத் திறனாய்வு போக்குகளும் கைகோர்த்துச் செயல்பட்டதன் விளைவெனலாம்.

1. பெண்கள் வேலைக்குச் செல்கிறார்கள். அலுவலக உலகுக்கே உரிய பொறாமை, போட்டி, பதவி வெறி, அதிகார ஆணவம், மேலாதிக்கம், யதேச்சதிகாரம் போன்றவற்றால் ஆக்ரமிக்கப் படுவார்களா? பணியுலகால் பெண்கள் மாற்றப்படுவார்களா அல்லது பெண்களால், பணியுலகம் மாற்றப்படுமா?

2. வறிய குடும்பத்தில் பிறந்த பெண் அறியாமை, எழுத்தறிவின்மை, தொழில்நுட்ப அறிவுக் குறைவு, பணியின் நிரந்தரமற்ற தன்மை, கடின உழைப்பு, நீண்ட பணிநேரம், குறைவான ஊதியம், மேலாளரது பாலியல் அத்துமீறல்கள், வசதிக் குறைவுகள், புறக்கணிப்புகள் என்று எல்லாவித இன்னல்களுக்கும் ஆட்பட்டு, பொருளாதார நெருக்கடியினால் பணியாற்றச் செல்லும்போது, பணிபுரிவது அவளது விடுதலைக்கு வித்திடுகிறதா அல்லது அவள் வாழ்வைக் கடினமானதாக்குகிறதா?

3. தன் குடும்ப உறுப்பினர்களை உணர்வுபூர்வமாகச் சார்ந்திருக்கும் இளம்பெண், கல்வி, திருமணம், வேலை என்பவற்றில், எதைப் படிப்பது? யாரை மணப்பது? எந்த பணியைத் தேர்வு செய்வது என்ற முடிவுகளைப் பெற்றோரின் கைகளில் விடுவது சரியா? அனுபவமற்ற அவளே நிர்ணயிப்பதுதான் உகந்ததா?

4. திருமண வளையத்திற்குள் சென்றுவிட்ட பின், அவளுக்கும் குடும்பத்திற்கும் உள்ள உறவு வரவேற்கத் தக்கதா? அல்லது பிரிவு வரவேற்கத் தக்கதா?

5. கூட்டுக்குடும்பம் தனிக்குடும்பமாக உடைந்து, தனிக்குடும்பம் இன்று, தனிநபர் என்றாவது எதிர்காலத்தில் எத்தகு பாதிப்பைத் தோற்றுவிக்கும்?

6. தீவிரப் பெண்ணியவாதிகள் முன்வைக்கும், பாலியப் புரட்சி (Sexual Revolution) அவசியமானதா?

7. சமதருமப் பெண்ணியவாதிகள் பரிந்துரைக்கும் அரசியல் பொருளாதார அதிரடி மாற்றங்களும், குடும்ப உடைப்பும் தேவையானதா?

8. மிதவாத பெண்ணியம் (Moderate Feminism) விடுதலைக்கு வழிகாட்டுகிறதா அல்லது பெண் அடக்குமுறையை நியாயப்படுத்த முயலுகிறதா?

போன்ற சூக்குமமான வினாக்கள் எழுப்பப்பட்டு, பரிசீலிக்கப்பட்டு வருதல் இன்றைய போக்காக உள்ளது.

பெண்ணியம், பெண்ணிய வரலாறு, பெண்ணிய இயக்கங்கள், அமைப்புகள், போராட்டங்கள் குறித்து நூல்கள் வருவது அதிகரித்துள்ளது. **பெண் ஏன் அடிமையானாள்?** போன்ற விழிப்புணர்வேற்படுத்தக் கூடிய - சிந்தனையைத் தூண்டுகின்ற நூல் ஒன்று வந்தால், எதிர் நிலையில் நின்று, பிற்போக்குத்தனத்தை நிறுவ முயலும் நூல்கள் மூன்று வரும் நிலை விடுதலைக்கு முன் இருந்தது. ஆனால் இன்று, எதிர்ப்பு நிலை வெகுவாகக் குறைந்து விட்டதென்றே கூறலாம். ஒன்று அல்லது இரண்டு

நூல்களே அருகிக் காணப்பட்ட நிலை மாறி இன்று ஏறத்தாழ *250*க்கும் அதிகமான நூல்கள் இப்பொருளில் வந்திருப்பதும், நூலகங்களில், பெண் பற்றிய நூல்கள் என்றொரு பிரிவு காணப்படுவதும் வளர்ச்சிப் போக்கிற்குச் சான்றாகக் கொள்ளலாம்.

கல்விக் கூடங்களில் **பாடக் கூறாக** அமைக்கப்படும் நிலை உள்ளது. அன்னை தெரசா மகளிர் பல்கலைக்கழகப் பேராசிரியர் முனைவர் தேவதத்தா அவர்கள் *1985*இல், **பெண்கள் படைப்பில் பெண்கள்** என்ற கருத்தரங்கு நடத்தி அதனை நூலாக வெளியிட்டதைத் தொடர்ந்து இன்று வரை கல்விக் கூடங்களில் நடத்தப்பெறும் பெண்ணியக் கருத்தரங்குகள் பரவலான அங்கீகாரம் கிடைத்திருப்பதற்குச் சான்றுகளாகத் திகழ்கின்றன. அன்னை தெரசா மகளிர் பல்கலைக்கழகத்துடன் இணைந்து *1993*இல் **தமிழக மகளிர்** எனும் தலைப்பில் ஓராண்டு தொடர்க் கருத்தரங்கினை நடத்திய உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் இன்று ஓர் அமர்வினை ஒதுக்கி இருப்பதும், தமிழ்கூறு நல்லுலகில் பெண்ணியக் கோட்பாடுகள் நிலைபெறத் தொடங்கியதன் நல்வினைப் பயனே ஆகும். விடுதலைக்குப் பிந்தைய புதிய செல்நெறி இதுவெனலாம்.

# பெண்ணிய ஆய்வுகள்

இரா. பிரேமா

---

பெண்ணிய ஆய்வு என்பது. 'இலக்கியத்தில் பெண்ணை மையமாக வைத்துத் தொலைநோக்கு ஆய்வு மேற்கொள்வதாகும்' என்று மேக்கி ஹம் என்ற பெண்ணிய ஆய்வாளர் விளக்கியுள்ளார். 'பெண்ணைப் பெண்ணாகப் படித்தறிதல்' (Women to read as Women) என்ற போக்கு இத்திறனாய்விற்கு மிக இன்றியமையாததாகும் இதன் அடிப்படையில்தான், பெண்ணியத் திறனாய்வைப் புரிந்து கொள்ளவும் எடுத்தாளவும் இயலும்.

அமெரிக்கா, இங்கிலாந்து, ப்ரான்ஸ் ஆகிய நாடுகளில் அறுபதுகளின் இறுதியில் தோற்றம் பெற்ற இவ்வாய்வு, எழுபதுகளின் இறுதியில் உலகம் முழுவதும் பரவத் தொடங்கியது. தமிழகத்தைப் பொறுத்தவரை மேலைநாட்டுப் பெண்ணிய இலக்கியத் திறனாய்வு எண்பதுகளில் தோற்றம் பெற்றது. ஆனால் பெண் பற்றிய பொதுநோக்கு ஆய்வு தமிழுக்குப் புதியதல்ல என்பதால் தமிழில் பெண்ணிய ஆய்வை

எண்பதுக்கு முன்
எண்பதுக்குப் பின்

என இரண்டாகப் பகுத்து நோக்கலாம்.

சென்ற நூற்றாண்டின் இறுதியில் மாயூரம் வேதநாயகம் பிள்ளை, அ. மாதவைய்யா போன்றோரும், இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் பாரதி, பாரதிதாசன், வ.ரா. போன்றோரும் பெண்களைப் பற்றி விழிப்புணர்வுடனும்,

விமர்சன நோக்குடனும் தம் படைப்புகளில் கருத்துக்களைச் சொல்லிச் சென்றுள்ளனர்.

நவீன பெண்ணிய சிந்தனைகளோடு ஒப்பிட்டு நோக்கத்தக்க, பெண் பற்றிய ஆய்வைச் சமூக நோக்கிலும், இலக்கிய நோக்கிலும் செய்தவர் தந்தை பெரியார் ஆவார். முப்பதுகளில் **பெண் ஏன் அடிமையானாள்?, மதமும் மங்கையும்** என்ற நூல்களில் பெண்ணடிமைத் தனத்தின் பரிமாணத்தையும், **கற்பு** என்ற பெண்ணடிமைக் கருத்தாக்கத்தையும், வள்ளுவர் தந்த கற்புக் கோட்பாட்டையும் தீவிர நோக்கில் விமர்சித்துள்ளார்.

*1960*இல் இலங்கையைச் சேர்ந்த தமிழறிஞர் ந.சி. கந்தையா பிள்ளை, **பெண்கள் உலகம்** என்ற நூலை எழுதியுள்ளார். பெண் இன வரலாறு பேசும் இந்நூல் காலந்தோறும் பெண்ணின் நிலைமை குறித்து வரலாற்று நோக்கில் ஆராய்ந்துள்ளது.

எண்பதுக்குப் பின் செய்யப்பட்ட பெண்ணிய ஆய்வுகள் மேலை நாட்டுப் பெண்ணிய ஆய்வுகளின் வழிவந்தவை. இவ்வகை ஆய்வுப் போக்கிற்கு வித்திட்ட முதல்வர் அம்பை என்ற சி.எஸ். லட்சுமி ஆவார். இவர், *1984*இல் **முகத்திரைக்குப் பின்னால் உள்ள முகம் (The face behind the Mask)** என்ற தலைப்பில் தமிழ்ப் பெண் எழுத்தாளர்களையும், அவர்தம் படைப்புக்களையும் ஆராய்ந்து வெளியிட்டார். ஆண் ஆதிக்க உலகில் மறைக்கப்பட்ட, மறுக்கப்பட்ட பெண் எழுத்தாளர்களையும், அவர்தம் படைப்புக்களையும் வெளிச்சத்திற்குக் கொண்டு வந்த அவரின் ஆய்வு ஆங்கில மொழியில் அமைந்துவிட்டதால், தமிழ் ஆய்வாளர்களிடையே பரவலாகச் சென்று சேரவில்லை.

இன்று தமிழகத்தில் பேசப்படும் பெண்ணியத் திறனாய்வுப் போக்கிற்கு வித்திட்டது அன்னை தெரசா மகளிர் பல்கலைக்கழகமாகும். அப்பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறை மார்ச்சு *1986*இல் நடத்திய **பெண்கள் படைப்பில் பெண்கள்** என்ற கருத்தரங்கு, பெண் எழுத்தாளர்களின் படைப்பை முதன்மைப்படுத்தி, அவர்கள் படைத்த பெண் பாத்திரங்களை ஆய்வுக்கு உட்படுத்தியது. அக்கருத்தரங்கில் பெண் எழுத்தாளர்களும், திறனாய்வாளர்களும், பார்வையாளர்களும் உற்சாகமாகக் கலந்து கொண்டு கருத்துக்களைப் பரிமாறிக் கொண்டனர். குறிப்பாக, பெண்ணிய நோக்கை முதன்மைப்படுத்தி, பேராசிரியர் தேவதத்தாவும், பெண்ணிய நாடகங்களை நடத்திவரும் பிரசன்னா ராமசாமியும் பேசிய பெண் மைய பேச்சுக்கள் உண்மையிலேயே வந்திருந்த எழுத்தாளர்களுக்கும், திறனாய் வாளர்களுக்கும் புத்துணர்ச்சியை ஊட்டியது.

யுனெஸ்கோ நிறுவனம் *1975*ஆம் ஆண்டைப் பெண்கள் ஆண்டாகவும், *75* முதல் *84* வரையிலான ஆண்டுகளைப் பெண்கள் பத்தாண்டாகவும் அறிவித்த பின்னர் ஆண் பெண் எழுத்தாளர்கள்

பெண்களை முதன்மைப்படுத்தியும், அவர்கள் சார்ந்த சிக்கல்களை மையப்படுத்தியும் எழுதத் தொடங்கியிருந்தனர். பெண்களை முதன்மைப்படுத்தினாலே, அது புரட்சி எழுத்து என்று நம்பியிருந்த எழுத்தாளர்களுக்கு முற்சுட்டிய கருத்தரங்கு பெண்ணியம் என்பது பெண் விடுதலை, பெண் சுதந்திரம், பெண் முன்னேற்றம், பெண் சமத்துவம் நோக்கினவையாக இருக்க வேண்டும் என்ற சிந்தனை எழுச்சியைத் தந்தது. அக்கருத்தரங்கிற்குப் பின் பெண் எழுத்தாளர்களின் எழுத்தில் குறிப்பாக வாஸந்தி, சிவசங்கரி, உஷா சுப்பிரமணியன், ஜோதிர்லதா கிரிஜா போன்றவர்களின் எழுத்தில் ஒரு பெரும் மாற்றம் ஏற்பட்டது.

அக்கருத்தரங்கிற்கு முன்னரே எழுபதுகளிலேயே பெண்ணியம் பேசிய எழுத்தாளர் இராஜம் கிருஷ்ணன் ஆவார். மார்க்சியச் சிந்தனைப் போக்கும், பெண்கள் மீது இயல்பாக அவர் கொண்டிருந்த நேயமும், இனக்கவர்ச்சிக்கு அப்பாற்பட்ட அவருடைய எழுத்துப் போக்கும், இரஷ்ய கலாச்சாரத்தில் மார்க்சியப் பெண்ணியம் ஏற்படுத்தியிருந்த தாக்கத்தையும் மாற்றங்களையும் நேரில் கண்ட அனுபவமும் அவரைப் பெண்ணியம் பேச வைத்தது.

எண்பதுகளின் இறுதியில் ராஜம் கிருஷ்ணன் அவர்கள் **காலந்தோறும் பெண்மை, காலந்தோறும் பெண், இந்திய சமுதாய வரலாற்றில் பெண்மை** என்ற நூல்களைச் சமூக ஆய்வியல் நோக்கில் எழுதி வெளியிட்டார். இந்த நூல்கள் தமிழ் ஆய்வாளர்களுக்குப் பெண்ணடிமையின் பரிமாணத்தையும் சமூகப் பண்பாட்டுத் தாக்கத்தையும் எடுத்துரைத்தன.

**பெண்கள் படைப்பில் பெண்கள்** என்ற கருத்தரங்கிற்குப் பின் மகளிர் பல்கலைக்கழகத்தில் மகளிரியப் பாடத்திட்ட அடிப்படையில் பெண்ணை நோக்கிய ஆய்வுகள் மட்டுமே மேற்கொள்ளப்பட்டன. **சங்க இலக்கியங்களில் பெண்கள், திருவள்ளுவரின் பெண்ணிய நோக்கு, பெரிய புராணத்தில் பெண்கள், முதல் மூன்று தமிழ் நாவல்களில் பெண்ணியம், வ.ரா. படைப்புக்களில் பெண்ணியம், பாரதி படைப்புகளில் பெண்ணியம், பாரதிதாசன் படைப்புக்களில் பெண்ணியம், இராஜம்கிருஷ்ணன், சூடாமணி, வாஸந்தி, அம்பை, காவேரி, ஜோதிர்லதா கிரிஜா, அனுராதா ரமணன், திலகவதி நாவல்களில் பெண்ணியம், ஜெயகாந்தனின் பெண்மை சித்திரிப்பு** என்ற விதத்தில் அவ்வாய்வுகள் அமைந்திருந்தன. அவ்வாய்வுகள் **இலக்கியத்தில் பெண்** என்ற கருத்தாக்கத்தை முன் நிறுத்தினாலும் பெண்ணியத் திறனாய்வின் தொடக்கநிலை ஆய்வுகளாகவே அமைந்திருந்தன. இதற்குக் காரணம், பெண்ணியம் பற்றியும், அதன் வரலாறு மற்றும் போக்குகள் பற்றியும், பெண்ணியத் திறனாய்வு பற்றியும் அறிந்து கொள்ள தமிழில் அவர்களுக்குப் போதிய நூல்கள் இல்லை என்பதே ஆகும்.

இந்தக் காலக்கட்டங்களில் அதாவது தொண்ணூறுகளில் **மேலும், ஆய்வு, நிகழ்** என்ற சிறுபத்திரிகைகள் பெண்ணியம் பற்றிய கட்டுரைகளை வெளியிடத் தொடங்கின. **மேலும்** இதழில் பேராசிரியர் தேவதத்தா எழுதிய **பெண்ணியம் ஒரு வரலாற்றுப் பார்வை** என்ற கட்டுரை பல ஆய்வாளர்களிடையே பெண்ணியம் பற்றிய ஒரு புரிதலை ஏற்படுத்தியது. சு. வேங்கடராமன், ராஜ் கௌதமன், அ. மங்கை, அருணா, சி. ஜெயராஜ் போன்றோர் அவ்விதழ்களில் பெண்ணியம் பற்றிய விளக்கக் கட்டுரைகளையும் மொழிபெயர்ப்புக் கட்டுரைகளையும் எழுதினர். இவற்றில் சில கட்டுரைகள் பெண்ணியத்தின் அடிப்படையைப் பேசாமல் அதிதீவிர பெண்ணியக் கோட்பாடுகளான பாலியல், அரசியல், பெண்மொழி, பெண் உடலை எழுதுதல் போன்ற கருத்தாக்கங்களைப் பேசின. அக்கட்டுரைகளின் மொழிபெயர்ப்புப் போக்கும், சொல்லாடல்களும் பெண்ணியத்தைப் புரிந்து கொள்வதைக் கடுமையாக்கின. பெண்ணியக் கலைச் சொற்களை எடுத்தாள்வதில் அக்கட்டுரையாளர்களிடம் ஒருமித்தப் போக்கு காணப்படவில்லை.

பெண்ணியக் கலைச் சொற்களின் ஒருமித்த மொழிபெயர்ப்புத் தேவையை உணர்ந்த பேராசிரியர் தேவதத்தா முனைவர் கமலியுடன் இணைந்து *1992*இல் **பெண்ணியக் கலைச்சொல் விளக்கக் கையேடு** என்ற நூலை வெளியிட்டார். இந்நூல் பெண்ணியச் சொற்களை எடுத்தாள்வதில் ஒருமித்தப் போக்கை ஏற்படுத்துவதில் பெரும்பங்கு வகிக்கின்றது.

*1993*இல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் பெண்ணியக் கோட்பாட்டையும் வரலாற்றையும் அறிமுகப்படுத்தும் நோக்கில் ஓர் அறக் கட்டளைச் சொற்பொழிவை ஏற்பாடு செய்தது. **பெண்ணியம்** என்ற பெயரில் முனைவர் இரா. பிரேமாவால் நிகழ்த்தப்பட்ட அச்சொற்பொழிவு, *1994*இல் நூலாகவும் வெளி வந்தது. மேலைநாட்டுப் பெண்ணிய வரலாறு, பெண்ணிய வகைகள், பெண்ணியக் கோட்பாட்டாய்வுகள், பெண்ணிய நூல்கள், பெண்ணியத் திறனாய்வு, மகளிரியல் கல்வி, இந்தியப் பெண்ணியம் என்ற ஏழு தலைப்புகளில் இந்நூல் பெண்ணியத்தை முழுமையாக அறிமுகப் படுத்தியுள்ளது. *1994*இல் இந்நிறுவனம் **தமிழக மகளிர்** என்ற பெயரில் ஒரு திங்கள் தொடர்க் கருத்தரங்கு நடத்தியது. பலதரப்பட்ட மகளிரை, அவர்கள் வரலாற்றை, செயற்பாட்டை எடுத்துரைத்த அக்கருத்தரங்கக் கட்டுரைகள் நூலாக வெளிவரவில்லை. *1995*இல் முனைவர் முத்து சிதம்பரம் எழுதி வெளியிட்ட **பெண்ணியம் தோற்றமும் வளர்ச்சியும்** என்ற நூலும் மேல்நாட்டுப் பெண்ணிய வரலாற்றின் தோற்றம் வளர்ச்சிப் போக்குகள் பற்றி விரிவாகப் பேசியது. அந்தக் காலக்கட்டங்களில் அதாவது *1994*இல் பெங்களூரைச் சேர்ந்த காவ்யா சண்முகசுந்தரம் சிறு பத்திரிகைகளில் வெளிவந்த கட்டுரைகளைத் தொகுத்து **பெண்ணியம்** என்ற பெயரிலும், **பெண்ணியமும் கலை இலக்கியப் பிரதிகளும்** என்ற

பெயரிலும் நூல்களை வெளியிட்டார். இம்முயற்சி ஆங்காங்கு சிதறிக் கிடந்த பெண்ணிய முயற்சிகளை ஒன்று திரட்டிக் காட்டிய விதத்தில் வரவேற்பு பெற்றது.

இதற்கிடையே *1993*இல் **நிறப்பிரிகை** என்ற சிற்றிதழில், அ. மார்கல், எதிர்வு சிவக்குமார், ரவிக்குமார், சாரு நிவேதிதா போன்றவர்கள் இணைந்து **பெண்ணியம் - கூட்டு விவாதம்** என்ற பெயரில் ஒரு கூட்டுக் கட்டுரையை வெளியிட்டனர். அவர்கள் பெண்ணியத்தின் ஒரு பிரிவான பெண் ஒருபால் சேர்க்கையாளர்களின் (Lesbians) அரசியலைப் பெண்ணியத்தின் முதன்மைப்போக்காக இனம் காட்டினர். இதை, **சுட்டும் விழிச்சுடர்** என்ற பெண்ணிய இதழை நடத்தி வந்த சுபத்ரா என்பவர் எதிர்த்துத் தம் இதழின் மூலம் கடுமையாகக் குரல் ஒலித்தார். அதற்கு எதிராக **நிறப்பிரிகை** அடுத்து வந்த இதழில் கருத்துக்களை வெளியிட்டது. **நிறப்பிரிகை** கட்டுரை பெண்ணியம் பற்றிய ஒரு தவறான புரிதலைத் தமிழ் ஆய்வாளர்களிடையே ஏற்படுத்தியது. அதைத் தொடர்ந்து அவ்வருடத்திலேயே **இலக்கியப் பதிவுகள்** என்ற பெயரில் நெல்லை மாவட்டத்தில் மூன்று நாட்கள் சிறுபத்திரிகையாளர்கள் சிலரால் ஒரு கருத்தரங்கு நடத்தப்பட்டது. அக்கருத்தரங்கில் பெண்ணியம் பற்றி ஒரு அமர்வு பேசப்பட்டது. இதைப் பற்றிக் **கணையாழி**யில் விமர்சிக்கும் நெல்லை சு. முத்து, 'யோனிகளும், முலைகளும் முடியும், ஆண்குறியும் எல்லாம் 'மைதுனி நாகரிக' உலகில் வடிவக் கணிதமாக வரையறுக்கப் பட்டாலும், கருத்தரங்கில் கலந்து கொண்ட பெண் எழுத்தாளர்கள் பேராசிரியைகள், மாணவியர்கள் யாருமே விவாதத்தில் பங்கேற்கவில்லை. பெண்ணியம் என்றைக்குத்தான் முன்னுக்கு வருமோ? (நெல்லை சு. முத்து, இலக்கியப் பதிவுகள், நவ. *93*, கணையாழி) என்று எள்ளி நகையாடி உள்ளார். பெண்ணியம் குறித்த சில சிறு பத்திரிகைகளின் தவறான அணுகுமுறையும், அதன் விளைவையும் இந்த மேற்கோளின் மூலம் விளங்கிக்கொள்ள இயலும்.

நிறப்பிரிகையின் விவாதத்தால் உந்தப்பட்ட பேராசிரியர் பஞ்சாங்கம், பெண்ணியம் பற்றிய உண்மையான போக்கை அறிய விழைந்தார். பெண்ணியம் பற்றிய ஆங்கில நூல்களைத் தேடிப்பிடித்து அதை ஒரு கட்டுரை வடிவில் மொழிபெயர்த்துத் தந்தார். அஃது, **நிகழ்** இதழில் வெளிவந்தது. பின்னால் அக்கட்டுரையையும், மற்றும் இரு பெண்ணியக் கட்டுரைகளையும் இணைத்து, **பெண் என்னும் படைப்பு** என்ற பெயரில் அவரே நூலாக வெளியிட்டார். அந்நூலுள் பெண்ணியத்தைப் பற்றிப் பெண்களே பரவலாகப் பேசவும் எழுதவும் தொடங்கியுள்ள சூழலை, 'அம்பை, தேவதத்தா, வ. கீதா, மங்கை, பிரசன்னா ராமசாமி, மைதிலி சிவராமன், சாந்தா முதலிய பெண் அறிவுஜீவிகளில் பலர் செயல்படத் தொடங்கிய பிறகு, சம்பளத்தை வாங்கி, கணவன் கையில் கொடுப்பதற்காகவே அலுவலகம் சென்று வரக்கூடிய பெண்கள் நடுவிலும் ஒரு விதமான சலசலப்பு ஏற்பட்டுள்ளது. இவை எல்லாம், தமிழ்க் கலாச்சார சூழலில் பெண் விடுதலை பற்றிய அடுத்தகட்ட சிந்தனை

வளர்ச்சியை அடையாளம் காட்டுகிறது (பஞ்சாங்கம், பெண் என்னும் படைப்பு, ப. *13)* என்று திறந்த மனதுடன் வரவேற்று எழுதியுள்ளார். இப்படி, ஒரு புறம் பெண்ணியம் பற்றிய ஆக்க சிந்தனைகளும் ஒரு சிலரிடம் வளர்ந்திருந்தன.

பெண்ணியம் பற்றிச் சிறு பத்திரிகைகளின் போக்கு இவ்வாறு அமைய, அஃது பல கல்வியாளர்கள் மத்தியிலும் ஒருவித வெறுப்பை ஏற்படுத்தியிருந்தது. *1994*இல் மதுரைக் காமராசர் பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறை **பெண்ணியம்** என்ற பெயரில், கட்டுரைத் தொகுப்பு நூல் ஒன்று வெளியிட்டது. அதில் ஒரு கட்டுரை, 'இன்றைய பெண்ணியவாதிகள் உணர்ச்சியாளர்கள். அவர்கள் பேச்சிலும் எழுத்திலும் நடைமுறைக்கு உகந்த எண்ணங்கள் கிடையாது. அவர்கள் ஆகாயத்தில் கோட்டை கட்டுபவர்கள். திருவள்ளுவர் முதலாக அனைத்து மானுடச் சிந்தனையாளர்களையும் ஒரு வாங்கு வாங்க வேண்டியது. பின் வீட்டுக்குப் போய், ஒரு குவளை தண்ணீர் குடித்துவிட்டு ஓய்ந்து படுக்க வேண்டியது. அவர்கள் நடைமுறை உண்மைகளை மனங்கொண்டு நிதரிசனப் பார்வையில், ஆர அமரச் சிந்தித்து பேசுவதில்லை. அதனால் எல்லாம் பேச்சோடு ஒழிகின்றன. நடைமுறை சாத்தியமில்லை' என்று இன்றைய பெண்ணியவாதிகளைச் சாடுகின்றது (பெண் விடுதலை சமத்துவம் பேணுவதிலா*?* சமன்பாடு பேணுவதிலா*?* பெண்ணியம், பக். *42-47)*. இவ்வாறு பெண்ணியத்தின் அடிப்படையை உள்வாங்கிக் கொள்ளாமல் மேம்போக்காகச் சில கருத்துக்களை மட்டும் உள்வாங்கி, ஒரு சார்புடனும் ஆணியப் பார்வையுடனும் பேசும் கல்வியாளர்கள் மிகப்பலர் உள்ளனர்.

பெண்ணியம் பற்றிய ஈழ எழுத்துக்களையும் குறிப்பிடுதல் இன்றியமையாததாகும். *1985*இல் கணேசலிங்கம் **பெண்ணடிமை தீர** என்ற நூலை வெளியிட்டார். மார்க்சியப் பெண்ணியம் பேசும் இந்நூலைத் தொடர்ந்து சாந்தி சச்சிதானந்தத்தின் **பெண்களின் சுவடுகளில்** என்ற நூலும் வெளிவந்தது. பின் செல்வி திருச்சந்திரன் சித்ரலேகா மௌனகுரு போன்றோரின் கட்டுரைகளும், **பெண்நிலை வாதம் - சில கேள்விகள், சர்வதேசிய பெண் நிலை வாதம், பெண்களும் தொடர்பு ஊடகங்களும்** என்ற சிறு நூல்களும் தமிழ்ச் சூழலுக்கு அறிமுகமாகின. பெண்ணியத்தை மார்க்சிய நோக்கிலும், சமூகவியல் நோக்கிலும் இனம் காட்டிய அந்நூல்களும் கட்டுரைகளும் பரவலாக, திரைப்படம், ஓவியம், நாடகம், பிற தொடர்பு ஊடகங்கள் என்று இலக்கியத்தோடு பிற கலைத்தளங்களில் பெண்ணியப் போக்கை ஆராய்ந்தன. இது போன்ற பன்நோக்கு பெண்ணிய ஆய்வுகள் அது வரை தமிழ்நாட்டில் தோன்றியிருக்கவில்லை. இலங்கையில் இருந்து வெளிவரும் **சரிநிகர், பெண்** என்ற இதழ்களில் ஔவை, மைத்ரேயி போன்றோர் எழுதிவரும் கட்டுரைகளும் குறிப்பிடத்தக்கனவாகும்.

தமிழ்நாட்டில் ஜனநாயக மாதர் சங்கத்தைச் சேர்ந்த மைதிலி சிவராமன், வாசுகி போன்றோரும், மகளிர் விடுதலை மன்றத்தைச் சேர்ந்த

ஓவியாவும், பல்வேறு பெண்ணிய அமைப்புகளைச் சேர்ந்த வ. கீதா, பாரதி, அருள்மொழி போன்றோரும் சமூகவியல் அடிப்படையில் பெண்ணியம் பற்றிப் பேசியும், எழுதியும் வருகின்றனர். ஜனநாயக மாதர் இதழான **மகளிர் குரல்** என்பதிலும் பெண்ணியம் குறித்த கட்டுரைகள் வெளிவந்துள்ளன. மாதர் அமைப்பைச் சேர்ந்த பெண்களின் எழுத்துக்களும் பேச்சுக்களும் குறுகிய வட்டத்திற்குள் அடங்கிவிட்டன; பரவலாக வெளிவந்து தாக்கத்தை ஏற்படுத்தவில்லை என்றாலும், பெண்ணிய ஆய்வில் இவர்களது பணியும் கொடையும் குறிப்பிடத்தக்கன.

தமிழகத்தில் தொண்ணூறுகள் தொடங்கி **ஆராய்ச்சி, ங, மனவோசை, செம்மலர், கணையாழி, புதிய பார்வை, புதிய குரல், சுபமங்களா** போன்ற இதழ்கள் தொடர்ந்து பெண்ணியம் பற்றிய கட்டுரைகளை ஆக்கபூர்வமாக வெளியிட்டுவந்தன. தொண்ணூறுகளின் மத்தியில் **தலித்தியம்** என்ற கருத்தாக்கம் புகழ்பெற்றவுடன் **பெண்ணியம்** அவ்விதழ்களில் சற்றுப் பின் தள்ளப்பட்டுவிட்டது என்றாலும், அந்தக் காலகட்டத்தில் வணிகப் பத்திரிகைகள் பெண்ணியம் பேசுவதில் ஆக்கபூர்வமாகக் கவனம் செலுத்தத் தொடங்கின. **தினமலர்** நாளிதழும் **இந்தியா டுடே** தமிழ்ப் பதிப்பும் சாதாரண வாசகர் மத்தியில் பெண்ணியத்தை எடுத்துச் சென்றன. *95, 96* ஆம் வருடங்களில் **இந்தியா டுடே பெண்கள் மலர்** வெளியிட்டு, பரதம், இசை, கவிதை, திரைப்படம், நவீன நாடகம் எனப் பல்வேறு கலைத்தளங்களிலும், அரசியல், நிர்வாக வாணிகம், மற்றும் அலுவலகத் தளங்களிலும் பரந்துப்பட்ட பெண்ணியப் பார்வையைப் பதித்தது.

தொண்ணூறுகள் தொடங்கி, அன்னை தெரசா மகளிர் பல்கலைக் கழகத்தில் சில குறிப்பிடத்தக்க முனைவர் பட்ட ஆய்வேடுகள் சமர்ப்பிக்கப் பட்டன. அவற்றில் **பெண் சிறைக் கைதிகள்** பற்றிய முனைவர் தி. கமலியின் ஆய்வும், **தி. ஜானகிராமன் நாவல்களில் பெண்ணியப் பார்வை** என்ற முனைவர் பரிமளத்தின் ஆய்வும், **கரகப் பெண்கலைஞர்கள்** பற்றிய முனைவர் ஜெயராணியின் ஆய்வும், **தமிழ் நாவல்களில் இரண்டாந் தரக் குடிநிலையும் மீட்சியும்** என்ற முனைவர் மல்லிகாவின் ஆய்வும், **தமிழ்ச் சிறுகதைகளில் பாலின வேறுபாடும் பெண்ணடிமைத்தனமும்** என்ற முனைவர் வீ. நிர்மலாராணியின் ஆய்வும் பெண்ணிய ஆய்வைச் சமூகவியல், உளவியல் தளங்களில் விரிவுபடுத்தின என்பதோடு, பெண்ணியத் திறனாய்வின் பன்முக நோக்குகளையும் அறிமுகப்படுத்தின. ஆனால் துரதிஷ்டவசமாக இவ்வாய்வுகள் நூல் வடிவம் பெறாததால் கருத்துக்கள் பரவ வாய்ப்பில்லாமல் போயிற்று.

மகளிர் பல்கலைக்கழகம் தொண்ணூறுகளின் மத்தியில் **நடப்பியல் வரதட்சணை நடைமுறைகள், பெண்மை-போலிப் புனைவு-எதிர்விளைவு, கற்பு-சதி-கலாச்சாரம்** என்ற நூல்களை வெளியிட்டது. மிகக் குறைவான பிரதிகள் வெளியிடப்பட்டதால் இந்நூல்களும் பரவலாக ஆய்வாளர்கள் மத்தியில் சென்று சேர வாய்ப்பில்லாமல் போயிற்று.

*1995*ஆம் வருடம் தஞ்சாவூரில் நடந்த எட்டாவது உலகத் தமிழ் மாநாட்டில் பெண்ணியத்திற்கு என ஓர் அமர்வு ஒதுக்கப்பட்டிருந்தது. அந்த அமர்வில் கலை, இலக்கியம், பண்பாடு, சமூகம், அரசியல் என்ற தளங்களில் பெண்ணியக் கருத்தாக்க வளர்ச்சி பற்றிக் கட்டுரைகள் வாசிக்கப்பட்டு விவாதிக்கப்பட்டன. இதற்கிடையில் மதுரையைச் சேர்ந்த ஞானத் தமிழ்ப் பண்பாட்டுக் கழகம் பெண்ணியக் போக்குகளை முன்னிறுத்தி, குற்றாலத்தில் மூன்று நாள்கள் கருத்தரங்கை நடத்தியது. அக்கருத்தரங்கக் கட்டுரைகள் **தமிழியல் - பெண்ணியம்** என்ற பெயரில் நூலாக வெளிவந்தன. மதுரையைச் சேர்ந்த ஐந்தமிழ் ஆய்வாளர் மன்றம் **கலை இலக்கிய ஆய்வும் அணுகுமுறைகளும்** என்ற பெயரில் வெளியிட்ட தொகுதிகளிலும் பெண்ணியம் பற்றிய கட்டுரைகள் இடம்பெற்றிருந்தன. தமிழியலில் வெளிவந்த கட்டுரைகளைப் பேராசிரியர் முருகரத்தினம், 'எல்லாக் கட்டுரைகளும் பெண்ணியச் சிந்தனை போக்குடையன என்று சொல்வதற்கில்லை. ஒரு சில அப்பாற்பட்டன. பல கட்டுரைகள் தமிழ்ச் சமூகத்தில் மகளிர்க்கு நிகழும் குறைகளையும் கொடுமைகளையும் எடுத்து விளக்குகின்றன. மகளிர் பற்றிய தமிழர் சிந்தனையை இவற்றில் அறிய முடிகிறது' (கு. முருகரத்தினம், தமிழியல் - பெண்ணியம், ஆய்வு அறிமுகப் பக்கம்) என்று மதிப்பிட்டுள்ளார். இது பெரும்பான்மையான ஆய்வரங்கக் கட்டுரைகளின் ஒட்டுமொத்த மதிப்பீடாகவும் அமைந்துள்ளது.

*1998* ஏப்ரலில் மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை **பெண்ணியம் - கோட்பாடும் தமிழ்ச் சூழலும்** என்ற பொருளில் மூன்று நாள் ஆய்வரங்கை நிகழ்த்தியது. அதில் பெண்ணிய ஆய்வாளர்களும், சில பத்திரிகையாளர்களும் கலந்து கொண்டு, **பெண்ணியம் - அடிப்படைகள், மேற்கத்திய பெண்ணியம், இடதுசாரிப் பெண்ணியம், பெண்ணிய விமரிசனம், பெண் சிந்தனைகள் - பெரியாரும் அவரது இயக்கமும், புதிய தமிழ்ப் பெண்களைத் தேடி: திரு. வி.க., பாரதி, பாரதிதாசன், இந்தியப் பெண் - இந்துப் பெண், பெண் எழுத்து - நாட்டார் கதைகள், பொருள்சார்பு எழுத்துக்கள், பெண்ணிய வாசிப்பு, பெண் உடல் - பெண் மொழி - பெண் வெளி, நுகர்வு கலாச்சாரமும் பெண் பிம்பங்களும், தகவல் ஊடகங்களும் பெண் பிரதிமைகளும்** என்று பல்வேறு பரிமாணங்களிலும் கட்டுரை வாசித்தார்கள். ஆக்கப்பூர்வமான விவாதங்களோடு நடந்த இக்கருத்தரங்கக் கட்டுரைகளும் நூல்வடிவம் பெறவில்லை.

சென்னை கிறித்துவக் கல்லூரி, இராணிமேரி கல்லூரி தமிழ்த் துறையினர் அவ்வப்போது பெண்ணியம் பற்றிய கருத்தரங்குகளை நடத்தி வருகின்றனர். சென்னை கிறித்துவக் கல்லூரியின் தமிழ்த் துறையினர் அக்கல்லூரியின் மகளிரியல் துறையோடு இணைந்து வருடந்தோறும் நடத்தும் பெண்ணியக் கருத்தரங்குகளில் **பன்முக நோக்கில் பெண்** (மானுடவியல், உளவியல், பெண்ணியம், மரபிலக்கியம், உயிரியல்), **தகவல்**

**தொடர்பு ஊடகங்களில் பெண்** (தமிழ்த் திரைப்படங்கள், இதழ்கள், வானொலி, தொலைக்காட்சி நிகழ்வுகள்) என்று பல்வேறுபட்ட தளங்களில் பெண்ணியத்தை நோக்குகின்றனர். உடனடியாக அந்நூல்களை வெளியிட்டு, தம் மாணவர்களுக்கே பாடநூலாக அவற்றை அறிமுகப் படுத்தியுள்ள அக்கல்லூரியின் பெண்ணிய ஆய்வுப் பணி குறிப்பிடத்தக்க ஒன்றாகும். அதன் விளைவுகள் அடுத்து வரும் காலக்கட்டங்களில் எதிரொலிக்க வாய்ப்புண்டு.

*1998*இல் முனைவர் இரா. பிரேமா பெண்ணியத் திறனாய்வின் பன்நோக்குப் பரிமாணங்களை அறிமுகப்படுத்தி, அதைச் சமூகம் மற்றும் இலக்கியங்களில் ஆராய்ந்து **பெண்ணியம்-அணுகுமுறைகள்** என்ற நூலை வெளியிட்டுள்ளார். விடியல் பதிப்பகம் **மார்க்சிய பெண்ணிய உறவும் - முரணும்** என்ற நூலை வெளியிட்டுள்ளது. இந்நூலில் கெய்ட் கார்மன் என்ற பெண்ணியவாதியின் எழுத்தும், அவர் எழுத்திற்கு எதிராக வந்த எழுத்துக்களும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. ஈழத்திலிருந்து **நான் ஒரு பெண்** என்ற பன்நோக்கு பெண்ணியக் கட்டுரைத் தொகுப்பு நூலும், சிங்கப்பூரிலிருந்து **துரித மாற்றம் காணும் சமுதாயங்களில் இளம்பெண்கள்** என்ற நூலும் வெளி வந்துள்ளன.

இதுவரை சுட்டிய பெண்ணிய ஆய்வுகளையும் அவற்றின் போக்குகளையும் ஒட்டுமொத்தமாக மதிப்பிடும்போது கீழ்க்கண்ட முடிவுகளுக்கு வர இயலுகிறது.

*(1)* பெண்ணியக் கோட்பாடு தமிழ்ச் சூழலில் இருத்தலுக்கே போராட வேண்டிய சூழலில் வளர்ந்து வந்துள்ளது. மேலைநாடுகளைப் பொறுத்தவரை பெண்ணியம் புரட்சிகரமான இயக்கம். ஆனால், தமிழகத்தைப் பொறுத்தவரை அதற்குப் புரட்சிகரமான செயல்பாடு இல்லை. அதனால் பெண்ணிய ஆய்வுகளில் புரட்சி தலைதூக்க வில்லை. சாதாரண ஆய்வுகளே தொடக்கத்தில் தமிழ்ச் சூழலில் புரட்சிகரமானவைகளாக உணரப்பட்டன.

*(2)* பெண்ணிய ஆய்வுகள் தமிழ்ச் சூழலில் பரவலாக்கப்பட்ட அளவு ஆழமாக்கப்படவில்லை. அழுத்தமாக உணர்த்தப் படவில்லை.

*(3)* மேலைநாட்டுப் பெண்ணியச் சிந்தனையாளர்களிடையே பல கருத்து முரண்பாடுகள் உண்டு. அம்முரண்பாடுகளை உள் வாங்கிக் கொள்ள ஆழ்ந்த வாசிப்பு - மறுவாசிப்புத் தேவை. அது இல்லாது, மேலோட்டமான வாசிப்பில் அங்கொன்றும் இங்கொன்று மாகச் சில கட்டுரைகளை மொழிபெயர்த்துத் தரும் போக்கே தொடக்கம் முதல் இன்று வரை நிலவி வருகிறது.

*(4)* பெண்ணியம் என்பது நாட்டுக்கு நாடு, பண்பாட்டுப் பாதிப்புகளுக்கு ஏற்ப விளக்கப்படவேண்டிய ஒன்று. ஒட்டு

மொத்தமான விளக்கம் எல்லா நாட்டுக்கும் பொருந்தும் என்று கூற இயலாது. பெண்ணியம் இந்தியச் சூழலுக்கு ஏற்ப எழுதப்பட வேண்டும். இத்தகைய அடிப்படை நூல்கள் இல்லாமல் பெண்ணியத் திறனாய்வு மேற்கொள்வது அடித்தளமில்லாததாகும்.

(5) மேலைநாட்டுப் பெண்ணியக் கல்வியாளர்கள் செயல்பாட்டாள ராகவும் இருக்கின்றனர். செயல்பாட்டாளர்களாக இல்லாத ஒரு சில கல்வியாளர்கள் கூட, செயல்பாட்டாளர்களுடன் இணைந்து செயல்படுகின்றனர். நம் நாட்டைப் பொறுத்தவரை, பெண்ணியச் செயற்பாட்டாளர்கள் வேறாகவும், பெண்ணியக் கல்வியாளர்கள் வேறாகவும் இருப்பதும், இருவரும் ஒருவரோடு ஒருவர் தொடர்பு கொள்ளாமல் விலகி நிற்பதும் ஒரு பெரும் குறையாக அமைந்துள்ளது. கல்வியாளர்களும், செயற்பாட்டாளர்களும் ஒன்று சேரும்போதே, பெண்ணியமும் அதன்வழி வரும் திறனாய்வும் எழுச்சி பெற இயலும்.

# பெண்ணியப் படைப்புக்கள்

அரங்க. மல்லிகா

பெண்களுக்கான பிரச்சினைகளை ஆணாதிக்க, சாதிய அரசியல், பொருளாதாரச் சூழலிலிருந்து இனங்கண்டு அவற்றிற்கு எதிரான ஓர் இயக்கத்தை முன்னெடுப்பது பெண்ணியம். பெண்ணியம் என்ற சொல் மேலைக் கலாச்சாரத்தில் உரிமைகளற்ற பெண்களின் கலகக்குரலில் பிறந்தது. ஓட்டுரிமையற்ற, கல்வி உரிமையற்ற பெண்கள் ஒன்று சேர்ந்து எழுப்பிய கிளர்ச்சியில் பெண்ணியம் உருப்பெற்றது. பாதிக்கப்பட்ட பெண்களை ஒன்று சேர்த்து *1910*இல் கிளாராஜெட்கின் முதன் முதலில் குரல் கொடுக்கிறார். ஆனால் இந்த நிலையில் பெண்ணியம் ஒரு திட்டவட்ட வரையறையைத் தனக்கெனக்கொண்டிருக்கவில்லை. ஏனென்றால் பெண்கள் ஆண்களால் சுரண்டப்பட்டும், ஒடுக்கப்பட்டும், பாலியல் ரீதியில் அடக்கப்பட்டும் வருவதற்கான தளங்களை, நிறுவனங்களைக் கேள்விக்குட் படுத்தாமல் மேல் எழுந்த வாரியான பெண்ணிய விமரிசனம் அர்த்தமற்ற தாகிவிடும்.

எனவே பெண்ணியம் என்பது மேலைநாடுகளில் தோன்றி இயக்கமாக வளர்ந்தாலும் அதன் கோட்பாடுகளை உலகளாவிய பெண் விடுதலை பற்றிய சிந்தனைகளுடன் வைத்து எண்ணிப்பார்க்க இயலுகிறது. வெவ்வேறு நிலையில் பெண் விடுதலைப் போராட்டங்கள் வெவ்வேறு காலக் கட்டங்களில் பல்வேறு நாடுகளில் இடம்பெற்று வந்தன என்பது வரலாறு காட்டும் உண்மையாகும். இந்த அடிப்படையில் பெண்ணியத்தை முன்னெடுத்துப் பேசிய சிந்தனையாளர்களுள் மேரிவுல்ஸ்டன்கிராஃப்ட்

(Marywoolstancraft) குறிப்பிடத்தக்கவர். இவர் பெண்களுக்கு ஓட்டுரிமை, கல்வி உரிமை ஆகியவற்றை வற்புறுத்தியுள்ளார். இவரைத் தொடர்ந்து ஜான் ஸ்டுவர்ட் மில் (John Stuart Mill) என்பவர் பெண்களுக்குக் கல்வியும், பொருளாதாரச் சுதந்திரமும் தேவை என எடுத்துக் கூறியுள்ளார். இவர்களைத் தொடர்ந்து கேட் மில்லட் என்ற தீவிரப் பெண்ணியவாதி பெண்களின் உடல் அரசியலாக்கப்படுவதை எதிர்த்துப் பேசியுள்ளார்.

இந்தப் பெண்ணியவாதிகளின் கோட்பாடுகள் உலகளவில் ஒரு கலாச்சார இணைவை ஏற்படுத்துவதாக இருந்தாலும், பெண்களின் அடக்கு முறை (suppression) மற்றும் ஒடுக்குமுறை (oppression) மற்றும் பாலியல் வன்முறை என்பன எல்லாவிடங்களிலும் ஒரே மாதிரியானதாக இருந்தாலும் மண்ணிற்கேற்ப அதன் கனம் வேறுபட்டதாக இருக்கின்றது. இந்தச் சூழ்நிலையில் இந்தியாவில் பெண்ணியம் என்பது கோட்பாடாக உருப் பெறவில்லை. மாறாக, பெண்களுக்கான சிக்கல்கள் இனமறியப்பட்டுப் பெண்களுக்கு விழிப்புணர்வு ஏற்படுத்தப்பட்டது. பெண்கள் பிரச்சினைகள் இந்திய அளவில் *18*ஆம் நூற்றாண்டில் ராஜாராம் மோகன்ராயால் பேசப்பட்டன. இவர் **சதி** என்கிற உடன்கட்டை ஏறுகிற கொடுமையைச் சட்டப்பூர்வமாக எதிர்த்தார். விதவை மறுமணம், பெண் கல்வி முதலியன வற்றையும் ஆதரித்தார். குழந்தை மண எதிர்ப்புக்கும் ஆதரவு தந்துள்ளார். இவரைத் தொடர்ந்து பெண்களுக்காக வேதநாயகம்பிள்ளை, **நீதிநூல்** *(1858)*, **பெண்கல்வி பெண்மதிமாலை** *(1869)*, **பெண்மானம்** *(1870)* முதலியனவற்றை எழுதியுள்ளார். ஆனால் இவை பெண்ணின் தன்னிலையைப் பேசுவனவாக இல்லை. **பிரதாப முதலியார் சரித்திரம்** பெண் பிரச்சினையை முன்னெடுத்து வைக்கின்றது. ஆனால் இவர் காலக் கட்டத்தில் எழுந்த படைப்புகள் பெண்களின் சிக்கல்களை மையப்படுத்தி எழுதப்பட்டனவே தவிர அவற்றைப் பெண்ணியப் படைப்புகள் என்று குறிப்பிடமுடியாது.

பாரதியாரின் படைப்புக்களில் **கற்பு நிலையென்று சொல்ல வந்தார் இரு கட்சிக்கும் அஃது பொதுவில் வைப்போம். வற்புறுத்திப் பெண்ணைக் கட்டிக் கொடுக்கும் வழக்கத்தைத் தள்ளி மிதித்திடுவோம்** என்ற கவிதை வரிகளைப் பெண்ணியப் படைப்புகள் எவ்வாறு அமைய வேண்டும் என்பதற்கு உதாரணமாகச் சொல்லலாம். **எட்டும் அறிவினில் ஆணுக்கிங்கே பெண் இளைப்பில்லை காண் என்று கும்மியடி** என்ற வரிகள் **சமத்துவத்தை நோக்கி** (towards equality) என்ற பெண்ணியத்தின் வரையறையை நிர்ணயிக்க உதவுகின்றன.

பெண்ணியப் படைப்புக்களை ஆய்வு செய்ய முனையும்பொழுது பாரதியைத்தான் முன்னோடியாகக் கொள்ள வேண்டியிருக்கிறது. பெண்ணியப் படைப்புகளுக்கான வரையறையை,

1. பெண்கள் முதன்மை இடம் பெறுதல்
2. குடும்ப உறவுகள் தளைகளாக இருந்தால் அவற்றை விட்டு வெளிவர முனைதல்

3. குடும்ப நிறுவன ஆணாதிக்கப் பாரம்பரியத்தை எதிர்த்தல்
4. குடும்ப - சமூக- பாலியல் - பொருளாதார வன்முறைகளைச் சாடல்
5. பெண்களின் மீட்சி - படிநிலை வளர்ச்சிக் காட்டல் என்ற அடிப்படையில் பகுத்துக் கொள்ளலாம்.

சுருக்கமாக, பெண்கள் அடக்கப்பட்டிருக்கிறார்கள் என்ற புரிதல் பல்வேறு வகையான அரசியல் கண்ணோட்டம் கொண்ட பெண்களால் சமுதாயத்தால், அவர்களின் உரிமை பற்றிய கருத்துக்களை ஏற்றுக் கொள்ளக் கூடியவர்களால் படைக்கப்படுவது எனக் கருதலாம். இதில் பெண்களின் அந்தரங்கம் அரசியல் ஆக்கப்படுவது வரவேற்கப்படுகின்றது. குறிப்பாக, தந்தையாதிக்க, ஆணாதிக்க, சாதியத்திற்கு எதிராகப் பெண்களின் அனுபவம் இலக்கியமாகப் பதிவு செய்யப்பட்டு வருகின்றது. ஆனால் இந்தியச் சூழலில் குடும்ப அமைப்பு வலுவாகக் காலூன்றி யுள்ளதால் பெண்ணின் விடுதலை குடும்ப எல்லைக்குள் நின்றே சிந்திக்கப்பட்டது. இந்தச் சிந்தனையைப் பிரதிபலித்தவர் பாரதிதாசன். நாவலாசிரியர்களுள் குறிப்பாக லஷ்மி, இந்துமதி, சிவசங்கரி, ஜோதிர்லதா கிரிஜா, அனுராதா ரமணன், சூடாமணி, இன்னும் பலர் பெண் பிரச்சினையை மையப்படுத்தி எழுதி வந்துள்ளனர். ஆனால், பெண் உரிமை பெற்றால் குடும்ப - சமூக நிறுவனக் கட்டமைப்பு குலைந்துவிடும் என்ற ஆணின் பயம் பெண்ணிற்குள்ளும் வேர் விட்டிருப்பதால் இவர்களின் படைப்புக்களில் பெண்ணியச் சாயலைப் பார்க்க முடிவதில்லை. இதற்கு, பெண்ணின் சமூக இருத்தல் பயமும் காரணமாக அமைகின்றது. குறிப்பாக, கற்பு கருத்தாக்கம் பெண்ணின் மரபுகளைக் கட்டிக் காத்து வருவதால் பெண் விடுதலை கற்பை வலியுறுத்தியே பேசப்பட்டு வருகிறது. உதாரணமாக, இந்தக் கற்பு வேண்டப்படுவதற்கு அடிப்படைக் காரணமாக, 'தனக்குப் பிறக்கும் குழந்தை 'தன் குழந்தை' என்ற உறுதியைக் கணவன் எதிர்பார்க்கிறான். தன் தனிச்சொத்தைத் தன் பிள்ளைக்கு வழங்க வேண்டும் என்ற நினைவே கணவனது நினைவில் மனதில் பதிந்திருப்பதாகும். சொத்துடைமை, குடும்ப அமைப்பு, கணவனின் ஆதிக்கத்தில் இருப்பதுவே பெண்ணை அடிமையாக்க வாய்ப்பளிக்கிறது' என்ற செ. கணேசலிங்கனின் கூற்று, கற்பு ஆணாதிக்கத்தை உறுதிப் படுத்த எழுந்த மதிப்பீடு எனக் கருதமுடிகிறது. இந்தக் கருத்தாக்கத்தைப் புரிந்துகொண்டு எழுதும் எழுத்தாளர்கள் கூட ஆணாதிக்க மரபில் ஊறியவர்களாக இருப்பதால் ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள்ளேயே பெண் விடுதலை உணர்வை இலக்கியமாக்குவதில் கவனம் செலுத்துகின்றனர். உதாரணம் ஜெயகாந்தன்.

ஆனால் இந்த மதிப்பீட்டை உடைத்த பெரியார், அம்பேத்கர், ஜோதி பாபுலே, பெண் உரிமையைச் சமுதாய உரிமைகளோடு இணைத்து ஆதிக்கத்துக்கு எதிராகக் குரல்கொடுத்த வைகுண்டசாமி ஆகியோர் பெண் விடுதலையைத் தீவிரமாகப் பேசினார்கள்.

இலக்கியத்தில் குறிப்பாக, தமிழ்ப் படைப்புக்களில் அம்பையின் **வீட்டின் மூலையிலொரு சமையலறை** குறிப்பிடத்தக்கது. இவர் பெண்ணின் தன்னிலையை (subjectivity) விரிவாகப் பேசியுள்ளார்.

பெண்ணின் உணர்வுகளை, அந்தரங்கப் புனிதங்களை அரசியலாக்கிய பெண் எழுத்தாளர்களில் அம்பை குறிப்பிடத்தக்கவர். பெண்ணிற்கான மொழியை, பெண்ணின் தன்னிலை உணர்வைப் படைப்பாகத் தந்தவர். 'கம்பளிக் கோட்டுக்குள்ள வயிறு பெரிசா இருக்கும். மளக்குனு பின்பக்கமா வலிக்கும். விட்டுவிட்டு அப்புறமா கிட்டக்கிட்ட வலி. மூச்சை நன்னா விடணும். வலிக்குச் சரியா. திடீர்னு பெரிய பாறாங்கல்லை உருட்டற பலத்தோட அழுத்தி மூச்சைப் பிடித்துக் கத்திக் கிட்டே முக்கித் தள்ளி.... ஏதோ ஒண்ணு எறங்குறதை உணர்ந்துக்கிட்டே.... அது தலையால முட்டிக்கிட்டே வெளில வரபோது வீல்னு... கத்தி அது பச்சுனு தப்ளை மாதிரி பொதக்குனு விழுந்து பசபசன்னுட்டு ரத்தம், சளி எல்லாத்தையும் மேல தடவிட்டு தொப்புள் கொடில தொங்கிட்டு அழும்.' *(வீட்டின் மூலையிலொரு சமையலறை, ப.130)* பெண் உணர்வுகள் எந்தவித மறைவுமில்லாமல் மொழியாக்கப்பட்டுள்ளது அம்பையின் எழுத்துக்களில்தான் தொடங்குகின்றது.

இராஜம்கிருஷ்ணன் **காலந்தோறும் பெண்** *(1989)*, **காலந்தோறும் பெண்மை** *(1990)*, **வரலாற்றில் பெண்கள்**, மற்றும் பெண்ணின் சுய இருத்தலை மையமிட்ட பல புதினங்களைப் படைத்திருக்கிறார். இலங்கை எழுத்தாளர் செ. கணேசலிங்கன் **பெண்ணடிமை தீர** மற்றும் **திருக்குறளில் பெண்ணியப் பார்வை** *(2000)* ஆகியன எழுதியுள்ளார். சாந்தி சச்சிதானந்தனின் **பெண்களின் சுவடுகளில்** குறிப்பிடத்தக்கது. அன்னை தெரசா மகளிர் பல்கலைக்கழகம் கடந்த *15* ஆண்டுகளாகப் பெண்ணிய ஆய்வுகளைப் பல்வேறு துறைகளோடு பொருத்தி ஆய்வு மேற்கொண்டுள்ளது.

**சுட்டும் விழிச்சுடர்** என்ற மாதப் பத்திரிக்கையில் வெளிவந்த **எந்தன் தோழா** என்ற கவிதை பெண்ணியச் சிந்தனையை மையமாகக் கொண்டு வெளிவந்தது.

ஜானகிராமன் பாலியல் விடுதலையை மையமிட்ட புதினங்களைப் படைத்துள்ளார். அசோகமித்திரன் பெண்ணின் உணர்வுகள் மதிக்கப்பட வேண்டும் என்பதைக் கருவாக்கியிருக்கிறார். பெண் எழுத்தாளர்களுள் திலகவதி ஐ.பி.எஸ்., பெண் அடக்குமுறையை நாவலின் கதையாக்கியிருக் கிறார். வாஸந்தி பெண் விடுதலையை நாவலாக்கியிருக்கிறார். வெங்கட்ராம் பெண்ணின் இருத்தலைப் புதிய கோணத்தில் தந்திருக்கிறார். பிரபஞ்சன் ஆண்களோடு பெண்கள் சமம் என்ற சிந்தனையை மையப்படுத்தி எழுதியிருக்கிறார். அண்மையில் வெளிவந்த க.வை. பழனிசாமியின் **மீண்டும் ஆதியாகி** என்ற, பெண்ணைப் பிரதானமாக்கி, மாறுபட்ட கோணத்தில் எழுதப்பட்ட நாவல் குறிப்பிடத்தக்கது. சில பெயர்கள் விடுபட்டிருக்கலாம்.

நாடகத் துறையில் மங்கையின் குரல் பெண்ணியக் குரலாக ஒலித்து வருகிறது. கே.ஏ. குணசேகரனின் **பலிபீடம், பவளக்கொடி** பெண்ணியத்தை நாடகத் துறையில் அரங்கேற்றின.

தலித் பெண்ணியக் குரலை முன்னெடுப்பவர்களில் பாமா, சிவகாமி ஐ.ஏ.எஸ். குறிப்பிடத்தக்கவர்கள். ராஜமுருகு பாண்டியனின் கவிதை, மதிவண்ணன் கவிதை முதலியன பெண் மொழியை, பெண் குரலை உயர்த்திப் பிடிக்கின்றன. இன்குலாபின் **ஔவை நாடகம்** சிறப்பிடம் பெறத்தக்கது.

மரபு வழி இறுகிப்போன நிறுவனங்களுக்கு எதிரான கலகக் குரலின் பதிவுதான் பெண்ணியம். இதைப் பிரதிபலிக்கும் படைப்புக்கள் தமிழில் குறைவு. எனினும் பெண்மொழி உருவாக்கப்படும் சூழலுக்குள் படைப்பாளர்கள் தள்ளப்படுவதால், பெண்ணின் வாழ்க்கைச் சிக்கல்கள் கலாச்சார மாற்றத்தை உருவாக்கும் படைப்புக்களாக வெளிவர உதவும். பெண்ணியப் படைப்புகள் மேலும் அதிகரிக்கும்.

# சுவடிப் பதிப்புகள்

பூ. சுப்பிரமணியம்

## பதிப்புப் பணிகள் - பொது நிலை

ஆயிரத்து எண்ணூற்றுப் பன்னிரண்டில் வெளியான திருக்குறள் முதலாகப் பல சுவடிப் பதிப்பு நூல்கள் தமிழில் வெளிவந்துள்ளன. சுவடிப் பதிப்பாசிரியர்கள் தங்கள் அறிவுத் திறனுக்கும் ஆய்வுத்திறனுக்கும் ஏற்பச் சுவடிப் பதிப்பு முறைகளைக் கையாண்டிருக்கிறார்கள். ஆனால், தாங்கள் கையாண்ட நெறிமுறைகளைப் பிறர் அறியுமாறு வெளிப்படுத்தினார் களில்லை.

'74 சுவடிப் பதிப்பு நூல்களை வெளியிட்ட டாக்டர் உ.வே.சா. அவர்கள், தமக்குப்பின்னால் யார்? என்பதை நினைத்துக்கூடப் பார்த்தாரில்லை. ஆனால் சுவடி நூலகத்திலேயே பல ஆண்டுகள் ஊறி, சுவடிகளைத் திரட்டும் வழிவகைகள், பாதுகாக்கும் நெறிமுறைகள், பழம்பெருஞ் சுவடிப் பதிப்புகள் போன்றவற்றை ஆழ்ந்தறிந்து, அத்துறையிலேயே பட்டம் பெற்றுத் தம்மை முழுமையாக்கிக் கொண்டு, இடையிடையே சில சுவடிப்பதிப்பு நூல்களை வெளியிட்டு வருவதோடல்லாமல், **ஆண்டுதோறும் ஐந்து** சிறந்த சுவடிப் பதிப்பாசிரியர்களையும் உருவாக்கி வரும் பணிகளை அடிப்படையாகக் கொண்டு, பதிப்பாசிரியர் பலருள்ளும், இவரை **டாக்டர் உ.வே.சா. அவர்களின் வழித்தோன்றல்** என்ற சிறப்பிற்குரியவராகத் தேர்ந்தெடுத்திருக்கிறோம்."[1] என்னும் உரை பழம்பெருஞ் சுவடிப் பதிப்புப் பேரறிஞர்கள், தாங்கள் கையாண்ட பதிப்பு நெறிமுறைகளைப் பிறர் அறியு மாறு வெளிப்படுத்தினார்களில்லை என்னுங் கருத்தை வலியுறுத்துகிறது.

*1979* அக்டோபர் *8*ஆம் நாள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சுவடிப் பதிப்பு நெறிமுறைகளுக்கு வித்திட்ட நாளாகும். அந்த நாள் முதல் தமிழ்ச் சுவடிப் பதிப்பு வெளியீடுகளின் போக்குச் சிறிது தெளிவடைந் திருக்கிறது என்பது உண்மை. முதலாவதாகத் தமிழ்ச் சுவடிப் பதிப்புகள் என்னும் பொருளில் பல ஆய்வுச் செய்திகள் வெளிவந்துவிட்டன; வெளிவந்து கொண்டிருக்கின்றன.

இங்கே அளிக்கப் பெற்றிருக்கும் சுவடிப் பதிப்புச் செல்நெறிகள் என்னும் பொதுத் தலைப்பு,

*1.* சுவடிப் பதிப்பு வெளியீடுகளின் செல்நெறி
*2.* பதிப்பு நெறிமுறைகளின் செல்நெறி

என்னும் இருவகைப் போக்குகளை உள்ளடக்கியதாகிறது.

**1. முதனிலை - சுவடிகள்**

சுவடிப் பதிப்பு வெளியீட்டுப் பணிகளுள் முதலிடம் பெறுவது சுவடி திரட்டும் பணி. தாங்களே இயற்றிய அல்லது தாங்கள் படித்த, எழுதி வைத்திருந்த அல்லது சேர்த்து வைத்திருந்த சுவடிகளை முறையாக அச்சிட்டு வெளியிட்ட நிலையே சுவடிப் பதிப்பின் முதல் நிலையாகிறது.

ஞானப் பிரகாசன், தாண்டவராய முதலியார், இராமச்சந்திரக் கவிராயர்........ களத்தூர் வேதகிரி முதலியார் *(1795-1852)* ஆகியோரைப் போன்ற தனியார் பலரும் இப் பணியை மேற்கொண்டனர். சுவடி திரட்டும் பணி இங்கு இடம் பெறவில்லை.

இதே நிலையில் தூய பதிப்பு முறைகள் பலவற்றை மேற்கொண்டு *60* நூல்களைப் பதிப்பித்து வெளியிட்ட ஆறுமுக நாவலர் *(18-12-1822 - 5-12-1879)* பணியிலும் சுவடிதேடும் பணி மிகுதியாக இடம் பெறவில்லை.

இருக்கும் சுவடிகள் அழிவை நாடுமுன் அவற்றை அச்சிட்டுவிட வேண்டும் என்ற ஆர்வத்தில் சுவடிப் பதிப்புகளை மேற்கொண்ட சி.வை. தாமோதரம் பிள்ளையைப் *(12-09-1832 - 1-1-1901)* போன்ற பதிப்பாசிரியர் களுக்கும் சுவடி திரட்டும் பணி மிகுதியாக ஏற்படவில்லை.

தாங்கள் பதிப்பிக்கும் நூலுக்குரிய வேறுபல சுவடிகளை, ஒப்பிடுவதற் காகத் தேடிக் கண்டறியும் பணியை ஓரளவு மேற்கொண்டவர்கள் இவர்கள்.

*74* நூல்களைச் சுவடிப் பதிப்பு நூல்களாக வெளியிட்ட பெருமைக்குரிய டாக்டர் உ.வே. சாமிநாதையர் *(19-2-1855 - 28-4-1942)* போன்றவர்கள், சுவடி தேடி அலைந்த ஊர்கள் எத்தனையோ! தனியார் பணிகளாகிய இவையனைத்தும் நம் நாட்டு விடுதலைக்கு முந்தியவை.

விடுதலைக்குப் பிறகு சுவடிகளைத் திரட்டிப் பாதுகாத்து வைத்து, வெளியிடும் பணியை மேற்கொண்டவை பெரும்பாலும் சுவடி நிறுவனங்களே யாயின. அவை, *1.* அரசு நிறுவனம், *2.* தனியார் நிறுவனம் எனும் இரண்டு நிலைகளில் இடம்பெறுகின்றன. இவற்றுள்,

1. தனியார் நிறுவனங்களுக்குச் சுவடி திரட்டிப் பாதுகாக்கும் முறைகளில் ஏற்படும் பலதிறப்பணிகளுக்குரிய செலவினங்களை ஏற்க இயலாத நிலை.

2. அரசு நிறுவனங்களுக்கோ, நிறுவனத் தலைவர்களுக்கு உரிமை இன்மை, படிப்படியான மேலலுவலர் பலரின் இசைவு பெறுவதில் ஏற்படும் பல சிக்கல்கள். இத்தகு நிலைகளால் சுவடி திரட்டிப் பாதுகாக்கும் பணி விடுதலைக்குப் பிறகு மிகக் குறைந்தே நடைபெற்றுள்ளது. இவற்றிற்கு ஆதாரங்கள் பல உள்ளன. இக்கால கட்டத்தில் இலவசமாக நூலகம் தேடிக் கொண்டு வந்து கொடுக்கும் சுவடிகளே திரட்டி வைக்கப்பெற்றுள்ளன.

சித்தமருத்துவத்திற்கென மைய அரசும், தமிழ் நாடு அரசும் எடுத்துவரும் முயற்சிகளின் அடிப்படையில் சித்த மருத்துவச் சுவடிகளைத் திரட்டிப் பாதுகாக்கும் பணி அண்மைக் காலத்தில் ஓரளவு நடைபெற்று வருகிறது. இவை பொதுப்படக் கூறப்பெற்றவை. நிறுவனங்களையும் நடைமுறைகளையுஞ் சுட்டுவது மிகையாகி விடும்.

2. **வெளியீடுகள்**

முதற்பணியாகக் குறிப்பிடப்பெற்ற சுவடிச்செய்திகளையடுத்துப் பதிப்புச் செல்நெறிகள் காணப் பெறுகின்றன.

1. தொடக்க நிலையில் சுவடி அமைப்பு வேறு, அச்சு நூல் அமைப்பு வேறு என்று காண இயலாத நிலையிலேயே சுவடிப் பதிப்பு வெளியீடுகள் அச்சிடப்பெற்றன. அதாவது செய்யுள்கள் அடிகளாகக் கூடப்பிரித்து அமைக்கப் பெற்றிருக்காது. முன்னுரை, பதிப்புரை, ஆண்டு போன்ற எதுவும் இருக்காது.

2. அடுத்து ஆறுமுக நாவலர் அவர்களின் **திருத்தப் பதிப்புகள்** வெளியாயின. அவை **பிழையற்றவை**. செய்யுட்கள் முறையாக அமைந்தவை. பாடல் எண், அதிகாரம், நூல் விளக்கம், வரலாற்றுக் குறிப்புகள், அருஞ்சொற்பொருள், இலக்கணக் குறிப்புகள், சித்தாந்தக் கருத்துகள் எனப் பலவும் இடம் பெற்றவை.

3. மூன்றாவது நிலையில் **ஆய்வுப் பதிப்புகளாக** வெளிவந்தவை டாக்டர் உ.வே.சாமிநாத ஐயர் அவர்களின் பதிப்பு வெளியீடுகள். இவை முன்னுரை, நூல் சுருக்கம், நூலாராய்ச்சி, ஆசிரியர் வரலாறு, செய்யுள் முதற்குறிப்பகராதி, அரும்பத அகராதி போன்ற பலதிற ஆய்வு அமைப்புகளைக் கொண்டவை.

4. **புதிய வரன்முறை**களைக் கொண்டு நான்காவது நிலையில் உருவானவை ச.வையாபுரிப் பிள்ளையவர்களின் வெளியீடுகள். இவை **பொருளுணர்ச்சிக்கு முதன்மை** தரும் வகையின. **கடின சந்திகளைப்** பிரித்தமைத்தல், முன்னுரை முதல் சொல்லகராதி

வரை அனைத்தும் பெற்றவை. இவை இல்லாத வெளியீடுகள் குறைபாடுடையவை என்பதைச் சுட்டிக் காட்டியவர் வையாபுரிப் பிள்ளையவர்கள்.

**விடுதலைக்குப் பிறகு**

புதிய வரன்முறைகளை வகுத்துப் பதிப்பு நெறிமுறைகளை முழுமையாகக் கையாண்ட பதிப்பாசிரியராகிய ச. வையாபுரிப்பிள்ளை யவர்களின் பதிப்பு வெளியீடுகள் நாட்டு விடுதலைக்குப்பின் உருவானவை. களவியற் காரிகை முதலாகச் சுவடிப் பதிப்புகளும், தாமே இயற்றிய நூல்களுமாக நாற்பது நூல்கள் அவருடைய வெளியீடுகளாக வெளி வந்துள்ளன.

ச. வையாபுரிப்பிள்ளை அவர்களைத் தொடர்ந்து மு. சண்முகம் பிள்ளை, டாக்டர் இ. சுந்தரமூர்த்தி, டாக்டர் ச.வே. சுப்பிரமணியன், டாக்டர் அன்னிதாமசு போன்ற நாற்பதிற்கும் மேற்பட்ட பதிப்பாசிரியர்களின் சுவடிப்பதிப்பு வெளியீடுகளாக *600*க்கும் மேற்பட்ட நூல்கள் வெளி வந்துள்ளன. இவ்வெளியீடுகளின் பட்டியல், வெளியீட்டு நிறுவனங்களின் வரிசையில் இணைப்பில் இடம்பெறுகின்றன.

சங்க இலக்கியங்களும் இலக்கணங்களும், காப்பியங்களும் பக்தி இலக்கியங்களும், நிகண்டுகளும் அகராதிகளுமெனப் பெருவாரியான சுவடிப்பதிப்பு நூல்கள் விடுதலைக்கு முன்பே வெளியாகிவிட்டன. எனினும் விடுதலைக்குப் பிறகு வெளியான சுவடிப்பதிப்பு நூல்களின் எண்ணிக்கைகள் மட்டும் வெளியீட்டு நிறுவனங்கள், தனியார் என்னும் பிரிவில் வரிசைப்படுத்தியளிக்கப்படுகின்றன.

*1.* அரசினர் சுவடி நூலகம், சென்னை
நூல் வெளியீடுகள் - *74*
இதழ்வழி வெளியீடுகள் - *21*

*2.* சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்
மருத்துவ நூல்கள் - *15*
பிற நூல்கள் - *95*

*3.* உ.வே.சாமிநாதையர் நூலகம்
வெளியீடுகள் - *81*

*4.* சென்னைப் பல்கலைக் கழகம்
நூல் வெளியீடுகள் - *14*
இதழ்வழி வெளியீடுகள் - *10*

*5* மதுரைப் பல்கலைக் கழகம், மதுரை
நூல் வெளியீடுகள் - *17*

*6.* அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைநகர்
இராமாயணப் பகுதிகள் - *10*
பிற நூல் வெளியீடுகள் - *16*

7. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை
வெளியீடுகள் - 47

8. தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்
நூல் வெளியீடுகள் - 13

9. தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வுத் துறை, சென்னை
வெளியீடுகள் - 16

10. ஆசியவியல் நிறுவனம், சென்னை
ஆங்கில மொழிபெயர்ப்புடன் வெளியாகியுள்ளவை - 30

11. மைய, சித்தமருத்துவ ஆய்வு நிறுவனம், சென்னை
மருத்துவ நூல் வெளியீடுகள் - 13

12. தமிழ்நாடு சித்த மருத்துவ வாரியம், சென்னை
மருத்துவ நூல் வெளியீடுகள் - 16
மருத்துவ அகராதிகள் - 5

13. தாமரை நூலகம், சென்னை
மருத்துவ நூல் வெளியீடுகள் - 12
மறுபதிப்பு-மருத்துவநூல் வெளியீடு - 18

14. தமிழ் ஓலைச் சுவடிகள் பாதுகாப்பு மையம், சென்னை
வெளியீடுகள் - 8

இந்தப் பதினான்கு நிறுவனங்களின் வழி 531 சுவடிப் பதிப்புகள் வெளியாகியுள்ளன. இவற்றுள் சிறுபான்மை மறுபதிப்புகளாக வந்த வெளியீடுகள். இவற்றைத் தவிர,

1. மர்ரே இராசம் பதிப்பகத்தின் வழி, சங்க இலக்கியங்கள், திவ்வியப் பிரபந்தம், குலோத்துங்க சோழனுலா, நளவெண்பா போன்ற நூல்கள் தெளிவுப்பதிப்புகளாக வந்தன.

2. 1. அருணா வெளியீடு
2. இரத்தின சாமிநாயகர் & சன்ஸ்
3. கம்பன் கழகம்
4. கலியாணம் & கம்பெனி
5. கேரளப் பல்கலைக்கழகம்
6. கொழும்பு நேரு புத்தகச் சாலை
7. கௌமார மடம்
8. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
9. தேனோலை இதழ்
10. நியூசெஞ்சுரி புத்தக நிலையம்
11. ஜைன இளைஞர் மன்றம்

போன்ற வெளியீட்டுநிலையங்கள் மூலமாகச் சுமார் இருபது வெளியீடுகள் வந்துள்ளன.

3. அடுத்த நிலையில்
1. ஆறுமுகப் பெருமாள் நாடார்
2. ஊரனடிகள்
3. ந. கந்தசாமிப் பிள்ளை
4. குஞ்சன் பிள்ளை
5. பிச்சாண்டி நாடார்

போன்ற தனியார் பலர் வழி 8 சுவடிப் பதிப்புகள் வெளியாகியுள்ளன.

4. நான்காவது நிலையில்,

1. அகத்தியர் பரம்பரை வைத்திய சாலை
2. ஆதிமூலம் அச்சகம்
3. இராம - குருசாமி கோன் பதிப்பகம்
4. இராமச்சந்திர விலாசம்
5. சக்கரவர்த்தி பிரஸ்
6. சித்தர் பதிப்பகம்
7. திருமகள் விலாச அச்சுக் கூடம்

போன்ற அச்சகங்களின் வழியாகவும்,

1. குப்புசாமி நாயுடு, 2. குருசாமிக் கோன், 3. மதுரை இராமசாமிக் கோன் ஆகிய தனியார் செயற்பாட்டின் வழியாகவும் சுமார் 15 மருத்துவச் சுவடிப் பதிப்புகள் வெளியாகியுள்ளன.

**சுவடிப் பதிப்பு வெளியீட்டுச் செல்நெறிகள்**

நாட்டுவிடுதலைக்குப்பின் சுவடிப்பதிப்புகளாகச் சுமார் 600 நூல்கள் வெளிவந்துள்ளன என்பது பதிப்புச் செல்நெறியின் **உயர்ந்த வளர்ச்சியை** நிலைநாட்டுவதாகும் என்பது மறுக்க முடியாத உண்மை. இந்த வளர்ச்சி நிலைக்கு உறுதுணையாக நின்றவை அரசியற் செயற்பாடுகளாகும்.

1. 1949இல் தமிழ்நாடு அரசு பதிப்பு வல்லுநர் குழு ஒன்றினை நிறுவியது. அக்குழுவின் பரிந்துரைகளின்படி அரசினர் சுவடி நூலகமும் தஞ்சை சரசுவதி மகால் நூலகமும் பதிப்புப் பணிகளை மேற்கொள்ளத் தொடங்கின.

1909 முதல் 1942 முடிய 12 நூல்களை வெளியிட்டிருந்த அரசினர் சுவடி நூலகம் 1960க்குள் மேலும் 40 நூல்களை வெளியிட்டது.

1947 வரை எட்டு நூல்களை மட்டுமே வெளியிட்டிருந்த தஞ்சை சரசுவதி மகால் நூலகம் 1970க்குள் பத்து மருத்துவ நூல்கள் உட்பட 35 நூல்களை வெளியிட்டது.

சித்த மருத்துவத் துறை வளர்ச்சிக்காக மூன்று குழுக்களை உருவாக்கியிருந்த நிலையை மாற்றி, 1973இல் சித்த மருத்துவ அறிவியல் ஆராய்ச்சிக் குழு ஒன்றினை உருவாக்கியது தமிழ்நாடு அரசு. அதன் வழி வெளியானவையே சித்த மருத்துவச் சுவடிப் பதிப்புகளும், புதிதாக இயற்றப் பெற்று வெளியிடப்பெற்ற நூல்களுமாகும்.

**வெளியீட்டுச் செல்நெறிகளுள் - சுவடி விளக்க அட்டவணை**

சுவடிகளைப் பாதுகாத்து வரும் நிறுவனங்களில் பெரும்பாலும் ஆங்காங்குள்ள சுவடிகளைப் பற்றியறிய உதவியாக இரண்டு முறைகள் கையாளப்பெற்றுவருகின்றன.

1. ஆங்காங்குள்ள சுவடிகளுக்கான அகரவரிசை அட்டைகள் (Index Cards)

2. அந்தந்தச் சுவடிகளைப் பற்றிய விளக்க அட்டவணைகள். அகரவரிசை அட்டவணைகளின் மூலம் அங்குள்ள சுவடிகளின் பெயர், அந்தச் சுவடிகள் எந்தெந்த எண்களில் வைக்கப்பட்டு உள்ளன என்ற வரிசைஎண் ஆகியவற்றை அறியலாம். ஆனால் அந்தச் சுவடியில் என்ன செய்திகள் உள்ளன? அச்செய்திகள் செய்யுள் வடிவில் உள்ளனவா? உரைநடையில் உள்ளனவா? எத்தனை ஏடுகளில் உள்ளன? எவ்வளவு பாடல்கள் உள்ளன? அவை முன் இதுவரை அச்சாகாமல் உள்ளனவா? அச்சாகி யிருந்தால் யாருடைய வெளியீடு? இவ்வாறான முழுச் செய்திகளையும் சுவடியை எடுத்துப் பார்க்குமுன்னேயே அறியுமளவிற்குத் துணை நிற்பவையே சுவடிவிளக்க அட்டவணைகள். வெளியில் உள்ள அனைவருமே அறிந்து மேற்கொண்டு செயல்புரியத் துணை நிற்பன அந்தச் சுவடிவிளக்க அட்டவணைகள்.

இந்த விளக்க அட்டவணை வெளியீட்டு முறை, முழுக்க முழுக்கத் தொடங்கப்பெற்றது விடுதலைக்குப் பிறகே என்பது குறிப்பிடத்தக்க செல்நெறிகளுள் ஒன்றாகும்.

சுவடி நிறுவனங்களில் வெளியிடப்பெற்றுள்ள விளக்க அட்டவணைகளைப் பற்றிய செய்திகள் பல கட்டுரைகளில் வெளியாகியுள்ளன. விடுதலைக்குப் பிறகு வெளியான அட்டவணைகளே பெரும்பான்மை. அரசினர் சுவடி நூலகத்தில் விளக்க அட்டவணை வெளியிடும் பணி *1915* இலேயே தொடங்கியுள்ளது. டி. எண், ஆர். எண் என்னும் இரண்டுவகைகளாக உள்ள நிறுவனச் சுவடிகளுள் ஆர் எண்ணில் மட்டும் இருபது தொகுதிகள் விடுதலைக்குப் பின் வெளியானவை.

இதே நிலையில், டாக்டர் உ.வே.சா. நூலகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சரசுவதி மகால் நூலகம் ஆகிய நிறுவனச் சுவடிகள் அனைத்திற்கும் விளக்க அட்டவணைகள் வெளியிடப்பெற்றுள்ளன.

தமிழ்ப் பல்கலைக் கழகச் சுவடித் துறையில், அங்கு உள்ள சுவடிகள் அனைத்திற்கும் விளக்க அட்டவணை வெளியிட்டிருப்பதோடு அல்லாமல், **அனைத்துலகத் தமிழ் ஓலைச் சுவடிகள் அட்டவணை** என்னும் ஐந்து தொகுதிகளையும் வெளியிட்டிருக்கிறார்கள்.

திருவாவடுதுறை ஆதீனம், தருமபுர ஆதீனம் போன்ற சைவ மடங்கள் பலவற்றிலும் சமயச் சுவடிகள் பல பாதுகாக்கப்பெற்று வருகின்றன. மதுரைத் தமிழ்ச் சங்கம், ஈரோடு கலைமகள் கல்வி நிலையம் போன்ற

நிறுவனங்களிலுள்ள சுவடிகளுக்கு அந்நிறுவனங்கள் விளக்க அட்டவணை ஏதும் வெளியிடவில்லை.

சென்னையிலுள்ள தமிழ்நாடு இந்திய மருத்துவ வாரியம் (அண்ணா மருத்துவமனை), மைய சித்த மருத்துவ ஆய்வு நிறுவனம் ஆகிய நிறுவனங்களில் சுமார் *3500* மருத்துவச் சுவடிகள் திரட்டப்பெற்றுப் பாதுகாக்கப் பெற்று வருகின்றன. விளக்க அட்டவணை வெளிவரவில்லை.

மேலே குறிப்பிட்ட அனைத்து நிறுவனங்களிலுமுள்ள சுவடிகளுக்கான அட்டவணைச் செய்திகள் அனைத்தையும் (Datas) ஆங்காங்கு நேரில் சென்று முழுமையாகத் திரட்டியுள்ளனர் ஆசியவியல் நிறுவனச் சுவடித் துறையினர். திரட்டியதோடன்றி ஆசியவியல் நிறுவனச் சுவடிகளுக்கான மூன்று தொகுதிகள், தாங்கள் திரட்டியவற்றுள் திருவாவடுதுறை ஆதீனச் சுவடிகள், டாக்டர் உ.வே.சா. நூலகச் சுவடிகள், மைய சித்த மருத்துவ ஆய்வு நிறுவன மருத்துவச் சுவடிகள் ஆகியவற்றிற்கான ஏழு தொகுதிகள் ஆகப் பத்துத் தொகுதிகளை வெளியிட்டுள்ளனர். இன்னும் நாற்பது தொகுதிகளை வெளியிடும் திட்டம் நடைமுறையில் உள்ளது. தமிழ்ச் சுவடிகளைப் பற்றி அனைத்துலக ஆய்வாளர்களும் அறியுமளவில் இவ்வட்டவணைகள் ஆங்கில மொழியில் வெளிவந்துகொண்டிருக்கின்றன என்பது குறிப்பிடத்தக்க ஒன்று.

இம் முற்போக்குப் பணிகளாகிய சுவடிப் பதிப்புச் செல்நெறிகள் அனைத்தும் விடுதலைக்குப்பின் நிகழ்ந்து வருபவையாகும்.

யுனெஸ்கோ நிறுவன வல்லுநர் குழுவில் இடம்பெற்றுள்ள, ஆசியவியல் நிறுவன இயக்குநரின் பெருமுயற்சியால், *1994*இல், போலந்து நாட்டின் தலைநகரான வார்சாவில் நடைபெற்ற வல்லுநர் குழுக் கூட்டத்தில், தமிழ் ஓலைச் சுவடிகளை உலகின் நினைவுச் சின்னங்களுள் ஒன்றாக இடம்பெறச் செய்துள்ளனர். சிறப்பாகத் தமிழிலுள்ள சித்த மருத்துவ ஓலைச் சுவடிகளை உலக ஆவணங்களுள் ஒன்றாக அறிவித்துள்ளனர்.

வல்லுநர் குழு கூட்டத்தின் முடிவை அடிப்படையாகக் கொண்டு தமிழிலுள்ள சித்த மருத்துவ ஓலைச் சுவடிகளின் ஒட்டு மொத்தமான செய்திகளைத் தொகுத்து அனுப்புமாறு கேட்டு ஒரு விண்ணப்பப் படிவத்தினை ஆசியவியல் நிறுவனத்திற்கு யுனெஸ்கோ நிறுவனம் அனுப்பியிருந்தது. அவ்விண்ணப்பத்தின் படிவங்களைச் சுவடி நிறுவனங்கள் அனைத்திற்கும் அனுப்பி, அந்தந்த நிறுவனங்களில் உள்ள சுவடிகளைப் பற்றிய செய்திகளை நிரப்பி அனுப்புமாறு கேட்டிருந்தது இந்நிறுவனம். ஆனால், இதுவரை ஒரு நிறுவனத்திடமிருந்தும் அந்தப் படிவங்கள் வரவில்லை.......?

சுவடிப் பதிப்பு வரலாறு என்னும் பொருளில் பல கட்டுரைகள் வெளியாகிவிட்டன. விடுதலைக்கு முன் சுவடிப்பதிப்புகள்,

விடுதலைக்குப்பின் சுவடிப்பதிப்புகள் என்னும் இரண்டு கட்டுரைகள் இந்த நிறுவனக் கருத்தரங்கின் வழி வெளியாகிவிட்டன. எனவே வெளியீட்டு வளர்ச்சியாக எண்ணிக்கைகள் மட்டுமே தொகுத்தளிக்கப்பெற்றன.

சுவடிகளில் எழுத்து வடிவங்கள், பாட வேறுபாடுகள், சுவடிப் பதிப்பில் யாப்பின் இன்றியமையாமை, மூல பாடத் தேர்வு முறைகள், பதிப்பு நெறிமுறைகள், சுவடிப் பதிப்பு வரலாறுகள், சுவடிப் பதிப்பாசிரியர்கள் என்னும் தலைப்புகளில் பலப்பல ஆய்வுகள் நடைபெற்றுள்ளன. கட்டுரைகள் பலவும் வெளியாகியுள்ளன. எனவே **பதிப்புச் செல்நெறிகள்** என்னும் இக்கட்டுரையில் எண்ணிக்கையாலும் பதிப்பு நெறிமுறைகளாலும் ஏற்பட்டிருக்கும் முன்னேற்றங்களுள் ஒரு சில மட்டுமே சுருங்கச் சுட்டப்பெற்றன.

**பதிப்புச் சிக்கல்கள்**

பதிப்புச் செல்நெறிகளின் அடிப்படையில் பதிப்பு நெறிமுறைகளுள் நடைபெற்றுள்ள சில சிக்கல்கள் மட்டும் இங்கு வைக்கப்பெறுகின்றன. ஏற்புடை கருத்திலோ மாறுபட்ட கருத்திலோ அச்சிக்கல்களுக்குத் தீர்வு காணும் உரிமை தங்களைச் சார்ந்ததாக விடப்பெறுகிறது.

**பதிப்புப் பணி**

நூலை உருவாக்கி அச்சிட்டு வெளியிடும் செயலில் இடம்பெறும் ஆறு நிலைகளில் மூன்றாவது இடத்தைப் பெறும் பதிப்புப்பணி, நூல்வெளியீட்டுப் பணிகளில் சிறப்பிடம் பெறுகிறது.

பதிப்புப்பணி என்பது எது?

'சுவடியைத் தேடி, ........பெயர்த்தெழுதி.........பாங்குடன் திருத்தி......... செம்பதிப்பாக விதிப்படி அளித்தலே பதிப்பு வேலையாகும். அச்சக வாசலை அடையும் வரை நிகழ்கின்ற அனைத்து வேலைகளுமே பதிப்பு வேலைகள் என்று கொள்ளத்தகும்'[2] என்பது பதிப்புப் பணிக்குத் தரும் அரிய விளக்கம். ஆய்வு அறிஞர் பலரின் மேற்கோள்களோடு இவ்விளக்கம் தரப்பட்டுள்ளது. ஆனால், அதே கட்டுரையில்,

'மேற்கருத்துகளைப் பொதுமைப்படுத்தி நோக்கும் பொழுது,

அ. தானே புதிய படைப்பை உருவாக்குதல்
ஆ. பிறர் படைப்பை வெளிப்படுத்திக் காட்டுதல்
இ. .........

போன்றவை பதிப்பித்தலின் செயலாக அடங்கும் என்பதை உணரலாம்' என்று கூறுவதில், புதிய படைப்பை உருவாக்குவதும் பதிப்புப்பணி என்ற குழப்பத்தையும் காணமுடிகிறது. சரியான கருத்து எது?

### பதிப்புச் செல்நெறிகள்

**முன்னோர் மொழிபொருளே யன்றி யவர் மொழியும்**
**பொன்னேபோற் போற்றுவர் பொற்புலவர் - அன்னோர்**
**நடையிடையைத் தம்வழியே நாட்டி மொழிமாற்றல்**
**கடையிடையர் மாட்டுவினை காண்**

என்னும் செய்யுளில் கூறியபடி, சுவடிகளில் காண்பதைத் தம் மதத்தின்படி திருத்துதல், விபரீத அறிவினையுடைய மத்திமர்க்கும், சந்தேக ஞானத்தை யுடைய அதமர்க்கும் உரியதொழில் என்று உணர்க....... அவர் நூலையே அச்சொரூபமாக எடுத்துப் பதிப்பிப்போர் ஓர் அட்சரமாவது மாற்றுதல் பொருந்தவறு என்பது யாருக்கும் உடன்பாடே. இக்கருத்துகளைக் காரண காரியங்களுடன் நன்கு அறிவோம்'.[3] பதிப்பாசிரியருக்கு எடுத்துக்கூறும் இந்த அறிவுரை சுவடிப்பதிப்பிற்கு அடிப்படையானது.

**பாடிய சான்றோர் பீடுநன் குணர**
**மிகைபடு பொருளை நகைபடு புன்சொலில்**
**தந்திடை மடுத்த கந்திதன் பிழைப்பும்**
**எழுதினர் பிழைப்பும் எழுத்துரு ஒக்கும்**
**பகுதியின் வந்த பாடகர் பிழைப்பும்**
**ஒருங்குடன் கிடந்த ஒவ்வாப் பாடம்**
**மதியின் தகைப்பு விதியுளி யகற்றி**
**சுருங்கிய உரையின் விளங்கக் காட்டினன்**
**பரிமே லழகன் உரிமையின் உணர்ந்தே[4]**

என்பது, பரிமேலழகர் உரிய பாடத்தைத் தேர்ந்து பிழையான பாடங்களைச் சுட்டிக் காட்டியுள்ள திறத்தினை எடுத்துக்காட்டும் சான்றோர் கூற்று. பரிமேலழகர் காலத்திற்கு முன்பே சுவடி எழுதுவோரால் சுவடிகளில் பிழைகள் நேர்ந்துள்ளன என்பதும், பிழைகளைச் சுட்டிக்காட்டியே பரிமேலழகர் உரை எழுதியிருக்கிறார் என்பதும் இதனால் தெளிவாகின்றன. பிழைபட எழுதி விட்டதைத் திருத்த வேண்டிய நிலை, பாடிய சான்றோர்களின் பெருமையை எடுத்துக்காட்டுவதற்காகவே ஏற்பட்டதாகும். பிழைபடவே வெளியிட்டுவிடு வோமானால், நூலாசிரியர்க்கு இழிவைத் தேடித் தந்தவர்களாகிவிடுவோம் என்ற கொள்கை பதிப்புச் செல்நெறிகளுள் ஒன்றாக இடம் பெற்றுள்ளது.

### பதிப்பில் திருத்தம்

சுவடிச் செய்தி என்பது ஏதோ தேவவாக்கு; அதைத் திருத்துவது பாவம்; அப்படித் திருத்திப் பதிப்பிப்பவர்கள் பெரும் பாவத்திற்கும் பழிக்கும் உள்ளாகி விடுவார்கள்; அவர்கள் மொழிக்குத் துரோகம் செய்தவர்களாகி விடுவார்கள் என்றெல்லாங் கருதுவது வேண்டாத ஒன்று என்ற நிலை வழக்காற்றுக்குரியதாகிவிட்டது. காரணமற்ற, கண்மூடித்தனமான வழக்காறு அல்ல அது.

சுவடிச் செய்தி என்பது தமிழர்தம் எண்ணங்களே; அவை சுவடிகளில் வடிக்கப்பெற்றுள்ளன; அவ்வளவுதான். அவர்தம் எண்ணங்களின் வடிவங்களை அப்படியே அறிந்து துய்க்குமாறு மக்களுக்கு எடுத்துக் கொடுப்பதே பதிப்பாசிரியரின் பணி. இந்த அடிப்படையில் சுவடிச் செய்திகளைத் திருத்தியோ, மாற்றியோ பதிப்பித்துக் கொடுப்பது பதிப்பு அறமாகாது.

ஆனால் இன்று நமக்குக் கிடைக்கும் சுவடிகள் சிறப்பாகத் தமிழ்ச் சுவடிகள் - தங்கள் எண்ணங்களைச் சுவடிகளில் வடித்தார்களே அவர்கள் வடித்த வடிவிலேயே கிடைக்கிறதா? இல்லையே! கிடைக்கும் சுவடிகள் அவற்றிலுள்ள கருத்துக்கு உரியவர்களால் எழுதப் பெற்ற மூல வடிவங்கள் அல்லவே! அடுத்தடுத்துப் பலமுறை, பலராலும் படியெடுக்கப் பெற்றவற்றுள் ஒன்றே அல்லவா? படியெடுக்குங் காலத்தில் படியெடுப்போரின் கல்வித் திறனுக்கேற்பப் பிழைகளும் மாற்றங்களும் மலிந்துவிட்ட சுவடிகள் அல்லவா? அவற்றிலுள்ள பிழைகளைத் திருத்துவது பதிப்பு அறத்திலிருந்து தவறிவிட்டதாகக் கருதமுடியுமா?

**ஐந்து கரத்தனை யானை முகத்தனை**
**இந்தி னிளம்பிறை போலு மெயிற்றனை**
**நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்**
**புந்தியில் வைத்தடி போற்றுகின் றேன**

என்பது திருமந்திரம் என்னும் நூலின் சில பதிப்புகளில் காணப்பெறும் விநாயக வணக்கப் பாடல். இதே பாடல் **தேரூர்ந்த சோழன் யட்சகானம்** என்னுஞ் சுவடியில் விநாயக வணக்கப்பாடலாக இடம் பெற்றுள்ளது. ஆனால் இச்சுவடியில்,

**அஞ்சு கரத்தனை ஆனை முகத்தனை**
***யிந்து யிளம்* பிறை போலு *மிகுத்தனை***
**நந்தி மகன்தனை ஞானக் *கொழுந்தனை***
**புந்தியில் வைத்தடி போற்றுகின் றேன'**

என்னும் வடிவில் அமைகிறது.[5] இதில் பொருளேமாறுபடுகின்ற, மூலத்தினின்றும் வேறுபட்ட சொற்களைத் திருத்திப் பதிப்பிப்பது தவறாகுமா?

### மொழியியல் பயன்பாடு

சுவடியில் உள்ளவற்றை அப்படியே கொடுப்பதுதான் மொழியியல் ஆய்வு போன்றவற்றிற்குப் பயன்படும். சுவடியில் உள்ளவாறே பதிப்பித்திருக்கின்ற முறையைப் பாருங்கள் என்று **கன்னடியன் போர்**[6] என்னும் நாட்டுப்புறக் கதைப்பாடல் பதிப்பு வெளியீடு ஒன்றினைக் காட்டுகிறார்கள்.

**கடந்த வேத கண்ணுதலோன் கறைமாமிடத் தோனருழ் போத்தி**
**தடந்த வேதத் தவசியர்கழ் சாத்துங் கதையை யழகுபெற**
**மடந்தை யனையாழ் மயலழகாய் மன்னரய்பேர் சுருபம்ந்தன்னை**
**படந்தான் னெழுதும் கதைபாட பண்ம்பாய் முகவன் காற்ப்பாமே**

என்பது **கன்னடியன் போர்** என்னும் நூலின் முதற் பாடலாக அச்சிடப்பெற்று வெளிவந்துள்ளது.

**வேத கண்ணுதலோன்; வேதத் தவசியர்கழ்**
**வேத என்பதன்முன் வல்லினம்- எதுசரி?**
**கறைமா மிடத்தோ னருழ் போத்தி,**
**சாத்தும்ங்கதை, சுருபம்ந்தன்னை, பண்ம்பாய்**
**படந்தான் னெழுதுங்கதை, காற்ப்பாமே**

என்பனவற்றைப் பொதுமக்களிடையே அறிமுகப்படுத்துவது சரியா?

**மிடத்தோன், அருழ், போத்தி - பொருளறிய முடியுமா?**
**சாத்தும்ங்கதை, சுருபம்ந்தன்னை, பண்ம்பாய், னெழுதுங்கதை -**
**இவற்றின் ஒற்றமைப்பை மூவொற் றுடனிலை என்பதா?**
**படந்தான் னெழுதும் - நெடில்முன் ஒற்று இரட்டித்ததா?**
**காற்ப்பாமே - காற்பு பொருள்? றகரமெய் முன் வலிமிக்கதா?**

நான்கடிப் பாடல் ஒன்றில் 12 ஐயங்கள்! நூலில் 172 பாடல்கள். ஐயங்களுக்கு அளவு? தொடர்ந்து நூலைப் படிக்க இயலுமா? படித்துப் பொருளைப் புரிந்து கொண்டபிறகு அல்லவா பிற ஆய்வு முறைகள்? ஆய்வுக்கு இடமிருக்குமா?ஏன் இருக்காது? மேலே கூறியவாறு பிழைகளைப் பாகுபடுத்திக் காட்டும் ஆய்வுப் பணிக்கு இந்நூல் முழுமையாகப் பயன்படுமல்லவா?

மேலும் பதிப்பு முறையில், ஓரசைச் சீர் விரவியும், ஓரடியில் 4, 5, 6, 7 என்ற அளவில் மாறி மாறிச் சீர்கள் பிரிக்கப்பெற்றும் அமையும் அறுசீர் விருத்தப் பாடல்கள் யாப்பமைதி பற்றிய ஆய்வுக்குப் பெரிதும் பயன்படுமல்லவா?

**மேலும் பல வளர்ச்சி நிலைகள்**

சுவடிகள் அழியுமுன் அப்படியே அச்சிட்டுவிட வேண்டும் என்ற பாதுகாப்பு நிலைமாறி, சுவடிக் கருத்துகள் எளிமையாக மக்களைச் சென்றடையவேண்டும் என்பதே சுவடிப் பதிப்புப் பணியின் இன்றைய நோக்கமாக வளர்ந்துள்ளது. அதே சமயம் சுவடிச் சொற்களும் பிறவழக் காற்று அமைப்புகளும் ஆய்வாளருக்கும் மொழியியலாருக்கும் பயன்பட வேண்டும் என்ற நோக்கில் திருத்தமோ மாற்றமோ செய்யப்பட்ட அனைத்தும் சுவடிச்சொல் என்ற நிலையில் அடிக்குறிப்பில் தரப்பெறுகின்றன.

**பதிப்புரை**

சுவடிச் செய்திகளை, நூலாகும் அளவில் அச்சுப்படியாகப் பதிப்பித்து அமைத்த **பதிப்பாசிரியரின் உழைப்பையும் திறனையும்** எடுத்துக் காட்டும் பகுதி, நூலின் தொடக்கத்தில் இடம்பெறும் பதிப்புரையாகும்.

சுவடியைத் தேர்ந்தெடுத்த வரலாறு, திருத்தி அமைத்த நெறிமுறைகள், சீர்மை செய்த இடங்கள் போன்ற செய்திகளைத் தந்து பதிப்புரையை அமைக்கும் முறை பிற்காலப் பதிப்பு நெறிமுறைகளுள் ஒன்றாக வளர்ந்துள்ளது.

**ஆய்வுரை**

நூலை முழுமையாகப் படிக்க வேண்டும் என்னும் ஆர்வத்தைத் தூண்டுவது ஆய்வுரை. இக்காலப் பதிப்புகளில் ஆய்வுரை இடம் பெற்றேயாக வேண்டும் என்ற நிலை உருவாகிவிட்டது.

நூல் எந்த வகையைச் சார்ந்தது? நூலின் பயன்யாது? நூலில் கையாளப்பெறும் உத்திகள் யாவை? நூற்பெயருக்குக் காரணம் என்ன? ஆசிரியர் யார்? எக்காலத்தவர்? என்பன போன்ற வினாக்களுக்கு விடைகண்டு, கற்போரை நூலினுள் ஆற்றுப்படுத்தும் ஆய்வுரை மரபும் விடுதலைக்குப் பின் நிலைபெற்றதேயாகும்.

**சொல்லடைவு**

தாங்கள் கருதும் ஒரு செய்தியை அறிய ஆய்வாளர்களுக்கு எளிமையாக உதவுவது சொல்லடைவு. 'மறவர்' பற்றிய செய்தி இந்த நூலில் ஏதேனும் இருக்கிறதா என்பதை அறிய விரும்பும் ஆய்வாளர் சொல்லடைவின் மூலம் அதை உடனே அறியலாம். அந்தந்தப் பக்கங்களை மட்டும் படித்துச் செய்திகளைத் திரட்டிக் கொள்ளலாம். இக்காலப் பதிப்புகளில் சொல்லடைவு முறை நிலை பெற்றுவிட்டது.

**மொழி பெயர்ப்பு நூல்கள்**

சுவடிப் பதிப்பு வெளியீடுகள் தமிழறிந்தவர்களுக்கு மட்டுமன்றி உலக மக்கள் அனைவருக்குமே உதவுமாறு ஆங்கில மொழிபெயர்ப்போடு வெளியிடும் திட்டத்தை ஆசியவியல் நிறுவனம் மேற்கொண்டுள்ள முறை இந்தக் காலகட்டத்தின் பெருவளர்ச்சியாகும்.

**செல்நெறிகளில் சில தடைகளும் குறைபாடுகளும்**

சுவடிப் பதிப்பு வெளியீடுகளுக்கு என்று அரசு நிறுவனங்களுக்கு அளிக்கப்பெறும் நிதியைக் குறிப்பிட்ட காலத்திற்குள் செலவழிக்க வேண்டும் என்ற கட்டாயத்தால் அரைகுறை பணிகளோடே நூல்களை வெளியிட வேண்டியுள்ளது.

ஆர்வத்தோடு நூல்களை வெளியிடும் தகுதி பெற்ற தனியார்களுக்கும் தனியார் நிறுவனங்களுக்கும் செலவு செய்ய இயலாமை.

சுவடிப் பதிப்பு வெளியீடுகளுக்கு என்று அரசு நிறுவனங்களுக்கு அளிக்கப்பெறும் நிதியைக் குறிப்பிட்ட காலத்திற்குள் செலவழிக்க வேண்டும் என்ற கட்டாயத்தால் அரைகுறை பணிகளோடே நூல்களை வெளியிட வேண்டியுள்ளது.

ஆர்வத்தோடு நூல்களை வெளியிடும் தகுதி பெற்ற தனியார்களுக்கும் தனியார் நிறுவனங்களுக்கும் செலவு செய்ய இயலாமை. செலவு செய்து வெளியிட்டாலும் விற்பனையில் முடக்கம் போன்ற பல குறைபாடுகள் நிலைத்து விட்டமையால் மேலும் முன்னேற்றங் காண இயலாத நிலை உருவாகி வருகிறது என்பது அனுபவ அடிப்படையில் கூறப்பெறும், மறுக்க முடியாத உண்மை நிலையாகும்.

## குறிப்புகள்

1. திரு. குமரி அனந்தன் அவர்களின் உரை *19.2.1992*இல் உ.வே.சா. அவர்களின் சிலப்பதிகாரப் பதிப்பின் நூற்றாண்டு விழாவில்..
2. **சுவடிப் பதிப்பு நெறிமுறைகள்**, ப. *73.*
3. **மனைநூல்**, பதிப்புரை, பக். *34-36.*
4. **பரிபாடல்** உரைப்பாயிரம்.
5. சுவடி : **தேரூர்ந்த சோழன் யட்சகானம்**, அரசினர் சுவடி நூலகம், சென்னை - *5.*
6. நூல் : **கன்னடியன் போர்**, டாக்டர் ப. சர்வேஸ்வரன் & டாக்டர் தி. நடராசன் (பதிப்பாசிரியர்கள்), மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, *1981.*

# தமிழ்ப் பதிப்பகங்கள்

**தி. மகாலட்சுமி**

நல் ஏடுகளை நூல்களாகக் கொணர்தல் என்ற பணி, அச்சுக்கலை தமிழகத்தில் விரிவடைந்த காலத்திலேயே முகிழ்த்து விட்டது. நூல் வெளியீட்டில் பதிப்பகங்களின் பணி மிக இன்றியமையாதது. நூலாசிரியருக்கும் வாசகர்களுக்கும் இடையே பாலமாக அமைவன பதிப்பகங்கள். நூலாசிரியர்களின் எழுத்துகளை வாசகர்களுக்கு அறிமுகப்படுத்தும் பணியினைக் கொண்ட இப்பதிப்பகங்கள் தம் எண்ணங்கள் கொள்கைகளுக்கேற்பத் தமிழ் வளர்ச்சியில் பங்கேற்கின்றன. தமிழ் நூல் வெளியீட்டுப் பணியில் இவற்றின் நோக்கும் போக்கும் எங்ஙனம் அமைந்துள்ளன என்பது குறித்து இக்கட்டுரை ஆய்கிறது.

**பதிப்பகம்**

பதிப்பு + அகம் = பதிப்பகம் என்பதாகும். பதி என்பதனை அடியாகக் கொண்ட செயல் பதிப்பு. பதி என்பதற்குத் தங்குதல், ஆழ்தல், முத்திரை முதலியன, அழுந்துதல், ஸ்திரமாதல், எழுதுதல் போன்ற பல பொருள்களுண்டு (Tamil lexican, Vol. IV. Madras University, 1963). எழுத்துருவங்களை அழுத்துதல், மூலம் உருவாக்கல், பனையோலைகளில் அமையும் எழுத்துகளைவிடத் தெளிவாகத் தங்குதல், நீண்ட காலத்திற்கு நிலைபெற்றிருத்தல் எனும் நிலையில் பதி எனும் வினை பதிப்பு எனும் பெயராயிற்று எனலாம். பதிப்புகளை உள்ளடக்கியது பதிப்பகமாகிறது (ச. சிவகாமி, பதிப்பங்களும் தமிழும், எண்பத்தொன்றில் தமிழ் ப. *421*).

பதிப்பு என்பதற்கு ஓலைச்சுவடிகளிலிருந்து பிரதி செய்து தேவையான விளக்கங்களை நல்கி அச்சேற்றுவதற்கான பணியினைச் செய்தலும், பலவற்றைத் தொகுத்து, வகைப்படுத்திச் செப்பம் செய்து தருதலும் ஆகியனவும் கருத்தில் கொள்ளப்படுமாயினும் பதிப்பகங்களின் பணி இவற்றினின்று மாறுபட்டது *(மேற்படி. ப.422).*

இப்பதிப்புத் தொழிலில் பதிப்பகங்கள், நிறுவனங்கள், தனிநபர் என்ற மூன்று நிலைகளைக் காணலாம். பதிப்பகங்கள் என்பன நூலை உருவாக்கி அவற்றை வெளியிட்டு விற்பனை செய்தலை முதன்மைத் தொழிலாகக் கொண்டமைவன. நிறுவனங்கள் என்பவை தம் பல்வேறு அலுவல்களுடன் பதிப்புப் பணியினையும் ஒன்றாக அமைத்துச் செயல்படுத்துவன. இவற்றுள் ஆய்வு நிறுவனங்கள் என்பவை இலக்கியம், இலக்கணம், மொழியியல், நாட்டுப்புறக்கலை தொடர்பான நூல்களையும் ஆய்வு நூல்களையும் எழுதுதலை முதன்மைத் தொழிலாகக் கொண்டமைவன. நூல் வெளியீடு என்பது இவற்றின் சார்புப் பணியாகிறது. மேலும் விலைக்கு முக்கியத்துவம் தருதல் என்ற நிலையும் இதில் இல்லை. ஓர் ஆசிரியரோ அல்லது அவருக்கு வேண்டியவரோ குறிப்பிட்ட நூலை மட்டும் வெளியிடுதல் என்பது தனிநபரைக் குறிக்கிறது. இவர்களும் இதனைத் தம்முழுநேரத் தொழிலாகச் செய்வதில்லை. தேவையேற்படும் போது மட்டுமே செயலாற்றுகின்றனர்.

**பதிப்பகங்கள்**

பதிப்பகங்கள் மிகுதியும் தம்பெயரில் அறிவொளிப் பதிப்பகம், சுதா பதிப்பகம், செந்தில் பதிப்பகம், நர்மதா பதிப்பகம் என்றவாறு பதிப்பகம் என்ற சொல்லையும் உட்கொண்டிருத்தல் காணப்படுகிறது. பப்ளிகேஷன்ஸ் (பூரம் பப்ளிகேஷன்ஸ்), புக் கம்பெனி (அம்மன் புக் கம்பெனி) நூலகம் (அருள்சிவம் நூலகம்), வாசகர் வட்டம் (என்ரேக்ஸ் வாசகர் வட்டம்), வெளியீட்டகம் (கண்ணதாசன் வெளியீட்டகம்), வெளியீடு (ஓங்காரம் வெளியீடு), பிரசுரம் (பூம்புகார் பிரசுரம்), புக்ஸ் (எஸ்பியார் புக்ஸ்), அச்சகம் (தென்மொழி அச்சகம்) என்பன போன்று பதிப்பகத்தோடு தொடர்புடைய சொற்களும் அமையக் காண்கிறோம்.

**பதிப்பகங்களின் வளர்ச்சிக்குத் துணைநின்ற பொருண்மைகள்**

**நீர் உயர வரப்புயரும்**
**வரப்புயர குடியுயரும்**
**குடியுயர கோன்உயரும்**

என்ற பண்டைய மரபுச் செய்யுள் உழவின் பின்னணியில் உலகம் சுழல்வதைச் சுட்டுகிறது. அதுபோன்று ஒவ்வொரு காலக்கட்டத்திலும் சில சிறப்பான பொருண்மைகளைச் சிந்தனையாளர் அல்லது எழுத்தாளர் மக்களிடம் கொண்டு செல்ல முனைந்திருக்கின்றனர். அந்நிலையில் அச்சிந்தனைகள் நூல்களாக முகிழ்த்து, பதிப்பகங்களின் துணையுடன் வெளிவந்துள்ளன. இப்படிப் பொருண்மை - சிந்தனை - நூல் - பதிப்பகம் என்ற நிலையில் இவை

ஒன்றுக்கொன்று பின்னிப் பிணைந்து செல்வது தவிர்க்க இயலாதது. இவ்வடிப்படையில் பத்தாண்டுக்கொரு முறையாக வைத்துக் காலத்தைக் கணித்துப் பார்ப்பின் அவ்வக்காலச் சூழலுக்கேற்பப் பதிப்பகங்கள் வளர்ந்து வந்துள்ள நிலையை அறிய முடியும்.

இந்திய விடுதலைக்குப்பின் தமிழகத்தில் கல்விப் பணியில் பதிப்பகங்கள் பெரும்பணி ஆற்றியுள்ளன. இவற்றின் வழி இலக்கியம், இலக்கணம், வரலாறு, கலை, பண்பாடு முதலான சுவடியில் இருந்த நூல்கள் அச்சுவடிவில் மலர்ந்தன. அதே சமயம் கல்வி, சட்டம், மருத்துவம் தொடர்பான கல்விக்குத் தேவையான நூல்களும் பதிப்பகங்களின் உதவியோடு வெளிவரத் தொடங்கின.

*40*களில் தோன்றிய எழுத்தாளர் வட்டம், தனக்கென ஒரு வாசகர் வட்டத்தை ஏற்படுத்தி அவர்களுக்குப் படிக்கும் ஆர்வத்தைத் தூண்டியது. இப் படிக்கும் ஆர்வமே நூல்கள் தோன்றவும், அந்நூல்களை உருவாக்கும் பதிப்பகங்கள் தோன்றவும் காரணமாயிற்று. *40*களில் சுதந்திரக் கோட்பாட்டை வலியுறுத்திய தேசியவாதிகள், சமுதாயச் சீர்திருத்தம் ஏற்படவும், தமிழன் உயரவும் பகுத்தறிவுச் சிந்தனை பேசிவந்த திராவிட இயக்கத்தினர், தனித்தமிழ் வேண்டுமென்ற சிந்தனையோடு தமிழ் உயர்வுக்குப் பாடுபட்ட தமிழ்ச் சான்றோர், ஆன்மீகச் சிந்தனையாளர், மேலை இலக்கிய ஆய்வு வளர்ச்சி தமிழிலும் வேண்டுமெனத் தமிழின் தொன்மையை ஆய்வுக் கண்ணோட்டத்தோடு காணமுயன்ற பேரறிஞர் கூட்டம், வேற்று மொழியில் இருந்து தமிழுக்குத் தொழில் நுட்பக்கலைச் சொற்களைத் தக்க பதமாகக் கொண்டுவர உழைத்த அறிவுச்சுற்றம் போன்றோர்களால் தமிழ், தமிழ்ச் சமுதாயம் என்ற நோக்கில் பல்வேறு பொருண்மைகள் இக்காலக் கட்டத்தில் முகிழ்த்தன. எனவே எண்ணற்ற நூல்கள் இவ்வடிப்படையில் எழுந்தன.

விடுதலைக்குப்பின் இவை தொடர்பான நூல்களின் வெளியீட்டுத் தாக்கம் குறையினும் இக்கொள்கைகள் சார்ந்த நூல்களை அவ்வக் கொள்கைகளை ஏற்றுக் கொண்ட பதிப்பகங்கள் கொண்டுவரத் தவறவில்லை. *40*களில் கணைகள் போன்று எழுந்த நூல்கள் *50*களில் தகவல் நூல்களாக வளர்ந்தன. *40,50*களில் மணிக்கொடி என்ற ஓர் அமைப்பு (புதுமைப்பித்தன் உள்ளிட்ட எழுத்தாளர் வட்டம்) சிறுகதை, நாவல் போன்றவற்றைப் படைத்துத் தமிழகத்தில் ஒரு பெரிய வாசகர் வட்டத்தை உருவாக்கியது. இவ்வாசிரியர்களில் பலர் பத்திரிகையில் பணியாற்றியதோடு அக்கால எழுத்தாளர்களுக்கு முன்னோடியாகவும் இருந்தனர்.

*50, 60* களில் நாவல், சிறுகதை போன்றன சிறப்புற்றிருந்தன. தங்களுக்கென வாசகர் வட்டத்தைப் பெற்றிருந்த கல்கி கிருஷ்ணமூர்த்தி, அகிலன், பார்த்தசாரதி, அரு. இராமநாதன் போன்ற பெரும் எழுத்தாளர்களின் படைப்புகள் பதிப்பகத்தாரால் நூல்களாக வெளியிடப் பெற்றன. வானதி, பாரி, ஐந்திணை போன்ற பதிப்பகங்களனைத்தும் நாவல், சிறுகதை போன்ற படைப்புகளைக் கொண்டு வருவதில் பெரிதும் ஆர்வம் காட்டின. ஜெகசிற்பியன், சாண்டியல்யன், லட்சுமி, ஜெயகாந்தன், ஜானகிராமன் போன்றோரின் படைப்புகள்

சிறப்புறு படைப்புகளாகத் திகழ்ந்தன. பொதுவுடைமைக் கொள்கை, முற்போக்குச் சிந்தனை போன்றன இவற்றின் கதைக்கருக்களாயின.

*60, 70*களில் சமூகச் சீவன் உள்ள கதைகள் எழுத்தாளர்களால் அறிமுகப்படுத்தப்பட்டதால் ஒரு சமூக ஈர்ப்பு எழுத்துத் துறையில் மக்களுக்கு ஏற்பட்டது. திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சார்ந்த பேரறிஞர் அண்ணா, கலைஞர் மு. கருணாநிதி, பேராசிரியர் க. அன்பழகன், நாவலர் நெடுஞ்செழியன், ஆசைத்தம்பி, சிந்தனைச் சிற்பி சிற்றரசு, இராம அரங்கண்ணல், ஈ.வி.கே. சம்பத், கண்ணதாசன் போன்ற படைப்பாளர்கள் தங்கள் பேச்சாலும், எழுத்தாலும் மக்களைக் கவர்ந்து நின்றனர். திராவிட முன்னேற்றக் கழகப் பெரியோர்களும், பொதுவுடைமைச் சிந்தனைவாதிகளும், எழுத்துலகைத் தம்கைக்குள் கொண்டுவந்த காரணத்தால் மக்களிடையே ஏற்பட்ட அறிவுப் புரட்சியின் விளைவாகவும் பல்வேறு படைப்புகள் எழுந்தன. எனவே பூம்புகார் பிரசுரம், பெரியார் நூல் வெளியீட்டகம், பூமணி பதிப்பகம், அறிவொளிப் பதிப்பகம், சிந்தனையாளர் கழகம் முதலான பதிப்பகங்கள் இவர்களுடைய பதிப்புகளை வெளியிடுவதில் ஈடுபாடு காட்டின.

இந்தி எதிர்ப்பு ஒரு பெரிய மொழிப்புரட்சியை உருவாக்கிய காலக்கட்டத்தில் பாரதிதாசன் போன்றோர் படைப்புகளைப் பதிப்பகங்கள் கொண்டுவந்தன. பதிப்பகத்தாரால் நாட்டுப்புற இலக்கியத்தைச் சார்ந்த தொன்ம புராண வரலாற்றுக் கதைப் பாடல்கள் பெரிய எழுத்துக் கதைகள் என்ற பெயரில் அச்சிடப்பெற்றன. தெருக்களில் நடைபாதைக் கடைகளில் விற்கப்பெற்றன. இவ்வகைப் பதிப்புகள் குறையத் தொடங்கி *70*களில் அருகிவிட்டன எனலாம்.

முன்பே செவ்வியல் இலக்கியங்கள் பல படைக்கப்பட்டிருப்பினும் *70*களில் மிகுதியாயின. செவ்வியல் இலக்கியவாதிகளால் நாட்டுப்புற இலக்கியம் போற்றப்படாததால் பதிப்பகங்களும் இதனைக் கண்டு கொள்ளவில்லை. தெற்கே வானமாமலை, வடக்கே அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பேராசிரியர் போன்றோரின் முயற்சிகளால் *70*களின் இடைப்பகுதியில் இவ்விலக்கியம் பல்கலைக்கழக அளவில் இடம்பெற்றது. அதன் பயனாக நாட்டுப்புறப் படைப்புகள் பலவற்றைப் பதிப்பகங்களும் வெளியிட்டன. *70, 80*களில் பதிப்பகங்கள் நாட்டுப்புற இலக்கியத்திற்கும், அது சார்ந்த பல்துறைகளுக்கும் முக்கியத்துவம் தந்தன எனலாம்.

*80, 90* களில் பெண்ணுரிமையைக் கருவாக்கி லட்சுமி, கோமதி, திலகவதி, அனுராதா ரமணன், சிவசங்கரி போன்றோர் நூல்களை எழுதினர். அவ்வகையில் மீண்டுமொரு விழிப்புணர்ச்சி நாவல், சிறுகதை போன்றவற்றில் ஏற்பட்டது. இப்பெண்ணுரிமைச் சிந்தனை பல்கலைக்கழக ஆய்வு என்ற நிலையில் விரிந்து பெண்ணியம் தொடர்பான ஆய்வுநூல்கள் பல எழுந்துள்ளன.

*80, 90*களில் **வெண்மணி நிகழ்வு** தமிழகத்தைத் தாக்கியதால் ஒடுக்கப்பட்டவர்களுக்காகச் சான்றோர் பலர் குரல் கொடுத்தனர். அதன் விளைவாகத் தலித் இலக்கியங்கள் பல பதிப்பகங்களால் கொண்டு வரப்பட்டன.

90களில் சாதிய, சமயப் பூசல்களால் சமுதாயத்தில் ஏற்பட்ட சீரழிவைக் கண்டித்துச் சமத்துவ நோக்குடையவர்கள் சமதர்ம சமுதாயம் காணவிழைந்தனர். எனவே சமத்துவ நோக்கில் பல்வேறு படைப்புகளும், மனித நேயக் கோட்பாடு வலியுறுத்தப்பட்டு மனிதநேய நூல்களும் கொண்டுவரப்பெற்றன. உலக நாடுகள் தனது கவனத்தைச் சுற்றுப்புறச் சூழலில் திருப்பியதன் விளைவாய் தமிழகத்திலும் இச்சிந்தனை மேலோங்கி, சுற்றுப்புறச் சூழல், மண்ணியல், நீரியல் தொடர்பாகப் படைப்புகள் எழுந்தன.

இங்ஙனம் இன்றுவரை தோன்றிய படைப்புகளை நோக்கும்போது இலக்கியப் படைப்புகளில் கவிதை, நாடகங்களை விடப் புதினம், சிறுகதைகள் மிகுதியாக உள்ளன. சமுதாயச் சிந்தனை சார்ந்த இலக்கியங்கள், பகுத்தறிவுச் சிந்தனை சார்ந்த இலக்கியங்கள் மிகுதியாக வந்துள்ளன. திறனாய்வு நூல்களும், சமய நூல்களும் குறிப்பிடத்தக்க அளவில் வெளிவந்துள்ளமை சுட்டத்தக்கது. தொல்காப்பியம் முதல் இக்காலப் புதுக்கவிதை வரையிலான ஆராய்ச்சி நூல்கள் பல உள்ளன. தன்வரலாறு, பயண இலக்கியம், உலக நூல் போன்றன இன்னும் வெளி வருதல் வேண்டும். அறிவியல், மொழிபெயர்ப்பியல், மருத்துவ இயல் போன்ற நூல்களின் எண்ணிக்கை குறைவுபடாமல் அதிகரித்துவரும் நிலை இருப்பினும் இவற்றின் எண்ணிக்கைகளும் இன்னும் கூடுதலாக வெளிவருதல் வேண்டும்.

அருணோதயம், அமுதநிலையம், இலக்குமி நிலையம், நர்மதா, வானதி, மணிமேகலை, சக்திப்பிரசுரம் போன்றவை அனைத்துத் துறைகளிலும் நூல்களை வெளியிடுகின்றன. இப்பதிப்பகங்களுக்கு, நல்ல தரமான நூல்களை மக்களுக்கு அறிமுகப்படுத்த வேண்டும் என்ற நோக்கமிருப்பினும், வணிக நோக்கும் கலந்தமைவதால் விரைந்து விற்பனை யாகும் நூல்களே வெளியீட்டில் சிறப்பிடம் பெறுகின்றன. சிறுவர்களுக்கான நூல்களை வெளியிடுவதில் அமுதநிலையம் லிமிடெட், வானதி, புதுயுக புத்தகப் பண்ணை போன்றவை ஆர்வம் காட்டுகின்றன. அறிவுநிலையம் தான் வெளியிடும் நூல்களைச் சிறுவர், மாணவர்களைக் கருத்துட் கொண்டு அதற்கேற்றவாறு அமைத்தல் பாராட்டிற்குரியது. சிறுவர் நூற் பதிப்புக் கழகம் ஒன்றும் செயற்பட்டு வருவது குறித்தற்பாலது. மணிமேகலை பொதுஅறிவு தரும் நூல்களையும், தனி மனித முன்னேற்றத்திற்கு உதவும் நூல்களையும் படைப்பதில் முன்னிற்கிறது.

மணிவாசகர், சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம், புதுயுகபுத்தகப் பண்ணை போன்ற பெரும்பான்மையான பதிப்பகங்கள் இலக்கியத்திற்கும், இலக்கியத் திறனாய்விற்கும் சிறப்பிடம் நல்குகிறது. அன்பு இல்லம், ஓம்ஸ்பதிப்பகம், சாந்தி நிலையம், திருச்செந்தூரன் பதிப்பகம், சோலைத்தேனீ, ப்ரியா பதிப்பகம், தாமரை பதிப்பகம் போன்றன அறிவியல், மருத்துவ நூல்களுக்குச் சிறப்பிடம் தருகின்றன.

பொதுமக்கள் விரும்பும் சமையல், கைத்தொழில், தோட்டக்கலை, உடல்நலம், குடும்பம், தோத்திரம், சோதிடம் போன்ற பொருண்மைகளில் பல நூல்கள் வெளிவருகின்றன. வேற்று மொழியை எளிமையாகப் பயில்வதற்காகத்

தமிழ் - இந்தி, தமிழ் - தெலுங்கு, தமிழ் -கன்னடம் போன்ற நூல்களை மணிமேகலை போன்றவை படைத்தன. லிப்கோ போன்ற நிறுவனங்கள் கையகராதிகளையும், மணிவாசகர் பக்தி நூல்களையும் மலிவு விலையில் எளிய கையடக்கப் பகுதியாகக் கொண்டு வந்தன. பாரிநிலையம், மணிவாசகர் போன்றவை பாக்கெட் சைஸ் திருக்குறளை வெளியிட்டு மக்களுக்குக் கொண்டு சென்றன. இதுபோல் பட்டுக்கோட்டை பிரபாகரன், ராஜேந்திரன் போன்றோரின் நாவல்களும் பாக்கெட் சைசில், மலிவு விலையில் *(மாலைமதி - விலை ரூ1)* கொண்டு வரப்பட்டன. புதுயுகப் பண்ணை நீதி நூல்களையும், நாட்டுப்புறக்கதைகளையும், வேற்றுமொழி, நகைச்சுவைக் கதைகளையும் மக்கள் மன்றத்திற்குக் கொண்டு வந்தது.

அபிராமி அந்தாதி, குமர குருபரரின் சகலகலாவள்ளி மாலை மற்றும் கந்தர் கலிவெண்பா, ஔவையாரின் விநாயகர் அகவல், காரைக்கால் அம்மையாரின் இரட்டை மணிமாலை, மணிவாசகரின் திருவெம்பாவை, ஆண்டாளின் திருப்பாவை, அருணகிரிநாதர் திருப்புகழ், பாம்பன் சுவாமிகளின் சண்முகக் கவசம் முதலான செவ்வியல் இலக்கியங்கள் தோத்திர நூல்களாக மக்கள் மன்றத்தைச் சென்றடைந்துள்ளன. சோதிட நூல்களை மக்கள் விரும்பி வாங்கும் நிலை இருப்பினும் உயராய்வு நிலையிலான நூல்கள் மிகுதியாக எழவில்லை. ஆயின் மருத்துவம் தொடர்பான ஆய்வு நூல்கள் ஓரளவு வந்துகொண்டிருக்கின்றன.

அரியநூல்கள் வெளியீட்டுத்திட்டம், சிறந்த நூல்கள் வெளியீட்டுத் திட்டம் போன்றவற்றின் அடிப்படையில் மைய மாநில அரசுகளின் நிதி உதவி கிடைக்கப்பெறுவதால் பல நூல்கள் வெளிவர வாய்ப்பேற்பட்டன.

பேரறிஞர் அண்ணா, மறைமலையடிகள், கல்கி, பாரதியார், பாரதிதாசன், பாவாணர், சுத்தானந்த பாரதி போன்றவரின் நூல்கள் நாட்டுடைமை ஆக்கப்பட்டிருப்பதால் பதிப்பகங்கள் இவர்களின் படைப்புகளை வெளியிடுவதில் ஆர்வம் காட்டுகின்றன. பாரதி, பாரதிதாசன் போன்றோரின் நூற்றாண்டு விழா கொண்டாடினால் அது தொடர்பான நூல்களைப் பதிப்பகங்கள் வெளியிடுவதில் முன்னிற்கின்றன. மாநாடு நடைபெற்றால் அது தொடர்பான நூல்கள் வெளிவருவதுடன், மாநாட்டைச் சிறப்பிக்க வேறு பல பொருண்மைகளிலும் நூல்கள் வெளியிடப்பெறுகின்றன.

இதுகாறும் கூறியவற்றைத் தொகுத்துப் பார்ப்பின் பொருளாதார நோக்கு மட்டுமின்றி, காலச்சூழலுக்கு ஏற்ப அவ்வப்போது வெளிவரும் நூல்களின் தேவையும் பதிப்பகங்களின் வளர்ச்சிக்குக் காரணமாதலை அறியமுடிகிறது.

**பதிப்புரை முதலியன**

பதிப்பகங்கள் தரும் பதிப்புரைகள், பொதுநிலையில் நூலறிமுகம், நூலாசிரியர் அறிமுகம், துணைநின்றோர்க்கு நன்றி எனும் நிலைகளில் அமைகின்றன. சிலவற்றில் அவற்றின் நோக்கமும், நூலின் அமைப்பு விளக்கமும், நூலின் தோற்றம் போன்றனவும் அமைதல் உண்டு. தமிழரசி பதிப்பகம்

நாவலாசிரியர் வையவனுக்கு *(தீக்குளிக்காத விட்டில்கள்)* வாழ்த்துத் தெரிவிக்கிறது. மணிவாசகர் பதிப்பகம் நூற்பொருண்மைக்கு உரியவரின் சிறப்புகளை 'ஆய்வாளர்களுக்கு ஒரு கலங்கரை விளக்கு' *(சாதனைச் செம்மல் ச.வே.சு.பக். 6-8)* எனும் தலைப்பில் திறம்படத் தந்திருக்கிறது.

நூல்பற்றிய முழுமையான குறிப்புகளைத் தரும் பதிப்பு விளக்கத்தினைச் *(Bibliographical Data)* சில பதிப்புகளில் மட்டுமே காணமுடிகிறது. பதிப்பகத்தின் பிற வெளியீடுகளும், நூலாசிரியரின் பிறநூல்களும் பல பதிப்புகளில் அமைகின்றன. அந்நூல்களைச் சிறு விளக்கங்களுடன் அல்லது பாராட்டுரைகளுடன் குறித்திருப்பதையும் காணமுடிகிறது (இலக்கிய ஜோதி - ஒரு மோகன வாழ்வின் முழுநோக்கு- மது. சு. விமலானந்தம், மோகன் பதிப்பகம்). விற்பனைக்குக் கிடைக்கும் நூல்களின் பட்டியலையும் பல பதிப்பகங்கள் தருகின்றன.

நூலாசிரியரின் இலக்கியவாழ்க்கை பற்றிய அறிமுகத்தினை நூலின் பின்பக்க அட்டையில் வெளியிடுதல் பரவலாகக் காணப்படுகிறது. இப்பகுதி தேவையான ஒன்று. பூம்புகார் பிரசுரம் எழுத்தாளர்களின் வாழ்க்கை குறிப்புகளைத் தெளிவாகக் குறிப்பிட்டு அவர்தம் படைப்புகளையும் விளக்கமாகத் தருகின்றது. இப்பகுதியில் நூலாசிரியரின் புகைப்படமும் இடம் பெறுதல் உண்டு. பின்னட்டையில் பதிப்பாசிரியர் புகைப்படம் இடம் பெறும் நிலை உள்ளது. பி.எல். ராஜேந்திரனின், உலகத்தமிழ் மாநாடுகள் என்ற நூலின் பின்னட்டையில் பதிப்பாசிரியர் மெய்யப்பனின் புகைப்படம் இடம் பெற்றுள்ளது. முன்னட்டையை அடுத்து வரும் முதல் பக்கத்திலும் ஆசிரியர் புகைப்படம் இடம் பெறுவதுண்டு *(முத்தொள்ளாயிரம், கழகம், 1946).*

அணிந்துரை, வாழ்த்துரை, அறிஞர்களின் ஆய்வுரை இவற்றுடன் பதிப்புகள் வெளிவருதல் என்பது பல பதிப்புகளில் காணப்படும் ஒன்றாகும். இதழ்களில் வெளிவந்தவை நூலாக்கம் பெறும்பொழுது இதழ்களின்வழிப் படித்த வாசகர்களின் கருத்துக் குவியல்களையும் இணைத்துத் தந்திருப்பது போற்றற்குரியது. இதற்குப் பாலகுமாரனின் **மெர்க்குரிப்பூக்கள்** (வானதி), மு. மேத்தாவின் **வெளிச்சம் வெளியே இல்லை** (நர்மதா) போன்ற நூல்கள் காட்டாகின்றன.

ஒவ்வொரு நூலின் தொடக்கத்திலும் அதன் இயல்பிற்கு ஏற்றவாறு சிறு குறிப்புகளாக அறிஞர் கூற்றினை அன்னம் தம் பதிப்புகளில் வைப்பது பாராட்டத்தக்கது.

**எந்த நாட்டிலே புதிய மகாகவி தோன்றுகிறானோ**
**அந்த நாடு மகாபாக்கியமுடையது - பாரதியார்** (புலரி கல்யாண்ஜி)

மிகச் சிலப் பதிப்புகளில் சொல்லகராதியைப் பிற்பகுதியில் காண முடிகின்றது. மேற்சுட்டிய குறிப்புகள் ஆய்வாளர்களுக்குப் பெரிதும் பயன் தருவதாய் அமையும் என்பதால், இவை அனைத்து நூல்களிலும் இடம் பெறுதல் வேண்டும். வாழ்க்கை வரலாறு, பயண இலக்கியம், கலைக் களஞ்சியம்

போன்றவற்றில் இடையிடையே புகைப்படங்கள், வண்ணப் புகைப்படங்கள் ஆகியன இணைத்திருப்பது படிக்கும் ஆர்வத்தை மிகுவிப்பதாக உள்ளது.

காட்டு : **கலைக்களஞ்சியம்** - ஓரியண்டல் வாட்ச்மேன் பப்ளிஷர்ஸ் கம்பெனி.

**சாதனைச் செம்மல் ச.வே.சு** - மணிவாசகர் பதிப்பகம்.

கழகம், பூம்புகார், மணிவாசகர் போன்றவை ஒவ்வொரு நூலிலும் அதன் பதிப்பு எண்ணைக் குறிப்பிடுதல் போல அனைத்துப் பதிப்பகங்களும் குறிப்பிட்டால் அவற்றின் வளர்ச்சி குறித்து ஆய்வதற்கு ஏதுவாகும்.

சேகர் பதிப்பகத்தார் நூல் முகப்பில் உருவாக்கியோர் எனும் தனி அட்டவணையில் ஆசிரியர், ஓவியர், பிளாக் செய்தவர், நூல் அச்சிட்டவர், அச்சகத்தார், முகப்புவண்ணம் அச்சிட்டோர், பைண்டிங் செய்தவர், பிழைதிருத்தியவர், தயாரிப்புப் பணியாளர், பதிப்பாளர் என அனைவரையும் தந்து தம் நூல்களில் சிறப்பிக்கின்றனர்.

ஒவ்வொரு பதிப்பகமும் ஏதோ ஒரு வகையில் தனக்கென்று கொள்கையும் நோக்கமும் கொண்டு செயல்படுவதை அவை வெளியிடும் நூல்களின் வழி அறியமுடிகிறது. இத்தனிச்சிறப்புகளை அறிவதற்கு நூலில் அமையும் பதிப்புரைகள் சிறந்த வாயில்களாகின்றன. எனவே அனைத்துப் பதிப்பகங்களும் பதிப்புகள் அனைத்திலும் பதிப்புரைகளை நல்க வேண்டும்.

**நோக்கம்**

இந்தியாவிலேயே புத்தக வெளியீட்டுத் துறையில் நீண்ட காலமாகப் பணியாற்றிவரும் பொதுலிமிடெட் கம்பெனி எனப்புகழப் பெறும் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சிறுவர் நூல்கள், இளையோர் நூல்கள், கையடக்கப் பதிப்புகள், மலர்கள், மொழிபெயர்ப்புகள் எனப் பல்துறைகளிலும் நூல்களைக் கொண்டுவருவதில் வெற்றி கண்டுள்ளது. இது தமிழுக்கு ஆற்றியுள்ள பணி அளப்பரியது. சுருங்கச் சொன்னால் தமிழ் இலக்கிய இலக்கண வரலாற்று, பண்பாட்டு அடிப்படை நூல்களை வெளிக்கொணர்ந்த பெருமைக்குரியது. எந்த ஒரு தமிழ் சார்ந்த ஆய்வையும் கழகநூலின் துணையின்றி அத்தனை எளிமையாகச் செய்துவிடமுடியாது. தமிழ்ப்பணி ஆற்றுதலைத் தலையாய நோக்கமாகக் கொண்ட கழக நோக்கங்களுள் ஒன்றாக, ‘சிற்றிலக்கிய நூல்களை அருஞ்சொற்பொருள் விளக்கங்களுடனும் ஆராய்ச்சி முன்னுரையுடனும் தனிநூல்களாகவும், கொத்து நூல்களாகவும் வெளியிட வேண்டும்’ என்பதும் அமைகின்றது.

சிறுவர் இலக்கியம், இலக்கியம், இலக்கியத் திறனாய்வு, அறிவியல், மெய்யியல், தொழில்நுட்ப இயல், சமூகவியல் ஆகிய துறைகளில் தலை சிறந்த ஏறத்தாழ *2000* நூல்களைப் புதுயுக புத்தகப் பண்ணை (நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்) வெளியிட்டுள்ளது. இவற்றுள் பெரும்பாலானவை மூலநூல்கள். இவற்றுள் பல கல்லூரிகளிலும், பள்ளிகளிலும் பாடப்புத்தகங்களாக வைக்கப்பட்டுள்ளன. தமிழின் மேன்மையை உலகுக்கு எடுத்துச் செல்வதன்

பொருட்டுச் சில ஆங்கில நூல்களையும் வெளியிட்டுள்ளது. மனிதர்களுக்குள் இருக்கும் இனமொழி வேறுபாடுகளை, மத வேறுபாடுகளைக் களைந்தெறியும் இலக்கையும், எல்லாப் பாடங்களும் தாய்மொழியான தமிழில் கற்பிக்கப்பட வேண்டும் என்ற நோக்கில் நூல்களை வெளியிடும் தலையாய குறிக்கோளையும் உயிர்நாடியாகக் கொண்டு இப்பண்ணை இயங்குகிறது.

துறை தோறும் தமிழுக்கு ஆக்கம் தரும் நூல்களைச் செம்பதிப்பாக வெளியிடுவதைத் தம்வாழ்வின் குறிக்கோளாக மணிவாசகர் பதிப்பகம் *(உலகத்தமிழ் மாநாடுகள், 1994)* கொண்டுள்ளது.

சிறந்த நூல்களை முடிந்தவரை குறைந்த விலையில் வெளியிட வேண்டும்; தமிழ் நூல்களைத் தனிப்பட்டவர்களும் வாங்கும் வகையில் பதிப்பிக்க வேண்டும் *(ஏதுலன், 1969)* என்பவற்றைத் தன்நோக்கமாக *1946* இல் தோன்றிய தமிழ்ப் புத்தகாலயம் நன்கு கடைப்பிடித்து வருதல் குறிப்பிடற்பாலது.

மாருதி பதிப்பகம் புத்தம் புதிய துறையில் மக்களுக்கு அறிவூட்டக் கூடிய நூல்களை மட்டுமே வெளியிடும் என்று கூறுகிறது. அதன் ஸ்தாபகரான அமரர் திரு. ஞானம் விநாயகமும், அவருக்குப் பின் அவரது மக்களும் இம்மரபைப் பின்பற்றியே நூல் வெளியிடுவது பாராட்டத்தக்கது என்று புலியூர் கேசிகன் கூறுகிறார் *(முற்பிறவி மறுபிறவி அதிசயங்கள், வி. ரவிச்சந்திரன்).*

**என்னை நன்றாக இறைவன் படைத்தனன்**
**தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே**

என்பதனைத் தன்கொள்கையாக அனைத்து நூல்களிலும் தமிழ்ப் பதிப்பகம் நவில்கிறது.

பக்தியிலக்கிய அறிமுகம் சக்தி பதிப்பகத்தின் நோக்காகிறது *(வாகீசர் அருள்வாக்கு).*

சிந்தனையைத் தூண்டும் நூல்களைத் தொடர்ந்து வெளியிட விரும்புவதை மஹாஜனம் நோக்காகக் கொண்டுள்ளது *(நாடார் சமூக வரலாறு, குரு தேன்மொழி, 1969).*

சிறுவர் முதல் பெரியோர் வரை மனம் பண்படவும்,அமைதி பெறவும் நல்ல சிந்தனை விதைகளை மன வயலில் விதைக்க வேண்டும் என்கிற சீரிய நோக்கோடு வெளியாகும் நூல்கள் இவை. பள்ளி, கல்லூரி நூலகங்களுக்கு உகந்த நூல்கள் என்கிறது திருவரசு புத்தக நிலையம்.

தமிழ்ப்பற்றுடன் மக்கள் திகழவேண்டுமென்ற நோக்கில் சேகர் பதிப்பகம் நூல்களை வெளிக்கொணர்கிறது.

இலக்கியத் தொழில் பொருளை இலக்காகக் கொள்ளாமல் மக்களுடைய அறிவை வளர்ப்பதாக இருக்க வேண்டும் என்ற கருத்துடன் *1901* இல் தொடங்கப்பெற்றது அல்லயன்ஸ் கம்பெனி.

மேற்சுட்டியவற்றின்வழி, பதிப்பகங்களின் நோக்குகள் சில வெளிப்படுகின்றன. சீரிய தமிழ்ப்பணி, ஆய்வு வளர்ச்சி, சமுதாயச் சீர்திருத்தம், மக்கள் விழிப்புணர்ச்சி, சமுதாய வளர்ச்சி, சமுதாய முன்னேற்றம் போன்ற பல சிந்தனைகளை மக்கள் பெறுதல் வேண்டும் என்ற நோக்கில் இவை போன்ற நூல்களை வெளியிடுவதில் பல பதிப்பகங்கள் முன்னிற்கின்றன. இந்நூல்கள் பல தனிச்சிறப்புகளையும் தன்னுள்ளே பெற்றுத்திகழ்கின்றன.

**தனிச்சிறப்புகள்**

பதிப்பகங்களே இலக்கிய வளர்ச்சிக்குத் துணை நிற்கும் வகையில் மாநாடுகளை நடத்தி, பின் அதில் படிக்கப் பெற்ற கட்டுரைகளை, நிகழ்த்திய சொற்பொழிவுகளை நூலாக வெளியிட்டிருப்பது சிறப்பாகப் போற்றுதற்குரியது. இவ்வரிசைகளில் *1981*இல் கழகத்தின் வழி திருவிளையாடல் சொற்பொழிவுகள் வெளிவந்துள்ளன.

தென்னிந்திய ஆய்வுக்கழகம் என்ற பெயரில் ஓர் அறக்கட்டளை அமைத்து இந்திய மாநில அரசுகளின் நிதி உதவியோடு சில தரமான நூல்களைப் புதுயுக புத்தகப் பண்ணை வெளியிட்டுள்ளது.

ஒரே பொருளின் அடிப்படையில் தொடர்ச்சியாகப் பல நூல்களைப் பதிப்பகங்கள் உருவாக்குதலும் உண்டு. காட்டாக வானதி பதிப்பகத்தார் பி.சி. கணேசன் படைப்பில் 'உலகப் பெரியார் வரிசை' எனும் தொடரினைத் தந்துள்ளனர். **உலகப் பெரும் விஞ்ஞானிகள், உலகப் பெரும் போர் வீரர்கள், உலகப் பெரும் பெண்ணரசிகள், உலகப் பெரும் தீர்க்கதரிசிகள், உலகப் பெரும் எழுத்தாளர்கள்** போன்றன இவ்வரிசையில் வந்த நூல்கள். 'எழுத்தாளர் பலரால் பாராட்டப்படும் சிறப்பினைப் பெற்றது வானதி பதிப்பகம். இன்று பதிப்புத்துறையில் தன்னிகரற்று விளங்குகிறது' என்று நா. மகாலிங்கம் **வாழ்விக்க வந்த காந்தி மகாத்மா** *(சம்பந்தம்)* என்ற நூலின் முன்னுரையில் பாராட்டியுள்ளார். மேலும் அதன் பதிப்பாசிரியரை, 'திருநாவுக்கரசு காந்தியத்தில் தோய்ந்தவர். தமிழ் மக்களுக்கு இந்த நாட்டின் ஞானச்செல்வத்தை எல்லாம் வாரிவழங்க வேண்டும் என்பதில் உண்மை ஆர்வம் உள்ளவர். பதிப்பகம் ஒரு தொழிலாக இருந்தாலும் அதில் ஒழுக்கத்தைக் கடைப்பிடித்து வருபவர்' என்று பாராட்டியுள்ளார். சொல்லிலும், சுவையிலும், பொருளிலும் புதுமை பாய்ச்சும் நவகவிஞர்களைப் பாரதியின் நூற்றாண்டு விழாவில் அன்னம் பெருமையுடன் அறிமுகப்படுத்துகிறது.

அல்லயன்ஸ் கம்பெனி நிறுவனர் குப்புசாமி ஐயர் ஓர் ஆசிரியர் நூல் எழுதுகிறார் என்றால் அதற்கு உதவக் கூடிய ஆதார நூல்களை யெல்லாம் திரட்டி அவருக்கு நல்கும் நல்ல வழக்கத்தைக் கொண்டிருந்தார் (பி.வி. சுப்பிரமணியன், *1970)* என்பது, அவர் அக்காலப் பதிப்பகத்தாருக்கு அன்றே சிறந்த வழிகாட்டியாக விளங்கியமையைக் காட்டுகிறது.

பூங்கொடி பதிப்பகம், வானதி, மணிவாசகர், தமிழ்ப்புத்தகாலயம் போன்ற பதிப்பகங்கள், மைய, மாநில அரசுகளின் மற்றும் தனிஅமைப்புகளின் சிறந்த நூல்களுக்கான பரிசுகளைப் பெற்றுள்ளன. புதுயுகப்புத்தகப் பண்ணை

வெளியிட்ட நூல்களில் *84* நூல்கள் தமிழ்நாடு இந்திய அரசுகளின் பரிசுகளையும், சர்வதேசக் கல்வி அறிவியல் பண்பாட்டு அளவையின் பரிசுகளையும் பெற்றுள்ளன *(விலைப்பட்டியல் 1999 - 2000).*

ஆசிரியர்களிடமிருந்து வரும் கையெழுத்துப் பிரதிகளைப் படித்துப் பார்த்துக் கருத்துத் தெரிவிக்கப் பதிப்பகக் குழுவைப் பல பதிப்பகங்கள் நியமித்திருக்கின்றன. மேலும் துறை வல்லுநர்களிடமும் கையெழுத்துப் பிரதிகள் அனுப்பப்படுவதுண்டு. காட்டு : புதுயுகபுத்தகப் பண்ணை *(விலைப் பட்டியல் 1999 - 2000).*

நூலுள் எழும் ஐயங்களுக்கும், கருத்து வேறுபாடுகளுக்கும் நூல் தொடர்பான பிற எண்ணங்களுக்கும் நூலாசிரியருடன் பதிப்பகத்தார் தொடர்பு கொள்வதையும் காணமுடிகிறது *(மனோதத்துவ மருத்துவம், ஆர். எம். சோமசுந்தர், நர்மதா பதிப்பகம்).*

சில பதிப்பகங்கள் வெளியீட்டு உரிமையை மட்டும் மேற்கொண்டு விற்பனை உரிமையை மற்றொன்றிற்குத் தருதலும் உண்டு. டி.கே.சி.யின் **இதய ஒலி** *(1981)* பொதிகை மலையின் பதிப்பாக அமைந்த போதிலும் விற்பனை உரிமையை வானதி பெற்றுள்ளது.

நூலாசிரியர்களே பதிப்பகம் அமைத்து நடத்துதற்கு மணிவாசகர், காவியா பதிப்பகம், அன்பு பப்ளிகேஷன்ஸ் போன்றவை சான்றாகும்.

பிற நிறுவனத்தின் நிதி உதவி பெற்றும் நூல்கள் வெளிவருகின்றன. காட்டாக, நர்மதா பதிப்பகம், திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் சமய நூல்களை வெளியிடுவதற்கான உதவி நிதியால் மாருதிதாசனின் **இந்து சமயக் கருத்துகள்** என்ற நூலைப் பதிப்பித்துள்ளது. நூலின் முதல் பதிப்பு, மறுபதிப்புகள் ஆகியவை பிறரின் நிதி உதவி பெற்று வெளிவந்திருப்பதைச் சமய நூல் வெளியீடுகளில் மிகுதியாகக் காணமுடிகிறது. சைவ சித்தாந்த சபை, மகரத்தலைநாட் குரு பூஜை என்ற விழாவை முன்னிட்டு, இறந்தவர் நினைவாக நினைவுமலராக **அஷ்டபிரகரணம், சங்கற்ப நிராகரணம்** என்ற நூல்களை வெளியிட, இறந்த பெண்மணியின் கணவனிடம் நன்கொடை பெற்று வெளியிட்டுள்ளது.

கண்ணதாசன் படைப்புகளை வானதி பதிப்பகம் தொடர்ந்து வெளியிட்டுக் கொண்டிருந்தது. கண்ணதாசன் பதிப்பகம் தோன்றியபின் அது கண்ணதாசனுடைய நூல்கள், கட்டுரைகள், சிந்தனைச் சிதறல்கள், தன்வரலாறு, வாழ்வியல், கவிதை, நாவல், உரை, தொகுப்பு முதலான பொருண்மைகளைக் கொண்ட அவருடைய படைப்புகளையும் அவரது பாடல் பற்றிப் பிறர் எழுதிய ஆய்வு நூல்களையும் வெளியிட்டிருக்கிறது. சிறப்புமிகு தனி நபர் படைப்புகளைச் சிறப்பிக்கப் பல பதிப்பகங்கள் முன் வந்த போதிலும் தனிநபருக்கெனப் பதிப்பகம் தோன்றியிருத்தலை அறிய முடிகிறது.

புதிதாக நூல்களை எழுத வைப்பதுடன் ஆசிரியரின் சொற் பொழிவுகள், கட்டுரைகள், தொடர்கதைகள், சிறுகதைகள் என முன்பே இதழ்களில்

வெளிவந்தவற்றைத் தொகுத்தும் நூலாக்கம் செய்யப்பட்டு இருக்கிறது. சத்ய கங்கையில் வெளிவந்த நெ.து.சுந்தரவடிவேலுவின் கட்டுரைகள், வானதி பதிப்பகத்தாரால் நூலுருக் கொண்டமை எடுத்துக் காட்டாம். குழந்தை புத்தக நிலையத்தாரின் **வளர்ந்து வரும் குழந்தை இலக்கியம்**, அழ. வள்ளியப்பா சென்னைப் பல்கலைக்கழகத்தில் நிகழ்த்திய கல்கி நினைவு அறக்கட்டளைச் சொற்பொழிவாகும்.

*1978* ஆகஸ்ட் தமிழ்நாட்டில் திருப்பூரில் நடைபெற்ற கலை இலக்கியப் பெருமன்ற மகாநாட்டில் அந்தனி ஜீவாவினால் படிக்கப்பட்ட **ஈழத்தில் தமிழ்நாடகம்** என்ற கட்டுரை முதலில் இலங்கைத் தினகரன் இதழில் வெளிவந்தது. இலங்கைத் தமிழரின் கருத்துகளைத் தமிழகமும் அறிய வேண்டும் என்ற நோக்குடன் அகரம் பதிப்பித்துள்ளது.

பல ஆண்டுகளுக்கு முன் பிறிதொரு பதிப்பகத்தால், நிறுவனத்தால் வெளிவந்து இன்று கிடைத்தற்கரியதாய் நிற்கும் நூல்களைத் தேவை கருதி மீண்டும் தம் பதிப்பாகக் கொண்டு வந்துள்ளனர். காட்டு : வரகூர் நம் பெருமாள் மன்ற வெளியீடாக முதலில் எஸ்.கே. இராமராஜன் எழுதி வெளியிட்ட **மேகநாதம்** என்ற நூலை வானதி பதிப்பகம் வெளியிட்டுள்ளது. இலங்கை சாகித்திய அக்காதெமியின் பரிசு பெற்று அங்குப் பதிப்பிக்கப் பெற்ற க.கைலாசநாத குருக்களின் **வடமொழி இலக்கிய வரலாற்றை** *(1981)* நர்மதா மீண்டும் கொண்டுவந்துள்ளது.

வட எழுத்துகள் நீக்கப்படவேண்டும் என்ற உணர்வுடன் பதிப்பகங்கள் நூல் வெளியிடுவதையும் காணமுடிகின்றது. தூய தமிழ் கொண்டதே நிறை தமிழ்நூல். அதனைப் பையப்பையச் செய்ய வேண்டும். இந்நோக்கில் இந்நூலில் வடவெழுத்துகள் (மேற்கோள் பாடல்களிலின்றி) ஒருவப்பட்டுள (தமிழகப் புலவர் குழு வெளியீடு) என **முத்துக்கோவை நூலுள்** குறிப்பிடப்பட்டுள்ளது.

மொழிபெயர்ப்பு நூல்களைக் கழகம், சோலை, புதுயுகப்புத்தகப் பண்ணை போன்றவை வெளியிடுகின்றன. பேரறிஞர் வில்டியூரெஸ்ட் எழுதிய The Pleasures of Philosophy எனும் நூலிலுள்ள ஒரு பகுதியை **உலகமதங்கள் ஒரு தத்துவப் பார்வை** என்ற தலைப்பில் தமிழில் அறிமுகம் செய்து வெளியிடுவதில் பெருமிதம் கொள்கிறோம் என்கிறது புதுயுகபுத்தகப் பண்ணை.

நூல்கள் ஏழை எளியவர்களையும், நடுத்தர மக்களையும் சென்றடைய வேண்டும் என்ற நல்நோக்கில் குறைந்த விலையில் அச்சிடும் பழக்கத்தினைத் திரு.வை. கோவிந்தன் போன்றோர் தொடங்கி வைத்தனர். அதனை அன்று முதல் இன்றுவரை பல பதிப்பகங்கள் பின்பற்றுகின்றன. பல புத்தக விலைப்பட்டியல்களில் மலிவுப் பதிப்புகள் என்ற பொருண்மையின் கீழ் இத்தகைய நூல்கள் தனியாக இடம்பெறுவதைக் காணமுடிகிறது. புதுயுகப் புத்தகப் பண்ணை சங்க இலக்கியத்தில் எட்டுத்தொகை, பத்துப் பாட்டையும், சங்கம் மருவிய இலக்கியத்தில் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களையும், மணிவாசகர் பதிப்பகம் *17* நூல்களையும் மலிவு விலைப் பதிப்புகளாக வெளியிட்டுள்ளன.

எழுத்தாளர்கள் பதிப்பகத்தார் விருப்பிற்குத்தக எண்ணங்களை மாற்றிக்கொள்வதும் உண்டு. இதனை வி.ரமணி தன் **பாலநட்சத்திரம் பாலாஜி** என்ற நூலின் முன்னுரையில், 'பழைய புனைபெயரிலேயே இதை வெளியிடத்தான் விரும்பினேன். நாவல் தலைப்பிலும் பெயரிலும் மாற்றத்தை விரும்பிய பதிப்பகத்தாரின் (வசந்தா பிரசுரம்) ஆவலை மகிழ்ச்சியுடன் பூர்த்தி செய்துள்ளேன்' என்பதனால் தெளியலாம். நூலில் இத்தகைய செய்திகள் பதிப்புரை, முன்னுரை என்ற பகுதிகளில் சுட்டப்படாது இருப்பினும் பதிப்பகத்தார் விருப்பிற்கிணங்க சில சேர்க்கைகளையும், மாற்றங்களையும், சுருக்கங்களையும் பெற்று நூல்கள் வெளிவருவதுண்டு. **சிலப்பதிகார ஆய்வு வரலாறு** என்ற நூற்பெயர் **சிலப்பதிகார ஆய்வுகள் ஓர் ஒப்பாய்வு** *(1990)* என்ற பெயரிலும், **நட்சத்திரமாலை** என்ற சுவடிப்பதிப்பு **சோதிட நட்சத்திரமாலை** *(1990)* என்ற பெயரிலும் நர்மதா வெளியீடாக இக்கட்டுரையாசிரியரின் நூல்கள் வெளிவந்துள்ளமை இங்குச் சுட்டத்தக்கது. இரண்டாம் நூலில் *10* தலைப்புகளாக இருந்த பொருளடக்கம் அச்சு நூலில் *23* தலைப்புகளாக விரிந்துள்ளது. ஆயின் முடிவுரை, துணைநூற்பட்டியல், அருஞ்சொற்பொருள், சொல்லடைவு ஆகிய ஆய்வுக்குத் தேவையான பின்பகுதிகள் நீக்கப்பட்டுள்ளன. இவை பதிப்பகத்தாரின் பார்வையில் தேவையற்றனவாகி விட்டன என்று கருதுவதைவிடப் பக்கங்களும் விலையும் கூடுதலாவதைத் தவிர்த்தலே காரணமாகிறது.

மறுபதிப்பு ஏற்படும் பொழுது முதற்பதிப்பில் அமைந்த மதிப்புரை, முன்னுரை, அணிந்துரை போன்றவற்றையும் இணைத்துத் தரும் பாங்கு அமைகிறது (வடமொழி இலக்கிய வரலாறு, கா. கைலாசநாதக் குருக்கள், நர்மதா). கி.ஆ.பெ. விசுவநாதத்தின் **தமிழ் மருந்துகள்** என்ற நூல் *18*ஆம் பதிப்பாகவும் *(1981), 16*ஆம் பதிப்பாக டி.எஸ். ஜனககுமாரியின் **நாட்டு மருந்துகள்** *(1981)* என்ற நூலும் வந்துள்ளமை மறுபதிப்புகளின் தேவையைக் காட்டுகின்றன.

பாரதிதாசனின் குயில் இதழின் தலையங்கக் கட்டுரைகளைத் தொகுத்து **உலகுக்கோர் ஐந்தொழுக்கம்** என்ற பெயரில் புதுயுகபுத்தகப் பண்ணை *(விலைப்பட்டியல், ப.7, 1999)* வெளியிட்டுள்ளது.

ஒரே நூலில் நூற்பொருண்மைக்குரியவர், பதிப்பாசிரியர், நூலாசிரியர் ஆகியோரின் புகைப்படம் இடம் பெறுவதைக் காணமுடிகிறது (சாதனைச் செம்மல் ச.வே. சு., கமலவேலன், மணிவாசகர் பதிப்பகம், *1999*). இதே நூலின் இறுதியில் நிறுவனர், நிறுவிய ஆண்டு, வெளியீடுகள், பல்கலைக்கழகப் பாடநூல்கள், பரிசுபெற்ற நூல்கள், தலைசிறந்தது, தரமான நூல்களின் தாயகம், செம்பதிப்புகளின் கருவூலம், நாட்டுடைமையாக்கப்பட்ட நூல்களின் பதிவகம், தமிழ் இலக்கியங்களுக்குக் காப்பகம், ஆராய்ச்சி நூல்களின் அமுதசுரபி ஆகிய பதிப்புச் சிறப்புகள் இடம் பெறுவதையும் காணமுடிகிறது.

### விலைப்பட்டியல்

விற்பனைக்கு உள்ள நூல்கள், ஆண்டுதோறும் வெளிவரும் நூல்கள், புதிதாக வந்துள்ள நூல்கள், அவற்றின்விலை போன்றவற்றைத் தெரிந்து கொள்வதற்குப் பதிப்பகங்கள் வெளியிடும் நூல்களின் இலவச விலைப்பட்டியல்கள்

உதவுகின்றன. இப்பட்டியல்கள், நல்ல நூல்களின் விலைப்பட்டியல் மிகச் சிறந்த நூல்கள் வெளியிடுவோர் *(அருள்மிகு அம்மன் பதிப்பகம்)*, தரமான நூல்கள் வெளியிடுவோர் *(மணிவாசகர், 1997)* போன்ற தொடர்களைப் பெற்று வெளிவருவதையும் காணமுடிகிறது.

நூல் வாங்க வேண்டுவதன் அவசியத்தை, சிறப்பை உணர்த்தும் வண்ணம் சில நல்ல கருத்துகளையும் தாங்கி இவை வருகின்றன.

'நல்ல நூல்களை வாங்குவது செலவல்ல! உங்கள் குடும்பத்தினருக்காகவும், வருங்கால சந்ததியினருக்காகவும் நீங்கள் சேமித்து வைக்கும் பொக்கிஷங்கள்' - அருள்மிகு அம்மன் பதிப்பகம்.

'கற்றனைத்து ஊறும் அறிவு - திருக்குறள்' - வானதி, *1998.*

விலைப்பட்டியலில் நூல்கள் பெரும்பாலும் நாவல், சிறுகதை, வரலாறு, கவிதை போன்ற பொருண்மை அடிப்படையில் இடம் பெறுகின்றன. ஆசிரியர் வரிசை, பொருண்மை வரிசை என்ற இரண்டும் கலந்தமைவதும் உண்டு *(திருமகள் நிலையம், 1998)*. எங்களிடம் கிடைக்கும் பிறநூல்கள் *(திருவரசு புத்தக நிலையம்)*, பிற வெளியீடுகள் *(ஸ்ரீ செல்வ நிலையம்)* என்பன போன்றத் தலைப்புகளில் விற்பனை உரிமை பெற்ற நூல்கள் இடம்பெற்றுள்ளன. இதனை முதல் பக்கத்திலேயே சுட்டும் நிலையும் உள்ளது. **எங்கள் சொந்த வெளியீடுகளும், விற்பனை உரிமைநூல்களும்-** பாரி நிலையம், *1998.*

பரிசு பெற்ற நூலாயின் பரிசு பெற்றது என்பது அடைப்பில் சுட்டப் பெறுகிறது. **கம்பர்** *(பரிசு பெற்றது)* - மணிவாசகர், *1997.*

சிறந்த நூல்களைத் தொடக்கத்தில் சிறப்பித்துத் தரும் முறை பின்பற்றப்பட்டுள்ளது. டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி, பேராசிரியர் க.அன்பழகன், நாஞ்சில் கி. மனோகரன், ஆலடி அருணா ஆகியோர் எழுதிய நூல்கள் பூம்புகார் விலைப்பட்டியலின் *(1998)* முன்பக்கத்தில் இடம்பெற்றுள்ளன. சிறந்த அறிஞர்களின் புகழ்மிக்க நூல்களை வெளியிடுவதோடு மட்டுமின்றி அவர்களது நூல்களுக்கு விலைப்பட்டியலில் சிறப்பிடமும் நல்குகின்றன. திரு. வி. கலியாண சுந்தரனாரின் புகழ்மிக்க நூல்கள் *(மேற்படி)* பின் அட்டையில் இடம் பெற்றுள்ளன. மேலும் மலிவு விலைப் புத்தகங்கள், புதிய வெளியீடுகள், பரிசு பெற்ற நூல்கள் போன்றன சிறப்பாக அறிமுகம் செய்யப்படுகின்றன. நூல்பற்றிய சில குறிப்புகளைத் தரும் நிலையும் உண்டு.

பதிப்பகத்தார் விலைப்பட்டியலில் தங்களுக்கு வரும் பாராட்டுக் கடிதங்களுக்கு நன்றியும் வாழ்த்தும் தெரிவித்து அவர்களது நட்புறவு வேண்டும் என்ற விருப்பத்தினை வெளிப்படுத்துகின்றனர்.

தமிழகத்தின் அறிவுப்பசி தீர்க்கும் *50* ஆண்டுகால இலட்சியப் பயணத்தில் தடம் பதித்து உங்கள் மனதில் இடம் பிடிக்க வாய்ப்புத் தரும் வாசக நெஞ்சங்கட்கு எமது இதயம் நிறைந்த நன்றி *(தமிழ்ப்புத்தகாலயம், 1998)*.

பல விலைப்பட்டியல்களில் பொருளடக்கமும் இடம் பெறுகிறது. மணிவாசகர் பல்துறை நூல்கள் என்ற தலைப்பில் பொருளடக்கத்தை அமைத்துள்ளது. விலைப்பட்டியல் பக்களண் பெறாததால் பொருளடக்கம் பக்க எண் பெறவில்லை.

புதுயுக புத்தகப் பண்ணை *(1999-- 2000)* உள்ளுறை, வரிசைஎண், தலைப்பு, பக்கம் என்றவாறு பொருளடக்கத்தை முறையாக அமைத்துள்ளமை போற்றற்குரியது.

பதிப்பகங்கள் உருவான ஆண்டு விலைப்பட்டியலில் இடம் பெறுவதுண்டு (மணிவாசகர் பதிப்பகம், தோற்றம் - *1961).*

பதிப்பகங்கள் தொடர்ந்து புத்தகக் காட்சிகளை நடத்துகின்றன என்பதும், எந்த இடத்தில் எத்தனையாவது கண்காட்சி என்பனவும் தெரிகின்றன.

**22வது மாபெரும் சென்னை புத்தகக் காட்சி** (மணிவாசகர், *99).*

கவிஞர் கண்ணதாசன் பதிப்பக விலைப்பட்டியலில் கவிஞரின் புகைப்படத்துடன் கூடிய வாழ்க்கைக்குறிப்பு (பக் *2-5, 1998)* இடம் பெற்றுள்ளது.

வசந்தா பதிப்பக விலைப்பட்டியலில் அதன் வெளியீட்டாளர் டாக்டர் ஆலந்தூர் கோ. மோகனரங்கன் கவிதைப் புலமை மிக்கவர் என அறிஞர் பெருமக்கள் பாராட்டி உரைத்த கருத்துரைகள் இறுதியில் இடம் பெற்றுள்ளன.

புதுயுகபுத்தகப் பண்ணை வெளியிட்டுள்ள விலைப்பட்டியலில் *(1999-2000)* அழகான அட்டைப்படம், புத்தகங்கள் படித்திடுவோம், புது உலகம் படைத்திடுவோம், உயர்வான நூல்கள் கற்று உலகத்தை ஒருங்கிணைப் போம் என்ற நல்லகருத்துகள், வாசகர்களே உங்கள் தேவையை அஞ்சல், தொலைபேசி, தொலைநகல், மின்னஞ்சல் மூலம் தெரியப் படுத்துங்கள் என்ற நூற்களை எளிமையாகப் பெறுகின்ற முறை, உள்ளுறை போன்றன இடம்பெற்றுள்ளன. மிகச்சிறப்பாக அதன் தோற்றம், வளர்ச்சி குறித்த செய்திகள் ஒன்பது பக்கங்களில் இடம்பெற்றுள்ளன. ஒவ்வொரு பதிப்பகமும் தனது தோற்றம் வளர்ச்சி குறித்து ஒரு முறையாவது விலைப்பட்டியலில் எழுதுவது என்பது மிக எளிதான செயல். இதன் பயனாகப் பதிப்பகங்களின் தோற்றம் வளர்ச்சி என்ற ஓர் அருமையான நூல் உருவாதல் இயலும்.

இங்ஙனம் தங்களுடைய வெளியீடு, அண்மைக்கால வெளியீடு, சிறப்புமிகு வெளியீடு, வெளியிட்டுள்ள நூலின் தனிச்சிறப்பு, நூலின் விலை, நூலாசிரியர் அறிமுகம், நூல்களைப் பெறுவதற்கான வழிமுறை முதலான பல செய்திகளை விலைப்பட்டியல்கள் வெளிப்படுத்துகின்றன.

**நூல்களின் அமைப்பு**

நூல்களின் அமைப்பை, *1.* கட்டமைப்பு (Binding) புறத்தோற்றம், அச்சு, *2.* தலைப்புப் பக்கமும் அதன் பின்பக்கமும் (Title Page and Half Title Page), *3.* உட்பொருள் அடக்கம் (Subject matter) என்று மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். வாசகர் கையளவைத் தாங்கக் கூடியதாக நூல் உறுதியாகக் கட்டுப் பெற்றிருத்தல் வேண்டும். துணிக்கட்டு நூலகத்திற்கு உகந்தது. தற்போது

அதிகமான நூல்கள் காகிதக்கட்டு (Card board) அல்லது உறுதியான காகிதக் கட்டு (Hard card board) பெற்றுள்ளன. ஒரு சில நூல்கள் காலிக்கோ கட்டுப்பெற்று இருக்கின்றன விலை காரணமாக அனைத்து நூல்களும் உறுதிக் கட்டுப் பெற்று இருப்பதில்லை. தரமான இலக்கிய நூல்களே இவ்வாறான கட்டுகளைப் பெற்றுவருகின்றன.

புற அமைப்பால் (Physical appearance) அனைவரையும் தன்பால் ஈர்க்கக்கூடிய வகையில் பல நூல்கள் வெளிவந்துள்ளன. எடுத்துக்காட்டாக நேஷனல் புக் டிரஸ்ட், க்ரியா, அகரம் வெளியீடு, நியுசெஞ்சுரி புக் ஹவுஸ் போன்ற நூல் வெளியீட்டாளர்கள் உருவாக்கும் நூல்கள் பாதுகாப்பான அழகான முன்பின் அட்டைகளையும், கண்ணுக்குக் குளுமையான வண்ணங்களையும், அழகான அச்சுப்பிரதிகளையும் கொண்டு அமைகின்றன (ந. சிவகாமசுந்தரி, நூலகர் பார்வையில் நூல்கள், எண்பதில் தமிழ், ப.*819)*.

**நூல் வெளியீடு**

ஒரு நூலின் ஆசிரியரோ, பதிப்பாளரோ, உரிமையாளரோ, உரிமையைப் பெறும் அக்கறையுள்ள ஒருவரோ புதுதில்லியிலுள்ள உரிமைப் பதிவு அலுவலகப் பணியாளருக்கு விண்ணப்பம் அனுப்பிப் பதிப்புரிமை பெற்ற பின்னரே நூலை வெளியிடுதல் வேண்டும்.

நூல் வெளியீடு என வரும்நிலையில் நூலாசிரியர் தம் கையெழுத்துப் பிரதியை வெளியீட்டாளருக்கு அனுப்புகிறார். அவர் பதிப்பாசிரியர் குழுவிற்கு அனுப்ப, குழு அப்பிரதியில் தேவையான மாற்றங்களைச் செய்து அச்சகத்திற்கு அனுப்புகிறது. அதன் பின் மெய்ப்புகள் பதிப்பாசிரியர் குழு, நூல் ஆசிரியர் ஆகியோரால் திருத்தப் பெறுகின்றன. இறுதியில் அச்சிடப்பட்ட நூற்படிகளை அச்சகம் வெளியீட்டாளருக்கு அனுப்ப, அவர் விற்பனை யாளருக்கு அனுப்புகிறார். இன்று பெரும்பான்மையான நூல்கள் அச்சுக் கோர்க்கப்படாமல் ஒளிக்கோர்வை செய்யப்பட்டு அச்சகத்திற்கு அனுப்பப் பெறுகின்றன.

இங்ஙனம் நூல்வெளியீடு என்பது நூலாசிரியர், வெளியீட்டாளர், பதிப்பாசிரியர், அச்சகத்தார், விற்பனையாளர் ஆகியோர் பலரின் கூட்டு முயற்சியினால் உருவாகிறது.

வேறு வகையாகப் பிரிப்பின் பதிப்புத்துறை, தயாரிப்புத்துறை, விற்பனைத்துறை என மூன்று பெரும் பிரிவுகளில், பலருடைய ஆர்வமும் உழைப்பும் கவனமும் இம்முயற்சியில் வேண்டும்.

பதிப்புத்துறையில் நூலாசிரியர், பதிப்பாசிரியர், அவர்களுடைய உதவியாசிரியர்கள், தட்டச்சு அடிப்பவர், மெய்ப்புத் திருத்துபவர் முதலானோர் இருப்பர். தயாரிப்புத் துறையில் காகித உற்பத்தியாளர், அச்சகத்தினர், படம் வரைபவர், பிளாக் செய்பவர் என்போர் வருவர். விற்பனைத் துறையில் கணக்கு, ஸ்டோர், தபால், விளம்பரம் என்ற பிரிவினரும், மொத்த விற்பனையாளரும், சில்லறை விற்பனையாளரும் வருவர். இவ்வுட்பிரிவுகள் மேலும் பல விரிவுகளைக் கொண்டுள்ளன (விநாயக மூர்த்தி, பதிப்புக்கலை, பக் *95)*.

சிறு வெளியீட்டகங்களில் பதிப்பாசிரியர், பிழை திருத்துபவர் என்பவர் நூலாசிரியரே. அச்சகம் பொறுப்பு, விற்பனை என்பன வெளியீட்டாளரிடம் வருகின்றன. ஆனால் பெரிய பதிப்பகங்கள் சிலவற்றில், பதிப்பாசிரியர் பிரிவு, தயாரிப்புப் பிரிவு, தகவல் தொடர்புத் துறை, விளம்பரம், விற்பனைப் பகுதி, கிடங்குவசதி ஏற்பாடு என்ற பல பிரிவுகள் தனித்தனியே உள்ளன (மேற்படி, ப.97).

**காணிக்கை**

நூல் எழுதும் ஆசிரியர் அந்நூலைத் தம் மதிப்புக்குரிய ஒருவருடைய நினைவிற்கு அறிகுறியாக, அவர்மீது தமக்குள்ள மதிப்பைப் புலப்படுத்த வழங்குதல் காணிக்கையாக்குதல் எனப்படும். தமக்குப் பெரிதும் பொருள் உதவி செய்தவர், நண்பர், பெற்றோர், சகோதரர், ஆசிரியர், நாட்டுக்குழைத்தவர், காதலி, மனைவி, அன்பிற்குரிய வளர்ப்புப் பிராணிகள் முதலியோருக்கு நூல்கள் காணிக்கை ஆக்கப்பட்டிருத்தலை நூல்களில் காணமுடிகிறது.

இது எளிய சடங்குபோலத் தோன்றினாலும், சிறந்த சில ஆசிரியர்களுடைய நூல்களில் இக்காணிக்கையாக்குதலைக் கேட்டுப் பெறும் செல்வர்கள் பலருண்டு. அதற்காகப் பெருந்தொகையை வழங்கிய செய்திகளும் உண்டு. அவ்வாசிரியருடைய அந்நூல் வாழுங்காலம் வரை தம் பெயரும் உலகில் வாழுமே என்ற எண்ணமே இதற்குக் காரணம். நூலின் முகப்புப் பக்கம் அல்லது பொருளடக்கத்தை அடுத்து இப்பகுதி இடம்பெறும்.

**நூலாசிரியர்**

நூலாசிரியர் தங்களது திறமைக்கேற்பப் பதிப்பகத்தாரால் உறவுகொள்ளப்படுகின்றனர். வாசகர் வட்டத்தைச் சஞ்சிகை வழி பெற்ற ஓர் எழுத்தாளன் அவனது நூலின் வழியாகப் படைப்பாளனாக வரும்போது மக்களிடையே செல்வாக்குப் பெறுகிறான். **பொன்னியின் செல்வன், பார்த்திபன் கனவு** போன்ற படைப்புகளைச் சஞ்சிகையில் நல்கிய கல்கி படைப்பாளராக வரும்பொழுது யாருடைய அறிமுகமும் தேவைப்படாத வராகிறார். படைப்பிலக்கியங்களிலும் சரி, ஆய்வு முதலிய பிற துறைகளிலும் சரி அவ்வவ் வாசகர்களால் விரும்பி வரவேற்கப்படும் ஆசிரியர்களுக்குப் பதிப்பகங்கள் நல்கும் ஆதரவு புதிய எழுத்தாளர்களுக்குக் கிடைப்பதில்லை. 'என்னுடைய பிற நூல்களை வெளியிடும் பொறுப்பை ஏற்றுக் கொண்ட வானதி திருநாவுக்கரசு' என்ற மு.மு.இஸ்மாயில் (இலக்கிய மலர்கள், தொகுதி - 2, வானதி, முகவுரை) கூற்று இதனை மெய்ப்பிக்கிறது. தமக்கு விருப்பப்பட்ட ஆசிரியரின் நூல்களைப் பதிப்பித்தல் என்பதனை மிகச் சிலப் பதிப்பகங்களே கொண்டுள்ளன. இலக்கியப் பதிப்பகம் 1981 வரை வெளியிட்ட ஆறு நூல்களும் ந.வீ.செயராமனால் படைக்கப்பட்டவை.

இலக்கியம், இலக்கணம் மற்றும் பிற துறைகளில் ஆழங்கால் பட்ட ஒருவர் தன்துறை சார்ந்த எழுத்துருவை மக்கள் மன்றத்திற்குக் கொண்டு செல்ல எண்ணும் போது, பதிப்பகத்தாரால் எடை போடப்படும் நிலை தவிர்க்க

இயலாததாகிறது. திறமையும் அதன் பயனாக விளைந்த தரமான நூலையும் பெற்ற நூலாசிரியன் படைப்பாளனாகப் பதிப்பகத்தாரால் அறிமுகப்படுத்தப் படுகின்றான். தனியாக ஒரு நூலாசிரியன் தன் எழுத்துருவை அச்சு நூலாக ஆக்கப் பெரும் முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. எத்தனையோ கல்லூரிகளிலும், உயர்கல்வி மேலாய்வுகளிலும் பணியாற்றும் முனைவர் பெருமக்கள் தங்களை அறிமுகப்படுத்திக்கொள்ளப் பதிப்பகம் எனும் ஏணியின்றிப் புகழ் உச்சிகாணாமலே போய்விட்ட நிலையும் உண்டு. திறமையும் புகழும் உடைய படைப்பாளர்களுடன் தொடர்புடைய பதிப்பகங்கள் ஆலமரம் என விழுதுவிட்டதையும் காண்கிறோம். படைப்பாளனின் ஆற்றல் திறனைக் கண்டு அவனது படைப்பைப் பெற்று அவனுக்குப் புகழையும், தம் பதிப்பகத்திற்குப் பெருமையையும் சேர்த்துக்கொள்ளும் பதிப்பாசிரியர்கள் பலர் இன்றும் உள்ளதைக் காணமுடிகிறது.

பதிப்பகத்தின் கட்டுப்பாட்டில் நிரந்தர ஊழியனாகப் பணிசெய்யும் படைப்பாளனுக்குத் தான் எண்ணிய கருத்தை வலியுறுத்தித் தனது எழுத்துருவைச் செய்ய இயலாத நிலையும் உண்டு. ஏனெனில் பதிப்பகத்தாரின் நெளிவு சுழிவுகளுக்கு ஏற்பவே இவன் எழுத்துச் செல்ல வேண்டியுள்ளது. அப்படிப்பட்ட படைப்புகள் காலவெள்ளத்தில் நிலைக்கும் என்று கூறமுடியாது. மேலும் அந்தப் படைப்பாளன் சுதந்திரமாக இயங்கும் படைப்பாளனோடு தொழில் முறையில் போட்டியிட முடிவதில்லை. பொதுவாகக் கூறின் பதிப்பகம் சிறப்புற நல்ல படைப்பாளனும், படைப்பாளன் புகழ்பெற நிலையான பதிப்பகமும் வேண்டும்.

நூலாசிரியர் நூலை வெளியிட விரும்பினால் அதனைச் செயல்படுத்துவதில் பல முறைகள் காணப்பெறுகின்றன. அவை வருமாறு:

1. ஏதேனும் ஒரு தொகையை மொத்தமாகப் பேசிக்கொண்டு அல்லது பெற்றுக்கொண்டு நூல் வெளியிடும் முழு உரிமையையும் (Out right) பதிப்பாளர்க்குக் கொடுத்துவிடுதல். அந்நூல் மறுபதிப்புகளைப் பெறின் ஆசிரியருக்கு மீண்டும் தொகை கிடையாது.

2. இதே முறையில் முதற்பதிப்புக்கு மட்டும் நூல் உரிமை வழங்குதல். இத்தொகைக்கு ஈடாக *100, 150* என நூற்படிகளை ஆசிரியருக்குத் தந்துவிடும் பதிப்பகங்களும் உண்டு. இம்முறையில் ஆசிரியர் மீண்டும் உரிமையை அதே பதிப்பகத்திற்கு அல்லது வேறு பதிப்பகத்திற்கு வழங்க முடியும்.

3. ஒரு பாரத்திற்கு (Form) இவ்வளவு ரூபாய் என்ற முறையிலும் நூற்தொகையினைப் பெறுவதுண்டு. நூலுக்கு நூல் ஒரு பாரத்திற்கான தொகை வேறுபடும்.

4. அனைத்துப் பிரிவினரும் நூலைப் பயன்படுத்த வேண்டும் என்ற நோக்கில், குறைந்தபட்ச அடக்க விலையில் விற்க வேண்டும் என்ற நிபந்தனையைக் குறிப்பிட்டு நூலைக் கொடுத்தல்.

5. தம் கருத்துகள் நாட்டில் பரவினால் போதும் என்று ஒரு சிலரும், தாம் எழுதிய நூல் வெளிவந்தால் போதும் என்று ஒரு சிலரும் தத்தம் நூல்களை இலவசமாகவே கொடுத்தல்.

6. பதிப்பகங்கள் படைப்பாளியிடம் ஐம்பது விழுக்காடு பணத்தைப் பெற்றுக்கொண்டு நூல் வெளியிடுதல். நூல் விற்பனைக்குத்தக விற்பனைத் தொகையில் ஒரு பகுதி இவரை வந்து சேரும்.

7. இத்தனை சதவீதம் எழுத்துரிமைத் தொகை (Royalty) தர வேண்டும் என்று பேசிக்கொண்டு நூலைக் கொடுத்தல்.

இங்ஙனம் ஒப்பந்த அடிப்படையில் நூலைத் தரும்போது எழுத்துரிமைத் தொகையைப் பேசிக்கொள்வதில் பல முறைகள் கையாளப் பெறுகின்றன. எழுத்துரிமைத் தொகையைப் பேசும்போது ஒரு பதிப்பிற்கு மட்டும் பேசுவர். இத்தனை ஆயிரம் படிகள், நூற்றுக்கு இத்தனை விழுக்காடு என்றும் பேசுவர். நூலின் சில்லறை விற்பனை விலையில் 5 முதல் 20 விழுக்காடு வரை வழங்குவது ஒரு முறை. பொதுவாக, 10 அல்லது 15 விழுக்காடு என்பதே பெரும்பாலும் நடைமுறையில் உள்ளது. படிகளின் எண்ணிக்கைக்கேற்ப எழுத்துரிமைத் தொகைமாறுபடுவதும் உண்டு. காட்டாக 5000 படிகள் வரை 10 விழுக்காடு எனவும், 10,000 படிகள் வரை $12^1/_2$ விழுக்காடு எனவும், அதற்கும் மேற்பட்டால் 15 விழுக்காடு எனவும் எழுத்துரிமைத் தொகை பேசப்படுவதுண்டு (பதிப்புக்கலை, பக். 88-89).

இங்ஙனமே மலிவுவிலைப்பதிப்பு, நூலகப் பதிப்பு, வெளிநாட்டுப் பதிப்பு, அதிக தள்ளுபடிப் பதிப்பு முதலானவை வரும்போது எழுத்துரிமைத் தொகை விகிதம் வேறுபடும். தேங்கி நிற்கும் படிகளை அதிகத் தள்ளுபடி கொடுத்து விற்கும் பதிப்பாயின் அதற்கு எழுத்துரிமைத் தொகை மிகக் குறைவாகவோ அல்லது இல்லாமலோ போகும்.

சாதாரணமாக ஒவ்வோராண்டிலும் மார்ச் 31 வரையில் வந்துள்ள நூல்களின் விற்பனைத் தொகைக்கு எழுத்துரிமைத் தொகை கணக்கிட்டு ஏப்ரல் முதல், இரண்டாம் வாரங்களில் ஆசிரியருக்குப் பதிப்பாளர் வழங்குவர். அக்கால எல்லையைக் கடந்து 2,3 மாதங்களுக்குப் பின் தரும் பதிப்பாளர்களும் உண்டு. சில நாடுகளில் மார்ச் 31 என்பதற்குப்பதில் டிசம்பர் 31 என்று எழுத்துரிமைக் கணக்குக் காலத்தை வைத்துள்ளனர் (மேற்படி, ப.90).

நூல் எழுதப்படுவதற்கு முன்பும், கையெழுத்தும் படியைப் பெற்றுக் கொண்ட பின்பும் பதிப்பாளர் தரும் தொகை எழுத்துரிமை முன்பணம் எனப்படும். ஆசிரியருடைய கணக்கில் எழுத்துரிமைத் தொகை எனும் போது, இம்முன்பணத் தொகை கழித்துக் கொள்ளப் பெறும் (மேற்படி, ப. 90).

பதிப்பாளர் சிலர் கையெழுத்துப் படிகளை வாங்கும்போது குறிப்பிட்டதொரு காலத்திற்குள் நூலை வெளியிடுவதாக ஒப்பந்தம் செய்வர். அவ்வொப்பந்தத்திற்கு மாறாகக் காலத்தை நீட்டிப்பின் ஒப்பந்தத்தை முறித்துக் கொள்ளவும், வர

வேண்டிய வருவாய் நின்றமைக்காக நஷ்டஈடு கேட்கவும் ஆசிரியருக்கு உரிமையுண்டு. சட்டத்திலும் அதற்கு வகையுண்டு *(மேற்படி, 90).*

ஆசிரியரது கையெழுத்துப்படியைச் சில பதிப்பாளர் தம் ஆட்களைக் கொண்டு திருடிவரச் செய்து அச்சிட்டு விற்பனை செய்துவிடுவதுண்டு. இதற்காக ஆசிரியருக்கு எவ்விதத் தொகையும் கொடுக்கப்படுவதில்லை. புகழ்பெற்ற ஆசிரியர் பலருடைய நூல்கள் இவ்வாறு வெளிவந்து விடுவதுண்டு. மறைமலையடிகள், பாரதிதாசன், சுத்தானந்த பாரதியார் ஆகியோருடைய ஒப்புதலை முறைப்படி பெற்று நூல்கள் வெளியிடுகின்ற பதிப்பாளர் சென்னையில் இருக்க, ஒப்புதல் பெறாமல், உரிமைத் தொகை எதுவும் தராமல் **சாகுந்தலத்தை**யும், **பிசிராந்தையாரை**யும், **ஏழைபடும் பாட்டை**யும் அச்சிட்டு விற்ற பதிப்பாளர்கள் சிலர் உண்டு. இத்தகைய வெளியீடுகளில் நூலின் முகப்புப் பக்கத்தில் நூற்பெயரும், ஆசிரியர் பெயரும் மட்டுமே இருக்கும். பதிப்பாளர், அச்சகம், ஆண்டு, இடம் முதலான விவரங்கள் இருக்காது. முறைப்படி உரிமை பெற்றவர் விற்கும் விற்பனை விலையில் பாதியளவே இந்நூல்களின் விலை இருக்கும். மாலை நேரத்தில் மூர்மார்க்கெட், சைனாபஜார் முதலிய இடங்களில் தெரு ஓரங்களில் இப்பதிப்புகள் விற்கப்பெற்றன. இது மிக அண்மைக் காலத்தில் நிகழ்ந்தது. இவ்வாறு இலக்கியத்தைத் திருடிப் பதிப்பித்தல் என்பது புதுமையன்று, பல காலமாகவே நடப்பது. பதிப்புலகில் இதற்குக் கொள்ளைப்பதிப்பு என்று பெயர் *(மேற்படி 92).*

ஆசிரியர்களில் சிலர் பிற நூலாசிரியர்களுடைய கருத்துகளைத் தம் நூலில் பயன்படுத்தும் போது மேற்கோள் குறியிட்டுக் காட்டுவதுமில்லை; அடிக்குறிப்பில் இன்ன நூலாசிரியர் கருத்து எனச் சுட்டுவதுமில்லை; துணைநூற்பட்டியலில் அந்நூலின் விவரத்தைத் தருவதுமில்லை. இத்தகைய நிலை ஆய்வு மாணவர் உலகில் மட்டுமின்றி நூல் பதிப்பின் போதும் நடப்பதுண்டு. அருணாசலத்தின் தமிழ் இலக்கிய வரலாறு என்ற வரிசையில் பின்னிணைப்புகளில் இத்தகைய நிகழ்ச்சிகள் சிலவற்றை எடுத்துக் காட்டுகிறார் *(மேற்படி 93).* எனவே ஆசிரியர்களும், பதிப்பாசிரியர்களும் பிறர் கருத்தைப் பிறர் கருத்து என்ற அளவில் தரும் முறையைப் பின்பற்றுதல் வேண்டும்.

ஆசிரியரின் நூல் பிறமொழிகளில் பெயர்க்கப்படும் போதும், திரைப்படம், வானொலி நாடகம், தொலைக்காட்சி ஆகியவற்றில் வடிவு பெறும் போதும் ஆசிரியர் பெறும் தொகையில் குறிப்பிட்ட தொகை *(5 முதல் 15 விழுக்காடு)* முதன் முதல் நூலைப் பதிப்பித்தவருக்குத் தரப்படும். இங்ஙனமே பதிப்பான நூலின் ஒரு பகுதியை மற்றொரு நூலின் தொகுப்பில் பயன்படுத்திக்கொள்ளும் நிலை வரும்போது மேற்படி ஏதேனும் ஒரு தொகை பதிப்பாளருக்குக் கொடுக்கப்பெறும்.

ஆயிரம் பிரதிகள் அச்சிட்டுப் பிரதிக்கு ஐந்து விலையிட்டு, எழுத்தாளன் பங்காகிய *500* ரூபாயைப் பத்து, இருபதாக மூன்றாண்டுகளில் பிரித்துத் தருவதற்குப் பதிலாக நூல் வெளியான உடனேயே கொடுத்துத் தீர்த்து விடலாம். காகிதம் வாங்கும் கடைக்கும், அச்சிடும் அச்சகத்திற்கும் நூல் விற்பனைக்கேற்ப

அவ்வப்போதாகப் பணம் தரப்படுவதில்லை. அதே போல ஒரேயடியாக எழுத்தாளனுக்கும் கணக்குத் தீர்த்து விடலாம். மிகச் சில எழுத்தாளர்களைத் தவிர மற்ற எழுத்தாளர்கள் அனைவருக்குமே பெரியதொகை தேவைப்படாது. இந்த ராயல்டி விஷயத்தை நூல் வெளியான தருணத்திலேயே முடித்து விடலாம் (எழுத்தாளர் பிரச்சனைகள், வரும் பத்தாண்டுகளில், ப.66) என்று நூலாசிரியருக்கு எழுத்துரிமைத் தொகை வழங்குவது குறித்து எழுத்தாளர் அசோகமித்திரன் கூறுகிறார்.

எந்த ஒரு நூலாயினும் அதைப் பதிப்பாசிரியர் வெளியிட முன்வரும் நிலையில் எழுத்துரிமைத் தொகை தரும் முறையினைப் பின்பற்றுதல் வேண்டும். தரும் விழுக்காட்டின் அளவு வேண்டுமாயின் நூலாசிரியரின் சிறப்பு, நூலின் சிறப்பு, நூலின் விற்பனை அளவு என்ற நிலைகளில் வேறுபடலாம். பதிப்பாசிரியர் முதற்பதிப்பிற்கு, ஆயிரம் படிகளுக்கு எழுத்து வடிவிலான இசைவினை வாங்கிக் கொண்டு *2000* படிகளுக்கு மேல் போடும் நிலை தவிர்க்கப் பெறுதல் வேண்டும்.

பொதுவாக அச்சாகி வந்த நூல்களில் *1000*க்கு *10* வீதம் ஆசிரியருக்கான இலவசப் படிகள் விலையின்றித் தரப்படும். இலவசமாக நூலைத் தந்த ஆசிரியருக்கு *25* படிகள் வழங்குதலும் உண்டு. ஆசிரியருக்குக் கூடுதல் படிகள் தேவைப்படின் சிறப்புத் தள்ளுபடியுடன் விலைக்குக் கொடுக்கப்பெறும். இவற்றை ஆசிரியர் விற்பனைக்கு விடுதல் கூடாது. சில பதிப்பகங்கள் ஆறு படிகளே இலவசமாக வழங்குவதால் தள்ளுபடி விற்பனையின் போது ஆசிரியருக்கே போட்டியில் முதன்மை கொடுக்கும். இந்நிலையில் தாம் பெறும் படிகளை ஆசிரியர் விற்றுக் கொள்ளலாம்.

ஆசிரியர் சிலர் நூல் வெளியிடும் பொறுப்புகளைப் பதிப்பாளரிடமும், பதிப்பாசிரியர் குழுவினிடமும் விட்டு விடுவர். சிலர் நூலின் வடிவமைப்பு, விற்பனை விலை, விளம்பர முறை ஆகியவற்றிலும், தம்மைப் பதிப்பாளர் கலந்து முடிவு செய்ய வேண்டுமென நிபந்தனை விதிப்பர். இன்னமுறையில், இன்னவிலையில் அமைந்தால்தான் நூல் நற்பெயர் பெறும் எனக்கூறும் ஆசிரியர்களுமுண்டு. நூலாசிரியரும் பொறுப்பேற்பதே நூற்பதிப்புச் செம்மையுற அமைவதற்கு வழிவகுக்கும்.

**பதிப்பகத்தார் (வெளியீட்டாளர்)**

எழுத்தாளர்களை ஊக்குவித்தல், தாமே விரும்பி நூலாசிரியரை அணுகி எழுதச் செய்தல், எழுத்தாளர்களிடம் மறைந்து கிடக்கும் தரமான படைப்புகளைத் தமிழுலகிற்குத் தருதல், அச்சிட்ட நூல்களை விற்பனை செய்தல், கிளைகள் இருப்பின் இவற்றின் வாயிலாக விற்பனை செய்தல், நடமாடும் புத்தக நிலையங்கள் வழியாக நகரங்களுக்கும், கிராமங்களுக்கும் நூல்களைக் கொண்டுசெல்லுதல், ரயில் நிலையம், நெடுந்தூர ரயில்கள், பஸ் நிலையம் போன்றவற்றில் புத்தக சாலை ஏற்படுத்துதல், பெருநகரங்களிலும், சிறுநகரங்களிலும், பொது இடங்களிலும், கல்வி சாலைகளிலும் புத்தகக் கண்காட்சி நடத்துதல், புத்தகக் கிளப்புகள், நூலறிமுக விழாக்கள் ஆகியன நடத்துதல், வாசகர்களைத் திரட்டுதல், வாசகர் பேரவை ஏற்படுத்துதல்,

கருத்தரங்குகள், கலை இலக்கிய விழாக்கள், பொருட்காட்சிகள் முதலானவை நடக்கும் இடங்களில் தம் சார்பாளரை அனுப்பித் தம் நூல்களை விளம்பரமும் விற்பனையும் செய்வித்தல், தம் பதிப்புகள் குறித்த விவரங்களடங்கிய பட்டியல்களை அச்சிட்டுப் பல்வேறு இடங்களுக்கு அனுப்புதல், விற்பனையாகாது தேங்கிக் கிடக்கும் நூல்களைச் சிறப்புத் தள்ளுபடி தந்து விற்கச் செய்தித்தாள் முதலானவற்றில் விளம்பரம் செய்தல், புதிதாக வரும் நூல்களை வானொலி, தொலைக்காட்சி, வார, மாத, நாளிதழ்களில் அறிமுகப்படுத்த, திறனாய்வு செய்விக்க ஏற்பாடு செய்தல், மக்களிடம் எவ்வகை நூல்கள் பெரிதும் விற்பனையாகின்றன என அறிதல், விற்பனையாகக் கூடிய நூல்களை எம்முறையில் அச்சிட்டு வழங்கினால் மக்கள் விரும்பி வாங்குவர் எனக் கணக்கிட்டறிந்து செயல்படுதல், மக்களின் தேவையையும், சுவையையும் வாங்கும் சக்தியையும் கணக்கிட்டுத் தம் அடுத்த நூல்களை வெளியிட ஆயத்தம் செய்தல், விற்பனை பெருகப் பெருக அடுத்துப் புது நூல்கள் வெளிவரும் வாய்ப்புகள் மிகும் என்பதனால் பலவாறான முயற்சிகளில் கவனம் செலுத்துதல் என்பன போன்ற பல்வேறு பணிகளைப் பதிப்பகத்தார் செய்துவருகின்றனர்.

வணிகத்துறையில் பதிப்பகத்துறையும் ஓர் அங்கம். பதிப்பகத்தார், படைப்பாளன், வாசகர் வட்டம் என்ற முத்தளங்களிலே இவ்வணிகம் நடை பெறுகிறது. இது வணிகத்துறையாக மட்டுமல்லாமல் ஓர் எழுத்தாளனின் எண்ணம் அச்சுரு பெறவும், மக்களின் அறிவுப் பசியைத் தணிக்கவும் உதவுகிறது என்றால் மிகையாகாது. மேலும் வணிக நோக்கம் மட்டுமின்றிக் கொள்கைக் கோட்பாட்டோடு, பண்பாட்டுத் தளத்திலோ, வரலாற்றுத் தளத்திலோ வேறு எந்தப் பொருண்மைகளிலோ செயல்பட விரும்பும் பதிப்பகத்தார் தமக்கெனச் சில கோட்பாடுகளைக் கொண்டு விளங்குவது கண்கூடு. இந்நோக்கில் அரசியல், ஆன்மீகம், கலை, அறிவியல், மருத்துவம், இலக்கியம், திறனாய்வு முதலான பொருண்மைகளில் அவரவர் விருப்புக்கு ஏற்ப வெளியிடுவதுண்டு. எது தொடர்பான பொருண்மை ஆயினும் மக்கள் மன்றத்தை விரைந்து சென்றடைய வேண்டும் என்ற நிலையில் நூல்களை வெளியிடும் பதிப்பகத்தாரும் உண்டு.

**விளம்பரம்**

பதிப்பான நூலின் படிகள் நாடெங்கிலும் விற்பனையாக, நூல் புகழ்பெற நூலுக்குத் தரப்படும் விளம்பரங்கள் துணை புரிகின்றன. நூல் வெளியீட்டாளருக்கு நூல் படிப்பவரைச் சென்றடைய வேண்டும்; முதலீட்டிற்கேற்ப ஊதியம் கிட்ட வேண்டும். இவற்றோடு அடுத்த நூல் வெளியீட்டிற்கான வாய்ப்பு உருவாக வேண்டும் எனவே இவர் உரிய கழிவுத் தொகை கொடுத்து நூல் விற்பனையாளர் வழி அங்காடியில் நூலை விற்பது மட்டுமின்றி நூல் வெளிவருவதற்கு முன்பே அது குறித்து விளம்பரமும் செய்கிறார். படங்களுடன் கூடிய சிறு விவரக் குறிப்பிதழ் (Pamplet) வெளியிடுதலும், பெரிய விளம்பரத் தாள்கள் ஒட்டச் செய்தலும், கார்டுகளில் நூல் விவரம் அச்சிட்டுப் பல இடங்களுக்கும் அஞ்சல்வழியில் அனுப்பி விளம்பரம் செய்தலும் சில விளம்பர வகைகளாகின்றன.

நூல் வெளிவருவதற்கு முன்பே நூல் பற்றிய சிறு விவரக் குறிப்பிதழ்களை வாசகர்களின் முகவரிக்கு அஞ்சல் வழியில் அனுப்பி, அவர்களிடமிருந்து நேரடியாக ஆர்டர் பெறுவது ஒரு வகையாகும். இம் முறையில் முன்பதிவு செய்தவருக்கு வெளியீட்டு விலையை விடக் குறைந்த விலையில் நூல் கிடைக்கும். நூல் அங்காடியில் ரூ. *40*க்கு விற்குமெனில் இவருக்கு ரூ*30*க்கே கிடைக்கும். பம்பாய் இன்டர்நேஷனல் புக்ஹவுஸ், புது தில்லி விகாஸ் பப்ளிகேஷன்ஸ் முதலான பெரிய நிறுவனங்கள் இங்ஙனம் விளம்பரம் செய்து விற்பனையைப் பெருக்குகின்றனர். இவர்களிடம் வாசகரின் நிரந்தரமான முகவரி பட்டியல் இருக்கும். வாசகர் தம் ஆர்டர் அனுப்புவதற்கான கார்டுக்கும், வெளியீட்டாளர்களே அஞ்சல் செலவு ஏற்கின்றனர். விளம்பரம், விற்பனை, லாபம் போன்ற கோணத்தில் இச்செயற்பாடு இருப்பினும் நூல் பல இடங்களுக்கும் பரவுதல் என்ற கோட்பாடும் இதன் வழி செயல்படுவது போற்றுதற்குரியது.

**நூல் விற்பனையாளர்**

பொதுவாகப் பதிப்பகங்கள் தாம் வெளியிடும் நூல்களை மட்டுமின்றிப் பிற அமைப்புகள் வெளியிடும் நூல்களையும் விற்பனை செய்து வருகின்றன. பெரிய பதிப்பகங்கள் தம்முடைய நூல்களைத் தாங்களே விற்பதோடு பிற இடங்களுக்கும் விற்பனைக்கு அனுப்புகின்றன. குறைந்த நூல்களை வெளியிடும் பதிப்பகங்கள் நூல் விற்பனையைத் தாம் செய்யினும் பெரிதும் நூல் விற்பனையாளரை நம்பி இருக்கின்றன. பல்வேறு பதிப்பகங்களில் உருவாகின்ற நூல்களைத் தருவித்து வாசகர்களுக்குக் கொடுக்கும் பணியினை நூல் விற்பனையாளர் செய்கின்றனர். இவர்கள் நூலை விற்பனை செய்வதோடு சரி. பதிப்புப் பணியில் இறங்குவதில்லை. இவர்கள் நேராகப் பதிப்பகத்திலிருந்து அல்லது பதிப்பகத்தின் விற்பனை உரிமை பெற்ற மொத்த வியாபாரிகளிடமிருந்து நூல்களைப் பெறுவர். இவற்றை விற்றுத் தருவதற்காக *10* முதல் *30* விழுக்காடு வரை குறிப்பிட்டதொரு தொகையை விற்பனைக் கழிவாகப் பெறுவர். இக்கழிவுத்தொகை பதிப்பாளருக்கேற்றபடி வேறுபடும்.

நூல் விற்பனைக்கேற்றபடி ஒரு கடையை அமைத்து விற்பனை உதவியாளர்களை ஊதியத்திற்கு அமர்த்தி விற்பனையாளர் தொழில் செய்கின்றார். தொடக்கக் கட்டத்திலுள்ள பதிப்பாளர்களும், சிறு பதிப்பாளர்களும் நூல்களை முதலில் அனுப்பிவிட்டு நூல் விற்றபின் பணம் பெறுவர். விற்கப்படாத நூல்களைத் திரும்ப எடுத்துக் கொள்வர். தம் பதிப்புகள் பொதுமக்களிடமும், வாசகர்களிடமும் அறிமுகமாகிப் பரவிப் பெயர் பெறுவது தமக்குப் பிற்காலத்தில் உதவும் என்பதனால் இங்ஙனம் முயற்சிக்கின்றனர். விற்பனையான நூல்களுக்கான தொகையைக் கழிவுபோக அவ்வப்போது விற்பனையாளரிடம் பெற்றுக்கொள்வர்.

தமது செலவில் நூலாசிரியர் நூலை வெளியிட்டுவிட்டு விற்பனை உரிமையை விற்பனையாளரிடம் கொடுத்துவிடுவதுண்டு. இந்நிலையில் ஆசிரியரிடம் *25* முதல் *40* விழுக்காடு வரை கழிவுத்தொகை பெறும் பதிப்பகத்தார் அல்லது விற்பனையாளர் தமது செலவில் நூலின் விலைப் பட்டியல், விளம்பரம்,

காட்சி, மதிப்புரை முதலியவற்றின் தொகையை ஏற்க வேண்டும் என்பது பொதுவான நிபந்தனை. விற்பனைக் கணக்கை மூன்று மாதங்களுக்கொரு முறை ஆசிரியருக்கு விற்பனையாளர் தரவேண்டும்.

புகழ்பெற்ற பதிப்பகங்கள் தம் நூலின் மதிப்பில் ஏதேனும் ஒரு பகுதியை முன்பணமாகப் பெற்று நூல்களைத் தரும். விற்று முடித்தபின் மிகுதியைப் பெறும். புகழ்பெற்ற ஆசிரியர்களால் எழுதப்பெற்ற நூல்கள் விற்றுவிடும் என்று உறுதியாகத் தெரிந்தால் விற்பனையாளர் இவ்வகையில் நூல்களைப் பெறுவர். டிசம்பர் *31* அல்லது மார்ச் *31*இல் கணக்கெடுத்து அதுவரை விற்றுள்ள நூல்களின் தொகை கழிவு போகப் பதிப்பாளருக்கு அனுப்பப்பெறும்.

சில பதிப்பகங்கள் முழுத்தொகையைச் செலுத்திய பின்பே நூல்களைத் தருகின்றன. அந்நிலையில் விற்பனையாளர் மிகவும் எண்ணிப் பார்த்து நூல்களை வருவிப்பார். அல்லது வாசகரிடமிருந்து நூலுக்கான முழுத்தொகை, முன்பணம் பெற்றபின் வருவிப்பார்.

புத்தகங்களை இங்ஙனம் பல வகையிலும் வருவித்து அவற்றை அழகாக அடுக்கி வருபவருடைய பார்வையில் படச் செய்து வாங்க வைக்கும் திறன் படைத்த ஆசிரியர், பதிப்பாசிரியர், வெளியிடுபவர் என்ற நூற் பதிப்புத் தொடர்பில் வாசகரை இணைக்கின்ற இவ்விற்பனையாளர் பங்கு குறிப்பிடத்தக்க ஒன்று.

**நூல்களை வாங்கும் நூலகங்கள்**

மத்திய அரசு, மாநில அரசு ஆகியவை நடத்துகின்ற நூலகங்கள், மிகுதியான நூல்களை வாங்குகின்றன. மாவட்டக் கழகம், நகராண்மைக் கழகம் ஆகியவை நடத்துகின்ற நூலகங்கள், கிளை நூலகங்கள், நடமாடும் நூலகங்கள் ஆகியவை பொதுமக்களுக்குப் பயன்படும் வகையில் நூல்கள் பல வாங்குகின்றன. பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக்கழகங்கள் தம் நூலகங்களுக்காக மாணவர்களுடைய தரத்திற்கும், எண்ணிக்கைக்கும் தக்கவாறு நூல்களை வாங்குகின்றன. சிறுகதைகள், நாட்டுப்புறக்கதைகள், நாவல்கள் ஆகிய துறைகளில் மட்டுமின்றி, வேளாண்மை, உடல்நலம், செய்துபார் வரிசை, பெரியோர் வாழ்க்கை வரலாறு, எளிய நடையில் அமையும் அறிவியல் நூல்கள் ஆகியவற்றைக் கிராம நூல் நிலையங்கள் மிகுதியாக வாங்குகின்றன.

அரசே நேரடியாக நூல்களை வாங்கிவருவதன் வழியில் தமிழ் வெளியீட்டு முயற்சிகள் *80*க்குப்பின் வெகுவாக முன்னேறி வருகின்றன. இதனால் சிறந்த நூல்கள், குறைந்த விலையில், நிறைந்த அளவில் வெளிவரத் தொடங்கியுள்ளன. அட்டைக்கட்டு, நூற்றொகை விவரங்கள், விலை நிர்ணயம் முதலிய துறைகளில் நல்ல முன்னேற்றம் காணப்படுகின்றன. தற்போது மாநில அரசு நூலகப்படியாக *850* நூல்களை வாங்குகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

**அரசு சார்ந்த பதிப்புகள்**

அரசு என்பது தனியாரினின்றும் வல்லமை பெற்ற ஒன்று. செய்தி மற்றும் மக்கள் தகவல் தொடர்பு, விவசாயம், பண்பாடு, சுற்றுலா முதலான அரசுத்

துறைகள் பொதுமக்களோடு நெருங்கிய தொடர்புடையன. அரசுச் செயற்பாடுகளை ஆவணப்படுத்தவும், மலிவு விலையில் அரசாங்கப் பாட நூல்களைப் பெறுவதற்கும், அரசு அமுல்படுத்திய கோட்பாடுகளைக் கெஜட் என்ற பெயரில் ஆவணப்படுத்திப் பதிவு செய்தலின் பொருட்டும் அரசு தனக்கென ஓர் அச்சகச் சாலையையே வைத்து இருக்கிறது. இதன்வழி அரசின் பல்வேறு துறைகளைப் பற்றிய தகவல்களையும் அத்தொடர்பைப் பெறுவதற்கான வழிமுறைகளையும் கூறும் நூல்கள் வெளிவருகின்றன. குடும்பக்கட்டுப்பாடு, தாய் சேய் நலம், எயிட்ஸ் ஒழிப்பு, இளம்பிள்ளைவாத ஒழிப்புணர்வு, தட்டம்மை, காலரா, மலேரியா போன்ற சுகாதார விழிப்புணர்வுத் திட்டங்களை நூல்களாக வரைபடங்களோடு கூடிய எளிமையான மொழி நடையில் அரசு தருகின்றது. அந்நியச் செலவாணியைப் பெருக்க நம்நாட்டுச் சுற்றுலாத் தலங்கள் பற்றிய வரை படத்துடன் கூடிய வரலாற்றுச் செய்திகளைத் தொகுத்து நூலாக வெளியிடுகின்றது. தமிழகத்தின் சிறப்புறு இறைத்தலங்களைப் பற்றிய செய்திகளையும், தலபுராணச் செய்திகளையும் வெளியிடுகிறது. உர வகைகள், உழுங்காலம், வீரிய ஒட்டுகள் தொடர்பான தகவல்களை மக்களுக்குத் தெரியப்படுத்தும் நூல்களையும் வெளியிடுகிறது. அடிப்படைக் கல்வி, உயர்கல்வி, உயர்நிலைக்கல்வி பயிலும் மாணவர்களின் கல்வியை மனத்தில்கொண்டு மலிவுப்பதிப்பில் தமிழ்நாடு பாடநூல் நிறுவனம் நூல்களை வெளியிடுகிறது. இங்ஙனம் அரசு பல்துறை சார்ந்த நூல்களை வெளியிட்டு வருகிறது.

### நிறுவனம் சார்ந்த பதிப்புகள்

அரசு சார்ந்த நிறுவனம், அரசு உதவி பெற்ற நிறுவனம், தனியார் நிறுவனம் போன்றவை தம் பணிகளுள் ஒன்றாகப் பதிப்புப் பணியினையும் கொண்டுள்ளன. பல்கலைக்கழகங்கள், மேலாய்வு நிறுவனங்கள், பதிப்புத் துறைகளை உள்ளடக்கியுள்ள நூலகங்கள், சில கோயில்கள், மடங்கள் போன்றன நிறுவனங்களாக இயங்கிப் பல்வேறு பொருண்மைகளில் நூல்களை வெளிக்கொணர்ந்துள்ளன. எடுத்துக்கொண்டச் செய்தி மக்களைச் சென்றடைய வேண்டுமென்ற கருத்திலும், மாணவர்களுக்கும் ஆய்வாளர்களுக்கும் ஏற்படும் தரவு நூல் தட்டுப்பாட்டை நீக்கவும், நுவலப்பட்ட நூல் எளிய விலையில் மக்கள் கையில் தவழ வேண்டும் என்ற குறிக்கோளிலும், மொழிப் பணியில் தன்னால் இயன்றதைச் செய்ய வேண்டுமென்ற அவாவிலும் கலை, தொழில் நுட்பம், மருத்துவம் போன்ற துறைகளில் நூல்களை இவை வெளிக்கொணர்கின்றன. இவற்றுள் பல நிறுவனங்கள் குறிப்பிட்ட துறையில் மட்டுமே நூல்களை வெளியிட உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், பல்கலைக்கழகங்கள், ஆசியவியல் நிறுவனம் போன்ற ஆய்வு நிறுவனங்கள் பல துறைகளிலும் நூல்களை வெளியிடுகின்றன.

### பல்கலைக்கழகங்கள்

சென்னைப் பல்கலைக்கழகம் **தமிழ்ப் பேரகராதி**யை வெளியிட்டுப் பெருமை சேர்த்துக் கொண்டது. **தமிழாய்வு, உயராய்வு** என்ற இரண்டு இதழ்களையும் வெளியிட்டு வருகிறது. தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம் **வாழ்வியற் களஞ்சியம், சுவடி விளக்க அட்டவணை** வெளியிட்ட சிறப்பை அடைந்தது. அண்ணாமலைப்

பல்கலைக்கழகம் தொன்று தொட்டு தமிழுக் குரிய பல்வேறு ஆய்வுகளில் ஈடுபட்டு, **இலக்கணக் கருவூலம்** (மூன்று பகுதிகள்), **தமிழ் நாடகத்தின் தோற்றம் வளர்ச்சி, தமிழ்ப்புலவர் வரலாற்றுக் களஞ்சியம், இலக்கண ஆய்வடங்கல்** போன்ற சிறந்த நூல்களை வெளியிட்டுத் தன்னைத் தமிழ்ப் பணியில் ஈடுபடுத்திக் கொண்டது. மதுரை காமராசர் பல்கலைக்கழகம். நாட்டுப்புறவியல் சோதிடம் போன்ற புதிய துறைகளைத் தோற்றுவித்துக் கலை மற்றும் நுண்கலைகளில் பல்வேறு பதிப்புகளைக் கொண்டு வந்துள்ளது. இதன் **தொல்காப்பிய உரைவளம்** தமிழுக்குச் சிறப்புச் செய்துள்ளது. பாண்டிச்சேரி பல்கலைக்கழகம் மொழியியல் துறையில் ஆர்வம் காட்டிப் பல பதிப்புகளைக் கொண்டு வந்துள்ளது. பாரதிதாசன் பல்கலைக்கழகம், பாரதியார் பல்கலைக்கழகம், மனோன்மணி சுந்தரனார் பல்கலைக்கழகம் போன்றன மேலாய்வில் ஆர்வம் காட்டி இலக்கியத் திறனாய்வுகள் எழ துணை நின்றுள்ளன. அன்னை தெரசா பல்கலைக்கழகம் மகளிர் மேம்பாட்டுக்குரிய சிந்தனைகளில் பல்வேறு நூல்களைக் கொண்டு வந்துள்ளது.

### உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

*350*க்கும் மேற்பட்ட நூல்களை வெளிக்கொணர்ந்துள்ள உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தமிழ்ப்பணியில் இன்று வரை சீரிய நடைபோட்டு வருகிறது. இதன் பெருமைக்குரிய படைப்புகளாக **தமிழ் இலக்கியக் கொள்கை, தொல்காப்பிய உரைவளம், எண்பதுகளில் தமிழ், சுவடி விளக்க அட்டவணை** போன்றன அமைகின்றன. இது **தமிழியல்** என்ற இதழை வெளியிட்டு வருகிறது.

### ஆசியவியல் ஆய்வு நிறுவனம்

இந்நிறுவனம் ஆய்வு நூல்களை உலகறிய ஆங்கிலத்தில் தருவதைத் தனது கோட்பாடாகக் கொண்டுள்ளது. தமிழ், கன்னடம், ஜப்பான், ஆங்கிலம் ஆகிய நான்கு மொழிகள் கூடிய **பன்மொழி அகராதி, தமிழ் இலக்கியக் களஞ்சியம், நாட்டுப்புறவியல் தொடர்பான கலைக் களஞ்சியம், காலம்தோறும் தமிழ்க்கவிதை** போன்ற நூல்களைக் கொணர்ந்த பெருமைக்குரியது.

### பாண்டிச்சேரி பிரென்ச் இன்டாலஜி

தமிழின் சிறப்பைப் பிரென்ச் மொழிக்குக் கொண்டு செல்வது இந்நிறுவன நோக்கமாகும். தமிழ் மொழியின் வளத்தை மேம்படுத்தும் வகையில் பல நூல்களைக் கொண்டு வந்துள்ளது. *60*க்கும் மேற்பட்ட சுவடிகளை ஒப்புமைப்படுத்தி, *150*பக்க ஆய்வு முன்னுரையோடு, பண்வழி அமைந்த **தேவாரப் பதிப்பை** வெளிக்கொணர்ந்துள்ளது.

பொதுவாகப் பல்கலைக்கழகங்கள் மேலாய்வு செய்வதற்கென பல துறைகளை அறிமுகப்படுத்துகின்றன. சென்னைப் பல்கலைக்கழகம் கிறித்துவம், சைவம், வைணவம், சமணம், இசுலாமியம் எனப் பல்வேறு சமயங்களுக்கும் தனித் துறைகளை ஏற்படுத்தி அதன் வாயிலாக நல்ல தரவு நூல்களை வெளிக் கொணர்ந்துள்ளது. தன்னாட்சிக் கல்லூரிகளாக விளங்கும் பெரிய கல்லூரிகள் மேலாய்வில் ஈடுபட்டுத் தங்கள் துறைவழியாக நூல்களைக் கொணர்வதும் உண்டு. இன்றைக்கு நாட்டுப்புறவியலை எடுத்துக் கொண்டு மேலாய்வு செய்யும்

கல்லூரிகளில் பாளையங்கோட்டை புனித சேவியர் கல்லூரி ஒரு குறிப்பிட்ட இடத்தை வகிக்கிறது. நாட்டார் வழக்காற்றியல் என்ற பொருண்மையில் இந்நிறுவனம் பல நூல்களை வெளிக்கொணர்ந்துள்ளது. இதே போன்று மதுரைப் பல்கலைக்கழக நாட்டார் வழக்காற்றியல் துறை பல நூல்களை வெளிக் கொணர்ந்துள்ளது.

### தொல்பொருள் ஆய்வுத்துறை

அரசு நடத்தும் தொல்பொருள் ஆய்வுத்துறை என்ற தொல்லியல் துறை, தமிழக வரலாறு, தமிழ் இலக்கிய வரலாறு, தமிழ்ச் சமுதாய வரலாறு மற்றும் பண்பாடு, லெமூரியாக் கண்ட வரலாறு எனப் பல்வேறு பொருண்மைகளில் செயல்பட்டு, நாணயம், செப்பேடு, கல்வெட்டு, ஓலைச் சுவடி, அகழாய்வு என விரிந்த நிலையில் ஆய்வு மேற்கொண்டு அவ்வப் பொருண்மைகளில் பல்வேறு நூல்களை மேலாய்வுக்கு ஏற்ற தரவு நூல்களாகவும், பொதுமக்கள் அறியும் வகையில் எளிய நூல்களாகவும் தந்துள்ளது. மேலும் இந்நிறுவனம் அருங்காட்சியகம் வைத்து நடத்துவது தனிச்சிறப்புடைத்து.

### சாகித்திய அக்காதெமி

இந்திய மொழிகளின் இலக்கியங்களை மாநிலத்துக்கு மாநிலம் அறிமுகப்படுத்தும் வகையிலும், வெளிநாட்டிலிருக்கும் இந்தியர்களும் பிறரும் அறிந்து கொள்ளும் வகையிலும், மொழி வளர்ச்சி மற்றும் பண்பாட்டு வெளிப்பாடுகளைக் கொண்டு வருதல் என்ற பொருண்மை யோடும் நடுவண் அரசின் துணையோடு இந்நிறுவனம் இயங்குகிறது. நாவல், சிறுகதை, இலக்கிய வரலாறு, கவிதை, நாடகம், இந்திய இலக்கியச் சிற்பிகள் போன்ற பொருண்மைகளில் நூல்களை வெளியிடுகிறது. இலக்கியம், இலக்கணம், வரலாறு, பண்பாடு, நாடகம், சிறுகதை போன்ற துறைகளில் சிறந்த அறிஞர்களைப் பற்றிய தரவு நூல்களை **இந்திய இலக்கியச் சிற்பிகள் வரிசையில்** அறிமுகப்படுத்தும் நோக்கு ஒரு சிறந்த பணியாகும்.

### நூலகங்கள்

தொல் பொருள் ஆய்வுத்துறையின் கீழ் தற்போது இயங்கி வரும் சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகம் *1950* முதல் சுவடிப்பதிவு நூல்களை வெளிக்கொணரத் தொடங்கியது. இங்குச் சுமார் *16,398* தமிழ்ச் சுவடிகள் உள்ளன. இந்நூலகச் சுவடிகளுக்கான விளக்க அட்டவணை *27* தொகுதிகளில் வெளியிடப்பட்டுள்ளது. மேலும் வரலாறு, சிற்றிலக்கியம், புராணம், நாடகம், மருத்துவம் போன்ற பல்வேறு நூல்களையும் பதிப்பித்து வருகிறது.

### உ.வே. சாமிநாதையர் நூலகம்

தமிழ்காத்த உ.வே.சாமிநாதையரால் தொடங்கப்பெற்ற இந்நூலகம் வழிவழியாக அவர் குடும்பத்தாரைப் பொறுப்பாளராகக் கொண்டு இயங்கிவருகிறது. அய்யரின் பதிப்புகளை மறுபதிப்பு செய்வதும், அய்யர் எழுதிவைத்த பதிப்பிக்கப்படாத செய்திகளை ஒன்று திரட்டி நூல் வடிவ மாக்குவதும், புதிய இலக்கியங்களைச் சுவடிகளில் இருந்து கண்டுபிடித்து

வெளிக்கொணர்வதும், **சுவடி** விளக்க அட்டவணை செய்தலும் இதன் நோக்காகிறது. மறு பதிப்பாக வந்துள்ள **நற்றிணை**, வர இருக்கின்ற **சிலப்பதிகாரம்**, புதிதாய் வந்துள்ள **தல வரலாறு** ஆகிய நூல்கள் இக்காலக் கட்டத்தில் இந்நூலகம் அளித்த சிறந்த தரவு நூல்கள்.

**சரஸ்வதி மகால் நூலகம்**

சரபோஜி மன்னரால் உருவாக்கப்பெற்றுத் தற்போது தமிழ் வளர்ச்சித் துறையின் கீழ் ஓர் அங்கமாக விளங்கும் இந்நிறுவனம் இலக்கியம், இலக்கணம், மருத்துவம், சோதிடம், *13* தொகுதிகளையுடைய சுவடி விளக்க அட்டவணை எனப் பல்வேறு பொருண்மைகளில் *175*க்கும் மேற்பட்ட நூல்களை வெளிக்கொணர்ந்துள்ளது. இங்கு *3672* தமிழ் ஓலைச் சுவடிகள் உள்ளன.

**திருவனந்தபுரம் அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகம்**

மேற்சுட்டிய சுவடி நூலகங்கள் போன்றே இதன் செயற்பாடும் அமைகிறது. பல்வேறு தமிழ்ச் சுவடிகளைப் பதிப்பித்துள்ளது. சுவடி விளக்க அட்டவணைகளை வெளியிட்டுள்ளது.

**கோயில்கள்**

அறங்காவல் துறையைச் சார்ந்த மதுரை, கன்னியாகுமரி, திருச்செந்தூர் போன்ற சில கோயில்கள் தங்கள் தல வரலாறுகளையும், துதிப்பாடல்களையும், அக்கோயில்களுக்கான சிற்றிலக்கியங்களையும் பதிப்பித்துவருகின்றன. காட்டாகப் பழனி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் அத்தல வரலாற்றையும், தலம் தொடர்பான சிற்றிலக்கியங் களையும் பதிப்பித்திருத்தலைக் கொள்ளலாம்.

**மடங்கள்**

சைவசமயம் சார்ந்த திருவாவடுதுறைமடம், தருமபுர ஆதினம், காசி திருப்பனந்தாள் மடம் ஆகியன தமிழுக்குச் செய்துள்ள பணிகள் அளப்பரியது. பன்னிரு திருமுறைகளிலும், சைவசமய மெய்கண்ட சாத்திரங்கள் பதினான்கையும் அவ்வக் காலக்கட்டத்திற்கு ஏற்ப இம்மடங்கள் மலிவுப் பதிப்பாக வெளியிட்டு, சைவப் பணி செய்து வருகிறது. இவையன்றி, குன்றக்குடிமடம், மதுரை ஆதீனம், விருத்தாசலம் சிவப் பிரகாசம் மடம் போன்றவையும் மேற்சொன்ன பணிகளைச் செய்துவருகின்றன.

**தன்னார்வ ஆய்வு நிறுவனம்**

தமிழின்பால் ஈடுபாடும், தமிழுக்குத் தொண்டாற்ற வேண்டுமென்ற எண்ணமும் கொண்ட படித்த பேராளர்கள் தமிழில் மேலாய்வு செய்யும் நோக்கோடு தங்களுடைய நிதி மற்றும் பிற இடங்களிலிருந்து பெற்ற நிதிகளைக் கொண்டு நிறுவனங்களை உருவாக்கிச் செயல்படுத்தி வருகின்றனர். அவற்றுள் சிலவற்றை இங்குக் காண்போம்.

**உலகத்தமிழ் கல்வி இயக்கம்**

இவ்வியக்கம் சிவஞான முனிவர் நோக்கில் **சைவசித்தாந்தம்** போன்ற சமய நூல்களையும், **தொல்காப்பியம், உள்ளுறை, இறைச்சி** போன்ற இலக்கணம் சார்ந்த நூல்களையும், **கம்பனும் இளங்கோவும்** போன்ற இலக்கியத் திறனாய்வு நூல்களையும் வெளியிட்டுவருகிறது. மேலும் கருத்தரங்கு, அறக்கட்டளை போன்றன நடத்தி அவற்றையும் நூல்களாக்கு கின்றது. தனி ஓர் அமைப்பாக இருந்தும் தொடர்ந்து நூல் வெளியிட்டு வருவது போற்றுதற்குரிய ஒன்றாகும்.

**க்ரியா**

இந்நிறுவனம் தற்காலத் தமிழ் அகராதி என்ற பெயரில் நடைமுறை வழக்கில் உள்ள வழக்குச் சொற்களை அறிந்து கொள்ளும் வகையில் பெரும்பயனுடைய ஓர் அகராதியையும், மரபுத் தொடர் அகராதி என்ற ஓர் அகராதியையும் தந்துள்ளமை சிறப்பான பணியாகும்.

**தமிழ் ஒலைச்சுவடிகள் பாதுகாப்பு மையம்**

*1988*இல் தொடங்கப்பெற்ற இந்நிறுவனம் வெளியிட்ட, **மாரியம்மன் கதைப் பாடல், அய்யனார் கதைப்பாடல், வலங்கைச் சான்றோர் வரலாறு** போன்ற இருபதுக்கும் மேற்பட்ட நூல்களில் சில மத்திய மாநில அரசுகளின் நிதியுதவியுடன் வெளிவந்துள்ளன. இந்நூல்களில் பெரும்பாலானவற்றை முனைவர் ஆ. தசரதன் பதிப்பித்தும் எழுதியும் வெளியிட்டுள்ளார்.

**உலகத் தமிழ் பண்பாட்டுக் கழகப் பதிப்பகம்**

*1985* இல் தொடங்கப்பெற்ற இந்நிறுவனம் **சமூகச் சிற்பிகள், மூலிகை முந்நூறு, தமிழே முழங்கு, வள்ளுவமும் சமத்துவமும், தமிழ்க் குடியரசு** முதலான நூற்றுக்கும் மேற்பட்ட நூல்களை வெளிக் கொணர்ந்துள்ளது. இந்நூல்களில் பெரும்பாலானவற்றை முனைவர். சி. எஸ்.எஸ். சோமசுந்தரம் எழுதி வெளியிட்டுள்ளார்.

**பிற**

இந்திய அரசு நூல் வெளியீட்டுத் துறை, இந்திய வரலாற்று ஆய்வுக் கழகம், தேசிய அறிவியல் ஆய்வுப் பேரவை, உலக சுகாதார நிறுவனம், மதுரைத் தமிழ் சங்கம், கரந்தைத் தமிழ் சங்கம், திருநெல்வேலி தமிழ் சங்கம், தென்காசி திருவள்ளுவர் தமிழ் சங்கம், கோவை கம்பன் கழகம், திருவனந்தபுரம் திராவிட மொழியியல் கழகம், புதுக்கோட்டை வள்ளுவர் கழகம், பிரெஞ்சு இந்தியக் கழகம், ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம், தமிழ் வளர்ச்சிக் கழகம், ஜைன இளைஞர் மன்றம், இராசபாளையம் மணிமேகலைத் தமிழாராய்ச்சி மன்றம், இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம் முதலான பல அமைப்புகளின்வழி நல்ல பல நூல்கள் வெளிவந்து கொண்டுள்ளன.

இங்ஙனம் தமிழ் இலக்கியப் பண்பாட்டுச் செல்வங்களைப் பாதுகாத்தல், தொன்மையான அறிவியல் சிந்தனைகளை வெளிக் கொணர்தல், தமிழ்மொழி,

இலக்கியம், பண்பாடு தொடர்பான செய்திகளை உலகளாவிய நிலையில் பரப்புதல், தமிழியல் பற்றிய உயர்மட்ட ஆய்வுகளை வரலாற்று நிலையிலும், விளக்க நிலையிலும், ஒப்பீட்டு நிலையிலும் பிறநாட்டு அறிஞர்களோடு இணைந்து மேற்கொள்ளுதல் போன்றவற்றைக் கருத்தில் கொண்டு இந்நிறுவனங்கள் பல சிறப்புறு படைப்புகளைத் தந்து வருகின்றன. பதிப்பகங்கள் தரும் இலக்கியப் பதிப்புகளையும், திறனாய்வு நூல்களையும் விட இந்நிறுவனங்கள் தரும் நூல்கள் ஆய்வு நிலையில் மேலும் பயன்படும் வகையில் பல குறிப்புகள் இணைந்து அமைகின்றன. ஆய்வுத் துறை ஐம்பதுகளுக்குப் பின்னே மிக வேகமான வளர்ச்சியைப் பெற்றுள்ளதை இவ்வெளியீடுகள் உணர்த்தி நிற்கின்றன.

**தனி நபர்**

பொருளாதார வளமை, நம்முடைய நூலை நாமே வெளியிடுவோம் என்ற விருப்பம், ஆர்வம், பதிப்பாசிரியர் தரும் மதிப்பீட்டுதியம் குறைவாக இருத்தல், நூலாசிரியர் பதிப்பகத்தாரின் மாற்றங்களை நூலில் செய்ய விரும்பாமை போன்ற காரணங்களால் தனிவெளியீட்டாளர் உருவாகின்றனர். இத்தகைய வெளியீட்டாளர்கள் ஆயிரக்கணக்கில் உள்ளனர். இவர்கள் பெரும்பாலும் தாம் எழுதிய நூல்களை மட்டுமே வெளியிட்டுக்கொள்வர். இவர்கள் ஒன்றிரண்டு நூல்களோடு வெளியீட்டை நிறுத்திவிடுவதுண்டு. பல நூல்களை அவ்வப்போது தொடர்ந்து வெளியிட்டு வருவதும் உண்டு. இத்தகைய வெளியீடுகளில் பதிப்புரிமை நூல் ஆசிரியருக்கே என்பது முற்பகுதியில் சுட்டப்பெற்றிருக்கும். பதிப்புரிமை தன்னையும், தன் வாரிசுகளையுமே சேரும் என்று நூலில் குறிப்பிடுதலும் உண்டு. மெய்வழி நாகப்ப செட்டியாரின் **மெய்வழி ரகசியம்** *(1980)* என்ற நூலிலுள்ள ‘அடுத்த பதிப்புரிமை மெய்வழி நாகப்ப செட்டியார் வாரிசுகளுக்கு மட்டில் உரியது’ என்ற குறிப்பைக் காட்டாகக் கொள்ளலாம்.

அவ்வெளியீட்டாளர்கள் நூல் விற்பனைக்குப் பெரிதும் அரசு நூலகத்தையும், அடுத்து விற்பனையாளர்களையுமே நம்பி இருப்பர். **மெய் வழி ரகசியம்** என்ற நூலில் ‘புத்தக வியாபாரிகளுக்கு அறிவிப்பு’ என்ற தலைப்பில் இடம்பெற்றுள்ள *25* சதவிகிதம் கமிஷன் கழித்து முன்பணம் அனுப்பும் வியாபாரிகளுக்கு மட்டும் இந்த நூல் விற்பனைக்கு அனுப்பப் பெறும்’ என்ற குறிப்பு வியாபாரிகள் வழி விற்பனை மேற்கொண்டமையைக் காட்டுகிறது. மேலும் கழிவு எவ்வளவு என்பது நூலிலேயே சுட்டப் பெறுகிறது என்பதும் தெரிகிறது.

அச்சிட்ட நூலை விற்பனையாகும் வரை தம்மிடம் வைத்திருப்பது என்பது தனிமொழியீட்டாளர் பலருக்கு உள்ள இடையூறு ஆகும். அது மட்டுமன்றி அச்சகத்தார் வழியும் இடையூறு ஏற்படுவது உண்டு என்பதைப் பின்வரும் சான்று மெய்ப்பிக்கிறது.

‘*16* ஆம் நூற்றாண்டு இலக்கிய வரலாற்றின் முதல் பாகமாகிய இந்நூல் இந்நூற்றாண்டின் *2*ஆம் *3*ஆம் பாகங்கள் வெளிவந்து நெடுநாள் கழித்து இன்று வெளிவருவதில் ஒரு துயர அல்லது துரோகக் கதை அடங்கி உள்ளது. அமைந்தகரை மாணிக்கம் அச்சகம் தங்கள் அச்சுத் தொழிலை நிறுத்திய பிறகு, அதில் போர்மேனாக இருந்த திருநாவுக்கரசு என்பவர் என்னை அணுகி, தாம்

ஒரு புதிய அச்சகம் தொடங்கப் போவதாகவும், தமக்கு வேலை கொடுப்பதோடு, பெருமளவு தொகை கடனாகத் தந்தால் நாளடைவில் அச்சுக் கூலியில் கழித்துக் கொள்ளலாம் என்றும் கேட்டுக்கொண்டார். அவரிடம் உண்டான இரக்கத்தால் அவருக்கு உரிய அளவு பணமும் கொடுத்து இந்த நூல் வேலையையும் அவரிடம் கொடுத்தோம்.

*4* முதல் *19* பாகம் வரையில் அவரால் அச்சிடப் பெற்றன. தொடக்கம் *1973*. கடைசியாக நின்றது *1975* பிப்ரவரி. இதன் பின் வேலை செய்யாதது மாத்திரமல்ல. யாம் அதிக விலைக்கு வாங்கிக் கொடுத்திருந்த காகிதம் *20* ரீமையும் திருட்டுத்தனமாக அடுத்த மாதம் நடந்த தம் மகள் கல்யாணச் செலவுக்காக விற்றுவிட்டார். நெடுநாளான பின் *1976* அக்டோபர் மத்தியில் கொடுத்திருந்த ஒரு பகுதி கையெழுத்துப் பிரதியையும் கொடுக்கவில்லை என்று சாதித்தார். எப்படியோ அவரிடமிருந்தே பிரதியையும், அச்சான பாரங்களையும் மட்டும் *(காகிதத்தையல்ல)* எடுத்துக்கொண்டுவந்து நாவல் ஆர்ட் பிரிண்டர்ஸிடம் கொடுத்து மிகுதியும் அச்சிட்டு, நூல் பூர்த்தி செய்து பைண்டாகி இன்று வெளியே வருகிறது. திருநாவுக்கரசு நாவலர் அச்சகம் என்ற பெயரில் என்னிடம் முன் பணமாக வாங்கியும், காகிதத்தைத் திருட்டுத்தனமாக விற்றும் விழுங்கிவிட்டது பெருந்தொகை.

அரை நூற்றாண்டுகளுக்கு முன் அச்சிட்ட சில புத்தகங்களில் இப்படிப்பட்ட கதை உண்டு. இத்தனை பாரம் இன்ன அச்சுக் கூடத்தில் அச்சிட்டோம், அவர்கள் சரியாகச் செய்யாததால் காகிதத்தை வேறிடத்தில் அச்சிட்டது பிரமப் பிரயத்தனமாகி விட்டது என்று சிலர் அச்சிட்டிருப்பதைப் பார்த்திருக்கிறோம். எமக்கே இக்கதி நேருமென்று நினைக்கவில்லை. இதைச் சொல்ல வந்தது, அச்சுத் தொழிலில் தொழில் உணர்ச்சி மட்டும் இருக்க வேண்டுமே தவிர, இரக்க உணர்ச்சி பொருள் நஷ்டத்திலும் மன வேதனையிலும் தான் முடியும் என்று பிறருக்கு உணர்த்தவே'(மு. அருணாசலம், *16*ஆம் நூற்றாண்டு இலக்கிய வரலாறு, முகவுரை (XXIV - XXV).

**முடிவுரை**

தனி மனிதர், பல அமைப்புகள், பல சங்கங்கள், பல நிறுவனங்கள், அரசு அமைப்புகள், பதிப்பகங்கள் முதலான பல்வேறு குழுக்கள் தத்தம் நூற்பதிப்புகளின் வழி தம்மாலான தமிழ் வளர்ச்சிப் பணிகளை அவ்வப்போது தொடர்ந்து செய்து வந்திருக்கின்றன.

எழுத்தாளர்களின் ஊக்கமுள்ள உழைப்பால் மட்டும் இலக்கியங்களும் பிறதுறை நூல்களும் பொதுமக்களை, ஆய்வாளரைச் சென்றடைந்து விட முடியாது. அறிஞர் பெருமக்களின் சிறந்த படைப்புகள் பல, வெளியிடுவதற்கேற்ற பதிப்பகமின்றி வெளிவராமலே போயிருக்கின்றன. எனவே பதிப்பகங்கள் இத்தகையோர்க்குத் துணைபுரிய மேலும் மேலும் முன்வர வேண்டும்.

அனைத்துத் துறைகளிலும் புதிய நூல்களை எழுத ஆசிரியர்கள் முன்வர வேண்டும். இவற்றை வெளியிடப் பதிப்பகங்கள் மனம் இசைய வேண்டும்.

தமிழ்த்துறை தொடர்பான ஆய்வு நூல்களின் எண்ணிக்கையும், அறிவியல் நூல்களின் எண்ணிக்கையும் கூடுதல் வேண்டும்.

நல்ல பொருளுக்காகவும், அச்சுக்காகவும், அமைப்புக்காகவும், நூல் கட்டடத்திற்காகவும், தனித்தனிப் பரிசுகள் வழங்கி அரசினரும், பொது மக்களும் நன்முறையில் ஊக்கப்படுத்த வேண்டும். இந்நிலை உருவாகும் போது தமிழ் நூல்கள் தர உயர்வையும், ஆதரவையும் மேலும் பெற்றுச் சிறக்கும்.

பதிப்பகத்தின் பணிகளால் ஏற்பட்டுள்ள தமிழ் வளர்ச்சியையும், தமிழ் பெற்றுள்ள வளத்தையும் ஆய்தலும், பதிப்பகத்தின் பணிகளை ஆய்ந்து மதிப்பிடுதலும் தமிழ் வளர்ச்சியை அறிய உதவும். தமிழகத்தில் உள்ள பதிப்பகங்களை, அவற்றின் வரலாறுகளை, பணிகளை உள்ளடக்கிய நூல்கள் உருவாகுமெனில் இதற்குப் பெருந்துணையாக அமையும்.

**பார்வை நூல்கள்**

1. சுப்பிரமணியன், ச.வே., விஜயலட்சுமி, ர., **எண்பதில் தமிழ்**, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, *1982*.

2. சுப்பிரமணியன், ச.வே., கடிகாசலம், ந., **எண்பத்தொன்றில் தமிழ்**, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, *1983*.

3. கோதண்டராமன், பொன்., **தமிழ் உணர்ச்சி தமிழ் வளர்ச்சி தமிழ் ஆட்சி,** நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, *1986*.

4. விநாயகமூர்த்தி, அ., **பதிப்புக்கலை,** பாலமுருகன் பதிப்பகம், மதுரை, *1979*.

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை – 600 113
## அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் | 125.00 |
| AN INTRODUCTION TO RELIGION AND PHILOSOPHY - TEVARAM AND TIVVIYAPPIRAPANTAM | 200.00 |
| பெ.நா. அப்புசுவாமியின் அறிவியல் கட்டுரைகள் தொகுதி-2 | 80.00 |
| தாய்நாட்டிலும் மேலை நாடுகளிலும் தமிழியல் ஆய்வு | 75.00 |
| ஜப்பானியக் காதல் பாடல்கள் | 75.00 |
| குறுந்தொகை - ஒரு நுண்ணாய்வு | 80.00 |
| பயிலரங்கக் கவிதைகள் | 18.00 |
| தமிழ் நாடகம் – நேற்றும் இன்றும் | 30.00 |
| நாடகமும் நாடகக் கம்பெனி அனுபவங்களும் | 60.00 |
| சங்க கால மன்னர்களின் காலநிலை தொகுதி-2 | 64.00 |
| சங்க கால மன்னர்களின் காலநிலை தொகுதி-1 | 56.00 |
| இராமாயணம் - தோற்பாவை நிழற்கூத்து | 125.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-4 | 110.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-3 | 110.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-2 | 110.00 |
| எட்டையபுரப் பள்ளு | 60.00 |
| திருக்குறள் பூரணலிங்கம்பிள்ளை ஆங்கில மொழிபெயர்ப்பு | 100.00 |
| தொல்காப்பியப் பாவியல் கோட்பாடுகள் | 40.00 |
| இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள் தொகுதி-2 | 65.00 |
| ON TRANSLATING TIRUKKURAL | 50.00 |
| ஐங்குறுநூறு மூலமும் உரையும் | 85.00 |
| தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள் | 40.00 |
| செந்தமிழ் அகராதி | 150.00 |
| சொற்பிறப்பு - ஒப்பியல் தமிழ் அகராதி | 200.00 |
| THIRUVACHAGAM | 175.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் நாடகங்கள் | 75.00 |
| நானும் என் எழுத்தும் | 50.00 |
| ஆளும் தமிழ் | 28.00 |
| தமிழர் கொடிகள் | 30.00 |
| THE NARRINAI FOUR HUNDRED | 175.00 |
| சர்வக்ஞர் உரைப்பா | 40.00 |
| தமிழில் ஆவணங்கள் | 75.00 |
| தமிழ் மேடை நாடக வரலாறு | 55.00 |
| பரதநாட்டிய சாஸ்திரம் | 150.00 |
| தமிழ் கற்பித்தலில் உன்னதம் | 20.00 |
| மேலை நோக்கில் தமிழ்க்கவிதை | 100.00 |
| SOUND CORRESPONDENCES BETWEEN TAMIL & JAPANESE | 35.00 |
| அயலகத் தமிழ்க்கலை, இலக்கியம், சமகாலச் செல்நெறிகள் | 125.00 |
| TAMIL LITERATURE AND INDIAN PHILOSOPHY | 200.00 |
| சதகத்திரட்டு தொகுதி-1 | 80.00 |
| தொல்காப்பிய இலக்கண மொழியியல் கோட்பாடுகள் | 70.00 |

Pub.No. 396 **இந்திய விடுதலைக்குப் பின் தமிழிலக்கியச் செல்நெறிகள்** **55.00**